உ

# புலவர் உலகம்

## கம்பன் கலை நிலை

### ஐந்தாவது தொகுதி.



ஆசிரியர்

ஜெகவீரபாண்டியனார்



மதுரை

மதருஸ் சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்

பதிப்பிக்கப் பெற்றது.

1946.

# முகவுரை.

இது புலவர்உலகம் ஐந்தாவது தொகுதி. பார்த்திப ஆண்டு சித்திரை மாதம் தொடங்கிப் பங்குனி முடிய வெளி வந்த கதை நிகழ்வும் கலை நிலைகளும் இதில் அடங்கியுள்ளன.

இராமன் தண்டகவன முனிவர்களுக்கு அபயம் தந்து இரவு புகன்றது. அகத்தியரைத் தரிசித்து அப்பால் வந்தது. சடாயுவைக் கண்டு உறவு கொண்டாடி உரிமை கூர்ந்தது கோதாவரி தீரத்தில் குடி புகுந்தது. தம்பி அமைத்த பன்ன சாலையில் இந்நம்பி மனைவியுடன் தங்கி யிருந்தது. இடையே ஒரு நாள் சூர்ப்பநகை கண்டது. காதல் கொண்டது. நோதல் உழந்து ஏதம் அடைந்தது. கரன் வந்து மாண்டது. அதன் பின் அவள் இலங்கை புகுந்து இராவணனிடம் சொன்னது. அவன் சீதையை நினைந்து சிந்தை குலைந்தது. மாரீசனை ஏவியது. மாய மான் வந்தது. அதனைச் சீதை பிடித்துத் தரக் கேட்டது. இலக் குவன் தடுத்தது. அத் தடையையும் மீறித் தன் மனைவிக்காக அம் மானைப் பிடிக்க இராமன் போனது. அது மாண்டு விழுந் தது. அம் மாய மான் கூவியதைக் கேட்டு இளையவன் பிரிய நேர்ந்தது. சீதை தனியே இருந்தது. உடனே இராவணன் வஞ்ச வேடனாய் அங்கு வந்தது. நெஞ்சம் சோதித்தது. முடிவில் பன்ன சாலையோடு பெயர்த்து எடுத்துத் தேரில் வைத்து அவன் வான் வழி சென்றது. சானகி அலறித் துடித்தது. சடாயு பாய்ந்து வந்து இடையே தடுத்து நிறுத்தி அரக்கர் பதிக்கு அறிவுரைத் தது. அவன் மறுத்து மூளவே சடாயு கொதித்துப் பொருதது. அவன் படைக்கலன்களை வீசியது. அவற்றை எல்லாம் சிதைத்துத் தொலைத்து உதைத்துக் கடித்துக் கொத்தி அடித்து அக் கழுகர சன் உக்கிர வீரமாய் உருத்து அமராடியது. என்னும் இவை முறையே இதன்கண் அறிந்து கொள்ளலாம்.

அரிய பல உறுதி நலங்களை மருவி எங்கும் இனிமை சுரந்து இச் சரிதம் மனித சமுதாயத்துக்கு மகிழ்ச்சியும் மாட்சி யும் விளைத்து உயர்ச்சியும் உய்தியும் உதவி வருகின்றது. அவ் வரவு நிலைகளை ஞாலம் மேலும் கண்டு மகிழ இறைவன் அருளை நினைந்து இறைஞ்சி நிற்கின்றேன்.

இங்ஙனம்

ஜெகவீரபாண்டியன்.

## சிறப்புப்பாயிரம்

மனித வாழ்வு மதிநலம் தோய்ந்துமெய்ப்
புனிதம் எய்தப் புலவர் உலகமாம்
இனிய பானு எழுந்து தனி ஒளி
கனிய நின்றது காசினி எங்குமே. (1)

காவி யச்சுவை காட்டிக், கலைகளின்
சீவி யங்களை ஊட்டிச், செழுங்கதை
ஓவி யங்களை ஆட்டி, உணர்வொளி
பூவி யங்கப் புரிந்தருள் கின்றது. (2)

தெரிஞ்சுற நோக்கினர் செய்த செய்தவம் 2637
அருஞ்சிறப் புதவநல் அறிவு கைதர
விரிஞ்சுறப் பற்றிய பிறவி வெந்துயர்ப்
பெருஞ்சிறை வீடு பெற் றனைய பெற்றியார். (5)

வேண்டின வேண்டினர்க்கு அளிக்கு மெய்த்தவம்
பூண்டுளர் ஆயினும் பொறையின் ஆற்றலால் 2638
மூண்டெழு வெகுளியை முதலின் நீக்கினார்
ஆண்டுறை அரக்கரால் அலைப்புண்டாரரோ. (6)

எழுந்தனர் எய்தினர் இருண்ட மேகத்தின்
கொழுந்தென நின்ற அக் குரிசில் வீரனைப் 2639
பொழிந்தெழு காதலிற் பொருந்தினார் அவன்
தொழுந்தொறும் தொழுந்தொறும் ஆசி சொல்லுவார். (7)

(அகத்தியப்படலம் 3-9)

தண்டகாரணிய வாசிகள் இராமனை விழிகளிப்பக்கண்டு கழி பேருவகை கொண்டு காதலித்து வளைந்துள்ள காட்சியை இங்கே நாம் கண்டு நிற்கின்றோம். அவருடைய உவகை நிலையும் உணர்வு [illegible]னும் உழுவலன்பும் விழுமிய நிலையில் ஒளி வீசியுள்ளன.

பாலகில்லர் என்பவர் வால கில்லியர் என்னும் அரிய இருடிகள். இவர் பிரமன் அருள்பெற்ற பிரமச்சாரிகள். செவ்விய நீர்மையும் சீலமும் வாய்ந்தவர். திவ்விய மகிமைகள் உடையவர்.

முண்டர் என்றது சிகை யாதுமின்றித் தலையை முண்டிதம் செய்துள்ள துறவிகளை. மோனர் = மௌன யோகிகள்.

பலவகையான தவயோக ஞானிகள் ஒருமுகமாய் வந்து இப் பெருமானைக் கண்டு பேரானந்தமுடையராய்ப் பெருகி நின்றனர்.

அரக்கரால் வருந்தித் தவநிலை குலைந்து அவல நிலையினராய் அவர் கவலையுற்றிருந்ததும், இக் கார் வண்ணனைக் காணவே கதி கண்டவராய்க் களிப்பு மீதூர்ந்ததும் உரைகள் தோறும் ஒலித்து நிற்கின்றன.

[அரக்கர் என்னும் நெருப்பால் வாடி வதங்கிக் காய்ந்து கருகி உலர்ந்த தருக்கள் போல் அவர் நிலை குலைந்திருந்தனர் என்பார் உலவை போல்கின்றார் என்றார். உலவை = உலர்ந்த மரங்கள். இலை தழை யாதும் இன்றிப் பட்டமரங்கள்போல் பரிதாபநிலையில் [illegible]த்து நின்றனர் என்பதாம். அந்நிலையை நினைந்து நோக்குக.

வாடிய பயிர்களுக்கு வான மழைபோல் வருந்திய அவ்வுயிர் களுக்கு இராமன் வந்தான். இம்மானவன் வரவால் மாதவர்கள் உள்ளங்கள் ஆதவனைக் கண்ட அம்புயங்கள் போல் மலர்ந்து மகிழ்ந்தன.

"அமுது அளாவிய புனை வர உயிர்வரும் உலவை"

என்றது இருதிற நிலைகளையும் கருதியுணர வந்தது. புனை = நீர். இராமனை அமுது அளாவிய நீர் என்றது யாண்டும் என்றும் தான் இனிய நீர்மையனாயிருந்து எல்லா வுயிர்களுக்கும் இன்பம் தந்து வருதல் கருதி. சிவசஞ்சீவி மேவியது என்பதாம்.

தன்னை உரிமையுடன் உவந்து கொண்டவர் அமுதம் உண் டவர் போல் உறுதியும் உவகையும் அடைந்து உய்தி பெறு கின்றார். எவ்வழியும் சுவை மயமான திவ்விய புருடனது செவ்வி தெரிய வந்தது.

கொடிய வனத்தில் தனியே விட்டு நீங்கிய அருமைத் தாயை நெடிய ஆண்டுகள் கழிந்த பின் தற்செயலாக நேரே கண்ட பிள் ளைகளைப்போல இராமனைக் கண்டபோது தண்டகவனவாசிகளான அம் முனிவர்கள் யாவரும் பேரானந்தமுடையராய்ப் பெருங்களி கொண்டு துள்ளி வந்தனர்

"தாய் வர நோக்கிய கன்றின் தன்மையார்"

இயல்பான அன்புரிமையையும் இனிய ஆதரவையும் கன்றும் தாயும் உயர்வாகக் காட்டியுள்ளன.

துன்பக்கடலில் துடித்து ஆழ்கின்றவர்கள் இடையே ஓர் தெய்வீகமான இன்பத்தோணியை எய்தியதைப் போல இவனைக் கண்டு ஆனந்த பரவசராய் அவர் உய்தி கொண்டனர்.

பிறவித் துயரம் நீங்கிப் பேரின்ப வீடு பெற்றவர் போல் இத்தரும மூர்த்தியைப் போற்றி அருமை பாராட்டினர்.

"இருண்ட மேகத்தின் கொழுந்து என நின்ற அக் குரிசில் வீரனைப் பொழிந்தெழு காதலிற் பொருந்தினர்."

புகுந்த வீரனது உருவ நிலையையும் அங்கே இருந்த ஞானி களது உள்ளக் காதலையும் இங்ஙனம் தெள்ளத் தெளிய விளக்கி யிருக்கிறார். அருள் சுரந்த பொருள் வெளி எழுந்தது.

நீர் உண்டு சூல்கொண்டு எழுந்த காளமேகத்தின் கொழுந்து என்றது உயிர்ப்பயிர் தழைக்க உருவம் தாங்கி வந்துள்ள பருவமும் பயனும் காண.

அழகிய கருணை முகில் விழுமிய உதவி நலங்களைக் கைம்மாறு கருதாமல் தானாகவே உலகில் பெய்ய வந்துள்ளது.

குரிசில் வீரன் என்றது பலனைநல்கும் வரிசை உணரவந்தது. நல்ல உயிர்களுக்குப் புல்லிய களைகளாய்ப் பெருகியுள்ள அப் பொல்லாப் பூண்டுகள் எல்லாவற்றையும் வில்லால் களைந்து எறிய வீறு கொண்டு வந்துள்ளமையால் அவ்வீர நீர்மை தெரியப் பேர் விளங்கி நின்றது.

பருவ முகில் போல் பயன் சுரந்து உருவம் மருவியுள்ளதும், அதன் உரிமையான கருமக் காட்சியும் கருதியுணர நேர்ந்தன.

இங்ஙனம் கருணையுடன் வந்த அருமையாளனை அருந்தவர்கள் உரிமையுடன் உவந்து கொண்டு போய் ஓர் தனிமனையில் தங்கச் செய்து அரிய கனிகாய்களைக் கொணர்ந்து விருந்து புரிந்து இனிது உபசரித்தனர்.

மனைவி தம்பியருடன் முனிவர் விருந்தினனாய் இராமன் அங்கே உரிமையோடு தங்கி யிருந்தான்.

உலகம் காக்க வந்த பெரிய திருவன் எளிய அதிதி போல் சிறிய குடிசையில் அன்று அமர்ந்திருந்தது அரிய காட்சியாய் மருவி நின்றது.

"The greatest stranger in this world was He that came to save it" (Goldsmith)

"உலகத்தைக் காப்பாற்ற வருகின்ற பரமன் இந்தப்பூமியில் ஒரு புதிய அதிதியாய் மருவுகின்றான்" எனக் கோல்டுஸ்மித் என்பவர் கூறியுள்ள குறிப்பு கூர்ந்து சிந்திக்கத் தக்கது. எல்லாம் உடையவன் யாதும் இல்லாத ஏழை போல் மனித உலகத்தின் அன்பு ஆதரவுகளைச் சோதிக்க வருகிறான்; எவ் வுயிர்க்கும் உதவி நலங்களைச் செய்து வருவோரை உவந்து கொள்கின்றான்.

இங்ஙனம் அதிசய நிலையில் வந்துள்ள இம் மான வீரனிடம் ஞான முனிவர் எல்லாரும் மறுநாள் அடைந்து தங்கள் குறைபாடுகளை யெல்லாம் முறையே உரைசெய்து நின்றனர்.

அவருடைய முறையீடுகள் வினயமும் வித்தகமும் பெருகி மன மறுக்கம் மருவி உயிர் உருக்கம் பரவியுள்ளன.

இனிய முகத்தனைக் கருணைக் கண்களோடு கனிந்து நோக்கிய இராமனிடம் முனிவர் உரைத்த மொழிகள் யாவும் நினைவு கூரத்தக்கன.

முனிவர் கூறிய முறையீடுகள்

2642 இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்
அரக்கர் என்று உளர் சிலர் அறத்தின் நீங்கினார்
நெருக்கவும் யாம்படர் நெறியலா நெறி
துரக்கவும் அருந்தவத் துறையுள் நீங்கினேம். (1)

2643 வல்லியம் பலதிரி வனத்து மான்என
எல்லியும் பகலும் நொந்து இரங்கி ஆற்றலெம்;
சொல்லிய அறநெறித் துறையும் நீங்கினெம்
வில்லியல் மொய்ம்பினாய்! விடு காண்குமோ? (2)

2644 மாதவத்து ஒழுகலெம்; மறைகள் யாவையும்
ஓதலெம்; ஓதுவார்க்கு உதவல் ஆற்றலெம்
மூதெரி வளர்க்கிலெம்; முறையில் நீங்கினேம்
ஆதலின் அந்தணரேயும் ஆகிலேம். (3)

2645 இந்திரன் எனின் அவன் அரக்கர் ஏயின
சிந்தையில் சென்னியில் கொள்ளும் செய்கையான்
எந்தைமற்று யார் உளர் இடுக்கண் நீக்குவார்?
வந்தனை யாம் செய்த தவத்தின் மாட்சியால். (4)

2646 உருளுடை நேமியால் உலகை ஓம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ! போக்கிலா
இருளுடை வைகலோர் இரவி தோன்றினாய்!
அருளுடை வீர! நின் அபயம் யாம் என்றார். (5)

(அகத்தியப் படலம் 12-16)

தவசிகள் இவ்வாறு முறையிட்டு அபயம் புகுந்திருக்கின்றனர். உரைகள் உள்ளத்தின் பரிதாபங்களை விளக்கி உணர்ச்சி ததும்பி வந்திருக்கின்றன. "இராமச்சந்திரா! கொடிய அரக்கர்களால் நாங்கள் படாதபாடுகள் படுகின்றோம்; எங்கள் தவ ஒழுக்கங்களை எல்லாம் இழந்து அவநிலையில் அலமந்து நிற்கின்றோம்; புலிகள் திரிகின்ற காட்டில் மான்களைப் போல் மறுக்கம்

அடைகின்றோம். அல்லும் பகலும் அல்லலேயன்றி நல்லது காண்கிலோம். அடியும் உதையும் கொலையும் புலையும் நிலையாக எங்களிடம் நிகழ்ந்து வருகின்றன. தருமநெறி தவறி ஒரு கதியும் காணாமல் ஊனமாய் மறுகி உழல்கின்றோம். தியான சமாதிகளை இழந்தோம்; வேதம் ஓதலை ஒழிந்தோம். உபதேச முறைகள் தொலைந்தன; சரியை கிரியை யோகங்கள் யாவும் போயின; ஞான சீலங்களின்றி மானமழிந்து வனவேடராய் மனமுடைந்து திரிகின்றோம்; இந்திரனிடம் முறையிட்டோம்; அவனும் யாதும் செய்யவில்லை; அரக்கர் வேந்தனுக்கு அஞ்சி ஏவல்புரிந்து திரிகின்ற அவன் எங்களுக்கு என்ன உதவி செய்வான்? பொல்லாத அரக்கர்கள் எம்மைக் கொல்லாமல் கொல்லுகின்றனர். நாங்கள் எல்லாரும் இருப்பதினும் இறந்து போவது நல்லது; இந்த அல்லலான அழிவு நிலையில் எங்கள் முன்னோர் செய்த புண்ணியப் பயனால் உன்னைக் கண் எதிரே காண நேர்ந்தேம்; துன்பமாகிய இருளில் துடித்துக் கிடக்கின்ற எங்களுக்கு ஓர் இன்ப சோதியாய் நீ இன்று எழுந்தருளியுள்ளாய்; உலகம் முழுவதையும் இனிது காத்துவந்த வேந்தர்பிரானுடைய குலமகனே! எங்கள் நிலைமையை உன்பால் மேலும் சொல்லுதல் மிகையாம்; துன்பால் துடிக்கின்ற நாங்கள் உன் அடைக்கலம்'' என மாதவர் இங்ஙனம் அபயம் புகுந்து ஆதரமீதூர்ந்து நின்றார்.

இராவணனது ஆட்சி உலகம் எங்கணும் பரவியுள்ளமையால் அவனுடைய மரபினர் அதிகாரங்கள் யாண்டும் அதிகரித்து நின்றன. செல்வத்திலும் தேகபலத்திலும் தீரத்திலும் போர்க்கத்திலும் அரக்கர் மிகவும் செழித்திருந்தமையால் மற்றவர்களை அடக்கி ஒடுக்கி அவர் ஆண்டுவந்தனர்.

தவசிகள் அமைதியாளர்; மறுமை நோக்கம் மருவியவர்; விரத ஒழுக்கங்களும் ஆசார நியமங்களும் உடையவர். சாதுக்களான இவரை நிருதர் ஒரு பொருளாக மதியார். "உழைக்கப் பயந்த சோம்பேறிகள்; கோழைகள்; கோட்சொல்லிகள்; நயவஞ்சகர்கள்; தம் இனத்தவர் மீது நல்ல எண்ணம் இல்லாதவர்; பொல்லாதவர்'' என அக்கண்டகர்கள் இத்தண்டக வனவாசிகளை எண்ணியிருந்தமையால் நேரே கண்டபோதெல்லாம் கடுந்துயர் விளைத்து வந்தனர். அதனால் இவர் அல்லலடைந்து நொந்தனர்.

செல்வர் ஏழைகளையும், வலியர் மெலியரையும், மூர்க்கர் சாதுக்களையும், பேதைகள் மேதைகளையும் மதியாமல் இகழ்வது இயல்பு. அந்த இயல்பின்படி இங்கே செயல்கள் நிகழ்ந்துள்ளன.

பல காலமும் பல வகையிலும் அல்லல்கள் அடைந்து யாதொரு கதியும் காணுமல் கலங்கி யிருந்த முனிவர்கள் இந்த வீர மூர்த்தியைக் கண்டதும் விழைந்து திரண்டு உவந்து சூழ்ந்து தமது பரிதாப நிலைமைகளை மதி நலம் கனிய அதி விநயமாக உரைத்தனர்.

உரைகளில் உள்ள பொருட் குறிப்புக்களும் உட் கருத்துக்களும் தொனிகளும் ஊன்றி உணரவுரியன.

இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்

என அரக்கரைக் குறித்து அஞ்சன வண்ணனிடம் முதலில் இங்ஙனம் நெஞ்சறியச் செய்துள்ளனர். இரக்கமே வடிவமாய்ப் புரக்க வந்துள்ள அவன் விரைந்து இரங்கி அருளும்படி இது விளைந்து வந்தது.

இரக்கம் இலாதவர் அரக்கர் என்றதனால் அதனையுடைய வரது சிறப்பும் சீர்மையும் தெளிவாய் நின்றன.

## இரக்கம்

இரக்கம் என்பது ஆன்ம உருக்கம். தயை, அளி, அருள் எனப் பல பெயர்களைப் பெற்று விளங்குகின்றது. இது தெய்வத் தன்மையது; திவ்விய மகிமையது. பரிபக்குவமாய்ப் படி ஏறிய புனித உயிரின் இனிய இயல்பாய்க் கனிவு மிகுந்துள்ளது. இந்தச் செந்தண்மையை எந்த மனிதன் அடைந்து கொண்டானே அவன் அந்தமில் இன்பமுடையனாய்ப் பிறவி தீர்ந்து போகின்றான்.

"எவ்வுயிரும் என் உயிர்போல் எண்ணி இரங்கவும்நின்
தெய்வ அருட் கருணை செய்யாய் பராபரமே, (1)

தம்முயிர் போல் எவ்வுயிரும் தான் என்று தண்ணருள் கூர்
செம்மையருக்கு ஏவல் என்று செய்வேன் பராபரமே?" (2)

எனத் தாயுமானவர் இறைவனை நோக்கி இங்ஙனம் வேண்டி யிருக்கிறார். உள்ளத்தில் இரக்கம் பெருகிய பொழுது அவ்வுயிர் உயர் பரமாய் ஒளி மிகப் பெறுகின்றது. கருணைப் பண்பு பூரண

மான ஞான சீலமாய்ப் பொலிந்துள்ளமையால் மகான்களிடம் தனி யுரிமையாய் அது தழைத்து நிலவுகின்றது. ஒருவன் எவ்வளவு கண்ணியங்களை யுடையவனாயினும் புண்ணியநிலையமான இரக்கம் ஒன்று இல்லையேல் அவன் இறையருளை யிழந்து இழிந்து படுகின்றான்.

கலை யெலாம் உணர்ந்தான் ஏனும், கரிசறத் தெளிந்தான் ஏனும்,
மலையென உயர்ந்தான் ஏனும், மனமயல் அகன்றான் ஏனும்,
உலகெலாம் புகழப் பல்லோர்க்கு உதவிய கையனேனும்,
இலகிய இரக்கம் இன்றேல் எழுநரகு அடைவன் அன்றே.

(பதிபசுபாச விளக்கம்)

இரக்கத்தின் அருமையும் பெருமையும் இதனால் அறியலாகும்.

இரக்கம் இல்லாதவன் இழி நரகு அடைவன் என்றமையால் அதனை யுடையவன் அடையும் உயர்நிலை புலனாம். இரக்கம் உண்டேல் துறக்கம் உண்டு.

எவ்வுயிர்க்கும் இரங்கி யருளும் தன்மையே இரக்கம் ஆதலால் அந்த அருளாளன் தன்னுயிரை மகிமைப் படுத்திப் பேரின்ப நிலையில் பெருகி எழுகின்றான்.

"The merciful man doeth good to his own soul: but he that is cruel troubleth his own flesh." (Solomon)

"தயையுள்ளவன் தன் உயிர்க்கு நன்மை செய்கின்றான்; அஃது இல்லாதவன் தன்னையே கொல்லுகின்றான்" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

மனிதனைப் புனிதனாக்கி எவ் வழியும் இனிமை மிகச் செய்தலால் தயையை மேலோர் மிகவும் மேன்மையாகப் போற்றி வருகின்றனர். அது தெய்வ நீர்மையாய்த் திகழ்ந்து நிற்கின்றது.

"The quality of mercy is not strain'd,
It droppeth as the gentle rain from heaven
Upon the place beneath: it is twice bless'd;
It blesseth him that gives and him that takes."

(The Merchant of Venice 4-1)

"வானிலிருந்து இவ்வுலகில் சிந்திய ஓர் அமுத மழைபோல் இரக்கம் இனிமை சுரந்துள்ளது. அதனைக் கொண்டவரும் கண்ட

வரும் பாக்கியவான்களாய் இன்பம் மிகப் பெறுகின்றனர்" என ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கில கவிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

உயிரின் கனிவாய் உயர்ந்துள்ளமையால் இரக்கம் யாண்டும் மேன்மையாகப் போற்றப் படுகின்றது. உய்வைத் தருகின்ற தெய்வத் திருவாய் அது ஒளி மிகுந்துள்ளது. அதனை யுடையவர் அளி நிறைந்த கண்ணராய் ஆனந்த நிலையை அடைகின்றனர்.

இத் தகைய இரக்கம் அகத்தே ஒரு சிறிதும் இல்லாமையால் புறத்தே கொடுமை மிகச் செய்து கொலைப் பழி புரிகின்றார்.

இரக்கம் இன்மை அரக்கத் தன்மை எனச் சுட்டிக் காட்டியது அவரது கொடுமையும் குரூரமும் கடுமையும் காண. சீவ தயை இல்லார் சிவ தயையை இழந்து அவகேடியில் உள்ளார்.

பல வகையான அரிய செல்வங்கள் வெளியே பெரிதும் நிறைந்திருக்கின்றன; உள்ளே இரக்கம் என்னும் பொருள் மட்டும் இல்லை. இரக்கத்தைப் பொருள் என்றது அரிய பேறுகளை யெல்லாம் அருளவல்ல அதன் அருமை கருதி. இரங்கி அருள்வது பரம்பொருள் எதிரே வரம் பெற வருகின்ற வழியாம்.

ஒப்பில்லாத உயர்திரு என்பார் ஒரு பொருள் என்றார். தயைக்கு நிலைக்களம் நெஞ்சம் ஆதலால் அதனைக் கிளர்ந்து குறித்தார். உள்ளத் திருவாய் அது உய்தி அருளுகிறது.

இரக்கம் இலாத நெஞ்சினர் என இயல்பை முதலில் குறித்தார்; பின்பு அவரது செயலைத் துலக்கினார்.

அரக்கர் என ஒரு கூட்டத்தவர் உளர் அறத்தோடு அமையாமல் அறத்தின் நீங்கினோர் என்றது அவரது மறக்கொடுமை தெரிய.

புண்ணியம் என்பது யாதும் அறியாத படுபாவிகள் என்றவாறு. அறநெறி நீங்கிய அக் கொடியவர் யாரும் நெடிய துயரங்களைச் செய்து வருதலால் யாம் எமது தவநெறி நீங்கினோம்.

நெருக்கவும், தாக்கவும் என்றது வலிந்து வந்து துன்புறுத்தியும், தவச் சாலைகளைச் சிதைத்தும், நல்ல இடங்களில் அமைதியாய் இருக்க ஒட்டாமல் அயலே ஓட்டியும் அவர் புரிந்து வந்த அல்லல் நிலைகளை யெல்லாம் அறிய வந்தது. தாக்கல் = முடுக்

குதல், ஓட்டுதல். அடித்து வருத்தி யாண்டும் துன்புறுத்துகின்ற கொடுமைக் குறிப்புகளைக் கடுமையாகக் காட்டிய படியிது.

புலிகள் எதிரே மான்கள் படுகின்ற பாட்டை நாங்கள் பட்டு வருகின்றோம். வல்லியம்=புலி. பல என்றது அரக்கர் திரளின் நிலைகருதி. கொலையும் புலையும் கொடுமையும் கடுமையும் வலிமையும் நோக்கி வல்லியம் என்று சொல்லி நின்றார்.

பொல்லாத அக் கொடியவர் எல்லாரையும் கொன்று தொலைக்க வல்ல வீரனே! என்பார் வில்லியல் மொய்ம்பினாய் என்றார். மொய்ம்பு=தோள், வலி. வீர வில்லுக்கு இரையாக ஈரமில்லா நெஞ்சினரை எதிரே காட்டி இசைவு வேண்டினார். நீ காத்தருளினால் அன்றி வேறு ஆதரவு எங்களுக்கு யாதும் இல்லை.

தேவராசனான இந்திரனும் ஒன்றும் உதவி செய்யமுடியாது. அரக்கர் என்றால் அவன் நடுங்குகின்றான். அவர் காலால் இட்ட ஏவலைத் தன் தலையில் தாங்கி அவன் நிலை குலைந்து திரிகின்றான். அவனது நிலைமையே அவ்வாறு ஆயின் இவ்வுலகில் எவர் எமக்கு உதவி செய்வர்? அநாதிகளான எங்களுக்கு நாதி நீயே.

எந்தை! மற்று யார் உளர் இடுக்கண் நீக்குவார்?

என்றது நீ ஒருவனே நீக்கி அருள வல்லவன்; வேறு போக்கில்லை; இவ்வுண்மையை நோக்கியருள் என்றவாறு. எந்தை என்றது சிந்தை உருகி வந்த அன்பு வாசகம்.

பிள்ளைகளைப் பேணிக் காப்பது பெற்ற தந்தைக்கே கடமையாம். அந்த உரிமையில் ஒளி செய்துள்ள நீ அளி செய்து புரந்து ஆதரித்தருள்க.

பரம்பரையாக உலகைப் பாதுகாத்து வந்த சக்கரவர்த்தித் திருமகனே என்பார் மன்னவன் புதல்வ! என்றார்.

களைகளை ஒழித்துப் பயிர்களை வளர்த்தல் போல் தீமைகளைத் தொலைத்து நல்ல உயிர்களை நாளும் பாதுகாத்து வந்த உயர்ந்த அரசகுல மரபில் உதித்த தலைமகனே! உனது நிலைமையை நினைந்து எம்பால் நீதி பாலித்தருள் எனப் பரிபாலன முறையிலுள்ள பழமையையும் உரிமையையும் வெளியே தெளிவாகக் கூறி அளி புரிய ஊக்கி ஆதரவை நோக்கினார்.

இருளுடை வைகலேம் இரவி தோன்றினாய்!

மாதவர்கள் மறுகியிருந்த துயர நிலைமையும், இது பொழுது உறுதி கண்டு உவந்து கொண்டுள்ளமையும் இதனால் உணரலாகும்.

துன்ப இருள் கழிந்தது; இன்று முதல் இனி யாம் இன்ப வாழ்வை எய்தினேம் என உள்ளம் களித்துத் துள்ளி யுள்ளனர். அருளுடை வீர! என்றது பொருள் பொதிந்த மொழியாம்.

அரக்கரை அடியோடு கருவறுக்கும் குறிக் கோளுடன் முனிவர் குழாம் ஈண்டு முனைந்துள்ளது. அவரது நுணுகிய அறிவாற்றல்களை உரையாடலில் நயமாக உருவாக்கி யிருக்கின்றனர்.

தங்கள்பால் கருணை புரிந்து காக்க அருளுடைமையும், தம் பகைவரைக் கடிந்து ஒழிக்க வீரமுடைமையும் இராமனிடம் நேரடைந்துள்ளமையை நினைந்து போற்றினர்.

புத்தரைப் போல் அருள் மாத்திரம் அல்லாமல் எத் திறக் கொடியவரையும் அழித் தொழிக்க வல்ல ஆற்றலும் உடையனாய் இந்த அவதார மூர்த்தி இங்கே எழுந்தருளி வந்துள்ளது.

தனியே அருள் மட்டும் இருந்தால் முனிவர் அபயம் இடுதலுக்கு யாதும் பயன் படாது; அவரது துயர் இருளை நீக்கவும், தனது உயர் அருளைக் காக்கவும் வீரமே உயிர் நிலையமாய் ஈண்டு நேரே சீர் மிகுந்துள்ளது.

கண்ணோட்டமும் கருணைப்பண்பும் பேராண்மையும் போர் வீரமும் பொங்கிப் பொலிந்து அலைகொழித்து நிற்கும் நிலைமையை இக் குலமகனிடம் தலைமையாக் கண்டுள்ளமையால் கலை முனிவர் எல்லாரும் களிப்பு மீதூர்ந்து உதவியை நாடி ஒருங்கு கூடி மருங்குநீடி மதிநலம் கனிய அதிவிநயமாய் உரைத்து வேண்டினார்.

கருணைக் கடலே! வீர மூர்த்தியே! எங்களுக்கு வேறு புகலிடம் இல்லை; நீயே தஞ்சம் என நெஞ்சுருகி நின்றார்.

நின் அபயம் யாம் என அவர் அடைக்கலம் புகுந்த பொழுது இவனது படைக்கலம் மகிழ்ந்தது. "பயப் படாதீர்! பாதுகாத் தருள்கின்றேன்" எனக் காப்பாளன் உறுதி கூறும் உதவி நலன் அபயம் என்னும் சொல்லில் அபயம் புகுந்துள்ளது. உபய அபயங்கள் இங்கே கருவடைந்து ஒரு முகமாய் உருவாகி வருகின்றன. அஞ்சுதல் ஆறுதல் ஆக ஆதரவமைந்தது.

## இராமன் தவசிகளுக்கு அபயம் அளித்தது.

அருந்தவர் இன்னனம் சரண் அடைந்து அரண்கோலி ஆதரவு நாடவே இப்பெருந் தகையாளன் உடனே அவர்க்கு உதவியருளிய உறுதிமொழிகள் பெரிதும் அதிசயமாய்ப் பெருகி எழுந்தன. யாரும் விரைந்து நோக்கி வியந்து திகைக்க வீரமணம் கமழ்ந்து உரைகள் வெளிவந்துள்ளன. சொல்லின்கண் ஆண்மை உள்ளமும் கேண்மை வண்மையும் துள்ளி மிளிர்கின்றன.

புகல் புகுந்திலரேல் புறத்து அண்டத்தின்
அகல்வரேனும் என் அம்பொடும் வீழ்வரால் 2647
தகவில் துன்பம் தவிருதிர் நீர் எனாப்
பகலவன் குல மைந்தன் பணிக்கின்றான்; (1)

வேந்தன் வீயவும், ஆய்வரம் மேவவும்,
ஏந்தல் எம்பி வருந்தவும், என் நகர் 2648
மாந்தர் வன்துயர் கூரவும் யான் வனம்
போந்தது என்னுடைப் புண்ணியத்தால் என்றான். (2)

அறந்தவா நெறி அந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலிதொலையேன் எனின் 2649
இறந்து போகினும் நன்று; இது அல்லது
பிறந்து யான்பெறும் பேறென்பது யாவதோ? (3)

நிவந்த வேதியர் நீவிரும் தீயவர்
கவந்த பந்தக் களிநடம் கண்டிட 2650
அமைந்த வில்லும் அருங்கணைத் தூணியும்
சுமந்த தோளும் பொறைத் துயர் தீருமால். (4)

ஆவுக்கு ஆயினும், அந்தணர்க்கு ஆயினும்,
யாவர்க்கு ஆனும் எளியவர்க்கு ஆயினும் 2651
சாவப் பெற்றவரே தகை வானுறை
தேவர்க்கும் தொழும் தேவர்கள் ஆகுவார். (5)

சூர் அறுத்தவனும், சுடர் நேமியும்,
ஊர் அறுத்த ஒருவனும் ஓம்பினும் 2652
ஆர் அறத்தினொடு அன்றி நின்றாரவர்
வேர் அறுப்பன் வெருவன்மின் நீர் என்றான். (6)

(அகத்தியப்படலம் 17-22)

மாதவர்களை நோக்கி இராமன் இவ்வாறு ஆதரவு கூறியுள்ளான். அதி தீரமான இந்த வீர வசனங்கள் விவேக நிலைகளைத் தட்டி எழுப்புகின்றன. கவிகளைக் கருத்துடன் கவனித்துப் பொருட் குறிப்புக்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுக. காவிய நாயகன் கருதி வந்தது வழியிடையே முறுகி எதிர்ந்தது. விழைவின் விளைவானமையால் முனிவர் செய்த முறைப்பாடுகள் உடனே உயர்ந்த பயனை அடைந்து கொண்டன. இராக்கதர்களுடைய கொடுமைகளையும், தரும விரோதிகளாய்க் கலித்து நின்று உலகிற்கு அவர் இழைத்து வருகின்ற கருமக் கேடுகளையும் துறவிகள் வாய்மொழியால் கேள்வியுற்றதும் இக்கோமகன் உள்ளம் கொதித்தது. அவ்வீரக் கொதிப்பில் விளைந்த தீர மொழிகள் இப்படிப் பாரறிய வந்தன.

புகல் புகுந்திலரேல்! என்றது இவனது மறக் கருணையை விளக்கி நின்றது. முனிவர் மூட்டிய அல்லல் நிலையைக் கேட்டதும், இவன் முனிவு மீதூர்ந்து மனம் போனபடி பேசிவிடவில்லை. இரக்கம் காட்டாத எதிரிகளுக்கும் இவன் இரக்கம் காட்டியே பேசியிருக்கிறான். அனைவரையும் சமாதானத்தை ஞான நோக்குடன் நயந்து பேணுகின்றான்.

அருந்தவர்களுக்குக் கொடுந்துன்பங்கள் செய்கின்ற அக்கொடியவர் உடனே வந்து சரணடைந்து இனிமேல் யாண்டும் யாருக்கும் யாதும் தீதுசெய்யவில்லை என்று உறுதிமொழி கூறினால் பொறுதி செய்து அருளுவேன்; இல்லையானால் அவர் அடியோடு இறந்துபடுதல் திண்ணம் எனச் சிறந்த ஆண்மை வீறு தெரிய இவ்வண்ணம் உரையாடியிருக்கிறான்.

கலகம் விளைத்த அவர் இவ்வுலகத்தைவிட்டு வேறு அண்டங்களுக்குப் போய் ஓடி ஒளித்தாலும் உயிர் பிழைக்கமுடியாது.

"அண்டத்தின் புறத்து அகல்வர் ஏனும் என் அம்பொடும் வீழ்வரால்" எனத் தனது அடலாண்மையைக்குறித்திருக்கிறான்.

கோதண்ட வீரனுடைய பாணங்கள் பூதண்டங்களையும் ஊடுருவி ஓடும்; கருதிய குறிகள் எவற்றையும் உருவற அழித்து வீழ்த்தும் என்பதை இவ்வுரை உணர்த்தி நின்றது.

நேரே மரியாதையாய் வணங்கி வந்தால் உரிமையுடன் ஆதரிக்கின்றேன்; மாறுபட்டு மீறினல் அவர் எவராயினும் உடல் கூறுபட்டு மாய்வர் எனக் குறித்திருத்தலால் இவனது கரும நீதியும் கரும வீரமும் காண வந்தன.

அபயம் புகுந்த தவசிகளைப் பார்த்து நீவிர் இனி யாதும் அஞ்ச வேண்டா; யாதொரு தீதும் நேராமல் பாதுகாத்தருள்கின்றேன் என்று பணிமொழி பகர்ந்து தன் உள்ளத் துணிவையும் உறுதிநிலையையும் உலகறிய விளக்கினன்.

என் அருமைத் தந்தை இறந்துபடவும், தாய் வரம்பெற்றுப் பழியடைந்து தளரவும், தம்பி வெம்பி நின்று துன்பம் உறவும், எனது குடி சனங்கள் எல்லாரும் கொடிய துயரடையவும் செய்துவிட்டு நான் நெடிய கானகம் வந்தேன். முடிதுறந்து வனம் புகுந்தமையால் நேர்ந்த அவல நிலைகளையெல்லாம் எண்ணி எண்ணி இடையிடையே கவலையடைந்து நின்றேன்; இன்று அதனை அடியோடு மறந்தேன்; இங்கே வந்ததனல் எய்திய பயனை நினைந்து சிந்தை களிக்கின்றேன்.

யான் வனம் போந்தது என்னுடைப் புண்ணியத்தால்

என இங்ஙனம் எண்ணி மகிழ்ந்திருக்கிறான். "என் புண்ணியம்" என்றது எவ்வளவு பெரிய வார்த்தை! என்ன பயனை எண்ணி இவ்வண்ணம் சொன்னன்? குடும்பமும் ஊரும் நாடும் தன் பிரிவால் அடைந்துள்ள துயரங்களையெல்லாம் தான் மறந்து விடும்படி இங்கே கண்ட ஊதியம் யாது?

ஆதரவின்றி அலமருகின்ற மாதவர்களுக்கு ஆதரவாய் உதவிபுரிய நேர்ந்த உபகார நிலைமையை நினைந்து தனக்கு அஃது ஒரு அரிய பாக்கியமாக் கருதியிருக்கிறான்.

தருமநெறியைக் கடைப்பிடித்து எவ்வுயிர்க்கும் அருள் புரிந்து ஒழுகும் தவசிகளாகிய உங்களுக்குத் துயர் செய்கின்ற கொடியவர்களை அடியோடு ஒழிக்கவில்லையானல் நான் உயிர் வாழ்ந்திருப்பதால் யாது பயன்? பயன் இன்றி இருப்பதினும் இறப்பது நல்லது! நல்லோர்கள் அல்லலுற ஒரு அரசகுமாரன் வில் ஏந்தி வீணே நிற்பது நாணத்தக்கதாம். காணத்தக்க பயன் கைவந்துள்ளது; அதனை விரைந்து செய்து பிறந்த பயனை அடைந்துகொள்வதினும் சிறந்த கடமை எனக்கு வேறு ஒன்று இல்லை.

பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ ?

பிறர்க்கு உபகரிப்பதே தன் பிறவிப் பயனாக இப்பேராளன் பேணியுள்ளமையை இவ்வுரையில் காணுகின்றோம். தனது அவதார மருமத்தை வெகு விநயமாக இராமன் இங்கே வெளியிட்டிருக்கிறான்.

துட்டரைக் கருவறுக்கவும், சிட்டரைப் பரிபாலிக்கவுமே இவன் பிறந்துள்ளமை ஈண்டு அறிந்துகொள்ள வந்தது.

தான் பிறந்த பேறு பெற்றதாகப் பேருவகை யுற்றிருக்கின்றான். களைகளை உழவன் பறித்து எறிதல்போல் தீயவர் தலைகளை அறுத்து எறிவேன் என அருந்தவர்க்கு இவன் ஆறுதல் கூறியது தேறுதலாயது.

இரக்கம் அற்ற அரக்கர் உடல்கள் துண்டங்களாய் முண்டங்கள் கூத்தாடுவதை நீவிர் நேரே காணலாகும். வில்லும் கணைகளும் சுமந்த என் தோளின் தினவு தீர நான் ஆள்வினை புரிவேன். பகைவர் மாள்வினை யுறுவார்.

## பிறர்க்கு உதவி செய்வதே பிறவிப்பேறும்.

பசுக்கள் தவசிகள் எளியவர் வேறு யாவரேயாயினும் அவர்க்கு உதவிபுரிந்து உபகரிக்கவேண்டும். அவ்வுபகார நிலையில் உயிர் போக நேர்ந்தாலும் அதுவே உயர் போகமாம். பிறர்க்கு உதவியாகத் தன் உயிரை விடுத்தவனை எவரினும் உயர்ந்தவனாய் என்றும் சிறந்து திகழ்கின்றான். அழியும் உடலால் அழியாப் புகழ் அடைந்துகொள்பவனை அமரரும் தொழுகின்றார்.

"தேவர்க்கும் தொழும் தேவர்கள் ஆகுவார்"

உதவி புரிவதால் செத்தவர் என்றும் அழியாத நித்திய முத்தர்களாய் நிறை பேரின்பம் துய்ப்பர் என்பதை இவ்வாறு உய்த்துணர வைத்தார். புனிதரைக் காப்பது தனி மகிமை ஆகின்றது.

## பசுவின் பெருமை.

ஆவை முதலில் குறித்தது யாதொரு பாவமும் அறியாமல் எளிய புல்லை அருந்தி இனிய பாலை உதவி யாண்டும் இதம் பயந்து வரும் அதன் பயன்பாடு கருதி.

"விடுநில மருங்கில் படுபுல் ஆர்ந்து
நெடுநில மருங்கின் மக்கட்கு எல்லாம்
பிறந்த நாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந்து ஊட்டும்."

(மணிமேகலை, 13)

பசுவின் உதவிநிலையை இது உவந்து போற்றி யுள்ளது.

"பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி எனும் இவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்க."

என மதுரையில் எரியூட்டியபொழுது அக்கினி தேவனை நோக்கிக் கண்ணகி இங்ஙனம் வேண்டியிருக்கிறாள்.

நல்லோர் குழுவில் பசு நிலையாக இடம் பெற்றுள்ளது. அமைதியாய் நின்று பலவகையினும் உலகிற்குப் பயனுதவி வருவதால் பசுபரிபாலனத்தைப் பெரிய புண்ணியமாக எண்ணி இந்நாடு யாண்டும் கண்ணியமாகப் பேணி வருகின்றது.

ஆவுக்கு இடர் நேரா வகை பேணுதலை முந்துறக் குறித்துப் பின்பு அந்தணரை வைத்தது அவரது செந்தண்மை கருதி.

உலகப் பற்று இன்றி எல்லா வுயிர்க்கும் இதமே நாடி அரிய தவ ஒழுக்கத்தை உரிமையாகப் பூண்டுள்ள நல்லார் ஆதலால் அவரை இனிது பேணுதல் அரசனுக்குப் பெரிய கடமையாயது.

எவ்வழியும் பிறர்க்கு நன்மையாய் இதம்புரிகின்ற தன்மையாளரை யாண்டும் உலகம் உரிமையாகக் கொண்டாடுகின்றது.

ஆ, அந்தணர், மகளிர், எளியவர் என்பவர் எங்கும் இரங்கி அருள உரியராய் இனிமையில் மருவித் தனிமையில் உள்ளனர்.

யாவர்க்கு ஆனும் என்றதில் இராமனது பரந்த கருணை இலங்கிநின்றது மேலே வரைந்து காட்டிய அளவில் நில்லாமல் இது விரிந்து எழுந்தது.

எவராயினும் துயர் அடைய நேர்ந்தால் அத்துயரை விரைந்து நீக்கி அவரை ஆதரித்து அருளவேண்டும். அதனால் நோதல் நேரினும் நன்றே; சாதல் நேரினும் அது பேரானந்தமாம்.

பிறர்க்கு உதவி செய்தலைப் பெற்ற பிறவியின் உற்ற பயனாக வெற்றி வீரன் முற்றும் கருதி யிருக்கிறான்.

கற்றவர், கடவுள் நாமம் சேர்ந்தவர், களைகண் இல்லார்,
அற்றவர், அந்தணாளர், அன்பினால் அடைந்த நீரார்க்கு
உற்றதோர் இடுக்கண் வந்தால் உதவுதற்கு உரித்தன்றாயின்
பெற்றஇவ் உடம்பு தன்னால் பெறுபயன் இல்லை மன்னோ. (1)

மன்னுயிர் வருத்தங் கண்டால் வாளாதே ஒழிகுவாயின்
அன்னவன் ஆண்மையாவது அலிபெற்ற அழகு போலாம்;
என்னையான் கொடுத்தும் வையத்து இடுக்கண்நோய் கெடுப்பன் என்னும்
நின்னையே போலு நீரார் நிலைமையை நிலைநின்றார். (2)
(சூளாமணி)

ஏவர் எனினும் இடர் உற்றனராகி
ஓவில் துறை ஒன்று உளர் ஆயின் அது முடித்தற்கு
ஆவி விடினும் அறனே; மறுத்துள நீரேல்
பாவம் அலது பழியும் ஒழியாதே. (கந்தபுராணம்)

களைகணாத் தம்மடைந்தார்க் குற்றுழிமற் றோர்
வினையுனி வெற்றுடம்பு தாங்கார்—தனதுடையது
ஊனுடம் பென்று புகழுடம்பு ஓம்புதற்கே
தானுடம்பு பட்டார்கள் தாம். (நீதிநெறிவிளக்கம்)

பேரறிஞர் தாக்கும் பிறர்துயரம் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்
கைசென்று தாங்கும் கடிது. (நன்னெறி)

இவை இங்கே உறுதியாகக் கருதி ஆராய உரியன.

நொந்து அடைந்தவரை நோவு நீக்கி ஆதரித்து அருள்புரிவரே உத்தம வீரர்; உயர் குல நீரர் என நூல்கள் எல்லாம் ஓலமிட்டுள்ளன. இந் நீர்மையில் இராமன் தலைசிறந்து நின்றதை இடங்கள் தோறும் நாம் அறிந்து வருகின்றோம். ஈண்டு நிலைமையை நேரே கண்டு தலைமை ஆண்மையின் தகவினை உணர்கின்றோம்.

பொதுவாக உதவி நலனை உவந்து பேசி வந்தவன் இறுதியில் முனிவர் நெஞ்சம் உறுதி கொள்ளுமாறு வீர வேகத்துடன் உரையாடியிருக்கிறான்.

"சூர் அறுத்தவனும், சுடர் நேமியும்,
ஊர் அறுத்த ஒருவனும் ஓம்பினும்"

அரக்கரை நான் வேர் அறுப்பன் என இவன் வீறு மண்டி விளம்பியுள்ளது யாரும் கண்டு அதிசயிக்கத் தக்கது.

## சூர் அறுத்த வீர மூர்த்தி.

சூர் அறுத்தவன் என்றது முருகக்கடவுளை. சூர்=சூரபன்மன். அசுர குல திலகனாய் ஆயிரத்து எட்டு அண்டங்களையும் நீண்ட காலம் நிலையாக ஆண்டுவந்த மகா வீரனை சூரபன்மனை அடியோடு அழித்து ஒழித்த அற்புத மூர்த்தி ஆதலால் அவ் வீர தேவதையை இவ் வீரன் ஈண்டு முற்பட வரைந்து வைத்தான்.

அறுத்தவன் என்றது அசுரர் குலத்தை ஒருங்கே கருவறுத்த அதிசய நிலைமை துதி செய்ய வந்தது.

சூர் மருங்கு அறுத்த சுடரிலை நெடுவேல்
சீர்மிகு முருகன். (அகம், 59)

சூர் மருங்கு அறுத்த சுடர்ப்படை யோயே! (பரிபாடல் 14)

சூர் மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி
போர் மிகு பொருந! (திருமுருகாற்றுப் படை, 275)

சீர் கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேல் அன்றே
பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள் வேலே. (சிலப்பதிகாரம், 24)

சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல் வேள். (பதிற்றுப்பத்து, 11)

மாயையின் வலியோ னாகி மால்முத லோரை வென்றே
ஆயிரத் தோரெட் டண்டம் அரசுசெய்து உகம்நா லெட்டுக்
காயம தழிவின் றாகிக் கடவுளர்க்கு அலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற குமரன்தாள் சென்னி வைப்பாம்.
(கந்தபுராணம்)

பேராசை எனும் பிணியிற் பிணிபட்டு
ஓரா வினையேன் உழலத் தகுமோ?
வீரா முதுசூர் படவேல் எறியும்
சூரா சுரலோக துரந்தரனே. (கந்தரனுபூதி)

சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர் குழாம்
சாரில் கதியன்றி வேறிலைகாண் தண்டு தாவடி போய்த்
தேரில் கரியில் பரியில் திரிபவர் செல்வம எல்லாம்
நீரில் பொறி என்று அறியாத பாவி நெடு நெஞ்சமே.
(கந்தரலங்காரம்)

வானவரை விட்டு வணங்காமையால் கொடிய
தானவர்கள் நாற்படையும் சங்கரித்துப்—பானுப்
பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனை வென்று வாகை முடித்தோய்!—சுகமுடுத்த
வாரி தனிற்புதிய மாவாய்க் கிடந்தநெடும்
சூருடலம் கீண்ட சுடர் வேலோய்! (கந்தர்கலிவெண்பா)

முருகன் சூர் அறுத்த சரிதம் சங்கப்புலவர் முதல் இங்ஙனம் எல்லாராலும் புகழ்ந்து போற்றப் பட்டுள்ளது.

தேவராலும், தேவ தேவராகிய மூவராலும் செய்ய முடியாத அரிய வேலையைச் சிறிய ஒரு வேலால் எளிதில் முடித்தருளிய வீர நாயகன் ஆதலால் அவ்வெற்றிக் குரிசிலை முதலில் நினைந்தான்.

சுடர் நேமி என்றது திருமாலை. நேமி=சக்கரம். அதனை யுடையவனைக் குறித்து நின்றது. சக்கரத்தைச் சுட்டியது உக்கிர வீரம் தெரிய.

ஊர் அறுத்தவன் என்றது சிவபெருமானை. திரிபுரங்களை எரித்து அழித்த அவ் அரிய வீறு அறியவந்தது. கொடிய மாயா வல்லபமுடைய கெடிய ஊர்களைச் சிறிய ஒரு சிரிப்பால் அடியோடு நொடியில் அழித் தொழித்த அசகாய வீரனை இறுதியில் குறித்தான். போர் வீரங்கள் போற்ற வந்தன.

மூன்று மூர்த்திகளையும் ஒரு சேர இணைத்து வையாமல் பிரமனை இங்கே அயல் ஒதுக்கியது, பொருதிறல் இலனாய் அந்தணத் தன்மையில் அவன் அமர்ந்திருத்தல் கருதி.

நிலையான இருமூர்த்திகளுடன் ஒரு மூர்த்தியைத் தலைமை யாக வைத்தான். நான்முகன் இடத்தில் அறுமுகன் அமர்ந்து பெருமிதம் அருளினான்.

செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள! என முருகனை வீர வென்றிகளால் நக்கீரர் துதித்திருக்கிறார். போர் வீரத்தில் தன் னிகரில்லாத் தனித் தலைவனாய் யாண்டும் அப்பெருமான் நிலைத் திருத்தலை உலகம் என்றும நிலையாய் உணர்ந்திருக்கின்றது. தேவர் சேனாதிபதி என்னும் பெயருடைமையால் பொருந் திறலில் அவ் வருந்திறல் சிறந்திருக்கும் நிலை தெளிவாம்.

வீர நாதனான முருகக் கடவுளும், சக்கரபாணியாகிய திரு மாலும், திரிபுர தகனனாகிய உருத்திர மூர்த்தியும் எதிர் வந்து

தடுத்தாலும் தரும விரோதிகளை நான் கருவறுத்து ஒழிப்பேன் எனத் தனது உறுதி நிலையை முனிவர் தெளிய இராமன் இனிது உணர்த்தினன். மாலின் அமிசமாய் வந்தும் அவனைப் பிறன் போல் மறந்து பேசினன். பிறந்த பிறப்பின் பெற்றிக்கு ஏற்பப் பேச்சும் செயலும் நிகழ்ந்து வருகின்றன.

ஓம்பினும் என்றதில் உம்மை அவர் அங்ஙனம் ஓம்பார் என்னும் உண்மையை உணர்த்தி நின்றது.

தரும மூர்த்திகள் பாவிகளுக்கு ஆதரவாய்ப் பாதுகாக்க வாரார் என்ற துணிவினால் இவ் வீரவுரை விரைந்து வந்தது.

அறத்தினோடு அன்றி நின்றார் என்றது தருமத்தை விட்டு விலகிப் பாவத்தில் ஒன்றியுள்ளவர் என்றவாறு.

[அரக்கரை அழிப்பேன் என்னாது அறத்தின் நீங்கினரை அறுப்பேன் என்றமையால் இவனது தருமசீலத்தின் தகைமையும் நீதி பரிபாலனத்தின் நிலைமையும் தெளிவாயின.

அறமுடையார் எவராயினும் அவரைப் புரப்பேன்; தமராயினும் அறம் இலராயின் அவரை வேர் அறுப்பேன் என்பதாம்.

தருமம் தழுவி வாழ்பவரை எவ்வழியும் இக் கரும வீரன் ஏத்தி வருகிறான். அவருக்கு ஏதேனும் இடையூறு நேர்ந்தால் இவன் உள்ளம் துடித்து உதவி செய்ய ஓடுகின்றான்.

வேர் அறுப்பன் வெருவன்மின் நீர் என மாதவர் மனம் தேற இங்ஙனம் ஆதரவு கூறினன். உங்களுக்கு இடரானவர்களை அடியோடு கருவறுத்து ஒழிப்பேன் என்பது வேர் என்ற சொல்லில் நேரே தொனித்து நின்றது.]

அரசிழந்து வறிய நிலையில் வனத்திற்கு வந்திருக்கிறான். வந்த இடத்தில் இவனது மனத்துணிவும், மறுகி நிற்பவரை உறுதி கூறித் தேற்றும் ஊக்கமும், உதவி நிலையும் இவ்வாறு உதித்து நிற்கின்றன.

[தனக்கு நேர்ந்த அல்லல்களை யாதும் வெளி விடாமல் பொறுத்துக் கொள்ளுகின்றான்; பிறருடைய இடர்களைக் கேட்ட பொழுது உள்ளம் உருகி உதவி செய்ய முந்துகின்றான்.]

"All the world is froth and bubbles,
Two things stand alone:
Kindness in another's troubles,
Courage in your own."

"பிறருடைய துயரங்களில் இரங்கி உதவலும், உன்னுடையதில் கலங்காமல் துணிந்து நிற்றலும் ஆகிய இந்த இரண்டு தன்மைகளே நீர்க் குமிழி போல் நிலையில்லாத இவ்வுலகில் நிலையாய்த் தலைசிறந்து நிற்கின்றன" என்னும் இந்த ஆங்கிலக் கவி ஈண்டு சிந்திக்கத்தக்கது.

தளர்ந்தவர்களை ஆதரிப்பதில் எவனுடைய உள்ளம் கிளர்ந்து எழுகின்றதோ அவன் ஒரு உயர் குலமகனாய் உயர்ந்து திகழ்கின்றான். உதவியளவே பதவி உயர்கின்றது.

அயர்ந்து தளர்ந்தவருக்கு ஆதரவு செய்வது சிறந்த ஆண்மையாகும். ஆதலால் அதனை எவரும் மேன்மையாக வியந்து கொள்ளுகின்றனர். அங்ஙனம் உதவாதவனை இளிவாக இகழ்ந்து தள்ளுகின்றனர்.

"They are slaves who fear to speak
For the fallen and the weak." (Lowell)

"மெலிந்து தளர்ந்தவர்க்குப் பரிந்து பேச அஞ்சுபவர் இழிந்த அடிமைகளே யாவர்" என லோவெல் என்பவர் கூறியிருக்கிறார். மற்றவர்க்கு ஆற்றுதல் வெற்றி வீரமாம்.

தந்நலமே கருதுபவர் எந்நலமும் அடையார். தன்னை மறந்து பிறர்க்கு உதவி செய்யும் பொழுதுதான் உண்மையான ஆனந்தமும் உயர்வும் மனிதனுக்கு உளவாகின்றன.

"The truest self-expression may be found only in the act of pouring out self for another." (Living Creatively)

"பிறர்க்கு உபகரிப்பதிலேதான் மெய்யான ஆன்மவொளி உதயமாகின்றது" என்னும் இது இங்கு உணரவுரியது.

மருகி வந்து புகலடைந்த முனிவர்க்கு அபயம் தந்து இராமன் இங்ஙனம் ஆதரவு கூறவே அவரனைவரும் ஆனந்த பரவசராயினர். உள்ளம் உவகையில் துள்ளவே தம்மை மறந்து குதித்துக் கூத்தாடித் துதித்துப் போற்றினர்.

உரைத்த வாசகம் கேட்டு உவந்து ஓங்கிட
2653 இரைத்த காதலர் ஏகிய இன்னலர்
திரித்த கோலினர் தேமறை பாடினர்
நிருத்தம் ஆடினர் நின்று விளம்புவார். (1)

தோன்றல் நீ முனியின் புவனத்தொகை
2654 மூன்று போல்வன முப்பது கோடிவந்து
ஏன்ற போதும் எதிரல என்றலின்
சான்று வேதம் தவம்பெரு ஞானமே, (23-24) (2)

தமக்கு அபயம் அருளிய இராமனை மாதவர் இவ்வாறு மகிழ்ந்து கொண்டாடி யுள்ளனர். இவ் வீர வள்ளல்பால் அவர் கொண்டுள்ள நம்பிக்கையும் மதிப்பும் உரைகளில் தெளிவாய் வெளியாகி யிருக்கின்றன.

மூன்று உலகம் அன்று முப்பது கோடியே யாயினும் இவன் வென்று அருளுவான் என்று அவர் உள்ளம் களித்துள்ளனர். பொல்லாதவர்களால் நேர்ந்த அல்லல்கள் எல்லாம் இனிமேல் தமக்கு இல்லையாம் என எண்ணி மகிழ்ந்து புண்ணிய நெறிகளை நண்ண விழைந்தனர்.

## தண்டகவனத்தில் தங்கியிருந்தது.

இங்ஙனம் உவந்து நின்ற முனிவர் இராமனை அங்கேயே அமர்ந்திருக்க வேண்டினர். இப்பெருமானும் இசைந்து அயலே ஒரு மலைச்சாரலில் தனியே பன்னகசாலை அமைத்து மனைவி தம்பிகளுடன் வன வாசம் செய்தான். அவ்வன வாசிகளுக்கு யாதொரு தீதும் நேராவண்ணம் கவனமாகக்கருதியிருந்தமையால் மாதவரின் பாது காப்பாகவே அவ் வாழ்க்கை மருவி நின்றது.

## சீதையின் சீவகாருணியம்.

தனது அருமை நாயகன் முனிவர்களுக்கு அருளிய வாக்குறுதிகளைச் சீதை நெடிது சிந்தித்து வந்தாள். அரக்கரை வேர் அறுப்பன் என்ற அவ்வார்த்தை அம் மெல்லியல் உள்ளத்தை வருத்தி வந்தது. ஒரு நாள் இரவு தனியே இருக்கும் பொழுது கணவனைக் கனிந்து நோக்கி "நாதா! தாங்கள் தவசிகளிடம் உறுதி கூறியது பெரிதும் எனக்குக் கவலை தருகின்றது. நமக்கு

யாரும் நேரே பகை இல்லை. முனிவர் கூறிய உரைகளை முழுதும் நம்பி ஒருதலைப் பட்சமாய் ஒன்றும் விசாரியாமல் அரக்கரைக் கொன்று தொலைப்பேன் என நீங்கள் வாக்கு அளிக்கலாமா? தண்ணளியும் புண்ணிய சீர்மையும் என்றும் கண்ணியமாக நண்ணியுள்ள உங்களுக்கு இன்று இந்த எண்ணம் எப்படி வந்தது? அரச பதவியைக் கைவிட்டுத் தவக்கோலம் பூண்டிருக்கிறீர்கள்; இந்த நிலைக்கும் கொலைக்கும் எவ்வளவு தூரம்! இரக்கம் இல்லாதவர் அரக்கர் என்றமையால் முனிவர் அதனைத் துறக்கலாமா? நீங்கள் மறக்கலாமா? எவ்வுயிர்க்கும் இரங்கியருள வேண்டாமா? ஓர் உயிர்க்கும் ஊறு செய்யாமையே பேரறிவாம் என ஊரில் இருக்கும் போது எனக்கு ஒருநாள் உபதேசம் செய்தீர்கள். காட்டுக்கு வந்த பொழுது அந்தக் கருணையைக் காணேம். கொல்லும் கருவி கையிலிருந்தால் அது கொலை செய்யவே தூண்டும். ஊன் உண்பவர் மனம் போல் கையில் ஆயுதம் கொண்டவரும் தீமைகளைச் செய்யவே துணிவர். இளமையில் என் தந்தை எனக்கு ஒரு கதை சொல்லியுள்ளார்: "செந்தண்மையுடைய அந்தணர் ஒருவர் அரிய தவம் செய்து பெரிய மகிமையை எய்தியிருந்தார். அவரது நிலைமையைக் குலைக்க விரும்பி இந்திரன் ஒரு போர்வீரன் போல் அங்கே வேட்டைக்கு வந்தான். முடிவில் தனது உடைவாளை அவரிடம் பாதுகாத்து வைத்திருக்கும்படி கொடுத்து விட்டுப் போனான். சாதுவாக இருந்த அவர் அதனது அழகையும் ஒளியையும் நோக்கி உளம் மகிழ்ந்து கொண்டார். சில திங்கள் கழிந்தன. மெல்லிய கொடி செடிகளை உல்லாசமாய் அதனால் கொய்து வந்தார். நாளடைவில் பொல்லாத செயல்களைப் புரிந்து கொலைத் தொழிலில் முதிர்ந்தார். பாவம் வளர்ந்தது; பழியும் தொடர்ந்தது; அதனால் படுதுயரடைந்து இறுதியில் அருநரகடைந்தார்" என உங்கள் மாமன் என்னிடம் கூறியிருக்கிறார்.

வில்லும் அம்புகளும் கையிலிருந்தால் எவரையும் கொல்லும்படி தூண்டும். அவற்றை அருளோடு நெறியே அடக்கியாள வேண்டும். நான் ஒரு பேதை. மகா மேதையாகிய உங்களுக்கு யாதொரு நீதியும் போதனை செய்யவில்லை. என் உள்ளத்தில் தோன்றியதை வெள்ளையாய் உரைத்தேன். குற்றம் குறைகள் தெரியாது; கருத்தை ஓர்ந்து பொறுத்தருள்க" என்று முடித்தருளினள்.

என்னஓர் காதை உண்டு கேட்டிஎம் பெரும! என்றுத்
தன்னிரு கைகள் கூப்பிச் சானகி உரைக்கல் உற்றாள்
முன்னம் ஓர் முனிவன் செய்த தவத்தினை அழிக்க முன்னிப்
பொன்னகர்க்கு இறைவன் ஓர்வாள் முனிகையில் கொடுத்துப்
[போனான், (2)

மற்றது காத்தல் வேண்டி வைப்பாளன் கையில் கொண்டு
நற்றவன் கொடியன் வன்புல மரம் குறைபடுத்துப் பின்னர்
உற்றபல விலங்கு யாவும் ஒறுத்து வாள் பிடித்த வாற்றால்
பற்றாகி நரகில் எய்திப் பருவரல் உழந்தான் அன்றே. (3)

ஆதலால் வரிவில் ஏந்தி அரக்கரை முனிந்து கோறல்
தீதென உரைப்ப ஐயன் சீதைசொல் மகிழ்ந்து கேட்டு
மாதவர் தமக்கு முன்னம் வஞ்சினம் உரைத்த வாற்றால்
பாதகர்க் கொல்லின் நன்மை பயந்திடும் பழி யுறாதால். (4)

(கூர்மபுராணம், இராமன் வனம் புகுந்த அத்தியாயம் 25-28

அரக்கரைக் கோறலாகாது என்று சீதை இரக்க மீதூர்ந்து சொன்னதும், அதற்கு இராமன் பதில் உரைத்ததும் இதில் அறிகின்றோம். சதிபதிகளுடைய உரைகளில் முறையே அருளும் அறிவும் மருவி மிளிர்கின்றன.

இவ்வாறு மாதவர்கட்கு ஆதரவாய் இராமன் அங்கே வாசம் செய்திருந்தான். அவ் வன வாழ்க்கை மன மகிழ்ச்சியாய் நிகழ்ந்தது. பத்து வருடங்கள் கழிந்தன. யாராலும் யாதொரு இடரும் நேரவில்லை. இராக்கதர்கள் வந்து தமக்குக் கொடிய அல்லல்களைச் செய்கின்றனர் என முனிவர் சொல்லியபடி ஒன்றும் காணோமே என்று சீதை சிந்தித்திருந்தாள். இளையவனும் எண்ணினான். தவசிகளும் வியந்து இராமனிடம் வந்தார். ஆதவன உதயம் ஆக இருள் நீங்கியது போல நீ வரவே எங்கள் துயரம் அறவே நீங்கியது எனப் பொங்கிய உவகையராய்ப் புகழ்ந்து துதித்தார். எங்களுக்குத் தலைவரும் நாங்கள் நாளும் திசை நோக்கித் தொழுகின்றவரும் ஆகிய அகத்திய முனிவர் இந்த நிலைமையைக் கேள்வியுற்றால் அகம் மிக மகிழ்வர் என்று ஆர்வவுரையாடினார்.

அம் மகான் இது பொழுது எங்கே இருக்கிறார்? என்று இராமன் விரும்பி வினவினான். இந்த இடத்திலிருந்து பன்னிரண்டு யோசனைகளுக்குத் தென்பால் தனியே தவ வாழ்வில் உள்ளனர் என்று இருடிகள் உவந்து இனிது மொழிந்தனர்.

அந்த அருந் தவக் குரிசிலைக் காணவேண்டும் என்னும் வேணவாவுடன் இராமன் எழுந்தான். முனிவர்களிடம் விடைபெற்று மனைவி தம்பிகளுடன் தென்பால் வந்தான்.

சுதீக்கண்ணரைக் கண்டது.

வனங்கள் பலவும் கடந்து நடந்து ஆறும் நாள் சுதீக்கண்ணர் என்னும் மாதவரை வந்து கண்டான். அவர் அரிய தவசி. பெரிய யோகி. வயது மிக முதிர்ந்தவர். அவரைக் கண்டு வணங்கினன். அவர் களிபேருவகைகொண்டு வழிபாடுகள் செய்து உழுவலன்புடன் உபசரித்தருளினர். இவ்வள்ளல் வந்தருளியதை விழைந்து வியந்து உள்ளம் களித்தார்.

செல்வ! நீ எய்த யான் செய்தது எத்தவம்?

என அம் மெய்தவர் மகிழ்ந்து புகழ்ந்தார். அவரது ஆர்வ நிலையை எண்ணி உருகி இவ்வீர மகனும் மதிநலம் கனியப் பதில் மொழி பகர்ந்தான்.

அந்த ஞான யோகியுடன் அளவளாவி ஒரு நாள் இருந்து மறுநாள் எழுந்தான். அகத்திய முனிவரை இவன் காண அவாவியதை அவர் கண்டு மகிழ்ந்தார். "குமர! அந்த அமர முனிவரை நீ அவசியம் போய்க் காணவேண்டும். உனது வரவை நெடுநாளாக எதிர்பார்த்துள்ளார். முனிவர் கணங்களுடன் உன்னைக்குறித்துப் பல முறையும் புகழ்ந்து பேசியிருக்கிறார். தேவர்கள் யாவரும் ஆவலோடு வந்து ஏவல் செய்யத்தக்க அரிய மாதவர் உன்பால் அன்பால் உருகி என்றும் பிரியம் மீதூர்ந்து பெருகி நிற்கின்றார். உங்கள் இருவர் சந்திப்பில் அரிய பல நன்மைகள் அமைந்திருக்கின்றன. நீவிர் ஒருவரை ஒருவர் நோக்கும் பொழுது வானமும் வையமும் பெரிய பாக்கியமுடையனவாய்ப் பேரானந்தம் அடையும்."

"நன்று தேவர்க்கும் யாவர்க்கு நன்று"

என்று அம்மகான் குறித்திருத்தலால் இக்குல மகனுக்கும் அக்குறுமுனிக்கும் உள்ள உறவும் வரவும் உணரலாகும்.

தவசிகளுடைய வாக்குகள் அரிய சூக்குமங்களையுடையன. எவ்வழியும் செவ்வையாய் நுணுகி நோக்குதல் வேண்டும்.

## அகத்திய முனிவரை அடைந்தது.

அப் பெரியவர் இங்ஙனம் உணர்வுரைகள் ஆடி வழி விவரம் கூறி ஆசிகள் பல சொல்லி அனுப்பியருளினர். அவரைத் தொழுது நிறுத்தி இவ்வீரன் துணைகளுடன் தென்திசை நோக்கி நடந்து வந்தான்.

இடையே சுதர்சனர் என்னும் தவசியின் குடிசையில் தங்கியிருந்து அடுத்த நாள் அதிகாலையில் எழுந்து அயலே இயல்பாய் நடந்தான. மாலையில் அகத்தியரது ஆச்சிரமத்தை அணுகினன். அழகும் இனிமையும் குளிர்மையும் நிறைந்த விழுமிய பொழிலிடையே அவரது தவச்சாலை புனித நிலையில் பொலிந்திருந்தது. வழியில் வரும்பொழுதே அவருடைய மகிமைகளை எல்லாம் தன் தம்பியிடம் உரைத்து இந்த அண்ணல் சிந்தை மகிழ்ந்து வந்தான்.

இராமன் தன்பால் வருவதை அறிந்து அன்பால் உருகி இன்பமீதூர்ந்து அக் கும்பமுனிவர் இந்நம்பி எதிரே விரைந்து வந்தார். அம் மகானைக் குறித்து விளக்கியிருக்கும் நிலை விழைந்து காணத்தக்கது.

### அகத்தியர் எதிர் வந்தது

ஆண்டகையர் அவ்வயின் அடைந்தமை அறிந்தான்
ஈண்டுவகை வேலைதுணை ஏழுலகம் எய்த
மாண்டவர தன்சரணை வழங்க எதிர் வந்தான்
நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான். (1)

### கடல் குடித்தது.

பண்டு அவுணர் சூழ்கினர் படார்கள் என வானோர்
எண்தவ எமக்கருள் கெனக்குறை இரந்தார்
கண்டு ஒருகை வாரினன் முகந்து கடல் எல்லாம்
உண்டு அவர்கள் பின் உமிழ்க என்றலும் உமிழ்ந்தான்.

### வாதாபி இல்வலை வதைத்தது.

தூயகடல் நீரடிசில் உண்டது துறந்தான்
ஆயவதலா லமரு மெய்யுடைய அன்னாள்
மாயவினை வாளவுணன் மாயஅவன் வன்மைக்
காயம்இனி துண்டுலகின் ஆரிடர் களைந்தான். (3)

விந்தம் அடக்கியது.

யோகமுறு பேருயிர்கள் தாம் உலை வுறாமல்
2669 ஏகுநெறி யாதென மிதித்தடியின் ஏறி
மேகநெடு மாலைதவழ் விந்தைஎனும் விண்தோய்
நாகமது நாகமுற நாகமென நின்றான். (4)

உலகை நிலை நிறுத்தியது.

மூசரவு சூடுமுதலோன் உரையின் மூவா
மாசில்தவ ஏகென வடாதுதிசை மேனாள்
2670 நீசமுற வானில்நெடு மாமலயம் நேரா
ஈசன்நிக ராயுலகு சீர்பெற இருந்தான். (5)

தமிழை வளர்த்தது.

உழக்குமறை நாலினும் உயர்ந்து உலகம்ஓதும்
வழக்கினும் மதிக்கவியி னும்மரபின் நாடி
2671 நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க் கடவுள் தந்ததமிழ் தந்தான். (6)

**அகத்திய முனிவரது வரவை இந்தவாறு வந்துள்ளது.**

கடல் நீரைப் பருகியது, மாயாவிகளாகிய அசுரர்களை அழித்து உலகிற்கு நலம் புரிந்தது, விந்தமலையை அடக்கியது, பூமியைச் சமநிலை நிறுத்தியது, தமிழ் மொழியை எங்கும் பரப்பியருளியது, காவிரி நதியைக் கொண்டு வந்தது முதலிய அதிசயங்களால் இவர் யாண்டும் துதி செய்யப் பெறுகின்றார். ஒவ்வொன்றும் தனித்தனியே பெரிய கதையாய் விரிய வரியது. இவருடைய சரித்திரம் விசித்திரம் மிகவுடையதாய் தவத்தின் மகிமைகளைத் துலக்கி, ஆத்தும சத்தியை விளக்கி, அரிய மகத்துவங்கள் பல நிறைந்திருக்கின்றது. ஈண்டு வரையின் விரியும். இந்நிலையத்திலிருந்து வெளிவந்துள்ள அகத்திய முனிவர் என்னும் நூலில் யாவும் தெளிவாய்க் காணலாகும். அதில் கண்டு கொள்க.

இவரது அருமை பெருமைகளைப் பல நூல்களும் பாராட்டியிருக்கின்றன.

வேதங்கள் நான்கினும் உயர்ந்து உலக வழக்கினும் செய்யுள் வழக்கினும் சிறந்து சிவபெருமான் அருளால் தந்த தமிழை இவர் தந்தார் என்றமையால் தமிழோடு இவருக்கு வாய்ந்துள்ள உறவுரிமையையும் உயர் நிலைமையையும் உணரலாகும்.

## அகத்தியரும் தமிழும்.

மனித அறிவுக்கு இனிய உயிர் நிலையமாயுள்ளது மொழி. அது, இட வகையால் பிரிந்து வாழ்கின்ற மக்கள் இயல்புக்குத் தக்கபடி தனித்தனியே வழங்கப்படுகின்றது. தேசங்கள்தோறும் பாஷைகள் வேறு என்னும் பழமொழியால் அதன் நிலைமை புலனும்.

அகத்திய முனிவர் இமைய மலையிலிருந்து தென்னாட்டுக்கு வரும்பொழுது இந்நாட்டுள் வழங்கும் மொழியை உமாபதியால் தெளிந்து வந்தார். ஈசன் அருளால் கலையறிவு கைவந்தமையால் இவர் தேசு மிகப்பெற்றுச் சிறந்து விளங்கினார். இயல் இசை நாடகம் என வகுத்து இலக்கணம் இயற்றி அறிவு நலங்களைத் தெளிவுபடுத்தித் தமிழைப் பலவகையிலும் இவர் நலமுறச் செய்தார். அதனால் தமிழ் முனி என எங்கும் இவர் இசை மிகப்பெற்றார். இவர் செய்தருளிய நூலுக்கு அகத்தியம் என்று பெயர். அது பன்னீராயிரம் சூத்திரங்களையுடையது. அந்நூல் பின்னாளில் மறைந்து போயது. இவருடைய மாணாக்கர் பன்னிருவருள் ஒருவராகிய தொல்காப்பியர் செய்த தொல்காப்பியம் என்னும் இலக்கணநூல் அதன் வழித் தோன்றியது. இறைவன் அருளை நேரே பெற்றுத் தவஞானியாகிய இவர் கலைஞானியாகவும் தலைமையுற்று நிற்றலால் புலவர் எல்லாரும் இவரைப் பரம ஆசிரியனாகப் போற்றி வருகின்றனர்.

ஆதியில் தமிழ்நூல் அகத்தியற்கு உணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே. (1)

சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமாசாரியன் பதங்கள்
சிரமேல் கொள்ளுதும் திகழ்தரற் பொருட்டே. (2)

(சேனாவரையர்)

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை உலகமெலாம் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர் எனில்
கடல்வரைப்பின் இதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

(காஞ்சிப்புராணம்)

அகத்தியன் பயந்த செஞ்சொல் ஆரணங்கு. (பாரதம்)

பரமன் அருள்வழியே தமிழ்க் கலையின் பொருள் தெளிந்து இவர் தலைமை எய்தியுள்ள நிலைமையை இவ்வாறு பலரும் துதித்திருக்கின்றனர்.

சொற்கலை முனிவன் என நம் கவி இவரைக் குறித்திருத்தலை மிதிலைக் காட்சியில் முன்னம் கண்டிருக்கிறோம்.

" நிறற்பொலி கணிச்சி மணி நெற்றி உமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ் தந்தான். "

பரமனுக்கும் தமிழுக்கும் இம்முனிவருக்கும் உள்ள சம்பந்தத்தை இதில் பார்த்து வியக்கின்றோம். தீவண்ணன் என்றபடி சிவந்த சோதி வடிவன் ஆதலால் சிவனைச் சுடர் கடவுள் என்றார்.

இங்ஙனம் முழுமுதற் பரமன் அருளும், இனிய தமிழும் தனியுரிமையாகத் தழைத்திருந்த அந்த முனிவர் குல திலகர் இந்த அரசர் குலதிலகத்தைக் காண விழைந்து முதிர்பேரன்புடன் எதிர்கொண்டு வந்தார். இப்புண்ணிய முதலை அவர் கண்ணி வந்துள்ள கண்ணிய நிலைகள் கருதியுணரத் தக்கன.

விண்ணினில் நிலத்தினில் விகற்ப உலகில்பேர்
2672 எண்ணினில் இதந்தினில் இருக்குமென யாரும்
உன்னினை கருத்தினை உறப்பெறுவனேல் என்
கண்ணினில் எனக்கொடு களிப்புறு மனத்தான். (1)

இரைத்த மறை நான்கினொடு இயைந்தபிற யாவும்
2673 நிரைத்தநெடு ஞானநிதி கல்வியெ நெடுநாள் இட்டு
அரைத்தும் அயனேனும் அறியாத பொருள் நேர்நின்று
உரைக்க உதவுமாலெனும் உணர்ச்சியின் உவப்பான. (2)

உய்ந்தனர் இமைப்பிலர் ; உயிர்த்தனர் தவத்தோர் ;
2674 அந்தணர் அறத்தின் நெறி நின்றனர்கள் ஆனார் ;
வெந்திறல் அரக்கர்விடை வேர்முதல் அறுப்பான்
வந்தவன் மருத்துவன் எனத் தனி வலிப்பான். (3)

ஏனை உயிராய முதல யாவும் இடை வெவ்விந்த
ஊனுகர் அரக்கர் உதவைச் சிந்தினத்தவ
2675 ஆன அவைக்கடி தவிர்த்து உவந்த அரியானை
மானமறை வந்ததென முந்து நயனத்தான். (4)

கண்டனன் இராமனை அரக்கருணை கூரப்
2676 புண்டரிக வாள்நயன நீர்பொழிய நின்றான்
எண்டிசையும் ஏழுலகும் எவ்வுயிரும் உய்யக்
குண்டிகையினிற் பொருவில் காவிரி கொணர்ந்தான். (5)

நின்றவனை வந்தநெடி யோன் அடி பணிந்தான்
2677 அன்றவனும் அன்பொடு தழீஇ அழுத கண்ணன்
நன்று வரவு என்று பல நல்லுரை பகர்ந்தான்
என்றும் உள தென்தமிழ் இயம்பி இசை கொண்டான்.

(அகத்தியப் படலம், 42-47)

அகத்திய முனிவர் இராமனை எதிர்கொண்டு வந்ததும், அப் பெரியாரைக் கண்டு இக் கோமகன் வணங்கிப் பணிந்ததும், உழுவலன்புடன் தழுவி அவர் உருகி நின்றதும் விழி களிப்பக் கண்டு இங்கே நாம் பெரு மகிழ்வு கொள்கின்றோம்.

கவிகளைக் கருத்தூன்றிப் படித்து அவர் எண்ணியுள்ள வண்ணங்களை நுண்ணிதாக அறிந்து கொள்ள வேண்டும்.

அக்கலை முனி இக் கலைமகனைக் குறித்துக் கருதியிருக்கும் கருத்துக்கள் அரிய நிலையின. அறிவுநலம் கனிந்தன. ஆழம் மிகவுடையன.

விண்ணிலும், நிலத்திலும், வேறுபல உலகங்களிலும், பெரியார் எண்ணங்களிலும் வேதங்களிலும் இருக்கும் பொருள் என யாரும் கருதி உரைக்கும் அரிய பரமனை இன்று நான் என் கண் எதிரே காண நேர்கின்றேன் என்னும் மேன்மையுடன் களித்து வந்தார். இருக்கு=வேதம்.

வேதம் முதலிய கலைகளையெல்லாம் ஓதியுணர்ந்த பெரிய மகான்களுடைய தத்துவ ஞானத்தாலும் காணமுடியாத பொருளை நேரே கண் குளிரக் கண்டு பேசப் போகின்றேன்.

ஞானம் ஆகிய அம்மியில் தவமாகிய குழவியை வைத்து யோகப் பொருளை நிறைத்து நெடுங்காலம் அரைத்து நோக்கினும் திரைத்து வாராதது; அயனாலும் அறிய முடியாதது; அது இயல்பாகவே கருணையுடன் இங்கே எளிது வெளிவந்துள்ளது.

தேவர்கள் உய்ந்தனர்; தவசிகள் பிழைத்தனர்; முனிவர்கள் தரும சீலராய்ப் பெருமை மிகப் பெற்றனர்; அரக்கர் அடியோடு

தொலைந்தனர்; பாவிகளாகிய நெருப்பு அவிந்துபடப் புண்ணிய மழை சுரந்த காளமேகம் வந்தது எனக் கருதி உருகிக் களித்து வந்தார்.

இங்ஙனம் வந்தவர் இராமனைக் கண்டவுடனே ஆனந்தக் கண்ணீர் சொரிந்து அவசமாய் நின்றார். அவ்வாறு நின்றவரை இராமன் அடி பணிந்து தொழுதான். அவர் கெழுதகைமை மீதூர்ந்து அழுத கண்ணராய்த் தழுவி மகிழ்ந்தார்.

ஞான சீலரும் மானவீரனும் மருவி நின்ற காட்சி இவ்வாறு மாட்சி மிகுந்துள்ளது. முனிவர் கருதி வந்ததாக உறுதி செய்துள்ள உரைகள் பரத்துவ நிலைகளை விளக்கி அப்பரம்பொருள் இங்கே இரக்க மீதூர்ந்து இறங்கிவந்துள்ள எளிய நீர்மைகளையும் அரியகரும வுரிமைகளையும் குறிப்பாகக் காட்டி நிற்கின்றன.

"வெந்திறல் அரக்கர் விடவேர் முதல் அறுபபான் வந்தனன்"

முனிவர் இந்தவாறு சிந்தனை செய்து வந்திருக்கிறார். அரக்கர் மரபு அடியோடு அழிய இவ்வரவு வந்தது என்றது அவரது யோகக் காட்சியை உணர்த்தி நின்றது.

கொடிய நஞ்சாய் உலகிற்கு நெடிய துயரங்களை விளைத்து வந்துள்ளமையால விடவேர் என்றார். விடம் என்ற குறிப்பால் கொலைத்தொழிலும் புலைச் செயலும் மண்டி அவனிக்கு அச்சத்தை விளைத்துத் தீமையின் உச்ச நிலையில் அவர் ஓங்கியிருத்தல் உணரலாகும்.

பிறர்க்குத் துயரம் செய்பவர் யாவராலும் வெறுக்கப்பட்டுப் பாவிகளாய்த் தேவகோபத்திற்கு ஆளாவார் என்பது இங்கே அறிய வந்தது.

அரக்கர் குடியை முழுதும் கருவறுக்க வில்லும் கையுமாய் இவ்வீர மூர்த்தி வருகின்றது என்றமையால் இவனது பரத்துவ நீர்மையும் பரிபாலன நேர்மையும் தெரியலாகும். தவசி கருதாகக் குறித்தன எல்லாம் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்கற்பாலன.

நம் காதை நாயகனை நம் கவி கருதித்துதித்து உருகிவருகின்ற மருமங்கள் உணரும்தோறும் உவகைசுரந்து வருகின்றன.

வானமழை வந்தது என மகிழ்ந்து வந்த ஞான முனிவர் இக்கோமகனைப் புகழ்ந்து போற்றி தம் தவச்சாலைக்கு அழைத்துச் சென்றார். அரிய உபசாரங்கள் புரிந்து இனிய விருந்து செய்தார். மனைவி தம்பிகளுடன் இக்குலமகன் அங்கே மகிழ்ந்திருந்தான். முனிவர் பெருவுவகையாளராய் ஆர்வமீதூர்ந்து பேணியருளினார். தம் பேற்றை நினைந்து பேரின்பமடைந்தார்.

இராமையா! எனது குடிசையில் நீ வந்து எழுந்தருளியிருக்க நான் என்ன தவம் செய்தேன்? எனது புண்ணியப் பேற்றை நான் எண்ணி எண்ணி மகிழ்கின்றேன் என்று கண்ணீர் ததும்பி முனிவர் கனிந்து மொழிந்தார்.

அகத்தியர் உரைத்தது.

பொருந்த அமலன் பொழிலகத்து இனிது புக்கான்
2629 விருந்து அவன் அடைந்தபின் விருப்பினன் விரும்பி
இருந்தவம் இழைத்த எனது இல்லிடையின் வந்து என்
அருந்தவம் முடித்தனை அருட்கு அரச! என்றான்.

இராமன் பதில் இசைத்தது.

என்று முனியைத் தொழுது இராமன் இமையோரும்
2630 நின்ற தவமுற்று நெடியோரின் நெடியோரும்
உன்றன் அருள் பெற்றிலர்கள் உன் அருள் சுமந்தேன்
வென்றனன் அனைத்துலகும் மேலினி எதன் என்றான்.

அருந்தவரும், இப்பெருந்தகையும் இங்ஙனம் அளவளாவி உரையாடியுள்ளனர். பேச்சுகளில் உணர்வு நலங்களும் உள்ளன்பும் விநயவளங்களும் விரவி மிளிர்கின்றன. அமலன் என்றது யாதொரு மாசும் இல்லாத தேசுடைமை கருதி.

தமது அரிய பெரிய தவத்திற்குப் பரிபூரணமான பயன் கிடைத்தது என வியந்து மகிழ்ந்துள்ளமையால் "அருந்தவம் முடித்தனை" என்றார். பிறந்த பயனை அடைந்து கொண்டேன்; இனிமேல் யாதொரு தவமும் வேண்டியதில்லை என உவகை மீதூர்ந்து பேசியிருக்கிறார்.

தவஞான யோகங்களால் அடையவுரிய அரிய பரம்பொருள் வலியவந்துள்ளது என அந்த எளிய நீர்மையையும் கருணையையும் நினைந்து மகிழ்ந்து உருகியிருத்தலால் அருட்கு அரச! என்றார்.

அமரர்கட்கு அரசு என்னும் பழைய தலைமையையும், அவனிக்கு அரசாயுள்ள புதிய நிலைமையையும் அறவே மறந்து தண்ணளி சுரந்து தானாகவே தம்மை நாடி வந்துள்ளமையால் விம்மிதம் எய்தி அருளுக்கு அரசு எனப் பொருள் பொதிந்த மொழியைத் தெருள் மிகுந்த முனி செப்பி நின்றார்.

உயிரினங்கள் துயரம் நீங்கி உயர் நிலையடைய அளி புரிந்து அடவி வந்திருக்கும் கெழுதகைமை தெரிய இம்மொழி விளைந்து வந்தது. உரைகள் உவகை ஒளிகளாய் வெளி மிளிர்கின்றன.

உள்ளம் கனிந்து உணர்வு ததும்ப முனிவர் இங்ஙனம் இனிது மொழியவே இத்திருமகன் பெருமகிழ்வுடன் அறிவொளி திகழ மறுமொழி பகர்ந்தான்.

உயர்ந்த தேவர்களும் சிறந்த முனிவர்களும் வருந்தி முயன்றும் பெற முடியாத உனது திருவருள் எனக்கு எளிதே அமைந்தது. எனது தவப்பேறு மிகப் பெரிதாயது.

“உன் அருள் சுமந்தேன்; அனைத்து உலகும் வென்றனன்.” என்றமையால் அந்தத் தத்துவ ஞானி இந்த உத்தம வீரனிடம் வைத்துள்ள உழுவலன்பும் கெழுதகைமையும் வெளியே தெரிய வந்தன. சுமந்தேன் என்ற சொற்குறிப்பால் முனிவரது பேரன்பும் பெருங்கருணையும் இவன்பால் பெருகிமண்டியுள்ளமை அறியநின்றது.

யாரிடமும் காட்டாத அரிய பிரியத்தையும், இனிய உரிமையையும் இவ்வீரனிடம் அன்று அவர் காட்டி யிருக்கின்றார்.

பெரியோர்கள் பிரியம் மீதூர்ந்து உறவு செய்வாராயின் அதனால் அரிய பல பேறுகள் விளையும் என்பது இங்கே நுணுகி உணர வுள்ளது.

பெரியமகானுடைய அன்பும் ஆதரவும் அருளும் கிடைத்தன; இனிமேல் எல்லாப் பாக்கியங்களையும் எளிதில் அடைந்து இன்பம் மிகப் பெறுவேன் என இவ்வாறு ஏதாவது வேறொரு வகையில் தனது உள்ளக் களிப்பையும் உவகைப் பெருக்கையும் வெளியிடாமல் உலகு அனைத்தும் வென்றனன் என்றது விசித்திரமா யிருக்கின்றது. அந்தரங்க சிந்தனைகள் பகிரங்கமாயின.

தண்டக முனிவர்களுக்கு வாக்குத் தத்தம் கொடுத்தது முதல் கண்டகர்களை வெல்வதிலேயே கருத்து ஓடியுள்ளது; வேறு ஒன்றிலும் இவன் மனம் செல்லவில்லை; அந்த உள்ள நிலை இங்கே உலகறிய வந்தது.

தான் உரிமையுடன் கருதி யாண்டும் உறுதியாய் ஊக்கி நிற்கும் நோக்கத்தை வாக்கு மூலம் ஈண்டு வெளிப் படுத்தியது. சுத்த வீரன் மனம் எப்பொழுதும் வெற்றி வீரங்களையே விழைந்து நிற்கும்; அந்நிலை உய்த்துணரத் தக்கது.

தன் வெற்றிக்கு ஓர் எல்லை இல்லை என்பது உலகெல்லாம் என்னும் சொல்லால் தெரிந்தது. பெரியவரின் தெரிசன பலத் தால் கருதி வந்த காரியம் கைகூடியது என உறுதி செய்து கொண்டான்.

ஒருவரை ஒருவர் பார்த்ததில் இருவரும் உள்ளம் களித்து உரையாடியுள்ள உரைகள் இருவருடைய நிலைகளையும் நெறி முறை களையும் கருதி யுணரச் செய்கின்றன.

மனம் மிக மகிழ்ந்து இக் குமரன் கூறிய உவகை யுரைகளைக் கேட்டு அந்த அமர முனிவர் ஆனந்த பரவசராயினர். தம் அருகே தவச்சாலை அமைத்து அங்கேயே அமர்ந்திருக்க வேண்டினர்.

ஈண்டுறைதி ஐய! இனி இவ்வயின் இருந்தால்
2652 வேண்டியன மாதவம விருமபின முடிப்பாய்
தூண்டுசின வாள்நிருதர் தோன்றியுளர் என்றால்
மாண்டுக மலைந்துஎமர் மனத்துயர் துடைப்பாய்! (1)

வாழும் மறை; வாழுமனு நீதி; அறம் வாழும்;
2653 தாழும் இமையோர் உயர்வர்; தானவர்கள் தாழ்வார்;
ஆழியுழ வன்புதலவ! ஐயமிலை மெய்யே
ஏழுலகும வாழும இனி இங்குறைதி என்றான். (2)

இங்ஙனம் வேண்டவே இந்த ஆண்டகை அம் முனிவருக்குப் பதில் உரைத்தது தன் மனக் கருத்தை வெளிப் படுத்தியது.

நெருக்கடை அரக்கர்புரி தீமைசிதை வெய்தித்
2654 தருக்கு அழிதரக் கடிது கொல்வது சமைந்தேன்;
பெருக்க மறையோய்! அவர் வருந்திசையில் முந்துற்று
இருக்கை நலம் நிற்கு அருள் என்? என்றனன் இராமன்.

அகத்தியரிடம் இக் குலமகன் இவ்வாறு கூறியிருக்கிறான். செல்வம் அதிகாரம் வலிமை முதலியவற்றால் செருக்கிப் பிறர்க்குத் தீமை புரிந்து திரிகின்ற இராக்கதரைக் கொன்று தொலைக்கக் குறிக் கொண்டுள்ளமையால் அவர் கடுத்து வருகின்ற திசையை அடுத்து இருப்பது நல்லது என்று இவ் வல்லவன் கருதினான். மெலியரை நலிந்த வலியரை நலிய இவன் வலிந்து செல்கின்றான்.

தவசிகள் சொன்ன நாள் தொடங்கி இராக்கதர்மேல் முனிவும் வெறுப்பும் இவனிடம் மூண்டு நிற்கின்றன. அவ் வினைப் பூண்டுகளை வேரறுக்க வேண்டும் என்று யாண்டும் நினைப்பு நீண்டு நாளும் நாளும் நெடிது பெருகி நிலைமீறி வருகின்றது.

எதைக் கருதி அவதரித்தானோ அதற்கு அனுகூலமான தொடர்புகளும் சூழல்களும் சொற்களும் எண்ணங்களும் இடையிடைந்து வளர்ந்து நடைகிளர்ந்து வருகின்றன. மூலவாசனையின் படியே காலவாசனைகள் கமழ்ந்து கருமங்கள் நிகழ்கின்றன.

கருமத்தின் வழியே புத்தி காரியத்தில் மூண்டு வேலை செய்கின்றது. அந்த மருமத்தை உணருந்தோறும் ஆன்ம இயக்கத்தின் விசித்திரங்கள் அதிசயங்களாய் விளங்கி ஒளிர்கின்றன.

வினை விளைவு மன விழைவில் பெருகி நிமிர்கின்றது. இராக்கத வேட்டையில் இவனுக்கு உள்ள வேட்கை நிலை இங்கே வெளியறிய வந்தது.

தென் திசையில் நெருங்கி இருக்க வேண்டும் என்று இவ் வண்ணல் இவ் வண்ணம் சொல்லவே குறுமுனி பெருமகிழ்வு கொண்டார். இரு நாள் உபசரித்து வைத்து மூன்றாம் நாள் தம்மிடம் இருந்த அற்புத வில்லையும் அம்புப் புட்டிலையும் அரிய படைக் கலங்களையும் வீர சன்மானமாக விழைந்து கொடுத்து ஆசிகள் பல கூறி அனுப்பியருளினார்.

அவர் உரைத்து விடுத்த வழி வகைகளும், உணர்வு நலங்களும் ஈங்கு உள்ளம் கொள்ளத்தக்கன.

ஓங்குமரன் ஓங்கிமலை ஓங்கிமணல் ஓங்கிப்
2587 பூங்குலை குலாவுகுளிர் சோலையுடை விம்மித்
தூங்குதிரை ஆறுதவழ் சூழலது ஓர் குன்றின்
பாங்கர் உளது ஆல் உறையுள் பஞ்சவடி மஞ்ச! (1)

கன்னி இள வாழைகனி ஈவ; கதிர் வாலின்
2658 செந்நெல் உள; தேன் ஒழுகு போதும் உள; தெய்வப்
பொன்னி என லாய புனல் ஆறும் உள; போதா
அன்னம் உள; பொன் இவளொடு அன்பின் விளையாட. (2)

ஏகி இனி அவ்வயின் இருந்துறைதி என்றான்
2659 மேகநிற வண்ணனும் வணங்கி விடைகொண்டான்
பாகனைய சொல்லியொடு தம்பி பரிவிற்பின்
போகமுனி சிந்தை தொடரக் கடிது போனான். (3)

(அகத்தியப் படலம், 57-59)

உயர்ந்த கனி மரங்கள், சிறந்த மலைகள், நிவந்த மணல் மேடுகள் அயல் எங்கும் நிறைந்து குளிர்ந்த சோலைகள் புடை சூழ்ந்து இருப்பது; கோதாவரி நதி அருகே உள்ளது; பஞ்சவடி என்னும் பெயரினது. அந்த இடம் மிகவும் புனிதமானது; மனித சஞ்சாரம் அதிகம் இல்லாதது; அருமையான பல வளங்களை யுடையது. அங்கே போய் அமர்ந்தருள் என்று அகத்தியர் கூறி விடுத்தார்; அவ்வாறே அதனை நோக்கி இராமன் வந்தான்.

பொன்னி என்றது காவிரி நதியை. உலக நதிகளுக்குத் தலைமையான உவமையாக அதன் நிலைமையைப் புகழ்ந்து கூறினர். தாம் பிறந்த நாட்டின் நதி ஆதலால் அதனை நம் கவி உவந்து பாராட்டி வருகின்றார். தெய்வப் பொன்னி என்றது என்றும் நீர் வளம் குன்றாமல் உயிரினங்களுக்கு உதவி புரிந்து வரும் அதன் நீர்மை சீர்மைகளை நினைந்து. போதா = நாரை. அன்னம் முதலிய நீர் வாழ் பறவைகள் அங்கு இருக்கின்றன; யாவும் காட்சிக்கு இனியன; உவை சீதைக்கு நல்ல பொழுது போக்காயிருக்கும் என்பார், "பொன் இவள் விளையாட போதா அன்னம் உள" என்றார் துணைவிக்கு இனிய துணைகளை மனமகிழ வுரைத்தார்.

கனிவளம், குளிர்நிழல், தனிமை, இனிமை, தூய்மை முதலிய எல்லா வசதிகளும் பஞ்சவடியில் நிறைந்திருக்கின்றன என அதன் நிலைமையை நெஞ்சறியக் குறித்தார். பஞ்ச! என்றது மைந்த என்னும் அன்பு மொழியாய் வந்தது. பச்சைப் பசுங் கொண்டலே! என உருவ நிலையைக் கருதி உரைத்தபடியாயும் இது மருவி யுள்ளது. மஞ்சு = மேகம். அஞ்சன வண்ணன்பால் அருந்தவர் நெஞ்சம் உருகி நெடிய ஆர்வம் பெருகியுள்ளார்.

இங்ஙனம் சொல்லி விடவே அவரை வணங்கி விடைபெற்று இவ் வில்வீரன் சென்றான். மனைவியும் தம்பியும் அன்பு வடிவங்களாய்ப் பின்பு தொடர்ந்தார்.

தம்முடைய தவச் சாலையிலிருந்து புறப்பட்டுத் தென்திசை நோக்கிச் செல்லுகின்ற இராமனைப் பார்த்துக் கொண்டே ஆர்த்தி மீதூர்ந்து நெடு நேரம் அகத்திய முனிவர் அவசமாய் நின்றார். இந்த அழகனைப் பிரிய மனம் இல்லாமல் பிரியம் மண்டி அந்த அரிய மாதவர் உள்ளம் மறுகி நின்றது.

"முனி சிந்தை தொடரக் கடிது போனான்" என்றமையால் இவ் வள்ளலுடன் அம் முனிவர் உள்ளம் சென்றுள்ளமை உணரலாகும். அரிய ஞானிகள் அடையவுரிய பெரிய பொருள் உரிய வழியை நாடி உவந்து போயது.

இங்ஙனம் நடந்து வந்தவர் பல காவதங்களையும் கடந்து மூன்றாம் நாள் காலையில் பஞ்சவடித் தலத்தை அணுகினார். வழி அயலே மஞ்சுகி என்னும் அழகிய மலையிருந்தது. அதன் சாரலில் பல ஆல மரங்கள் அடர்ந்து நின்றன. சோலைகள் சூழ்ந்த அந்தக் குளிர்ந்த தாழ் வரையில் சடாயு இருந்தான்.

## சடாயுவைக் கண்டது.

சடாயு என்பவன் பறவை வடிவமும் தெய்வத் தன்மையும் உடையவன். கழுகுகளுக்கு எல்லாம் தலைவன். அருணன் புதல்வன். அருந்திறலினன்; கலைகள் பல தெளிந்தவன்; பறவைகட்கு அரசனாய் இனிய உறவெய்தி யுள்ளவன். பேரறிவாளன். அசகாய சூரன். தசரத மன்னன் இளமை முதல் கொண்டு இவனோடு உள மகிழ்ந்து உறவு பூண்டிருந்தான். அம் மன்னர் பிரானுக்கு மூத்தவன். நெடிய வாழ்நாளை யுடைய இவன் இது பொழுது முதிய வயதினனாய்த் தவ வாழ்க்கையில் தனித்திருந்தான். வழியில் நடந்து வந்த இக் குமரர்களைக் கண்டதும் தன்னையறியாமலே அவன் உள்ளம் உருகியது. உவந்து நோக்கி வியந்து சிந்தித்தான். "பிள்ளைப் பாசம் பெருகி என் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றதே! என்னே இது!" என்று மெள்ள நெருங்கி வந்து நீவிர் யாவர்? என இவ் வீரரை வினவினான். அவன் நெடிது சிந்தித்து முடிவில் மிருதுவாய் அருகு வந்து இனிது வினவிய நிலையை அடியில் வரும் கவிப் பாடங்களில் காண்க.

வனைகழல் வரிசிலை மதுகை மைந்தரை
அனையவன் தானும்கண்டு அயிர்த்து நோக்கினான்
2700 வினையறு நோன்பினர் அல்லர்; வில்லினர்
புனைசடை முடியினர் புலவரோ? என; (1)

புரந்தரன் முதலிய புலவர் யாரையும்
நிரந்தரம் நோக்குவென்; நேமியானும், அவ்
2701 வரந்தரும் இறைவனும், மழுவலாளனும்
கரந்திலர் என்னை யான் என்றும் காண்பெறல். (2)

காமன் என்பவனையும் கண்ணின் நோக்கினேன்
தாமரைச் செங்கண் இத் தடக்கை வீரர்கள்
2702 பூமரு பொலன்கழற் பொடியினோடும் ஒப்பு
ஆமென அறிகிலென் ஆர்கொலாம் இவர்? (3)

உலகொரு மூன்றும்தம் உடைமை ஆக்குறும்
அலகறும் இலக்கணம் அமைந்த மெய்யினர்
2703 மலர்மகட்கு உவமையாள் ஓடும் வந்தஇச்
சிலைவலி வீரரைத் தெரிகிலேன் என, (4)

கருமலை செம்மலை அனைய காட்சியர்
திருமகிழ் மார்பினர் செங்கண் வீரர்தாம்
2704 அருமைசெய் குணத்தின்என் துணைவன் ஆழியான்
ஒருவனை இருவரும் ஒத்துளார் அரோ! (5)

எனப்பல நினைப்பின மனத்துள் எண்ணுவான்
சினப்படை வீரர்மேல் செல்லும் அன்பினான்
2705 கனப்படை வரிசிலைக் காளையீர்கள் யார்?
மனப்பட எனக்குரை வழங்குவீர் என்றான். (6)

வினவிய காலையில் மெய்ம்மை அல்லது
புனைமலர்த் தாரவர் புகல்கிலாமையால்
2706 கனைகடல் நெடுநிலம் காவல் ஆழியான்
வனைகழல் தயரதன் மைந்தர் யாம் என்றார். (7)

உரைத்தலும் பொங்கிய உவகை வேலையன்
கரைத்தலை இறந்தவர்த் தழுவும் காதலன்
2707 விரைத்தடந் தாரினீர் வேந்தர் வேந்தன்தன்
வரைத்தடந் தோளினை வலியவோ? என்றான். (8)

(சடாயு காண் படலம், 11-18)

இராம லட்சுமணனைக் கண்ட பொழுது சடாயு கொண்ட சிந்தனைகளும், இறுதியில் வினவியதும், அதற்கு இவர் பதில் உரைத்ததும், அவன் உளம் உருகி உரிமை மீதூர்ந்து அளவளாவியதும் உணர்வு நலங்கள் பெருகி உவகை மலிந்து உள்ளன. கவிகளைக் கருதி நோக்கிய அளவே உயிருணர்ச்சிகள் வெளியாய் அறிவு விழிக்குத் தெளிவாகின்றன.

"இந்திரன் முதலிய தேவர் யாவரையும் நேரே பார்த்திருக்கிறேன்; திருமாலையும் பிரமாவையும் சிவனையும் தெரியும்; காமனையும் கண்டுள்ளேன்; செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய இந்தச் சுந்தர உருவங்களை இதுவரை நான் கண்டதில்லை; பேரழகன் எனப் பெருமை பெற்றுள்ள மன்மதனும் இவரது காலில் ஒட்டிய தூசிக்கும் ஈடாகான்; மூன்று உலகங்களையும் ஒருங்கே ஆளும்படியான உத்தம இலக்கணங்கள் யாவும் இவரது திருமேனிகளில் மருவி மிளிர்கின்றன; திருமகளைப் போல் ஒரு மகள் பின்வர இக் கானகத்தில் இருவர் தனியே வருகின்றார்; இவர் யார்? மரகத மலையும் மாணிக்க மலையும் போல் உயர் ஒளி தவழ இயல்வழி உறுகின்ற இக் குலமக்களைக் காணும் தோறும் என் மனம் அழலிடு மெழுகாய் உருகுகின்றது; அவரோடு பேச வேண்டும் எனனும் ஆசை மிகவும் பெருகி எழுகின்றது; எனது ஆருயிர் நண்பனை தசரதனது உருவச் சாயலையே ஒத்திருக்கின்றனர்; யாவர் என்று தெரிவோம்" என ஆவல் மீதூர்ந்து அணுகி வந்துள்ளமையால் அவனது காட்சியும் கருத்தும் வியப்பையும் உவப்பையும் விளைத்து நிற்கின்றன.

கருமலை செம்மலை அனைய காட்சியர்

என்றது உருவ நிலையில் உள்ளம் பறி போய் உரையாடிய படியிது. திண்மையும் கம்பீரமும் யாண்டும் அசையாத ஆண்மையும் அறிய வந்தது. கருமலை என்றது இராமனை. பச்சைமலை ஒத்த படிவத்தன் என உச்ச நிலையில் அவன் ஒளி செய்துள்ளான்.

"மலைமுகந்தனைய மார்பின் மன்னவன்" (சிந்தாமணி 2733)

"மல்லல் மலை அனைய மாதவர்" (சிந்தாமணி 2789)

தலைமையான நிலைமைகளுக்கு மலை இங்ஙனம் உவமையாய் வந்துள்ளது. பிரம சிருட்டியில் பொதுவாகவுள்ள மலைகள் இக்குல

மக்களது உருவ நிலைகளுக்கு ஒப்பு ஆகா; ஆதலால் அதிசய நிலையில் புதிதாகக் கருமலை செம்மலை எனக் கவி சிருட்டி செய்தருளினார்.

அண்ணன் முன்னும் தம்பி பின்னுமாக நடந்து வந்தமையால் அம் முறையே உருவக் காட்சிகள் உரைக்க நேர்ந்தன. காட்சி என்ற சொல் ஆற்றலால் அந்தத் தெரிசனத்தின் திவ்விய மாட்சி தெரிய நின்றது.

கண்ட கண்கள் வேறு ஒன்றினும் செல்லாமல் மது உண்ணும் வண்டுகள் போல் மண்டிக் களிக்கும்படி இவரது உருவ எழில் பெருகியுள்ளமையால் உருகி நோக்கிய உயிர் பரவசமாயது.

இவ்வாறு ஆர்த்தி மீதூர்ந்து பார்த்து மகிழ்ந்தவன் உருவச் சாயல்களைக் கருதி நினைந்து உறுதியாய் யூகம் செய்தான்.

"அருமைசெய் குணத்தின் என் துணைவன் ஆழியானை
ஒருவனை இருவரும் ஒத்துளார்"

என உய்த்துணர்ந்து தெளிந்தான். என் துணைவன் என்றது தசரதனை. இளமை தொடங்கியே உயிர்க்கிழமையாய் அவ் வேந்தர் பிரானுடன் இப் பறவை வேந்தன் பழகியுள்ளமையால் என் துணைவன் என மார்பைத் தொட்டு ஆர்வ மீதூர்ந்து கூறினான். தன் உடன் பிறந்த தம்பியாகவே அந் நம்பியால் அன்பு பூண்டு இவன் பண்பு நீண்டிருக்கின்றான். அந்த நட்பின் திட்பமும் கெழுதகைமையும் அளவிடலரியன. அந் நிலைமையை ஔவை பின்னே காணலாம்.

தசரதனை நேரே கண்டு தெரிந்து பழகியுள்ளமையால் அந்தச் சக்கரவர்த்தியைப் போலவே இந்த மக்கள் இருவரும் மருவியுள்ளனர் என மகிழ்ந்து கொண்டான். அருமைசெய் குணத்தின் என்துணைவன், ஆழியான் என்றதில் அவனது பான்மையும் மேன்மையும் துலங்கி இவனது பாசமும் விளங்கி நின்றன. பழகியுணர்ந்த உள்ளத்தில் உழுவலன்பும் கெழுதகைமையும் ஊடுருவியுள்ளன.

ஒருவனை இருவரும் ஒத்துளார் என்றதனால் அத் துணைவரின் உருவச் சாயலும் பருவப் பொலிவும் யாதொரு பிரிவும் காணுதபடி இணையொத்து இனிதமைந்திருந்தமை எண்ணலாகும்.

பொருதிறலில் எவரும் ஒப்பில்லாமல் பொருவரு நிலையில் மருவியுள்ள இருவரும் உருவ நிலையில் மட்டும் ஒருவனை ஒத்து நின்றனர். அ-சதிருவினர் என்னும் வரிசைகள் விளங்கின.

சக்கரவர்த்தித் திருமக்களை இங்ஙனம் ஒக்க நோக்கி உவந்து நின்ற அவன் பின்பு பக்கம் நெருங்கி "நீங்கள் யார்?" என்று பேர் விவரங்களை வினவினான். வினவவே, இவ் வீர மக்கள் உண்மையை உரைத்தார்.

வினைகழல் தயரதன் மைந்தர் யாம் என இச் சுந்தரர் இவ்வாறு எதிர் வழியானிடம் பதில் மொழி பகர்ந்தார்.

இப்படித் தடை யாதும் இன்றி விடை கூறியதைக் கவி நயந்து பாராட்டி வியந்து கொண்டுள்ளார்.

"மெய்ம்மை அல்லது, புனைமலர்த் தாரவர் புகல்கிலாமையால்"

இங்ஙனம் புகல நேர்ந்தார் எனக் கவி கவலை கூர்ந்திருப்பதை இதில் அதிசயமாய்க் கூர்ந்து கண்டு அகம் திகைக்கின்றோம்.

நேர்மையான நெஞ்சினர்; மாறாக ஒன்றும் மறைத்துப் பேசத் தெரியாது; ஆதலால் உள்ளதை உள்ளபடியே சொல்லி விட்டனர் என்னும் குறிப்பு இதன் உள்ளே உறைந்திருக்கின்றது

சடாயுவைக் கண்ட பொழுது இக் குமாரர்கள் மிகவும் சந்தேகம் கொண்டனர்; தன்னம் விராதனிடம் அல்லல் அடைந்துள்ளமையால் வனத்தில் எதிர்ப் படுகின்றவரை மிக்க கவனமாக நினைத்து வருகின்றனர். பெரிய பறவை வடிவமாயுள்ள அவ் விசித்திர வுருவைப் பார்த்த வுடனே திகைத்தார்; மாய அரக்கனோ? தீய அசுரனோ? கொடிய பூதமோ? நெடிய தேவனோ? யாதோ இவ் வடிவில் வந்துள்ளது! என எண்ணினார்; எண்ணினும் திண்ணிய வீரர் ஆதலால் தீங்கு புரிய நேரின் பாங்கு அணுகுமுன் ஒரே பகழியால் ஒழித்து விடலாம் என ஊக்கி வந்தார்; அவ்வாறு மாறுபாடு மண்டி வீறு கொண்டு வந்தவர் அவன் நேரடைந்து கேட்கவே வேறு ஒன்றும் கூறாமல் ஊரையும் பேரையும் உண்மையாக உரைத்து நின்றார்.

காட்டிலே யாதொரு நிலைமையும் தெரியாத அயலானிடம் தம்மை இயல்பாகக் காட்டியது இவரது நெஞ்சின் நிலைமையையும் வஞ்சமின்மையையும் வாய்மையையும் வெளிப் படுத்தி நின்றது.

## சத்திய விரதம்

வனவாசம் செய்ய நேர்ந்த பின் இராமன் மனதில் உறுதி கொண்டிருந்த நுணுகிய ஒரு மருமமும் இங்கே எளிது வெளியாகியது. என்னே மருமம்? எனின், பின்னே காண்க.

காட்டு வாழ்க்கையில் தன்னை யாரிடமும் இன்னான் என்று காட்டிக் கொள்ளக் கூடாது; அரியணை துறந்து துறவியாய் அடவிக்கு வந்தபின் அவ்வுரிமையை மொழிதல் இரு வகைக்கும் இளிவாம; பரதேசிக் கோலத்தில இருக்கின்ற நான் அரசர் பெருமான் புதல்வன் எனின் அது அவனது பெருமைக்குக் குறைவாம். "சக்கரவர்த்தித் திருமகனே இப்படிக் காடும் கரையும் திரிகின்றான்" என்று பேதையுலகம் பேச நேரும்; அப் பேச்சு என குலத்துக்கு ஏச்சாம் ஆதலால் என்னை யாண்டும் யாருக்கும் தெரியப் படுத்த லாகாது என இவன் உறுதி செய்திருந்தான். இருந்தும் இவன் நா தன்னையறியாமலே உண்மையையே எங்கும் எவரிடமும பேசி விடுகின்றது.

மெய்ம்மை அல்லது புகல்கிலாமையால் தயரதன் மைந்தர் என்றார் என்ற இது அரிய பல சிந்தனைகளை மருவி வந்துள்ளது.

சத்தியமே பேசிப் பழகிய உத்தம நாககு எத்திறத்தும் மாறாது எனனும் நித்திய வுண்மை இங்கே உய்த்துணரவுற்றது.

உள்ளத் தூய்மை, உயர்ந்த திண்மை, சிறந்த வீரம், தெளிந்த அறிவு முதலிய நலங்கள் பலவும் உண்மையிலிருந்து விளைந்து வருதலால சத்தியவாக்கியாகிய இவனிடம அவவுததமத் தன்மைகள யாவும் ஒருங்கே நிறைந்துளளமை மருங்கே தெரிநதது.

"Truth is strengthening. Truth is purity, truth is all knowledge." "சததியமே பலம ; சததியமே சுத்தம் ; அதுவே எலலா அறிவுகளுமாம" என விவேகானந்தர் கூறியுளளார்.

உள்ளத்தில் மெய் ஒன்று உடையவன உலகத்தில் எல்லா நலங்களையும் உடையனாய் என்றும் உயர்ந்து திகழ்கின்றான். உண்மை உயிர் ஒளியாய் உளளமையால் அதனைத் தோயந்தவர் ஆன்ம சோதிகளாய மேன்மை எய்தி மிளிர்கின்றனர்.

## சேமம் விசாரித்தது.

இந்தச் சத்திய வீரர் உரைத்ததைக் கேட்டதும் சடாயுவின் உள்ளம் உவகையில் துள்ளியது. "எனது அருமைத் துணைவன் தசரதன் சேமமா?" என்று ஆர்வமீதூர்ந்து பேராவலோடு கேட்டான். உற்றதை இவர் உரைத்தார். மன்னன் இறந்தான் என்னும் சொல் செவியில் விழவே சடாயு மூர்ச்சையாய்த் தரையில் விழுந்தான். பிள்ளைகள் இருவரும் உள்ளம் திகைத்துத் தழுவி எடுத்து அழுத கண்ணீரராய் ஆற்றித் தேற்றினர்.

தழுவினர் எடுத்தனர் தடக்கையால் முகம்
2709 கழுவினர் இருவரும் கண்ணின் நீரினால்
வழுவிய இன்னுயிர் வந்த மன்னனும்
அழிவுறு நெஞ்சினன் அரற்றினனரோ.

தமது தந்தையின் பிரிவில் இந்தவாறு உரிமையுடன் உயிர் மறுகி விழுந்தவுடன். "அந்தோ! இவர் யாரோ தெரியவில்லையே" என்று மைந்தர் தியங்கி வாரி எடுத்து ஆறுதல் செய்தார்; இவருடைய கண்ணீர் முகத்தில் விழுந்தவுடனே சிறிது தெளிச்சல் அடைந்து சடாயு விழி திறந்து பார்த்தான்.

வழுவிய இன் உயிர் வந்த என்றதனால் அந்த உயிர் போய் மீண்டுள்ளமை உணரலாகும். எவ்வளவு பேரன்பு பெருகியிருந்தால் இவ்வளவு உயிர்த்துடிப்பு உண்டாம்? என்பது உய்த்துணரத் தக்கது. நிலைமை யாதும் தெரியாமையால் அலமரலுடன் குமரர் அணைத்துத் தாங்கி ஆதரித்து வினவினர்; இப்பிள்ளைகளிடம் ஒன்றும் கூறாமல் உள்ளம் கரைந்து அவன் ஓலமிட்டு அழுதான். அந்த வாயழுகையில் அவனது தூயவுள்ளம் துலங்கி நேய நிலைகள் விளங்கி நீர்மை ததும்பி நிலவுகின்றன.

பரவலரும் கொடைக்கும் நின்றன் பனிக்குடைக்கும்
பொறைக்கும் நெடும் பண்புதோற்ற
கரவலரும் கற்பகமும் உடுபதியும்
கடலிடமும் கனிந்து வாழப் 2710
புரவலர்தம் புரவலனே! பொய்ப்பகையே!
மெய்க்கனியே! புகழின் வாழ்வே!
இரவலரும் நல்லறமும் யாருள் இனி
என்பட நீத்து ஏகினையே? (1)

அலங்காரம் என உலகுக்கு அழகளிக்கும்
தனிக்குடையாய்! ஆழி சூழ்ந்த
2711 நிலங்காவல் அது கிடக்க நிலையாத
நிலையுடையேன் நேய நெஞ்சின்
நலங்காண நடந்தனையோ? நாயகனே
தீவினையேன் நண்பின் நின்றாய்
விலங்காளேன் ஆதலினால் விலங்கினேன்
இன்றாய் உயிர் விட்டிலேனால். (2)

தயிருடைக்கும் மத்தென்ன உலைகின்ற
சம்பரனைத் தடிந்த அந்நாள்
2712 அயிர்கிடக்கும் கடல் வையத்து அயலறிய
நீ உடல் நான் ஆவி என்று
செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய்!
செப்பினாய்! திறம்பா நின் சொல்
உயிர்கிடக்க உடலைவிசும் பேற்றினாய்
உணர்விறந்த கூற்றினாரே. (3)

எழுவதோர் இசைபெருக இப்பொழுதே
ஒப்பரிய எரியும் தீயில்
விழுவதே நிற்க ஆட மெல்லியலார்
தம்மைப்போல் நிலத்தின்மேல் வீழ்ந்து
2713 அழுவதே யான் என்று அறிவுற்றான்
எனஎழுந்தாங்கு அவரை நோக்கி
முழுவதே முழுதுடைய மைந்தர்காள்!
கேண்மின் என முறையிற் சொல்வான். (4)

(சடாயுகாண் 21-24)

சடாயுவினுடைய மனநிலையும், உணர்வு நலனும், நட்புரிமையும் இங்கே ஒளி செய்து நிற்கின்றன. இந்தப் புலம்பல் மொழிகளில் பொதிந்துள்ள நெடிய சரிதங்களும் நினைவு நிலைகளும் அவனது வாழ்வின் சூழ்வுகளையும் மன மாட்சிகளையும் வரைந்து காட்டுகின்றன. பாட்டுகளைப் படித்து நோக்கிப் பண்புகளை நுனித்துக்காண்க.

தசரதனது கொடைக்குக் கற்பகமும், குடைக்குச் சந்திரனும், பொறுமைக்குப் பூமியும் ஒப்பாகாமையால் காணுவார் எதிரே நாணி மெலிந்து நைந்திருந்தன. தம்மை அவமானப் படுத்தித் தலைகவிழச் செய்திருந்த அவன் இப்பொழுது இறந்து போயினமையால் இழிந்து கிடந்த இவை மூன்றும் உவகையுள்ளித் தலை எடுத்து வெளியே வந்து செருக்கி நிமிர்ந்து நிற்கின்றன.

நின் தனிக் கொடைக்கும், பனிக்குடைக்கும், பொறைக்கும் தோற்ற கற்பகமும், உடுபதியும், கடலிடமும் களித்துவாழ ஏகினையே' என்று ஏங்கி அழுது இரங்கி உருகியுள்ளான். ஒப்பாரியிலும் ஒப்புமைகளை ஒப்பனை செய்து இப்படிப் பேசியிருக்கிறான்.

பரவல் அரும் கொடை என்றது எவரும் எல்லை கண்டு சொல்ல முடியாத அரிய பெரிய வள்ளன்மை என்றவாறு. பரவு அலரும் என்று பிரித்தால் திசைகள் தோறும் இசைகள் பரவிய கொடை எனக் கொள்க. பரவு=புகழ். பிறர் வந்து தன்னைப் பரவாமலே தானே வலிந்து விரைந்து முன்னதாக உவந்து கொடுக்கும் கொடை என்க.

அரிய கொடைவள்ளல், பெரிய நீதிமான், எவரையும் பொறுத்தருளும் தண்ணளியுடையவன் என்னும் உண்மையை இவ் வண்ணம் உணர்வு நலம் கனிய உரைத்திருக்கிறான்.

புரவலர் தம் புரவலனே! பொய்ப் பகையே! மெய்க்கு அணியே! புகழின் வாழ்வே! என்றதில் அவனது ஏற்றத்தையும் இவனது ஆற்றாமையையும் அறிந்து பரிந்து நாம் உருகுகின்றோம். ஏகாரங்களில் சோகம் ததும்பி நிற்கின்றது.

புரவலர் என்றது அரசர்களை. உலகத்தைப் புரந்தருளுதலில் வல்லவர் என்பதாம். மன்னர் மன்னவா! ஏகசக்ராதிபதியே! என்பான் புரவலர்தம் புரவலனே! என்றான். பொய்யை எப்பொழுதும் அருவருத்து வெறுத்து வந்துள்ளமையால் அதற்குப் பகை என நேர்ந்தான்.

சத்தியசீலனாய் யாண்டும் நிலைத்து நின்று முடிவில் அதன் பொருட்டுத் தன் உயிரையும் விடுத்தான் ஆதலால் மெய்க்கு அணியே! என்றான்.

உடல் அழியினும் என்றும் குன்றாத கீர்த்திமானாய் இன்னும் நின்று நிலவுதலால் புகழின் வாழ்வே! எனப் போற்றித் துதித்தான். அவனது உழுவலன்பும் பரிதாபமும் உரைகளுக்கு முன் யாண்டும் ஓங்கி எழுகின்றன.

இரவலர்கள், நல்லறமும், யானும் இனி என்பட நீத்து ஏகினையே! எனப் புண்பாடு மண்டிப் புலம்பி அலமந்து அழுகின்றான். தசரதனது பிரிவில் உளைந்து நேர்ந்துள்ள துயர நிலைகள் பல.

ஏழை பங்காளன், தரும பரிபாலகன். அடைந்தவரை ஆதரிப்பவன் என அருள்புரிந்து வந்தவன் இறந்துபோனமையால் அவனைத் தொடர்ந்திருந்தவர் எல்லாரும் துயரடைய நேர்ந்தனர்.

தன்னை இறுதியில் வைத்தது தனது இருதயத்தின் பெருமையைக் காட்டுகின்றது. மன்னன் பிரிவில் தன்னைப்போல் பலரும் மறுகி யுள்ளனர். அவரெல்லாரையும் முன்னுறநிறுத்தித் தான் பின்னே நின்றான்.

பிறருடைய இதங்களையே தலைமையாகக் கருதி ஒழுகும் நிலை தசரதனிடம் உயர்வாக இருந்துள்ளமையால் அந்த இயல்பு அவனது உரிமையாளனான இவனிடமும் இனிதமைந்திருக்கின்றது. தன்னுயிரினும் மன்னுயிர்களைக் கருதி அருள்கின்றான்.

அவனது பிரிவை எண்ணி எண்ணி ஏங்கிப் பதைக்கின்றான். சிறந்த நண்பனான நீ இறந்துபோனாய் என்று அறிந்தும் நான் இன்னும் உயிர் வைத்திருக்கின்றேனே! அன்னே! என்னே என் நட்புரிமை? பறவை மிருகம் என்னும் கீழான இனத்தைச் சேர்ந்தவன். ஆதலால் மேலான பண்புகள் என்னிடம் மேவாமல் போயின; ஆகவேநான் சாகாமல் நிற்கின்றேன்.

"விலங்கானேன் ஆதலினால் விலங்கினேன்"

எனத் தன் பிறப்பை இகழ்ந்து இருப்பை நொந்து மனம் வெறுத்துப் பேசுகின்றான். விலங்கினேன் = நட்புரிமையில் நின்று விலகினேன்; இறவாமல் விலகி நிற்கின்றேன்.

"உலகத்திற்குக் கொடிய துயரங்களைச் செய்து வந்த சம்பரன் என்னும் அசுர வீரனைப் போரில் நீ பொருது தொலைத்து வெற்றி பெற்ற அன்று என்னை மார்புறத் தழுவி உறவுரிமையுடன் உவந்து பாராட்டினாய்; அப்பொழுது நீ உடல் நான் உயிர் என்று உலகறியச் சொன்னாய்! அந்த நட்புரிமையின் அற்புத மொழியை இப்பொழுது நினைத்தாலும் என் உள்ளம் உருகுகின்றதே! உன்னை இனி நான் எப்பொழுதுகாண்பேன்?

சத்திய விரதனான உன் வாக்கின்படி உயிர் என நின்ற என்னை முன்னதாகக் கொண்டுபோகாமல் உடலாகிய உன்னைக் கொண்டு போனானே இது என்ன மடமை! எவ்வளவு மடத்தனத்தை அந்த எமன் செய்திருக்கிறான்! எங்கும் உடலை

ஒதுக்கிவிட்டு உயிரைப் பறித்துப் போகின்ற அவன் இங்கே மதிமயங்கி மாறுபட்டுக் கூறுகெட்டானே" என இன்னவாறு பல பல பன்னிப் பரிந்து புலம்பிப் பரிதபித்துள்ளான்.

அமரர்கட்காகத் தசரதன் அசுரரைப் பொருத பொழுது சடாயுவும் உடனிருந்து அவனுக்கு அரிய பல உதவிகளைச் செய்தான். அவ்வுபகார நிலையை வியந்து தன் இன்னுயிரினும் இனியனாக அம்மன்னன் இவனை உவந்து புகழ்ந்து உரிமை செய்து கொண்டான். அந்நிகழ்ச்சியை நினைந்து நெஞ்சம் கரைந்து இங்ஙனம் வாய்விட்டுப் புலம்பினன்.

இவ்வாறு உருகி அழுதவன் உடனே இறந்துபோகத் துணிந்து உள்ளம் தேறினன். "பிரியமான அரிய நண்பனை இழந்து வறிதே யிருந்து மகளிர் போல் வாய் திறந்து அழுவது மிகவும் இளிவு; விரைவில் உயிரை மாய்த்து விடவேண்டும்" என்று கருதி இராமனை உருகி நோக்கி உலக சரித்திரங்களையும், பல அறிவு நலங்களையும் உரைத்து முடிவில் தனது வரலாற்றினையும் சுருக்கி முடித்தான்.

அருணன்தன் புதல்வன்யான் அவன்படரும்
உலகெல்லாம் படர்வேன்; ஆழி
இருள்மொய்ம்பு கெடத் துரந்த தயரதற்கு
இன்னுயிர்த் துணைவன; இமையோரோடும் 2714
வருணங்கள் வகுத்திட்ட காலத்தே
வந்துதித்தேன்; கழுகின் மன்னன்;
கருணங்கொள் பேரொளியீர்! சம்பாதி
பின்வரு சடாயு என்றான். (1)

ஆண்டவன் ஈதுரைசெய்ய அஞ்சலித்த
மலர்க் கையார் அன்பினோடு
மூண்ட பெருந் துன்பத்தால் முறைமுறையின்
நிறைமலர்க் கண் மொய்த்த நீரார்; 2715
பூண்டபெரும் புகழ்நிறுவித் தம்பொருட்டால்
மேலுலகம் புக்க தாதை
மீண்டனன் வந்தானவனைக் கண்டனரே
ஒத்தனர் அவ்விலங்கல் தோளார். (2)

மருவினிய குணத்தவரை இருசிறகால்
உறத்தழுவி மக்காள்! நீர்
உரியகடன் வினையேற்கும் உதவுவீர்
2716 உடலிரண்டுக்கு உயிர் ஒன்றானீர்
பிரியலுமதான் பிரியாதே இனிதிருக்கும்
உடற்பொறையாம் பிணியாற்றாது
எரியதனில் இன்றேபுக்கு இறக்கின்றேன்
இத்துயரம் மறப்பேன் என்றான். (3)

(சடாயு காண்படலம்)

தனது குல மரபையும், தசரதனோடு தான் கொண்டுள்ள நட்புரிமையையும் சடாயு இங்ஙனம் உரைத்ததைக் கேட்டு இராமலட்சுமணர் இருவருடைய நெஞ்சம் கரைந்து கண்ணீர் சோர உருகி நின்றனர். இறந்து மறைந்து போன தந்தை மீண்டு நேரே வந்தது போலவே அவனைக் கண்டு மகிழ்ந்தார். அன்பும் துன்பமும் அவர் உள்ளத்தில் மண்டி எழுந்தன.

முறை முறையின் நிறை மலர்க்கண் மொய்த்த நீரார்

என்றமையால் பரிவுமீதூர்ந்து இகுமரர் உருகி நின்ற நிலை உணரலாகும். தமது அருமைத் தந்தையின் ஆவி என வந்தமையால் இவனை உரிமைத் தந்தையாகப் பாவித்து உள்ளம் உருகினார்.

பெற்ற தந்தையின் பிரிவை நினைந்து பெருந்துன்பமாய் மறுகினார்; உற்ற தந்தையின் வரவை யுணர்ந்து உள்ளம் கிளர்ந்து உவந்தார். ஆதலால் அல்லலும் ஆர்வமும் ஏககாலத்தில் ஒருங்கே இவர் அடைய நேர்ந்தார்.

அன்புருகு சிந்தையராய் இங்ஙனம் ஆர்வம் கனிந்து நின்றவரைச் சடாயு தனது இருசிறகுகளாலும் ஆரத்தழுவி, "அருமை மக்காள்! என் தம்பியைப் பிரிந்து இனி நான் இங்கு இரேன்; இப்பொழுதே எரியில் வீழ்ந்து இறந்துபோவேன்; உங்கள் கையால் கருமக்கடனைச் செய்து விடுங்கள்" என்று கண்ணீர் ததும்ப மொழிந்தான். இவ்வுரையைக் கேட்டதும் இராமன் அலறி அழுதான்: "உற்ற தந்தையை இழந்து, பெற்றதாயைப் பிரிந்து, யாதொரு பற்றும் இன்றி அநாதைகளாயக் காட்டுக்கு வந்துள்ளோம்; உன்னைக்கண்டு உள்ளம் தெளிந்து உவகைமீக் கொண்டோம்; பெற்றதந்தையாகவே பேணி மகிழ்ந்தோம்;

நீயும் கைவிடின் எங்கள் நிலைமை என்னாம்?” எனக் கண்ணீர் சொரிந்து கரைந்து நின்றான்.

தாயின் நீங்கருந் தந்தையின் தன்மைதா
னாயின் நீங்கி வனம்புகுந் தெய்திய 2718
நோயின் நீங்கினெம் நுன்னின் எங்களை
நீயும் நீங்குதி யோநெறி நீங்கலாய்!

இதில் இவரது உரிமையன்பும் உள்ளப்பண்பும் தெரிய நின்றன. தமக்கு இனிய தாயும் தந்தையும் ஆகவே சடாயுவை இக்குமரர் கருதியுள்ளமை இதனால் அறியலாகும். நீயும் என்றதிலுள்ள உம்மை ஆய வுரியது. தாய் முதலாயினோர் பிரிவை எல்லாம் மறக்கச் செய்து ஆறுதலருளும் ஆர்வத் தாதை என நேர்வைத்து நெஞ்சம் கரைந்துள்ளார்.

ஊரிலுள்ள உறவுகளை யெல்லாம் உதறிவிட்டு வந்தவன் காட்டில் கண்ட பறவையிடம் இப்படிப் பேருறவு மண்டிப் பெரும் பாசம் கொண்டாடுகின்றான்.

இவ்வாறு உரிமையுடன வேண்டவே சடாயு உள்ளம் கரைந்தான்: பிள்ளைகளே! நீங்கள் திருவயோத்தியை அடைந்த பின்பு நான் கருதியதை முடித்துக்கொள்கின்றேன்; அதுவரையும் உங்களுக்கு உதவியாக என் உயிரை வைத்திருக்கிறேன்” என்று உறுதி கூறிப் பின்பு பரிவுடன் இராமன் திருமுகத்தை உருவ நோக்கினான்.

“மணிமுடி சூடி அரசுபுரியாமல் இந்த அடவிக்கு இப்படி வந்தது என்? தந்தையார் இல்லாமையால் யாரேனும் இடையூறு செய்தார்களா? அவ்வாறு எவராவது ஏதேனும் செய்திருந்தால் அவர் தேவர் ஆயினும் யாவராயினும் அவரைச் சாவராக்கி நான் உனக்கு முடி சூட்டுகிறேன்; இராமையா! நிகழ்ந்தது என்ன? உண்மையைச் சொல்லுக” என்று ஊக்கி நின்றான்.

அவனது ஆர்வத்தையும் உரிமையையும் ஆத்திரத்தையும் வியந்து இராமன் தம்பியை நோக்கினான். அப்பார்வையின் குறிப்பை அறிந்து அந்த மதியூகி கைகேசியால் நேர்ந்த நிலைகளை யெல்லாம் தெளிவாகச் சுருக்கிச் சொன்னான்.

அதைக்கேட்டுப் பரிவடைந்து நொந்து விதிநிலையை வியந்து இராமனை உரிமையுடன் தழுவி உவந்து புகழ்ந்தான்.

உந்தை உண்மையன் ஆக்கிஉன் சிற்றவை
தந்த சொல்லைத் தலைக்கொண்டு தாரணி
2723 வந்த தம்பிக்கு உதவிய வள்ளலே!
எந்தை வல்லது யாவர்வல் லாரென்று; (1)

அல்லித் தாமரைக் கண்ணனை அன்புறப்
புல்லி மோந்து பொழிந்தகண் ணீரினன்
2724 வல்லை மைந்த! அம்மனையும் என்னையும்
எல்லையில்புகழ் எய்துவித்தாய்! என்றான். (2)

தந்தையைச் சத்தியவான் ஆக்கி, சிறிய தாய் சொல்லைச் சென்னியில் ஏந்தி, உரிய அரசைத் தம்பிக்கு உதவிவிட்டு வறிய நிலையில் இப்படி வனத்திற்கு வந்திருக்கின்றாயே! இந்த அரிய பெருந்தகைமையை உன்னிடம் அன்றி ஈரேழு பதினாலு உலகங்களிலும் வேறு யாரிடம் காணமுடியும்? உனது குண சீலங்கள் அமிர்த சாகரமாய் அலைகொழித்து மிளிர்கின்றன. உன் உள்ளப் பண்பை உள்ளுந்தோறும் என் உள்ளம் உருகுகின்றது. சீதள சந்திரன் இரவில் மட்டும் இனியனாகின்றான்; இராமச்சந்திரனாகிய நீ இரவிலும் பகலிலும் என்றும் யாண்டும் இனியனாய் மனித சமூகத்தை மகிழ்வித்து வருகின்றாய். உன்னைப் பெற்ற தந்தைக்கு மாத்திரமன்றி அவனோடு பழகிய எனக்கும் விழுமிய மேன்மையை விளைத்திருக்கின்றாய்! இராமன் என் தம்பி மகன் என்று சொல்வதைக் காட்டிலும் எனக்கு வேறு மகிமை யாதும் இல்லை. அந்த அன்புரிமையை முத்திப்பேற்றினும் பெரியதாகக் கருதிப் பெருமிதம் அடைகின்றேன்.'' என இவ்வாறு உளம் உருகிப் பரவசமாய்ப் பேசிப் பரிவு மீக்கூர்ந்தான். பின்பு சீதையை இனம் விசாரித்து, சனக சம்பந்தத்தை மகிழ்ந்து புகழ்ந்தான். அரச செல்வங்கள் வரிசை குலைந்து வந்திருப்பதை நினைந்து வருந்தினான். வனவாசகாலம் முழுவதும் அம்மலைச் சாரலிலேயே இருந்தருளும்படி பரிந்து வேண்டினான்.

## வழி காட்டிச் சென்றது

பஞ்சவடி தீரத்தில் இருக்க விரும்பி முனிவரிடம் விடை பெற்று வருவதை இராமன் உரைத்தான். அவன் உவந்து இசைந்தான். ''அது நல்ல இடம்; புனிதமானது; இனிய வளங்கள் நிறைந்தது; வாருங்கள் அங்கே போகலாம்; நான் வழிகாட்டு

ஒன்றேன்" என்று உழுவலன்புடன் எழுந்தான். மூவரும் நடந்தார்; அவர் தலைக்குமேலே தாழப் பறந்து தனது இரு சிறகுகளையும் நீளவிரித்து நிழலுகவி வந்தான். அவனது அன்புரிமையையும் ஆதரவையும் நினைந்து நினைந்து வழிமுழுதும் இராமன் விழிநீர் மல்கி உருகி நடந்தான். பஞ்சவடியை அடைந்தார்.

அந்த இடத்தின் நிலைகளையெல்லாம் நன்கு காட்டி அங்கு ஓர் இனிய பொழில் அருகே இருக்கும்படி குறித்து மூவருக்கும் ஆறுதல் கூறிவிட்டுச் சடாயு பிரிந்துபோனான்.

### மறைந்து பாதுகாத்து நின்றது

இந்தப் பறவை வேந்தனுடைய தொடர்பு காவியத்தின் இடையே தொடர்ந்து அரிய பண்புகள் பல நிறைந்து உரிமையன்புகள் சுரந்து உறுதிநலங்கள் மிகுந்து இனிமை கனிந்திருக்கின்றது. நட்பின் திட்பத்தால் தசரதனுக்கு இவன் தமையன் முறையில் அமைந்திருத்தலால் இராமனுக்குப் பெரிய தந்தை என்னும் பெருமை பெற்றுள்ளான். திருமால் சமயத்தவர் பெரிய வுடையார் என இவனை உரிமையோடு பாராட்டி வருகின்றனர்.

இவனது வேகமும் விவேகமும் வீரத்திறலும் வியத்தகு நிலையின. அவையாவும் பின்பு காணலாம். இங்கே பிள்ளைகளைப் பிரிந்து சென்றவன் பிறரால் யாதொரு இடையூறும் இவருக்கு நேர்ந்துவிடலாகாதே! என்று ஆர்ந்த அன்புரிமையுடன் மறைவிலிருந்து ஓர்ந்து கவனித்து வந்தான்.

வார்ப்பொற் கொங்கை மருகியை மக்களை
ஏற்பச் சிந்தனையிட்டு அவ் அரக்கர்தம்
சீர்ப்பைச் சிக்கறத் தேறினன் செங்கையில்
பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான். 2731

(சடாயுகாண், 48)

அந்தக் கழுகின் பார்வையையும் உழுவலன்பினையும் இதில் நாம் விழி களிப்பப் பார்க்கின்றோம். மருகி, மக்கள் என்னும் உரிமைச் சொற்கள் நம் உள்ளங்களை உருக்குகின்றன. பின்பு நிகழவுள்ள அன்பின் பாசங்கள் முன்புற எழுந்து முழுமணம் வீசுகின்றன. பார்ப்பு = பறவைக்குஞ்சு. தாயின் பார்வையில் இருப்பது என்பதாம். இளமை கருத வந்தது.

“பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை.”

(தொல்காப்பியம்)

என்றமையால் குஞ்சுகளின் நிலைமை தெளிவாம்.

கூட்டிலுள்ள இளங் குஞ்சுகளைக் காட்டுப் பறவை கருதிக் காப்பது போல் சடாயு இவரை உரிமையுடன் ஓம்பி நின்றான்.

பாதுகாப்பாளனது சாதி நிலைக்கு ஏற்ப அரசகுலமக்களும் பறவைக்குஞ்சுகள் என நேர்ந்தார். மரபுமுறை மருவிச் செழு தகைமை தழுவி வந்துள்ள இவ்வாசகம் இங்கே இனிமை சுரந் துள்ளது. அன்புரிமைகள் பண்புகனிந்து மிளிர்கின்றன.

யாண்டும் அஞ்சாத பெரிய வீரர்களைக் குஞ்சுகள் என்று கருதி அவன் நெஞ்சுருகியிருக்கிறான். பிள்ளைப்பாசம் எல்லை மீறிப் பெருகியுள்ளமையால் உள்ளம் இப்படி உருகியுள்ளது.

அப்பேரன்பாளன் இவ்வாறு ஆர்வக்காவல் புரிந்து வருவது இவர் யாருக்கும் தெரியாது பரிபாலனம் பரிவு கோலியது.

சிவ நதியாகிய கோதாவரியை இம்மூவரும் அடைந்த பொழுது தேவரும் மகிழ்ந்தனர். அந்த நதியைக் குறித்து நம் கவி உரைத்திருப்பது சுவை மிக வுடையது. புவியினுக்கு அணியாய் அரிய பொருள்கள் பல நிறைந்து, இனிய வளங்கள் மலிந்து, சீர்மை சீர்கள் பொலிந்து, யாண்டும் உயிரினங்களுக்கு நிலையான இன்ப நலங்கள் சுரந்து சான்றோர் கவி எனக் கிடந் தது என ஆன்ற அன்புரிமையுடன் அதன் அருமை பெருமை களை விளக்கியிருக்கிறார்.

இவரைக் கண்டவுடன் அது கொண்ட மகிழ்ச்சியை அயலே காண வருகின்றோம்.

வண்டுறை கமலச் செல்வி வனமுலைப் பொலிய வாசம்
2733 உண்டுறை குவளை ஒண்கண் ஒருங்குற நோக்கி ஊறின்
தெண்டிரைக் கரத்தின் வாரித் திருமலர் தூவிச் செல்வர்க்
கண்டு அடிபணிவது என்னப் பொலிந்தது கடவுள் யாறு. (1)

எழுவுறு காதலால் நின்று இரைத்து இரைத்து ஏங்கி ஏங்கிப்
2734 பழுவநாட் டவளைச் சென்ற கணவனைப் பார்த்து சோர
வழுவிலா வண்மை மைந்தர் வந்துற அருத்தி நோக்கி
அழுவதும் ஒத்த தால்அவ் வெங்கநீர் ஆறு மன்னோ. (2)

இராம இலக்குவனைக் கண்டு மகிழ்ந்து கோதாவரி அன்பு மீதூர்ந்து முன்பு பணிந்து பின்பு அவரது நிலைமையை நினைந்து பரிந்து வருந்தியதாக இவை வரைந்து காட்டியுள்ளன.

நதி பெண், தாமரை முகம், குவளை மலர் கண்கள், திரைகள் கைகள்; அந்த அலைகள் ஆகிய கரங்களால் பூக்களைத் தூவி இக்குமாரர்களுடைய பாதங்களைத் தொழுது வணங்கினள்.

அரசு முடி துறந்து இச் செல்வக் குழந்தைகள் இப்படி வரிசை குலைந்து வந்துள்ளனவே என்று அழுவது போலவும் அலைமோதி ஒலி செய்து அப்புனித நதி இனிது திகழ்ந்தது.

நதி கடல் மலை முதலிய உலகப் பொருள்கள் எல்லாம் இராமன்பால் உரிமையுடன் உருகியுள்ளன என்றது அவனது நிலைமையை நினைவுறுத்தி நின்றது.

ஆரமும் வனசத் தோடும் அணிமக ரந்தச் சேறும்
வேரியம் பூந்தண் தேனும் முறைமுறை விசிக் கையால்
சேரவே கொண்டு மேலோன் திருவடி நிறைப்ப உய்த்தல்
வாரியந் தடாகம் அன்பால் வழிபடும் வண்ணம் போலும்.

(கந்தபுராணம், திரு அவதாரம்-108)

பூந்தாதுகளையும் தாமரை மலர்களையும் வாரி வீசி முருகக் கடவுளைச் சரவணப் பொய்கை தொழுது வழிபாடு செய்ததாக வந்துள்ள இது ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

தாம் வழிபடுகின்ற கடவுள்பால் தமக்குள்ள உழுவலன்பினைக் கண்ட பொருள்களில் எல்லாம் கொழுவி ஆர்த்தி மீதூர்ந்து அன்பர் போற்றி வருதலை நாம் பார்த்து வருகின்றோம்.

புண்ணிய தீர்த்தம் என்று விண்ணவரும் விழைந்து கொண்டாடுகின்ற தண்ணிய அந்தக் கோதாவரி நதி தீரத்தில் பஞ்சவடி என்னும் புனிதமான இனிய இடத்தில் இவர் தங்க நேர்ந்தார்.

## பஞ்சவடியில் வசித்தது.

அந் நதியின் கரையில் நெடிது வளர்ந்த ஐந்து ஆலமரங்கள் அதிசய நிலையில் நின்றன ஆதலால் அந்த இடம் பஞ்சவடி எனவந்தது. பஞ்சம் = ஐந்து. வடம் = ஆலமரம். சிறந்த புண்ணியத் தலமாக எண்ணப் பெற்றுள்ள அதன் அருகே இனிய

சோலையில் இலக்குவன் அழகிய ஒரு குடிசை அமைத்தான். அந்தப் பர்ணசாலையில் இராமன் தங்கியிருந்தான். மாலை வேளைகளில் தனது அருமை மனைவியுடன் இக்கோமகன் உல்லாசமாய் உலாவி வருதலும், நல்ல தரும நீதிகளைப் பேசுதலும், அருவி நீர் ஆடுதலும், இனிய கனி காய்களைப் புசித்தலும், தனியே யோகு செய்தலுமாகிய இந்தவாறு புனிதமான நிலைகளில் பொழுதை இனிது போக்கி வந்தான்.

அனையதோர் தன்மையால்அவ் அருவிநீர் ஆற்றின் பாங்கர்ப்
பனிதரு படிவப் பஞ்சவடிஎனும் பருவச் சோலைத்
தனியிடமதனை நண்ணித் தம்பியால் சமைக்கப் பட்ட
இனியபூஞ் சோலை எய்தி இருந்தனன் இராமன் இப்பால்.

பஞ்சவடியில் இராமனது வாசம் இங்ஙனம் இரண்டு வருடங்கள் சுகமாய்க் கழிந்தது. ஒரு நாள் காலையில் இனிய சோலையிடையே பசும்புல் தரையில் இராமன் தனியே அமர்ந்திருந்தான். அங்கே சூர்ப்பநகை வந்தாள்.

## சூர்ப்பநகை.

இவள் இராவணன் உடன்பிறந்த தங்கை. விபீடணனுக்கு மூத்தவள். பருவம் எய்தியவுடனே வித்யுச்சுவன் என்னும் அசுர வீரனை மணந்து கொண்டாள். அவன் இவளோடு அமர்ந்து பெரும் போகங்களை நுகர்ந்து வந்தான். அங்ஙனம் வருங்கால் அரக்கர்க்கும் அசுரர்க்கும் போர் மூண்டது. அப்போரில் அவன் மாண்டு போனான். தன் கணவன் இறந்து போகவே இவள் கடுந்துயருடன் இலங்கையை அடைந்தாள். தோயமாபரி என்னும் தன் நாயகன் ஊரைவிட்டு விதவைக் கோலத்தோடு விரைந்து வந்து இராவணன் எதிரே நின்று தன் நிலைமையைச் சொல்லிப் புலம்பி அழுதாள். உன்னுடைய மைத்துனன் என்னும் பாராமல் என் தாலியை அறுத்துவிட்டாயே! உலகம் இனி என்னைக் கேலி பண்ணுமே! என்று ஓலமிட்டாள்.

"மழைப்பாலே நஞ்சாகி மழைமுகத்தில் ஒருக்காலும்
கொலைப்பாலன் அல்லாத் தன்மைத் துணைக் கொலைசூழ்ந்த
புலைப்பாவி உன் தமையன் பொல்லாயன் என்று எல்லாரும்
அலைப்பாரை அழைத்தேனோ அண்ணாவோ! அண்ணாவோ!"

(உத்தரகாண்டம்)

என்று இன்ன வண்ணம் பல பல கூறி ஏங்கி அழுத இவளை இராவணன் பரிவுடன் நோக்கி, "தங்காய்! அமர் முகத்தில் இனந்தெரியாமல் நடந்து போயது; மனம் நொதியாதே" என்று ஆற்றித் தேற்றினான். தன் ஆட்சியில் ஒரு நில மண்டலத்தை அவளுக்குத் தனி உரிமையாகத் தந்து பெரிய சேனைத் திரளையும், கரன் முதலிய தானைத் தலைவர்களையும் அவள் ஆணையின்படி நடந்து வருமாறு உறுதி கூறி உதவிக்கு அனுப்பினான். அவ்வாறே பரத கண்டத்தில் தண்டகவனத்தின் அயலில் சனத்தானம் என்னும் பதியில் தங்கி எங்கும் தன் அதிகாரத்தைச் செலுத்தி வந்தாள். கலியாணமாகி மறு வருடத்தில் தன் கணவனை இழந்து விட்டாள்; இள விதவையாயினும் பல வித ஆடம்பரங்களுடன் பழகி இருந்தாள். தேகக் கட்டு வாய்ந்தவள். கடுங்காமி. துடுக்கும் சொல்லாற்றலும் உடையவள். கருதியபடி எவ்வகை வடிவத்தையும் எடுத்து எவரையும் மயக்க வல்லவள். தான் ஒரு அரச குமரி என்னும் மமதையும் மதமும் இவளிடம் மிதம் மீறி நின்றன. எந்த இடத்திற்கும் தனியே சென்று தான் எண்ணிய இன்ப நலங்களை அனுபவித்து வந்தாள்.

இத்தகைய இவள் தற்செயலாய் வந்து நம் உத்தமனைக் கண்டாள். கவி இவளைக் கொண்டுவந்து முதலில் நமக்குக் காட்டும் காட்சி சாலவும் வியப்பானது; மூல நிலைகள் பலவற்றையும் விளக்கி மேலே விளைவதையும் விரைந்து சிந்திக்கச் செய்கின்றது.

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கும் மொய்ம்பினாள்; 2739
மேலைநாள் உயிரொடும் பிறந்து தான்விளை
காலம் ஓர்ந்து உடனுறை கடிய நோயனாள். (1)

செம்பராகம் படச் செறிந்த கூந்தலாள்;
வெம்பராகுத்தனி விளைந்த மெய்யினாள்; 2740
உம்பரானவர்க்கும் ஒன்னதவர்க்கும் ஓதநீர்
இம்பரானவர்க்கும் ஓர் இறுதி சூட்டுவாள்; (2)

வெய்யதோர் காரணம் உண்மை பேயினள்
வைகலும் தமியள் அவ் வனத்து வைகுவள் 2741
நொய்தின் இவ் வுலகெலாம் நுழையும் நோன்மையள்
எய்தினள் இராகவன் இருந்த சூழலவாய். (3)

என்தரும் இளையவள் அரக்கர் எங்கள்மேல்
2742 விண்டனர் விலங்குநீ என்ன மேலைநாள்
அண்டசத்து அருந்துயில் துறந்த ஐயனைக்
கண்டனள் தன்கிளைக்கு இறுதி காட்டுவாள். (4)

(சூர்ப்பகைப் படலம், 8-11)

இராமனைக் கண்ட சூர்ப்பநகையை நாம் இப்படிக் கண்டு கொள்கின்றோம். இவளைச் சுட்டியிருக்கும் குறிப்புக்கள் உய்த்துணர்வுடையனவாய் விளைவிளைவுகளை நினைவுறுத்திச் சுவை நிறைந்திருக்கின்றன. குறிப்புகள் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவுள்ளன.

நீலமா மணி நிற நிருதர் வேந்தன் என்றது இராவணனை.

உருவப் பொலிவும் உயர் எழிலும் அருமை பெருமைகளும் கருதி அரிய நீலமணி அவனுக்கு உவமையாய் வந்தது.

அருந்திறலும் பெருந் திருவும் நிறைந்து தேவர் முதல் யாவரையும் வென்று வீறு கொண்டிருக்கின்ற அவன குடி முழுதும் அடியோடு அழிய இதுபொழுது இங்கே இவள் வழிதேடி வந்தாள்.

வேந்தனை மூல நாசம் பெற முடிக்கும் மொய்ம்பினாள்.

என்றமையால் இந்த நாசகாலியின் நீச நிலையும் நெடிய துயர்களும் நிலை தெரியலாகும். மொய்ம்பு = வலி.

பெண்மைக்குரிய மென்மைத் தன்மைகளுள் யாதும் குறியாமல் வன்மை வாசகத்தால் சுட்டியது இவளது புன்மையும் புலையும் புலன் தெரிய வந்தது.

தேவராலும் வெல்ல முடியாத அரிய பெரிய வீர வேந்தன் மரபு முழுவதும முடிய வழி புகுந்தமையால் முடிக்கும் மொய்ம்பு என மேல முடிவதை யெல்லாம இங்கே முடிவு கட்டினார்.

கொடிய காம ஆசையால் இவள் இராமனை அவாவுகின்றாள்; அத் தூயவன் மறுக்கின்றான்; இத் தீயவள் அடாதன செய்து படாதபாடுகள் பட்டு அங்கபங்கமாய் ஓடிக் கரன் முதலோரைக் கூவித் தொலைத்துப் பின்பு இலங்கை புகுந்து இராவணனிடம் கோள் மூட்ட அவன் வந்து சீதையைக் கவர்ந்து போய் அதனால் குலத்தோடு அழிகின்றான்; அந்தக் குல நாசத்திற் கெல்லாம் மூலகாரணமாய் இவள் ஈண்டு மூண்டு வந்துள்ளமையால் இவளது நீச நிலைமையை முந்துற இங்ஙனம உணர்த்தியருளினார்.

மேலும் இவளுக்கு ஒரு உவமை கூறுகின்றார்.

"மேலைநாள் உயிரொடும் பிறந்து தான் விளை
காலம் ஓர்ந்து உடன் உறை கடிய நோய் அனாள்"

முன்னே முடிக்கும் மொய்ம்பினள் என்றார்; அம் முடிக்கும் திறம் எப்படிப் பட்டது? என்பதைத் தெளிவாகத் தெரியும்படி இப்படி விளக்கி யிருக்கிறார். தான் யாதும் வருந்தாமல் நின்று எல்லாம் ஒருங்கே அழியும்படி பெருங்கேடு புரிபவள் என்பார் கடிய நோய் என்றார். எந்த மருந்தாலும் யாதும் தீராத கொடுமை யுடையது என்பது கடுமை அடையால் காண வந்தது.

இது வரையும் அடங்கி யிருந்து இப்பொழுது வெளிப்பட்டு உயிர்க் கேடு செய்ய ஓங்கி நிற்கின்றமையால் உடலில் பரவிய விடநோய் என்றார்.

இராவணனோடு உடன் பிறந்தவளா யிருந்தும் அவனுக்கும் அவன் குலத்திற்கும் ஒருங்கே நாசம் விளைக்க இதுபொழுது நேர்ந்துள்ளமையால் உயிருடன் தோன்றிச் சமையத்தில் வெளிப் பட்டு அதனை உடலோடு ஒழித்தழிக்கும் நோய் இவளுக்கு ஒப்பாய் வந்தது.

"உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணி தீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு." (மூதுரை)

என்னும் இந்த ஔவை பாடல் இங்கே சிந்திக்கத்தக்கது.

ஒரு தீய நோயால் பல்லாயிரம் உயிர்களும் ஏககாலத்தில் எளிதே மாயும்; அவ்வாறே இத் தீயவளாலும் அரக்கர் குலம் யாவும் மாளும் என்க.

எவ்வகையாலும் கடிய முடியாத கடிய நோய் என்றதனால் எல்லாவற்றையும் சமூலமாகக் கடிந்தொழித்தே முடிவில் முடியும் முடிவு அறியலாம்.

"வெய்யது ஓர் காரணம் உண்மை மேயினள்"

என்னும் இது நுண்மையாக நோக்கத்தக்கது. ஓர்காரணம் என்றது எதனை? அந்த வெய்யது யாது? தெளிவாக வெளியறிய விளக்கவில்லை. மருமமாகவே உள்ளது; அதனால் பலவும் கருத நேர்கின்றன. கவி கருதியது புவி அறிய வேண்டும்.

அரிய பல காரிய முடிவுகளுக்குக் கொடிய ஒரு காரண பூத மாய் இவள் அங்கே வந்திருக்கிறாள்.

தன் நாயகன் இறந்து போனமையால் இத்தீயவள் இவ் வாறு தனி ஒதுங்க நேர்ந்தாள்: வெய்ய ஒரு காரணத்தால் வேறுபட்ட இவள் வெய்ய துயரங்கள் பல வையம் அடைய வந்து சேர்ந்தாள். இவள் வரவு பெரிய இழவுகளாயது.

அரக்கர் குலத்தை அழிப்பதோடு பலர்க்கும் அல்லலாய் இவள் கிளைத்து எழுந்தாள்.

முதலில சுத்தவீரனான இராமன் தனது உத்தம பத்தினி யைப் பிரிய நேர்கின்றான். விதவையான இவள் முகத்தில் விழித்த பலனை அம்முதல்வன் விரைந்து பெறுகின்றான். காண் முதலோரும் காண்கின்றார்; இராவணனும் அடைகின்றான். தீயாரைக் காண்பதுவும் தீதே என்னும் நீதியுண்மையை இவளைக் கண்டவரிடம் எல்லாம காணலாகும்.

" அண்டசத்து அருந்துயில் துறந்த ஐயனைக்
கண்டனள் தன்கிளைக்கு இறுதி காட்டுவாள் "

சூர்ப்பநகை இராமனைக் கண்டபொழுது நிகழ்ந்ததைக் கவி உறுதியாகக் கண்டு இங்ஙனம் காட்டியிருக்கிறார். நாமும் நேரே கண்டு காட்சிகளை நெடிது சிந்திக்கின்றோம்.

அண்டசம் என்றது பாம்பை. முட்டையிலிருந்து பிறந் தது என்னும ஏதுவான் வந்தது. காரண இடுகுறிப் பெயர்.

அரவணையில் அறிதுயில் அமரும் பரமன் அதனைத் துறந்து விட்டு அமரர் இடர் களைய நமரிடை இராமனாய் வந்துள்ளான். வந்தவன வந்த காரியத்தின்மேல் சிந்தையாய்த் திசை நோக்கி இங்கே சேர்ந்திருக்கிறான். அந்தக் கருமவீரனை இடையே உரி மையுடன் வந்து கண்டாள். கண்டவள் யார்? சூர்ப்பநகை. பெறறோர் இட்ட பெயரை விட்டுக் கவி இங்கே வேறு பெயரைச் சுட்டியது வினை விளைவுகளை நினைவு செய்து கொள்ள.

தன் கிளைக்கு இறுதி காட்டுவாள் எனச் சூர்ப்ப நகையை இங்கே காட்டியது பல காட்சிகளை நம் கண்முன் கொண்டு வந்து நீட்டுகின்றது. இராமனை இவள் காணவில்லையாயின சீதை பிரிந்திராள்; இலங்கை அழிந்திராது; இராமாயணமும் இப்படிப்

பூரணமாய் முடிந்திராது. தாலியற்ற இவளை தன் தாலியை அறுத்தாள் என்று மண்டோதரி முடிவில் துடித்துப் புலம்பி யிருக்கிறாள். கதை முடிவுக்குப் பூரண காரணமாயினாள்.

தன் குல முழுதும் நாசம் அடையும்படி இவளது காம ஆசை நீச நிலையமாய் நெடிது நீண்டுள்ளது.

### கண்டு களித்துக் கருதி நின்றது.

இராமனைக் கண்டதும் இவள் பெருங்களிகொண்டு பேராவல் மண்டி ஆராத மோகமாய் அவாவி நின்றாள். அந்தக் கட்டழகனது உருவ நலன்களை வியந்து உள்ளம் உருகினாள். பருவ எழிலைப் பருகிக் களித்து மறுகி மயங்கினாள். இதுவரையும் காணாத அற்புதக் காட்சியில் ஆழ்ந்து இவளது கண்ணும் மனமும் களியாட்டம் ஆடின. அதிசய அழகனைப் புதிய நிலையில் வந்துள்ள இவன் யாரோ? என்று பேராசை மீதூர்ந்து ஆராய நேர்ந்தாள். கந்தருவர் முதலிய அழகிய அந்தரவாசிகள் யாவரையும் சிந்தனை செய்து தியங்கி மயங்கினாள். இவள் எண்ணி மயங்கிய வண்ணங்களையெல்லாம் அயலே கண்டு இயல் காண வருகின்றோம்.

சிந்தையின் உறைபவர்க்கு உருவம் தீர்ந்ததால்;
இந்திரற்கு ஆயிர நயனம்; ஈசற்கு 2743
முந்திய மலர்க்கணோர் மூன்று; நான்குதோள்
உந்தியின் உலகளித்தாற்கு என்று உன்னுவாள். (1)

கற்றையஞ் சடையவன் கண்ணிற் காய்தலால்
இற்றவன் அன்றுதொட்டு இன்றுகாறும் தான் 2744
நற்றவம் இயற்றிஅவ் அநங்கன் நல்லுருப்
பெற்றனனாம்எனப் பெயர்த்தும் எண்ணுவாள். (2)

வில்மலை வல்லவன் வீரத் தோளொடும்
கல்மலை நிகர்க்கில; கனிந்த நீலத்தின் 2745
நல்மலை யல்லது நாம மேருவும்
பொன்மலை ஆதலால் பொருவலாதென்பாள். (3)

அதிகநின்று ஒளிருமிழ் அழகன் ஆனனம்
பொதியவிழ் தாமரைப் பூவை ஒப்பதோ 2748
கதிர்மதி யாமெனின் களங்கம் மேவும் அம்
மதியெனின் மதிக்கும்ஓர் மறுவுண்டு என்பாள். (4)

பொன்றனில் வரைந்ததோர் மாதர் ஓவியம்
போன்றனள் புரிந்தனள் புழுங்கு நெஞ்சினள்
தோன்றலை சுடர்மணித் தோளில் நாட்டங்கள்
ஊன்றினள் பறிக்கலள் ஊற்றம் பெற்றிலள். (14) 2758

நின்றனள் இருந்தவன் நெடிய மார்பகம்
ஒன்றுவென்; அன்றெனின் அமுதம் உண்டிறும்
பொன்றுவென் போக்கினி அரிது போன்மெனாச்
சென்றெதிர் நிற்பதோர் செய்கை தேடுவாள். (15) 2759

பங்கயச் செல்வியை மனத்துட் பாவியா
அங்கையின் ஆயமந் திரத்தை ஆய்ந்தனள்
திங்களிற் சிறந்தொளிர் முகத்தள் செவ்வியள்
பொங்கொளி விசும்பினிற் பொலியத் தோன்றினாள். (16) 2760

(சூர்ப்பநகைப் படலம், 12-28)

இராமனது உருவ எழிலை நோக்கி உள்ளம் உருகிப் பெருகிய காமியாய் மறுகி மயங்கிப் பல பல நினைந்து முடிவில் அவனை மருவி மகிழ உறுதிசெய்து அரிய ஒரு உபாயம் சூழ்ந்திருக்கிறாள்.

இவள் கருதிய எண்ணங்கள் கவிகளில் பொதிந்துள்ளன; கருத்து ஊன்றிப் படித்துச் சுவைகளை நுகர்ந்துகொள்ளுங்கள்.

நகை உவகை சிருங்காரம் முதலிய இனிய இரசனைகளைக் கவி இவள் வாயிலாக வெளியிட்டிருக்கிறார். வெளி செய்துள்ள அந்த விநய வித்தகங்கள் அதிசாதுரியங்களாய் மதிநலங்கனிந்து மிளிர்கின்றன. நுணுகி உணருந்தோறும் உவகை நலங்கள் பெருகி எழுந்து அறிவை ஆனந்தத்தில் ஆழ்த்துகின்றன.

கலையின் சுவையை விட இவ்வுலகில் தலை சிறந்த இன்பம் வேறு ஒன்றும் இல்லை. அந்த அறிவானந்தச்சுவை அநுபவிக்கத்தக்க மனித உருவில் வந்த எல்லாருக்கும் தனி உரிமையுண்டு. ஆயினும் பலர் அதனை இழந்து பரிதாபமாய் விலகிவிடுகின்றனர். அவ்விலக்கம் நடையில் அவரை விலங்கினங்களாக்கி விடுகின்றன. கலையில் விழியாதவர் பலையில் விழிக்கின்றார்.

“Most individuals are blind to the values hidden in prose and poetry” (Seek Beauty) “கவிகளில் மறைந்துள்ள அரும்பெரும் பொருள்களை இவ்வுலகில் பலர் காணாமல் குருடு

பட்டுள்ளனர்" என மேல் நாட்டு அறிஞரும் கூறியிருத்தலால் அறிவுடைமை எவரும் எளிதில் நுகர முடியாது; அதற்கு ஒரு பயிற்சியும் பண்பாடும் வேண்டும் என்பது புலனாகின்றது. நாளும் சிறிது சிறிதேனும் கலையில் பழகி வரின் நிலையில் உயர நேரும்.

உணவின் சுவையளவில் ஒழிந்து போகாமல் உணர்வின் சுவைகளை நுகர்ந்து மனிதன் உயர்ந்து கொள்ள வேண்டும்.

காம நலம் கனிந்த ஒரு பெண்ணின் ஆசைப்பாடுகளையும் நேசப்பான்மைகளையும் ஈண்டு வந்துள்ள கவிகளின் வாசகங்களில் கண்டு நாம் உவந்துகொண்டு உள்ளம் களிக்கின்றோம்.

எவ்வளவு பாசம்! எவ்வளவு மோகம்! எத்தனை எண்ணங்கள்!

இராமனைக் கண்டவுடனே "இந்தக் கட்டழகன் யார்?" என்று வியந்து திகைத்தாள். அழகில் மிகவும் தலைசிறந்தவன் மன்மதன் என்பார்களே அவனோ இவன்? என முதலில் எண்ணினாள். எண்ணினவள், அவனுக்கு உருவம் இல்லையே; உருவிலியான அவனை இந்த உருவனாக எண்ணுவது அறிவின்மையாம் என ஒதுக்கினாள். பின்பு இந்திரனோ, திருமாலோ, ஈசனோ? எனச் சிந்தனை செய்தாள். அவரினும் இச் சுந்தரன் வேறுபட்டிருக்கிறான்; ஆதலால் அவர் யாரும் இல்லை என்று தீர்மானித்தாள்.

சிவபிரானுடைய நெற்றிக் கண்ணால் பண்டு எரிந்துபோன அந்த மன்மதன் அன்று முதல் அரிய பெரிய தவங்களைச் செய்து இந்தத் திவ்விய உருவத்தை யடைந்து மீண்டு இங்கே வந்திருக்கின்றானோ? என்று மறுபடியும் கருதி உருகினாள். தெவிட்டாத வடிவழகில் சிந்தை பறிபோய் மேலும் மேலும் உவந்து பார்த்தாள். ஆர்த்தி மீதூர்ந்து அதிசயம் மிகுந்தாள்.

வைத்தகண் வாங்காமல் திருமேனியை உற்று நோக்கி ஒவ்வொரு உறுப்பையும் தனித்தனியே கருதி வியந்தாள். கை தோள், தாள், மார்பு, திருமுகம், கண், இதழ், சிகை, நிறம், உருவப் பொலிவு, மேனி ஒளி முதலியவற்றைக் கண்டு கண்டு களிப்பு மீக்கொண்டாள். இவற்றைக் குறித்து அவள் கருதிச் சிந்தித்து உருகி உவந்து உரைத்துள்ள வருணனைகள் பொருள்

நயமுடையன. விரிப்பிற் பெருகும்; நுனித்து நோக்கி நுணுகி உணர்ந்து கொள்ளின் இனித்த நலங்கள் பல எளிது தெளிவாம்.

"எவன்செய இனியஇவ் அழகை எய்தினான்
அவம்செயத் திருவுடம்பு அலச நோற்கின்றான்!"

இராமன் மரவுரி தரித்துத் துறவியாய்த் தவவேடம் பூண்டிருப்பதைக் கண்டு சகிக்க முடியாத வருத்தத்துடன் இப்படி உரைத்திருக்கிறாள். அந்த இனிய உருவில் அன்பு பெருகியது.

"இனிய இவ்வழகை எய்தினான் எவன் செய நோற்கின்றான்?" எனத் தனக்குள்ளேயே வியந்து வினவி நெடுநேரம் அவள் உளைந்து நிற்கின்ற நிலையை நம் உளக் கண்ணால் கண்டு நாமும் விழைந்து நிற்கின்றோம்.

எவரையும் மதியாமல், எதையும் கணியாமல், யாரையும் அவமதித்து, வன்கண்மை வளர்ந்து, மூவுலகையும் ஆளும் முடிமன்னன் தங்கை என்னும் திமிர்மிக மண்டிக், கொடியளாய் நெடிது திரிந்து வந்த தன்னை நிலைதிரியச் செய்து உலையுறு மெழுகாய் உளம் உருக்கி உயிர் கனியச் செய்துள்ளமையால் இனிய அழகு என அந்த அதிசய சவுந்தரியத்தைத் துதி செய்து நின்றாள். உயிரின் பரவசம் உரையில் ஒளிர்கின்றது.

எவர்க்கும் இன்னா நிலையளான இவள் இனியளாய் உருகிக் கனிவு மீதூர்ந்து உரிமை பூண மருவி நிற்றலால் அந்த அழகு இனியது எனத் தனி மகிமை பெற்றது.

யாண்டும் என்றும் கண்டறியாத பேரெழிலை கண்டு நேரே கண் குளிரக் கண்டு காதல் மீக்கொண்டமையால் அண்மைச் சுட்டாக முன்னிலையில் தன்னிலை தெரியக் குறித்தாள்.

என் உள்ளத்தையும் உயிரையும் கொள்ளைகொண்டுள்ள இந்தக் கட்டழகன் மணிமுடி புனைந்து அரியணை அமர்ந்து அரிய அரச போகங்களை நுகர்ந்து வரிசை பல நிறைந்து அரண்மனையில் இனிது இருக்க வேண்டியதைவிட்டு வறிய பரதேசியாய்ப் பட்டினி கிடந்து படுவிரதம் கொண்டு இக்காட்டில் இவ்வாறு உறைந்திருக்கின்றானே அந்தோ! இது என்ன கொடுமை? என்ன விதி? என்று இன்னல் மீதூர்ந்து ஏங்கியிருக்கிறாள்.

அவம் = கேடு. அலச = மெலிந்து வாட.

கடு வெயில் பட்டு வடிவம் நிறம் மாற, நல்ல உணவு இன்மையால் மெல்லிய மேனி வாட, இத்தொல்லைகளை வலிந்து மேற்கொண்டு இச்செல்வ அழகன் சீருலைந்துள்ளானே! என்று உள்ளம் குழைந்து உருகியுள்ளாள்.

உருவப் பொலிவும் மிருதுத் தன்மையும் பருவ எழிலும் பசுமை ஒளியும் பெருகிக் கண்டவர் யாவரும் உளம் உருகி அளி புரிந்து வழிபாடு செய்யும்படி விழுமிய நிலையில் விளங்கியுள்ளமையால் திரு உடம்பு என்றாள். திருவுக்கு உரியனைத் திருவிலியான இவள் அறிவின்றி விழைந்து அவமே அலமாலடைகின்றாள். அமுதம் அமரர்க்கு அன்றி அயலவர்க்கு அமையாது; இந்த அமுத அழகனும் உரியவளுக்கன்றிப் பிறவளுக்கும் உண்ண அமையான். அரிய அந்த அமுதத் திருமேனி வறிதே வாடுகின்றதே! என மறுகி வாடியது இவளது நாட்டத்தையும் கோட்டத்தையும் நன்கு வெளிப்படுத்தி நின்றது.

எவரும் பெறுதற்கரிய பேரழகைப் பிறப்புரிமையாகப் பெற்றுள்ள இவன் வேறு என்ன பேற்றைப் பெறுதற்கு இன்னலான இந்நிலையில் இன்ன வண்ணம் இழிந்து பின்னம் எய்தி நிற்கின்றான்?

இவன் தவம் செய்வது அவம் என்று முடிவு கட்டிய அவள் தன் தவத்தால் இந்த அவத்தை நீக்கி நவமான வாழ்க்கையில் சுவைகண்டு இவனைச் சுகிக்கச் செய்ய வேண்டும் என்று துணிந்து கொண்டாள்.

நவம் செயத் தகைய இந் நளின நாட்டத்தான் என்றது இராமனது கண் அழகில் ஈடுபாடு மண்டி இவள் அன்பு பட்டுள்ள பாடறிய வந்தது.

நவம் = புதுமை. நளினம் = தாமரை.

காணுந்தோறும் புதிய புதிய அழகு பொலிந்து யாதும் தெவிட்டாமல் மேலும் மேலும் நோக்கக் களிகூரும்படி அவ்விழிகள் வேட்கையை விளைத்துள்ளமை இவள் மொழியால் வெளியாயது.

இராமன் கண் எதிர்ப்பட்டவர் எவரும் புதிய ஒரு மாறுதலையடைந்து இனிய நீரராய் உயர்ந்து திகழ்கின்றார்; அதிசயமான அந்தப் புதுமையைச் செய்துவருதலால் "நவம் செயத் தகைய" என அந்நாட்டங்கள் போற்றவந்தன.

கொடிய குரூர முடைய கூர்ப்பகைகளையும் இனிய நீரளாய் உருகி நிற்கச் செய்துள்ள அப் புதிய நிலைமையும் புலன் கொள வந்தது. தவம் செய்ய நாடி வந்தவன் நாட்டம் தவம் செய்தது என அவஞ்செயும் நீரளும் தவஞ் செயலாயினாள்.

அருளறம் குன்றி மருள் மலிந்து இருள் மிகுந்துள்ள இவ் வுலகை ஒளியுறுத்தி தவம் செய்யும் நாட்டத்துடன் வில் ஏந்தி இவ்வீரன் வந்திருத்தலையும் இவள் சொல் ஏந்திக் காட்டியுள்ளது.

புதுமை செய்யும் நீர்மை வளர் நிலைமையிலேயே உள்ளமை யால் செயத்தகைய என வியத்தகு மொழியால் விளம்பினாள்.

இராமன் இன்னும் இவளைப் பார்க்கவில்லை; பராமுகமாகவே தனியமர்ந்திருக்கிறான்; இவள் ஒளி மறைவில் நின்று விழி களிப்ப நோக்கி இங்ஙனம் கழி மகிழ்வுடன் உளத்தே பேசுகின்றாள்.

பருவ அழகு வீணே பயனின்றிக் கழிகின்றதே! என்று பருவரலடைந்தமையால் தவ நிலையில் மருவியுள்ள உருவக் கோலம் இவள் கண்களை உறுத்தியுள்ளமை உணரலாகும்.

உலகம் எல்லாம் விழைந்து நோக்கி உருகத் தக்க இவன் தவத்தை விழைந்து மேற்கொண்டானே! அதன் மகத்துவந்தான் என்னே! என்று அகத்துள் வியந்து அயர்ந்து நிற்கின்றாள்.

இவன் தவம் செயத் தவம் செய்த தவம் என்?

இந்த வாக்கியம் அதிசயமானது; ஆழ்ந்த நோக்குடையது.

கண்ணுதற் கடவுளால் எரிந்து இறந்த காமன் பின்பு அருந் தவம்புரிந்து இந்த வடிவமாய் வந்திருக்க வேண்டும் என்று முன்பு நினைந்தாள்; இங்கே இவன் தொடர்பினை அடைந்துள்ளமையால் அந்தத் தவம் பண்ணிய புண்ணியம் என்னே? என்று எண்ணி வியக்கின்றாள். அழகும் தவமும் உளம் மகிழ வந்தன.

தவம் என்பது அரிய விரத சீலம். பொறிகளைத் தன் வயப் படுத்திப் புனித நிலையில் மருவி ஒழுகும் அருமைப்பான்மையான மையால் நோன்மை என வந்தது. மேன்மை மிக்க அது உயிர்க்கு இனிமையாய் உய்தி தருவது; உறுதி புரிவது. நெருப்பில் இட்ட பொன் போல தவத்தைச் செய்த உயிர் ஒளியும் உயர்வும் உற்று எவ்வழியும் பெருமையாய திவ்விய மகிமை பெறுகின்றது.

இங்ஙனம் தன்னைச் சார்ந்த உயிர்களுக் கெல்லாம் ஆர்ந்த மேன்மையை அருளி வருகின்ற தவம் இத் தோன்றலைச் சார்ந்து தன் தோற்றத்தை ஏற்றம் செய்து கொண்டது எனப் போற்றிப் புகழ்ந்தாள்.

தன்னில் குளித்தவர் பாவங்களை ஒழித்தருளும் கங்கை இவன் குளிக்கத் தன பாவம் தீர்ந்து புண்ணியம் மிகப் பெற்றது என முன்னம் குறித்தது ஈண்டு எண்ணத் தக்கது.

தலைமையான புண்ணியப் பொருள்கள் யாவும் இப் புனிதனது தொடர்பால் புதிய மகிமைகள் வாய்ந்து அதிசய நிலையில் துதி செயய வருகின்றன. உயர்ந்தது என உலக மெல்லாம் வியந்து கொண்டாடுகின்ற தவம் இவனை விழைந்து கொண்டாடி உரிமையாக அடைந்து கொண்டது. இவனது உறவும் தகவும் உரிமையும் பெருமைக்குப் பெருமை தருகின்றன; அருமைக்கு அருமை அருள்கின்றன; அழகுக்கு அழகு செய்கின்றன; புகழுக்குப் புகழ் உதவுகின்றன. எத்தகைய அரிய பொருளும் இவ் வுத்தமன் தொடர்பால் உயர் நலம் அடைகின்றது.

தவம் என்றும் கண்டறியாத அரிய காட்சியையும் பெரிய மாட்சியையும் இவனிடம் கண்டு உவகை மீக்கொண்டு உள்ளம் பூரித்துள்ளது. அதிசய வரவு காண ஆனந்தம் ஆயது.

இது வரையும் தன்னைச் சார்ந்தவர்கள் எல்லாரும் இந்த அழகனைப் போல் விழுமிய நிலையில் யாதும் அமைந்திலர்; அரச குலமாட்சியும், அற்புதக் காட்சியும், அருந்திறலும், பெருந்தகவும், தரும நீதியும், அருட் கொடையும், போர் வீரமும் ஒருங்கமைந்த உத்தமன் உரிமையுடன் அடையவே தவம் பெருமை யடைந்து குதித்துக் கூத்தாடி யிருக்கிறது.

"இவன் அன்பால் என்பால் வர நான் என்ன தவம் செய் தேனோ?" என்று தன பேற்றை வியந்து தவம் பெரு மகிழ்வு கொண்டாடியுள்ளது. துன்ப அடைவுதான் துறவை அடைவதற்குப் பெரும்பாலும் காரணம் ஆகின்றது. வறுமைகொடுமை மனை வெறுப்பு, கடன் தொல்லை, நாதியின்மை, அரச ஆக்கினை, உரிமை இழப்பு, முதலிய ஏதுக்களை முன்னிட்ட தவ வேடம் பூண்டு பலர் துறவியாகின்றனர். நேர்மையாய்த் தவத்தை விரும்பி

வருகின்ற சிலரும் உலக போகங்களில் உழந்து இனி ஒன்றும் பலியாதெனத் தளர்ந்து வயது முதிர்ந்த பின்னரே மூப்பு அடர்ந்த ஆக்கையராய் வேறு போக்கின்றித் தன்னை நோக்கி வருகின்றனர்.

இவ்வாறு தோலும் எலும்பும் கிழமும் வழுவுமான குறை பாடுகளையே நிறைய அனுபவித்து நெடுங்காலம் நெஞ்சம் வெறுத்து வந்த தவம் அஞ்சன வண்ணனை இந்த அழகனைக் கண்டதும் ஆனந்தம் கொண்டாடி நின்றது. வாடி வதங்கிய வற்றலுடம்பு களையே யாண்டும் பற்றி வந்தது ஈண்டு வனப்புமிக்க திருமேனியை மருவி மனக்களிப்பு மிகுந்தது.

இச் சுகுண சுகுமாரனை அதிசயமாகப் பார்த்தவுடனே பழைய வெறுப்புக்களை எல்லாம் மறந்து புதிய அன்பு மண்டி இன்பம் பொங்கி இறும்பூது எய்திப் பெருப் பூரிப்பு அடைந்தது.

கிடைக்க முடியாத பெரிய பாக்கியம் தவத்திற்கு இப்படிக் கிடைத்துக் கொண்டமையால் அதன் பேற்றை வியந்து பேச நேர்ந்தது.

எவனுடைய திருவடிப் பேற்றை அடைய அவாவி அரிய பெரிய தவங்களைச் செய்து மகான்கள் உருகி நிற்கின்றார்களோ, அந்த மூர்த்தியே தவவேடம் தாங்கி இங்கு வந்துள்ளது ஆகவே தவம் உயர்ந்த யோகமுடையதாய் உவந்து கொள்ள வந்தது.

இராமனும் என்னை விழைந்து கொண்டான் எனத் தன்னை வியந்து கொண்டாடத் தவத்துக்கு இவ் வுரிமை ஒன்றே போதுமே! என்று உள்ளம் உறுதிகொண்டு கருதியுள்ளாள்.

இந்த அழகன் தன்னை உவந்து கொள்ளத் தவம் என்ன தவம் செய்ததோ? என இன்னவாறு ஆவலோடு இவள் எண்ணி நோக்கியது, அந்த உண்மை தனக்குத் தெரிந்தால் அதனை விரைந்து புரிந்து இவனை அடைந்து கொள்ளலாமே என்னும் அவளுடைய அவாவையும் ஆத்திரத்தையும் வெளிப் படுத்தி யுள்ளது. வழிவகை தெரியாமல் கழிமயலோடு உழல்கின்றாள்.

தவமும் தவம் புரிந்து தீண்டத் தக்க இவனை யாதொரு தவமும் இல்லாத அவள் அவமே விழைந்து அவமானம் அடைய நேர்ந்து ஆசைச் சுழலில் மிகவும் அலமருகின்றாள்.

தவக்கோலத்தைப் பார்த்து உவப்பு மீதூர்ந்தவள் மேலும் பல நினைந்து சாலவும் வியந்து மாலுழந்து நின்றாள்.

இவன் அடித்தலம் தீண்ட இப்படித்தலம் என்ன பாக்கியம் செய்தது? பசிய கோலத் திருமேனியனான இவன் தன்பால் வந்துள்ளமையை நினைந்து உள்ளம் களித்து உவகைப் பூரிப்பால் உடல் சிலிர்த்துள்ளமையினாலேதான் பசும் புல்லாய் வெளியே படர்ந்து திகழ்கின்றது.

"உடுத்த நீர் ஆடையள்; உருவச் செவ்வியள்,"

எனப் பூமி தேவியை வருணித்தது தன்னைப் போல் ஒரு பெண் என எண்ணி. இக்குலமகன் பாதம்பட நிலமகள் உள மகிழ்ந்தாள் என இவள் நினைந்து விழைந்தாள். மண்மகள் பொன் மகளாயினாள் என்று தன் மனம் நாணினாள்.

பசிய சூரியன் போல் ஒளி மிகுந்துள்ள இவனைக் காணின் உலக சூரியன் நாணி ஒதுங்குவான். பதினாறு கலைகளும் நிறைந்த பூரண சந்திரனிலும் இவன் திருமுகம் பொலிவும் எழிலும் பொருந்தி மிளிர்கின்றது. அம் முழுமதி களங்கமுடைமையால் இவ் விழுமிய முகத்திற்கு ஒப்பாகாது. இவனது வாய் இதழுக்குப் பவளத்தை உவமை சொல்வது மிகவும் அவமானமாம்.

"ஒப்பு என உலகம் மேல் உரைக்கின் உள்ளமே
துப்பு எனின், துப்புடை யாதைச் சொல்லுவேன்?"

சிறந்த அவயவங்களுக்கு உவமையாக நூல்களில் சொல்லி வந்த வழக்கத்தின்படி இவன் அதரத்துக்கும் பவளம் உவமையாம் என உலகம் சொல்ல நேரின் என் உள்ளம் அதனை ஒத்துக் கொள்ளாது; வெறுத்துத் தள்ளும். துப்பு ஒப்பு எனின் நான் ஒப்பேன்; உணர்ச்சியுள்ள உள்ளங்கள் எல்லாம் அப்படிச் சொன்னவரைக் குற்றம் கூறிக் காறித் துப்பும்.

துப்பு = பவளம், பகை, குற்றம், உமிழ்தல்.

"துப்பு உடை யாதைச் சொல்லுவேன்?" என்று இப்படி வாதைப் படுகின்றாள். துப்பு = தூய்மை, நன்மை.

அமுத நீர்மையாய் அமைந்திருக்கின்ற இந்தச் சிவந்த இதழுக்குத் தகுதியான தூய உவமை யாதும் எங்கும் அமையாது ஆதலால் என்னால் ஓதி உணர்த்த முடியாது.

கண்டு களித்து உண்டு அனுபவிக்கலாமேயன்றி விண்டு விரித்து வெளியிட இயலாது எனக் கழிபெருங் காதலோடு வாயூறி வழி விழைந்து விழி மறுகி நிற்கின்றாள்.

இந்த அழகனுடைய இடையைச் சார்ந்திருக்க மரவுரி செய்த புண்ணியம் பீதாம்பரம் செய்யாமல் போயதே!

"பொற்கலை கோற்றிலை போலும்?" என்றது உயர்ந்த பொன்னுடை புனைந்திருக்க வேண்டிய அரையில் மரப்பட்டை இணைந்திருக்கின்றதே! என்று பரிந்து இரங்கி யிருக்கிறாள்.

அரையைப் பார்த்தவள் பின்பு தலையைப் பார்த்தாள். நீண்டு சுருண்டு நெய்த்து இருண்டு நெறிந்து செறிந்து நெடு நீலம் பூண்டுள்ள சிகை தைலம் தோயாமல் சடையாய் முடித்துக் கட்டி யிருப்பதைக் கண்டு வருந்தினாள்; வருந்தினவள் உடனே திருந்தி நினைந்தாள்.

"சடைஎனப் புனைந்திலன் என்னில் தையலார்
உடை உயிர் யாவையும் உடையுமால் என்றாள்."

இயற்கை யாகவே அரிய பண்புகள் அமைந்துள்ள இந்தக் கரிய குஞ்சியை இப்படி வறிய நிலையில் வைத்திருத்தலினாலே தான் மங்கையர் மானம் கெடாமல் ஒருவாறு பிழைத்திருக்கின்றனர். வாசனைத் தைலம் தடவிச் சீப்பிட்டுப் புகையூட்டிப் பூச் சூட்டிச் செயற்கை அலங்காரங்களும் செய்திருந்தால் பெண் குலம் நிறை திரிந்து நிலை குலைந்து போயிருக்கும்.

இவன் தலைமுடி சடையாயுள்ளமையால் தையலார் உடையும் உயிரும் உடையாமல் உள்ளன என்றது இவளுடைய உள்ளத்தை வெளியே தெளிவாக உணர்த்தி நின்றது.

உடுத்த உடை சரிதல், தொடுத்த வளை கழலுதல், உள்ளம் குலைதல், உணர்வு கலைதல், உயிர் உலைதல் என்னும் இவை காம மயக்கத்தின் விளைவாக நிகழுமாதலால் அம் மெய்ப்பாட்டு நிகழ்ச்சிகளைத் தன் வாய்ப் பாட்டில் இப்படிக் குறித்துக் காட்டினாள்.

ஆடையை முதலில் குறித்தது புறத்தே மானம் காத்து நிற்கும் அதன் தானம் கருதி. உயிர் உள்ளே உடைய, உடை வெளியே உடைய இவள் இடையே நின்று கடையா யிழிந்து

தடுமாறியுள்ள நிலையை உரையிடையேகண்டு உவகை யுடையராய் நாம் நகையாடிச் சுவை அடைகின்றோம்.

தன்னை மட்டும் தனித்துச் சொல்லாமல் தையலார் என வையத்திலுள்ள மகளிர் எல்லாரையும் தன்னோடு துணைக்கு இழுத்துக் கொண்டாள். தன் மயல் இயலை அயல்மேல் ஏற்றி வினய மாகப் பேசியிருக்கிறாள். தன் மானக் கேட்டை மறை முகமாய் வெளிப்படுத்திப் பெண்கள் சுபாவத்தைக் கண்கள் காணச் செய்தாள்.

இந்தக் கரிய குஞ்சியைக் கொஞ்சம் அழகு படுத்திக் கொண்டையாக முடித்திருந்தால் கண்ட பெண்கள் உயிர்கள் எல்லாம் காணாமல் போயிருக்குமே! எனத் தான் தனியே மறைந்து நின்று கண்ட காட்சியை உலகம் காணத் திறந்து காட்டியுள்ளாள்.

மயிர் முடியில் உயிர் குடி போய் இவ்வாறு உருகி மறுகி நின்றவள் பின்பு அந்தத் திருமேனியில் அணிகள் யாதும் இல்லாததை நினைந்து தன் நெஞ்சொடு பேசினாள்.

உயர்ந்த மரகத மணிபோல் ஒளி வீசுகின்ற இந்த எழில் மேனியில் எவ்வகை அணிகளை அணியினும் அவை செவ்வியுறுமே யன்றி இத் திவ்விய சவுந்தரியத்திற்கு அவற்றால் யாதொரு சிறப்பும் உண்டாகாது அதி மதுரமான அமுதைப் புதிதாகச் சுவை செய்யப் புகுவது போல் இவனுக்கு அணி புனையத் துணிவது பெரிய மதி கேடாய்ப் பிழையே படும்.

முழுமணிக்கு அரசு என விழுமிய நிலையில் விளங்கும் இக் குலமகன் பூண் அணியாமல் இருந்தமைதான் இயற்கை அழகை முழுதும் காணும்படி அமைந்தது. அந்தோ! இந்த அதிசய அழகைப் படைத்த பிரமன் மதியிழந்து போனானே! அந்த விதிக்கு ஏதேனும் கொஞ்சம் அறிவிருந்தாலும் இவனை இப்படிக் காட்டில் அலைய விட்டிருப்பானா? அவன் நெஞ்சக் கொடுமைதான் என்னே! எவ்வளவு மடமை! எவரும் வெறுக்கத் தக்க மடத்தனத்தை மனம் துணிந்து செய்திருக்கிறான். வேதம் படித்தும் போதம் படியாமல் ஏதம் படிந்துள்ளானே! தகுதி யுணராமல் தவறு புரிந்துள்ளான். இவன் காலில் மருவிய சிறிய ஒரு தூசிக்கும்

ஒவ்வாத இந்திரன் உலகம் முழுவதும் ஆள இச் சுந்தரன் இவ்வாறு அடவியில் இருந்து வாழும்படி செய்துள்ளானே இது எவ்வளவு பரிதாபமானது! செவ்வி தெரியாது போயதே!

இது என்ன அநீதி? முழு மூடமான இவ் விபரீதத்தைச் செய்துள்ள அந்த நான்முகன் ஊழியும் தேயாத பழியாளனாய் உழல நேர்ந்தான்.

"இவன் அடிப்பொடியும் ஏற்கலாப் புரந்தரன்"

என்றது தரம் தெரிய வந்தது. தரந் தெரியாமல் புரந்தரனுக்கு நிரந்தரமான பதவியை அருளி, அவனினும் சிறந்து எவரையும் புரந்தருளி வரந்தரும் பெருமாளாய் வந்துள்ள இவ் வள்ளலை வனவாசத்துக்கு அனுப்பியது மன வேதனையாயது. இது விதியின் மதியீனம் என வெதும்பி யிருக்கிறாள்.

இவளது உள்ளக்காதல் இந்திரனையும் பிரமனையும் எள்ளி எழுந்துள்ளது. தான் கண்ட பொருள் மேல் மண்டியுள்ள வேட்கை அண்டமும் கொள்ளாமல் அகன்று நிற்கின்றது.

நீத்தமும் பரவையும் குறுக நெஞ்சிடைக் கோத்த அன்பு

என்றது இவளது ஆசைப் பெருக்கத்தின் அளவு அறிய வந்தது. ஆற்று வெள்ளமும் கடலும் சிறியன என்னும்படி காதல் வெள்ளம் உள்ளத்தில் ஓங்கி எழுந்து தேங்கியுள்ளது.

வெள்ளப் பெருக்கு வேகமாய் மண்டி வந்த பொழுது கரை உடைந்து போதல் போல் காமப் பெருக்கால் இவள் நிறை அழிந்து போயது. அது இருந்த இடமும் தடந் தெரியாமல் அடியோடு ஒழிந்தது என்பதை விளக்குதற்கு ஓர் உவமை வந்துள்ளது.

"ஏத்தவம் புரியஒன்று ஈகலான் பொருள்
காத்தவன் புகழ்எனத் தேயும் கற்பினாள்."

சூர்ப்பநகை கற்புக்கு உலோபி புகழ் இங்கே ஒப்பு.

நல்ல காரியங்களுக்கு யாதும் உதவாமல் பொருளை இறுகப் பொத்தி வைத்திருக்கும் உலோபிக்குப் புகழ் சிறிதும் இல்லை. அந்த இன்மையைச் சுட்டிக்காட்டி இவள் கற்பை இப்படிக் காட்சிப் படுத்தினார். கவியின் இதயம் கருதிக் காணத் தக்கது.

ஏத்தவம் என்றது எவரும் ஏத்திப் போற்றுவது என நல்ல புண்ணியங்களைக் குறித்து வந்தது.

"ஏத்தரு மல்லிகை" "ஏத்தருந்திருமணி" என்னும் சிந்தாமணித் தொடர்கள் ஈண்டுச் சிந்திக்கத்தக்கன. ஏ என்பது பெருமையான பெருக்கத்தைக் குறித்து வரும்.

"ஏ பெற்று ஆகும்" என்றது தொல்காப்பியம்.

ஏத்தறம் எனவும் பாடம். புகழ் ஈதலால் உண்டாகின்றது; ஆகவே ஈயாத உலோபிக்கு அது இல்லையாயது. உலோபி ஈனன் ஆதலால் ஊனநிலைக்கு உவமையாயினன். உலோபத்தை முன்னம் * தாடகைக்கு ஒப்புக கூறினர்; உலோபியை இங்கே சூர்ப்பநகைக்கு ஒப்பாக்கி யிருக்கிறார். இரண்டுக்கும் உள்ள வேற்றுமையை உய்த்துணர்ந்து பொருளாற்றலை ஓர்ந்து கொள்க.

புகழ் உயர்ந்தது; அது சிறந்த கற்புக்கு ஒப்பாய் நேர்ந்தது. புகழுடைமையால் வள்ளல் போற்றப் பெறுகின்றான்; பழியுடைமையால் உலோபன் தூற்றப் படுகின்றான்.

உலோபத்தை அருவருத்து, உலோபியை எங்கும் நம் கவி வெறுத்து வருகின்றார். உயர்ந்த மனிதத்தன்மையைப்பாழ்படுத்தி வருதலால் பாழான அப் பழி நிலைகளிலிருந்து மக்கள் விழி தெரிந்து உய்ய வேண்டும் என்னும் கருணையினால் கதையின் இடையிடையே பலஉறுதிநலங்களை உரிமையுடன் உணர்த்தி யருள்கின்றார். அவ்வுள்ளத்தின் உண்மையை உணர்ந்து கொள்ளுக.

ஆடவர் புகழையும், மகளிர் கற்பையும் பேணி ஒழுக வேண்டும் என்பது இங்கே காண வேண்டிய கருத்தாம்.

நீ ஆண் மகன் என்றால், பிறர்க்கு உதவிப் புகழ் பெற்று வாழ்; பெண் மகளாயின் நெஞ்சம் நிறைகாத்துக் கற்பு நெறி நில் என்பார் இப்படி உல்லாசமாகச் சொல்லி யருளினர்.

மாய்ந்த புகழையும் தேய்ந்த கற்பையும் சேர்த்துக் காட்டி மாயாத வழிகளை ஓர்ந்து கொள்ள உரைத்துள்ள இவ்வுறுதிநலன் இருபாலாரும் ஆய்ந்துணர்ந்து அடைந்து கொள்ள வந்தது

* இந்நூல் பக்கம் 804 பார்க்க.

## அதிசய அழகியாய் அமைந்து வந்தது.

இவ் வண்ணம் பல பல எண்ணிக் காதல் மிகுந்து மோகம் மீதூர்ந்து நின்றவள் எவ்வாருயினும் இவனைக் கலந்து மகிழ வேண்டும்; இல்லையேல் உயிர் பிழையாது என மயலுழந்தாள்.

தன் சொந்த வடிவத்தில் சென்ருல் இந்த அழகன் ஏற்றுக் கொள்ளான்; இவன் விழைந்து கொள்ளும்படி உயர்ந்த எழிலில் அமைந்து கொள்ள வேண்டும் என்று துணிந்தாள். அழகுத் தெய்வம் ஆகிய இலக்குமியை நினைந்தாள். திருவின் உருவம் பருவ எழில் சுரந்து மருவி வருமாறு உருகிக் கருதி அரிய மந்திரத்தை அகத்துள் செபித்தாள். காயம்திரியக் காயத்திரியைச் செபிப்பது போல் மாயம் புரிய இவள் நேயம் புரிந்தாள்.

"பங்கயச் செல்வியை மனத்துப் பாவியா
அங்கையின் ஆயமந் திரத்தை ஆய்ந்தனள்"

என்றமையால் இலட்சுமியை நெஞ்சில் பாவித்துக் கொண்டு இவள் உருவேற்றி யுள்ளமையை உணரலாகும். உரு ஏறத் திரு ஏறும் என்னும் பழமொழி இவளிடம் வேருெரு வழியில் கரு வேறி நின்றது.

அம்கையின் ஆய மந்திரம், என்றது கருதிய பலனைக் கருதிய படியே கருதியவுடனே கைமேல் கொடுப்பது என அதன் உறுதி நலம் உணர வந்தது.

இங்ஙனம் மந்திரத்தை உச்சரிக்கவே அதிசய அழகியாய் ஒளிசெய்து விளங்கினுள். தெய்வ அரம்பையரும் நாணும்படியான திவ்விய உருவுடன் சிறந்து திகழ்ந்த இவள் இராமன் எதிரே செவ்வி மிளிர வந்தாள்.

பஞ்சிஒளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிகர் சீறடிய ளாகி
அஞ்சொல்இள மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள். (1)

பொன்ஒழுகு பூவிலுறை பூவையெழில் பூவை
பின்னெழில்கொள் வாளிணை பிறழ்ந்தொளிர் முகத்தாள்
கன்னிஎழில கொண்டது கலைத்தட மணித்தேர்
மின்னிழிவ தன்மையது விண்ணிழிவ தென்ன, (2)

கானின் உயர் கற்பகம் உயிர்த்த கதிர் வல்லி
மேனிகனி பெற்றுவளர் காமநெறி வாசத்
2764 தேனின்மொழி உற்றினிய செவ்விகனி பெற்றுஓர்
மானின்விழி பெற்றுமயில் வந்ததுஎன வந்தாள். (3)

நூபுரமும் மேகலையும் நூலும் அறல் ஓதிப்
2765 பூமுரலும் வண்டினொடு பூசலிடும் ஓசை
தாமரைசெய் கின்றதொரு தையலவரும் என்னக்
கோமகனும் அந்திசை குறித்தனன் விழித்தான, (4)

விண் அருள வந்ததொரு மெல்அமுதம் என்ன
வண்ணமுலை கொண்டிடை வணங்க வருபோழ்தத்து
2766 எண் அருளி ஏழைமை துடைத்து எழுமெய்ஞ் ஞானக்
கண் அருள்செய் கண்ணன் இரு கண்ணின் எதிர் கண்டான்.

பேருழைய நாகருலகில் பிறிதின் வானில்
2767 பாருழையின் இல்லதொரு மெல்லுருவு பாரா
ஆருழை அடங்கும் அழகிற்கு அவதி உண்டோ?
சேரிழையர் யாவர் இவர் சேரென நினைந்தான். (6)

அவ்வயின் அவ்வாசகன் அகந்துடைய அன்னாள்
செவ்விமுகம் முன்னி அடி செங்கையின் இறைஞ்சா
2768 வெவ்விய நெடுங்கண் அயில் வீசி அயல் பாரா
நவ்வியின் ஒதுங்கி இறைநாணி அயல்நின்றாள். (7)

நீஇவ்வழி வரகதிரு நின்வரவு செய்யோய்!
போதவுளது எம்முழைஓர் புண்ணியமது அன்றோ
2769 ஏது பதி? ஏது பெயர்? யாவர் உறவு? என்றான்
வேதமுதல் பேதைஅவள் தன்னிலை விரிப்பாள். (8)

(சூர்ப்பநகைப் படலம், 31-38)

யாரும் கண்டறியாத பேரழகைப் புதுமையாய்க் கொண்டு, அரிய பல அணிகள் புனைந்து, கன்னிப் பருவம் சுரந்து, காம நலம் கனிந்து, மான் என மருண்டு நோக்கி, மயில் இயல்பாய் ஒயிலுடன் நடந்து சூர்ப்பநகை இராமன் அயலே வந்து நிற்கும் ஆர்வக் காட்சியை இங்கே நாம் நேரே காண்கின்றோம்.

இந்தக் கவிகளின் சந்தத்தைக் கொஞ்சம் சிந்தனையுடன் படித்துப் பாருங்கள். சதங்கைகள் கொஞ்ச அவள் படர்ந்து நடந்து வந்தது போலவே பாடல்கள் தொடர்ந்து வந்துள்ளன.

வஞ்சி என நஞ்சம் என வஞ்சமகள் வந்தாள்

வந்த அவளை இந்தவாறு வகுத்துக் காட்டி யிருக்கிறார்.

அஞ்சொல் இள மஞ்ஞை என அன்னம் என வெளியே மின்னி மினுக்கி வந்தாலும் உள்ளே உள்ள இன்னல் நிலைகளை இன்னவாறு கவி முன்னுற உணர்த்தியிருக்கிறார். வஞ்சிக் கொடி போல் ஒல்கி ஒசிந்து மெல்லிய எழில் மேனியளாய் ஒளி தவழ்ந்து மிளிர வழி புரிந்து வந்துள்ளாள்.

வஞ்சம் என்றது அஞ்சத் தக்க கொடுந் தீமையை அறிவுறுத்தி நின்றது. பல உயிர்கள் பதைத்துத் துடிக்கும் படியான கொடிய கேடுகள் உடைமையால் விடம் என நேர்ந்தாள்.

புறத்தே அழகு வழிகின்றது; அகத்தே நஞ்சு பிழிகின்றது. தன் நச்சுத் தன்மையை உள்ளே மறைத்து யாரும் நல்லவளென இச்சிக்கும் படியான வடிவில் வந்துள்ளமையால் வஞ்ச மகள் என்றார். அவள் நெஞ்ச நீர்மை நேர் அறிய நேர்ந்தது.

கொடிய நஞ்சம் அனைய அவ் வஞ்ச மகள் இனிய அமுதம் ஓர் உருவம் எடுத்து வந்தது என அரிய எழிலுடன் விண்ணிலிருந்து இறங்கிய தெய்வ மங்கை போல் அண்ணல் அருகு வந்தாள். வருகின்ற அரவம் கேட்டு இராமன் திரும்பிப் பார்த்தான்.

எண் அருவி ஏழைமை துடைத்து எழு மெய்ஞ்ஞானக்
கண் அருள்செய் கண்ணன் இருகண்ணின் எதிர்கண்டான்.

மாய மோகினியாய்ப் புதிய வடிவம் கொண்டு வருகின்ற தீயவளைக் கண்ட தூயவனைக் கவி இங்கே நமக்கு இப்படிக் காட்டி யிருக்கிறார். காட்சியைக் கருதி நோக்குக.

நல்ல எண்ணங்களை உதவி, வறுமை மடமை முதலிய சிறுமைகளை நீக்கி, உயர்ந்த தத்துவ ஞானத்தைத் தன்னை நினைந்தவர்களுக்கு அருள்கின்ற கண்ணன் தனது இரண்டு கண்களாலும் அந்தப் பெண்ணைக் கண்டான்.

அருள் செய் கண்ணனை இருள் செய் எண்ணமாய் மருள் செய்ய வந்துள்ளாள் மடமங்கை என அவளைப் பொருள் செய்து காணப் பொருள் மொழிகளை இங்ஙனம் புகன்றருளினார்.

உயிர்களுக்கு ஞானக் கண் அருளும் கருணைக் கண் என்று காட்டியது அவனது காட்சியையும் மாட்சியையும் கருதி யுணர.

மெய்ஞ்ஞான நாதனை அஞ்ஞான மாது அவாவி அடைந்தாள்.

மையல் மீதூர்ந்து வருகின்ற அத்தையலை அயல் வரும் பொழுதே இந்த ஐயன் நோக்கினன். கந்தருவ மங்கையோ, நாக கன்னிகையோ, தேவ மாதோ, என யாவரும் திகைக்கும்படி ஓவிய உருவாய் ஒளி மிளிர்ந்து எழில் ஒழுக எய்திய அவளை இவன் விழி களிப்ப நோக்கி "நேர் இழையர் யாவர் இவர்?" என நெஞ்சுள் நினைந்தான்.

இவள் யாவள்? என நினையாமல் இவர் யாவர்? என்று மரியாதைப் பன்மையில் அவளைக் கருதியிருத்தலால் மற்றவர்களைக் கனம் பண்ணிவரும் இவனது பெருந்தன்மையை விளக்கி நின்றது.

வந்தவளுடைய வனப்பின் சீர்மையும் இருந்தவனது சிந்தையின் நீர்மையும் இங்ஙனம் உயர்வான உரையை உருவாக்கி யுள்ளன. வாய்மொழி மன மாண்பு கனிந்து மதி மிகுந்துளது.

பெண்களை மரியாதையாக மதித்து நடத்தும் முறைமையை இந் நாட்டவர் பழமையாகவே பழகி வந்துள்ளனர். அவ் வளமை நம் கவியினிடம் கிழமையாகக் கிளர்ந்து மிளிர்கின்றது.

திவ்விய சவுந்தரியாய் வந்த அவள் இராமனை அணுகி அதி விநயமாய் இருகை குவித்து வணங்கி இளமுறுவலுடன் ஒரு வகையாய்த் திருமுகம் நோக்கிப் பெரு நாணமுடன் அயல் ஒதுங்கி மயல் இயல் கனிய மருவி நின்றாள்.

"கண் அயில் வீசி அயல் பாரா ஒதுங்கி நாணி நின்றாள்"

அன்று அவள் பார்த்த பார்வையும் நின்ற நிலைமையும் இதில் நேரே தெரிகின்றன. கண்ணை அயில் என்றது அதன் இயலையும் செயலையும் எண்ணி யுணர. அயில் = வேல். காமம் கனியப் பார்ப்பதில் பெண்கள் கண்கள் அதிசாதுரியமான ஆற்றல் வாய்ந்துள்ளன. "மங்கையர் கண் நோக்கி மையல் வலை வீசின், இங்கு எவரே தப்பி இடை உய்வார்?" என்றமையால் அவர் தம் கண்ணின் வேலைகள் காணலாகும்.

அரிய ஒரு பார்வை பார்த்து மிக்க வெட்கமுடையவள் போல் ஒல்கி ஒசிந்து பக்கம் நின்ற அந்த வஞ்ச மகளை இந்த

அஞ்சன வண்ணன் யாதொரு வஞ்சமும் அறியாமல் நெஞ்சம் இரங்கி நேரே நோக்கி உரிமையுடன் உபசார மொழிகள் கூறி உசாவியருளினன்.

" திரு நின்வரவு தீதில் வரவாக " என்றது அம்மா! உன் வரவு நல்வரவு ஆக என்றவாறு. புதியராய்ச் சந்திப்பவரை நோக்கி இங்ஙனம் மங்கல மொழி கூறுவது பண்டைய வழக்கம் என்பதை ஈண்டுக் கண்டு கொள்ளுகின்றோம்.

Good-day என இந் நாளில் ஆங்கிலேயர் வழங்கி வருவதும் ஈங்கு அறிய வுரியது. "I wish you a good day" என்னும் பொருளில் புதியரை அவர் வரவேற்பது மரபா யுள்ளது.

நல் வரவாக என்று நேரே சொல்லாமல் தீதில் வரவாக என்றது சிந்திக்கத்தக்கது. அவள் வரவு தீதில் வந்துள்ளமையால் அஃது அப்படியே நில்லாமல் நல்லதாக மாறட்டும் என்று இச் சொல் ஓடி வந்தது.

தீய எண்ணம் கொண்டு மாய வேலை செய்ய வந்துள்ளாள்; அவ் வுண்மையைச் சத்திய சீலனாகிய இத் தூயவன் வாய் தன்னை யறியாமலே நன்னயமாகத் துலக்கி யருளியது.

தீது இல்லாமல் உன்வரவு நல்லது ஆக வேண்டும் என்றதில் அது அங்ஙனம் ஆகாது என்பது தொனித்து நின்றது.

நின் வரவு உனக்குத் தீதில் ஆக; எனக்குத் திருவாக என மருவி நிற்கும் மருமத்தை நுணுகி நோக்குக.

"போத உளது எம் உழை ஓர் புண்ணியமது அன்றோ?" என்றது நன்றாக எண்ணி ஆராயத் தக்கது.

நீ என்பால் இப்பொழுது வந்தது நான் முன்பு செய்த புண்ணியப் பேறே என்று புகழ்ந்து கொண்டாடியிருக்கிறான்.

பேசுகின்ற நாக்கு பொய் அறியாதது; புனிதம் மிக வுடையது; அது தனியே இப்படி இனிது இசைத்திருக்கிறது.

புண்ணியம் என இவ்வண்ணல் புகன்றது வந்தவளைக் கனப் படுத்தும் பொருட்டு உலக மரியாதையாக உரைத்த உபசார வசன மேயாம். ஆயினும் அதில் உண்மை உள்ளே உறைந்துள்ளது.

சூர்ப்பநகை இப்போது இங்கே வந்தது இராமனது அவதார பூர்த்தியாய் அமைந்திருக்கிறது. அவள் வரவில்லையானால் இவன் வந்த காரியம் முடியாது.

தான் எடுத்த பிறப்பு இனிது பயன் படும்படி தானாகவே அவள் வலிந்து வந்துள்ளமையால் அவ் வரவு தன் புண்ணியப் பயன் என இப் புண்ணியவான் வாய் புகன்றருளியது.

சத்திய வாக்கில் வெளி வருவது தப்பாத தத்துவமாய் உய்த்துணர வுள்ளது. மையல் நோக்குடன் அத் தையல் வந்துள்ளாள்; அவள் வரவால் விளைவதை வையம் ஓர்ந்து கொள்ளும்படி இவ் வையன் மொழி இவ்வாறு மெய்யை அறிவுறுத்தியது.

மங்கலமாக இங்ஙனம் முகமன் உரையாடிய பின் அவளைத் தெளிவாக இனந்தெரிந்து கொள்ள ஒளியாமல் வினவினான்.

ஏது பதி? ஏது பெயர்? யாவர் உறவு?

இந்த மூன்று கேள்விகளையும் ஊன்றிப் பாருங்கள்.

வந்தவளுடைய ஊர் பேர் குலம் கோத்திரம் முதலியன முழுவதும் தெளிய விழைந்து இவ் வினாக்கள் வெளி எழுந்தன.

ஏது பதி? என ஊரை முதலில் வினவியது இடம் சேய்மையோ, அண்மையோ என்னும் அவ்வுண்மையை அறிய.

ஊர் எது? என்று கேளாமல் பதி என்றமையால் இவள் சிறிய பட்டிகளில் இருப்பவள் அல்லள்; பெரிய நகரங்களில் வசிப்பவளே என வாசத் தலத்தை மாண்பாக மதித்துள்ளமை புலனாயது. ஊரை அடுத்துப் பேரை வினவியது நேரே நீர்மை தெரிய. இறுதி வினா, தாய் தந்தை உற்றார் உறவினர் எல்லாரையும் இனமாக அறிந்து கொள்ள வந்தது.

இங்ஙனம் வினவியவனையும், அதற்குப் பதில் சொல்ல உள்ளவளையும் கவி அதி சாதுரியமா இணைத்துக் கூறி நகைச் சுவையை விளைத்திருக்கிறார்.

வேத முதல் கேட்ட இக் கேள்விகளுக்குப் பேதை அவள் தன்னிலை விரிக்கத் தொடங்கினாள் எனத் தொடுத்து விடுத்திருக்கிறார். பேதை மேதையிடம் பேச நேர்ந்தது பிழையும் ஏதமும்

விளைய வந்தது எனப் பின் விளையும் விளைவுகளும் தளைவுகளும் வெளியுறிய ஒளி புரிந்துள்ளது.

வினவியவனது பெருமையையும், விடைதர நேர்ந்தவளது சிறுமையையும் சுட்டியிருக்கும் அருமையும் அழகும் சுவை சுரந்து உவகை தருகின்றன.

ஞான நிலையமான வேதங்கள் எல்லாம் ஆதி மூலமே என்று போற்றித் துதிக்க வேதாந்த மூர்த்தியாய் வீற்றிருப்பவன் மானுடச் சட்டை போர்த்தி இங்கே மருவியிருக்கிறான்; அந்த மெய்ஞ் ஞான சீலன் எதிர் அஞ்ஞான நீலி பேச நேர்ந்ததே! என ஏசி நொந்து வாசி காணப் பேசியிருக்கிறார்.

பேதை என்னும் சொல் பெண் என்பதையும் கண் எதிர் காட்டி மையல் கொண்டுள்ள அவளது மடமையையும் உடன் உணர்த்தியது.

தன் நிலை விரிப்பாள் என்றது அவள் பின்னால் பேசப்போகும் நிலைமைகளை யெல்லாம் முன்னால் விழைந்து காண வந்தது.

அவ் விரிப்பில் சிரிப்புகள் பல காணலாம் என்பதை விரிக்காமல் சுருக்கமாய் இதில் குறிப்பித்திருக்கிறார்.

அவள் பேசுகின்றாள்; அதனைக் கவனமாய்க் கேளுங்கள் என ஆவலூட்டி ஏவியபடியாய் இது மேவியுள்ளது.

## சூர்ப்பநகை சொன்னது.

பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி, முப்புரங்கள் செற்ற 2173.
சேவலோன் துணைவனான செங்கையோன் தங்கை, திக்கின்
மாவெலாம் தொலைத்து வெள்ளி மலைஎடுத்து உலக மூன்றும்
காவலோன் பின்னை காம வல்லியாம் கன்னி என்றாள்.

பேதை விரிப்பாள் என முன்னம் குறிப்பித்த படியே இதில் அவள் தன் நிலையை உரைத்திருக்கிறாள். உரைகளில் உள்ள குறிப்புக்கள் யாவும் ஊன்றி உணர வுரியன.

ஏது பதி? ஏது பெயர்? யாவர் உறவு? என முன்னம் இராமன் கேட்ட கேள்விகளுக்குப் பதில் இப்படி நீட்டி வந்துள்ளது.

இடம் வினவுக்கு முதலிலும், முதல் கேள்விக்கு இடையிலும், நடுவில் கேட்டதற்கு முடிவிலும் விடைகள் வந்துள்ளன.

பூவிலோன் என்றது பிரமனை. தாமரை மலரில் வாசம் செய்பவன் ஆதலால் அம் மா மறையோன் பூவிலோன் என வந்தான்.

"பூமேவு செங்கமலப் புத்தேள்" (கந்தர் கலி வெண்பா)
"செந்தாமரையோன்" (தக்க யாகப் பரணி)

என இங்ஙனம் நூல்களில் அவன் போற்றப் பெற்றுள்ளான்.

அந்தப் பிரமாவின் புத்திரன் புலத்தியன்; அவன் புதல்வன் விச்சிரவசு. அம் மாதவன் கேகசி என்னும் மங்கையை மணந்து இராவணன், கும்பகருணன், சூர்ப்ப நகை, விபீடணன் என்னும் நால்வரைப் பெற்றான். அக் குலமரபும் தலைமுறையும் தெரியப் "பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி" என்றாள்.

பிரம தேவனிலிருந்து நான்காவது வழி முறையில் வந்துள்ளேன்; புலத்திய மகா முனிவருக்கு நேரே பௌத்தி. என் தந்தை அந்தணர் திலகன் எனத் தனது பிறப்பின் மேன்மையை மிகவும் பெருமைப் படுத்திப் பேசி யிருக்கிறாள்.

நான் நல்ல பாப்பாத்தி; உயர்ந்த பிராமண சாதிப் பெண் என்பது குறிப்பு. எங்கே யிருந்து எங்கே சுற்றி இங்கே வந்துள்ளாள்! அவளது உள்ளத்தின் ஓட்டமும் உரையின் நீட்டமும் இவ் வள்ளலை வசப் படுத்த வேண்டுமே! என்னும் தேட்டத்தில் நாட்டமாய் ஈட்ட முற்றிருத்தலால் கேட்ட கேள்வியைப் பற்றிக் கொண்டு கோட்டி மகள் இப்படிக் கோட்டி கொண்டாடுகின்றாள்.

தன் பிறப்பின் நிலைமையை முதலில் இங்ஙனம் உயர்த்திப் பேசினவள் பின்பு தனக்கு வாய்த்துள்ள சிறப்பு நலங்களை யெல்லாம் விரித்து விளக்க நேர்ந்தாள்.

முப்புரங்கள் செற்ற சேவலோன் என்றது சிவ பெருமானை. சே=இடபம். காளையை வாகனமாக உடையவன் ஆதலால் சேவலோன் என்றாள். அவன் துணைவன் என்றது குபேரனை. சிவனுக்குத் தோழனான அவன் எனக்கு அண்ணன் என்பாள் "சேவலோன் துணைவனான் செங்கையோன் தங்கை" என்றாள். விச்சிரவசுவின் மூத்தமனைவியின் வயிற்றில் பிறந்தவன் குபேரன் என்க. பெரிய சரிதங்கள் இதில் பிணைந்து கிடக்கின்றன.

திரிபுரம் எரித்த பரமனுக்கு நண்பன்; இரு நிதிக் கிழவன்; திக்கு பாலகன்; இயக்கர் குல வேந்தன் என எங்கும் இசை

பெற்றுள்ள தனதன் தனது பெரிய தமையன் என உரிமை கூறினாள்; அதன் பின் அடுத்துத் தன்னோடு உடன் பிறந்த அண்ணனை மிகவும் கண்ணியமாக எடுத்துப் பேசினாள்.

திக்கு யானைகளை வென்றவன்; வெள்ளி மலையை வேரோடு அள்ளி எடுத்தவன்; மூன்று உலகங்களையும் தனியே ஏக சக்கராதிபதியாய் ஆள்பவன்; இலங்கேசன் என ஈசுவர பதம் பெற்றுத் தேசு மிகுந்துள்ளவன்; அந்த இராவணனோடு நான் உடன் பிறந்த தங்கை. என் பெயர் காமவல்லி என ஏழுற இயம்பினாள்.

தன் நாமம் இது என இங்ஙனம் நவின்றிருக்கிறாள். இந்தப் பேர் அழகாகவும் இனிமையாகவும் இருக்கிறது. இப்படி ஒரு பெயரைத் தனக்குத்தானே புதுமையாகச் சூட்டிக் கொண்டாள்.

பெயர் யாது? என வினவியிருத்தலால் இந்த அழகன் எல்லாவற்றிலும் அழகும் சுவையும் காணவல்ல நல்ல இரசிகன் என்று கருதி இங்ஙனம் நயமாகச் சொல்லி யுள்ளாள்.

பெயரின் பொருத்தம் திருத்தமாக அமைந்துள்ளது. காமத்தில் வலித்து வந்திருத்தலால் காமவல்லி என்னும் நாமம் பூரண காரணமாய்ப் பொருந்தி நின்றது.

காமவல்லி.

தெய்வ நிதியமான கற்பக தருவில் படர்ந்துள்ள மெல்லிய அழகிய கொடிக்குக் காமவல்லி என்று பெயர்.

"கற்பகம் சேர்கொடி காமவல்லி" (பிங்கலந்தை)
"மகிழும்அக் கற்பகத்தில் வளர்கொடி காமவல்லி" (நிகண்டு)

இவற்றால் அதன் நிலைமையும் நீர்மையும் அறியலாகும்.

அந்தக் கொடி எப்பொழுதும் கற்பகத்தைக் கலந்திருத்தல் போல் தான் இந்த அற்புத அழகனைக் கலந்து களிக்க வேண்டும் என்னும் அவளது காமக் குறிப்பு இந் நாமத்தில் கனிந்திருக்கின்றது. உருவம் போல் பெயரும் அழகாய்த் துலங்கி யுள்ளது.

விழுமிய மரத்தைத் தழுவி வளர்ந்திருக்கும் அது ஆடவர் மகளிரது கலவி நிலைக்கு இனிய உவமையாய் வந்துள்ளமையால் அதனை இன்பக் கோடி என அன்பு நலம் அறிய உரைப்பர்.

"கணிதம் இல்லாக் கற்பகம் கந்துக் கடன் ஒத்தான்;
இணைவேல் உண்கண் நந்தையும் இன்பக்கொடி ஒத்தாள்"
(சிந்தாமணி 365)

தலைவனுக்குக் கற்பகமும் தலைவிக்குக் காமவல்லியும் இதில் ஒப்பாயுள்ளமை அறிக. கற்பகம் காமவல்லி அனைய நீர் என உயர்ந்த சதிபதிகளை உவந்து வாழ்த்துவது வழக்கம்.

"ஒப்பிணை தனக்கிலாதான் உறுவரை அகல மூழ்கிச்
செப்பிணை அனைய செங்கேழ் வனமுலை பொருதுசேப்பக்
கற்பக மரத்தைப் புல்லிக் கைவிடா தொழிந்து காமத்
துப்புர வுமிழும் காம வல்லியின் தோற்றம் ஒத்தாள்."
(சிந்தாமணி 1691)

இன்பச் சேர்க்கையில் காம வல்லியின் நிலை இங்ஙனம் குறிக்கப் பட்டுளது. அகலம் = மார்பு.

"மாமணி முகடு வேய்ந்த மரகத மணிச்செப் பன்ன
தாமணி முலைகள் தம்மைத் தொழுதகக் கமழும் சாந்தில்
காமரு காமவல்லிக் கொடிகவின் கொண்டு பூத்துத்
தூமணிக் கொழுந்து மென்றோள் துயல்வர எழுதினாளே."
(சிந்தாமணி)

காமவல்லிக் கொடிபோல் மங்கையர் தனங்களில் தொய்யில் எழுதும் வழக்கம் பண்டு உண்டு என்பதை இதனால் கண்டு கொள்கின்றோம். கவின் = அழகு.

காம சாரமாய் இங்ஙனம் சுவை சுரந்துள்ளமையால் அது காமவல்லி என வந்தது. கடுங்காமியான இவள் அதனைத் தனக்கு நாமமாக நயந்து கொண்டாள்.

பேர் ஊர் யாவும் இவ்வாறு சீர்மையாகக் கூறி வந்தவள் முடிவில் உரைத்தது மிகவும் கூர்மையானது. "காம வல்லி என் பேர் காண்" என்று பாட்டை முடித்திருக்கலாம். அங்ஙனம் முடியாமல் கன்னி என்று சொன்னது உன்னி உணரத்தக்கது.

முன்னே கூறி வந்த மொழிகளுக்கு எல்லாம் உறுதியான பொருள் இறுதியான இதில் மருமமாய் மருவியுள்ளது.

எனக்கு இன்னும் கலியாணம் ஆகவில்லை; கன்னிப் பெண் ஆகவே இருக்கிறேன்; எனது குலமாபிற்கும் திருவுடைமைக்கும்

எழில் உருவங்களுக்கும் தகுதியான வரன் யாண்டும் அமைய வில்லை; ஆதலால் முன்னவன் அருளை முன்னிக் கன்னிமை காத்து வருகிறேன் என இன்ன வண்ணம் சொல்ல வேண்டியவைகளை யெல்லாம் உள்ளடக்கிக் கன்னி என்று நன்னயமாக நவின்று நின்றாள். உருவம் போலவே உரைகளும் சுவாய் மிளிர்கின்றன.

தாலி யறுத்து நீண்ட காலமாக அறுதலியாய்த் திரிந்து கண்ட இடமெல்லாம் களித்து வந்தவள் யாதும் நிறை யழியாமல் கன்னிவேலியுள் மன்னி இருப்பதாக ஈண்டு இந்த ஆண்டகையிடம் இவ்வாறு துணிந்து சொல்லி யிருக்கிறாள்.

கலியாணம் ஆனவள் என்று தெரிந்தால் பிறனுடைய மனை யாள் என்று அவன் எள்ளித் தள்ளி விடுவான் என இக் கள்ளி கருதி யிருத்தலால் இங்ஙனம் உள்ளி உரைத்தாள்.

கன்னி என்றால் தன்னைப் பன்னியாக அவன் ஏற்றுக் கொள்வான் என்று உன்னி முயன்று உறுதி சூழ்ந்துள்ளாள்.

உயர்ந்த குல மரபு, சிறந்த குடிப் பிறப்பு, நிறைந்த செல்வ நலம், பெரிய உறவினங்கள், அரிய அழகு எனத் தனது பெரு மித நிலைகளையெல்லாம் ஒரு முகமா உருப் படுத்தி இத் திருமகன் தன்னைப் பொருட்படுத்திக் கொள்ளும்படி போதிக்க லாயினாள்.

பூவிலோன் என்பது காமனுக்கு ஒரு பெயர். அவள் பேசத் தொடங்கிய பொழுதே தன்னையறியாமலே காம வாசம் கமழ்ந்து வந்துள்ளது. தான் கருதிய கருத்து இனிது நிறைவுற வேண்டும் என்னும் அவாவினால் பூ என்னும் மங்கல மொழியால் தொடங்கி யிருக்கிறாள். அவளது ஆசை எல்லாம் இந்த அழகன் தன் வசம் ஆவதையே நாடி ஓடி நயந்து வருகின்றன. எவ்வழியும் நெஞ்சம் கவர்ந்து கொள்ளவே வஞ்சமாக ஓர்ந்து பேசுகின்றாள். பேச்சி லுள்ள ஒவ்வொரு மூச்சும் அவள் உள்ளக் காட்சியாய் ஒளி வீசி இவ் வள்ளலை நோக்கி விளைந்து வருகின்றது.

இங்ஙனம் சொல்லி முடிக்கவே இராமன் உள்ளம் விழிப் படைந்தது; இது வரை இவள்மேல் யாதொரு மாறுபாடும் கருதாத தூய நெஞ்சம் இம் மாய மொழிகளைக் கேட்டதும் திகைத்தது. கன்னி என்ற போதுதான் சந்தேகம் வலுத்தது.

சொன்ன வார்த்தைகளின் தொனிகளை நுணுகி யுணர்ந்து எழில் சுரந்து நிற்கும் அவள் முகத்தை இனிது நோக்கித் தனது மனநிலை தெரிய வியமொழி பகர்ந்தான்.

அவ்வுரை கேட்ட வீரன் அறிவுறு மனத்தன் செய்கை
277 செவ்விதன்று அறிதற்கு அரிதின் என்று உணரச் செங்கண்
வெவ்வுரு அமைந்தான் தங்கை என்றது மெய்ம்மை ஆயின்
இவ்வுரு இசைந்த தன்மை இயம்புதி இயல்பின் என்றான்.

நீ இராவணன் தங்கை என்பது உண்மை ஆனல் இந்த அழகிய உருவம் உனக்கு எவ்வாறு அமைந்தது? என இவ்வாறு இராமன் வினவினன். இயல்பின் இயம்பு = உள்ளபடி சொல்.

பிரமாவிலிருந்து தொடங்கிப் பல வகைப் பெருமைகளையும் அடுக்கித் தன்னைக் குறித்து முன்னம் மிகவும் மேன்மையாகச் சூர்ப்பநகை பேசியுள்ளாள்; அப்பேச்சுகளுள் மற்றவரை எல்லாம் ஒதுக்கி விட்டு ஒருவனை மாத்திரம் குறித்துக் கொண்டான்.

"செங்கண் வெவ் உரு அமைந்தோன்" என இராவணனை இங்ஙனம் கருதியிருக்கிறான். கோபத்தால் எப்பொழுதும் சிவந்த கண்ணையுங் கொடிய பெரிய வடிவும் வாய்ந்துள்ளவன் என்றமையால் அவனது உருவ நிலைமையும் உள்ளக் கொடுமையும் உணர வந்தன.

அரக்கர் வேந்தன் இரக்கம் இல்லாத வன்கண்; யாரும் அஞ்சத்தக்க உருவத் தோற்றத்தன் என இராவணனை இராமன் கருதியுள்ளமை இங்கே உரையில் வெளியாயது. எண்ணங்களின் வண்ணங்களை உரைகள் கண் எதிரே காட்டியருள்கின்றன.

அவள் உறவுரிமையாக மருவி அருமை தெரிய மொழிந்த பெருமித நிலைகளை யெல்லாம் ஒரு சிறிதும் கருதாமல் இவன் உள்ளம் இங்ஙனம் நிருபிதம் செய்துள்ளது.

திக்கின் யானைகளைத் தொலைத்தவன்; வெள்ளி மலையை எடுத்தவன்; உலகம் முழுவதையும் காவல் செய்து ஆள்பவன் என ஆவலோடு அவள் புகழ்ந்து உரைத்த உயர்ந்த அதிசய மொழிகள் ஒன்றும் இவன் நெஞ்சில் ஏற வில்லை; மற்றையவைகள் யாவும் மதிப்பிழந்து போயின; தான் மதித்தது [illegible] தக்கது வெளிவரலாயது.

அவனுடைய ஆண்மை வீரம் அரசகுல மாட்சி ஆட்சித் திறங்களையெல்லாம் வியந்து மகிழ்ந்து அவன் தங்கையான தன்னை இவன் நயந்து கொள்வன் என அவள் விழைந்து மொழிந்தாள். அது விபரீத பலனை விளைத்து நின்றது.

இலங்கை வேந்தன் மீது இக் கோமகனுக்கு எப்படியோ ஒரு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது. தண்டக வன முனிவர் சொன்னதிலிருந்தா? முன்னமேயா? என்பது உன்னி உணர வரியது. அந்தத் திரு உளத்தின் உளவு தெய்வ நிலையது.

எந்தக் குறிப்புடன் இங்கு உதித்துள்ளானோ, அந்தப் பிறப்பு வாசனை பெருகி வந்து மருமமாய் உலாவுகின்றது. கரும இயல்பின்படியே காரியங்களில் புகுந்து அறிவு வேலை செய்து வருகின்றது. அதன் தொழில் விளைவுகள் வெளி மிளிர்கின்றன.

தன் அண்ணனை இந்த அழகன் எண்ணியுள்ள நிலையை அவள் தெரிந்து கொண்டாள்; எதிர் வினவிய புதிய கேள்விக்குப் பதில்மொழி விரைந்து தந்தாள்.

" தூயவன் பணியா முன்னம் சொல்லுவாள் சோர்விலாள்அம்
மாயவல் அரக்கரோடு வாழ்வினை மதிக்கலாதேன்
ஆய்வுறு மனத்தேன் ஆகி அறந்தலை நிற்பதானேன் 2772
தீவினை தீய நோற்றுத் தேவரின் பெற்றது என்றாள். "

இராவணனுடன் கூடப் பிறந்த தங்கை ஆயின், முரட்டுத் தேகமும், மூர்க்கத் தனமும், குரூரமான பார்வையும் அல்லவா இருக்க வேண்டும்; அங்ஙனம் யாதும் இல்லையே; தேவர் முதல் யாவரும் வியக்கத் தக்க இவ்வளவு பேரழகு உனக்கு எப்படி வந்தது? என இவ்வுத்தமன் கருதி வினவியதற்கு அவள் இப்படிப் பதில் உரைத்தாள்.

அவளுடைய உள்ளத் துணிவும் வேகமும் சமயம் அறிந்து எதிரியின் குறிப்பை விரைவில் உணர்ந்து கரவறியாவகை விரகுடன் பேசும் திறமும் வியப்பினை விளைத்து வருகின்றன.

அரக்கர் வேந்தனை இந்த அழகன் மதியாமல் வெறுத்திருக்கும் கருத்தை நுனித்து நோக்கித் தானும் அக் குலத்தைப் பழித்துத் தனித்து ஒதுங்க நேர்ந்தாள்.

" தீவினைகளை நாளும் நயந்து செய்யும் பாவிகள் ஆதலால் இராக்கதரோடு சேர்ந்து நான் வாழ விரும்பவில்லை; தனி அகன்று

தெய்வ நீர்மையைத் தழுவிப் புண்ணிய கருமங்கள் புரிந்து வருகின்றேன்; அரிய ஒரு தவப் பேற்றால் இவ்வுருவம் எனக்கு அமைந்தது. திருமகள் அருளால் வந்தது; இலக்குமி சரசுவதிகளை உபாசித்து வருபவர் அழகிலும் திருவிலும் அறிவிலும் தலை சிறந்து விளங்குவர் எனச் சுருதிகளில் அறிந்து கொண்டேன்; அம் முறைகளைத் தழுவி ஒழுகி விழுமிய சித்திகளை நிறையப் பெற்றிருக்கிறேன். என் நிலைமைகளை நானே சொல்வது தகாது; ஆயினும் தகுதியான உங்களிடம் உண்மையை ஒளியாமல் உரைக்க நேர்ந்தேன்" என உரிமையுடையளாய் நடித்து முடித்தாள்.

தனது குலமரபையும், உறவினங்களையும், சக்கரவர்த்தி நிலையில் தலை சிறந்து நிற்கின்ற தன் தமையனையும் இகழ்ந்து பேசித் தன்னுடைய கருத்தை முடித்துக் கொள்ள இவள் துடித்து நிற்கின்றாள். நெஞ்சின் வேகம் நிலை மீறி வருகின்றது.

காமத்தின் வசப் பட்டவர் காதலன் விரும்பியபடியெல்லாம் திரும்பி விடுவர்; அவன் உள்ளம் கோணயாதும் காணார்; பெற்ற தாயையும் உற்ற தந்தையையும் மற்றுமுள்ள செல்வங்கள் எல்லாவற்றையும் வெறுத்து விடுத்து அவன்பின் விரும்பிச் செல்வர். காம இச்சை எதையும் துறக்கச் செய்கின்றது. அதன் அதிசய நிலை உரைசெயல் அரியது. அந் நிலைமையை இங்கே நேரே நோக்குகின்றோம். கள்ளம் புரிவதிலும் உள்ளம் தெரிகின்றது.

தான் கவ்விய காதலன் உள்ளம் எவ்வகையாலும் தன்னை வவ்வ விழைந்து வழி வகைகளை நாடி மொழிகளை வீசுகின்றாள்.

கேட்கின்றவன் புண்ணிய விருப்பன் என்று உணர்ந்து கொண்டமையால் அறம் தலை நிற்பது ஆனேன் எனத் தன்னை வரைந்து காட்டினாள். உரிமை புரிந்து உள்ளே நெருங்குகின்றாள்.

பாவகாரிகளான அரக்கருடைய தொழில்கள் யாதும் எனக்குத் தெரியாது; நான் தனியே தரும நிலையில் தழைத்து நிற்கின்றேன்; தவ நலங்களை விழைந்து நாளும் புனித வழியில் பொழுதை இனிது கழித்து வருகின்றேன் என இயலும் செயலும் அயலறிய உரைத்துத் தனது மயலியலை விரித்தாள்.

தீயவர்பால் வெறுப்பு, நல்லவர்மேல் விருப்பு, சிறந்த கல்வியறிவு, தரும சிந்தனை, தவ ஒழுக்கம், அருள் நலம், முதலிய

உயர்ந்த நெறி நிலைகளில் யாண்டும் இனிது அமர்ந்து புனிதமுடன் தான் ஒழுகி வருவதாக வினயமாக விளக்கிக் கூறினாள்.

இவ் வுரையைக் கேட்டபின் இராமன் அமைதியாகப் பதில் ஒன்று வினவினான்.

*இமையவர் தலைவனையும் எண்மையின் ஏவல் செய்யும் 2773*
*அமைதியின் உலகமூன்றும் ஆள்பவன் தங்கை யாயின்*
*சுமையுறு செல்வத்தோடும் தோன்றலை துணையும் இன்றித்*
*தமியைநீ வருதற்கு ஒத்த தன்மைஎன்? தையல் என்றான்.*

இப்படி ஒரு கேள்வி ஐயத்துடன் எழுந்தது. இமையவர் = தேவர். அமரர் கோன் ஆன இந்திரனும் அடங்கி ஒடுங்கி வந்து ஏவல் செய்ய மூன்று உலகங்களையும் ஏக போகமாய் ஒருங்கே ஆள்கின்றவனோடு உடன் பிறந்த தங்கை ஆனால் ஒரு துணையும் இன்றி இவ்வாறு தனியே வருதல் இயலாதே; தேவரும் திசை நோக்கிக் கைதொழுகின்றபெரியசக்கரவர்த்தி உனக்குஅண்ணன்; அவனுக்கு அருமைத் தங்கை நீ ; அங்ஙனம் பெருமித நிலையில் உள்ளவள் அரச ஆடம்பரங்கள் யாதும் இன்றி இங்ஙனம் ஒருமையாய் வந்தது எனக்கு மிகவும் வியப்பாகின்றது. இன்னவாறு வரிசை துறந்து ஈண்டு வருதற்கு என்ன காரணம்?

“சுமை உறு செல்வத் தோடும் தோன்றலை” என்றது பல்லக்கு யானை குதிரை முதலிய பரிவாரங்கள் புடைசூழ இராச கம்பீரமாய் வர வுரியவள் அங்ஙனம் வர வில்லையே என அவளது நிலைமையைத் தலைமையாக வரைந்து காட்டிய வாறும்.

எவரும் காண முடியாதபடி அரிய நிலையில் பெரிய மரியாதைகளில் உள்ளவள் இவ்வளவு எளிதாய் வெளி ஏறியது என்? என அவளது களவு நிலையின் உளவறிய அளவுடன் உசாவினான்.

இதற்கு அவளிடமிருந்து பதில் வருகின்றது.

*வீரன் அஃது உரைத்தலோடும் மெய்யிலாள் விமல! யான் அச் 2774*
*சீரியர் அல்லார் மாட்டுச் சேர்கிலன்; தேவர் பாலும்*
*ஆரிய முனிவர் பாலும் அடைந்தனென்; இறைவ! ஈண்டு ஓர்*
*காரியம் உண்மை நின்னைக் காணிய வந்தேன் என்றாள்.*

இலங்கை வேந்தன் தங்கையான நீ அரச ஆடம்பரமின்றி இங்ஙனம் தனியளாய் வருதற்குக் காரணம் யாது? என்று வினவியதற்கு இவ்வாறு அதி வினயமாய் எதிர்மொழி கூறினாள்.

"அரக்கர்கள் மிகவும் கொடியவர்கள் ஆதலால் அத் தீவினையாளரை வெறுத்து விலகித் தேவரையும் புனிதரான முனிவரையும் அணுகி வாழுகின்றேன். எனக்கு அரச திரு நிறைந்திருந்தாலும் அந்த வரிசைகளையும் வளங்களையும் ஒரு பொருளாக மதித்திலேன்; நல்ல ஞான சீலங்களை நயந்து ஆன்ம சிந்தனையுடன் அமைதி யுற்றுள்ளேன். இங்கே தேவரீரிடம் ஒரு காரியம் கருதி வந்திருக்கின்றேன்" என இங்ஙனம் நெருங்கி உரைத்தாள்.

மகா வீரனாகிய இவன் எதிரே நின்று பொய்களைத் துணிந்து பேசுகின்றாள் ஆதலால் மெய்யிலாள் என்றார்.

சீரியர் அல்லார் என அரக்கரை இகழ்ந்து குறித்தாள். இக் கோமகன் இராக்கதர் மேல் வெறுப்புற்றுள்ளமையைக் குறிப்பாக வுணர்ந்து கொண்டாள் ஆதலால் அதிலிருந்து விழிப்பாகவே பேசுகின்றாள். காரியததில் கடுங் கவனமாய்க் கதித்து நிற்கிறாள்.

இவன் மனத்தை வசப்படுத்தும் பொருட்டுத் தன் இனத்தவரைப் பழித்தாள். தேவர்பாலும் முனிவரிடமும் இவன் பிரியம கொண்டுள்ளமையை நுணுகி யுணர்ந்து தானும் அவ்வகையே மருவி யுள்ளதாக அறிவுரையாடி அணுகலாயினாள்.

இவனுடைய பண்பாடுகளில் எல்லாம் தான் நண்பாடியிருப்பதாக நடித்து வருகின்றாள். நடிப்பும் படிப்பும் காமத் துடிப்பில் பிடிப்புற்றுச் சமயத் துடிப்பாய்க் களிப்பேபாடி நிற்கின்றன.

விமல! இறைவ! என இக் குமாரனை விளித்தது நிலைமையையும் தலைமையையும் நினைந்து. பரிசுத்த மூர்த்தியாய், தேச அதிபதியாய்ச் சிறந்து நிற்கும் நீர்மையும் சீர்மையும் நோ றிய வந்தன.

கள்ளி வாயிலிருந்தும் இவ் வள்ளலுடைய உள்ளத் தூய்மையையும் உயர் பெருந் தகைமைகளையும் உலகம் அறிய இனிது வெளிப்படுத்தித் தமது உள்ளன்பைக் கவி துலக்கி யருள்கின்றார்.

ஈண்டு ஓர் காரியம் கருதி உங்களைக் காண வந்தேன் என இவனது உள்ளம் காண இவவாறு அவள் உரைத்து நின்றாள்.

இச் சொல்லைக் கேட்டதும் இக் கோமகன் உள்ளம் திகைத்தான்; கள்ளங்களைக் கருத நேர்ந்தான். எண்ணங்கள் பெண் இனங்களை யெல்லாம் கண்ணி வளைந்து நண்ணி எழுந்தன.

2115

அன்னவள் உரைத்தலோடும் ஐயனும் அறிதற்கு ஒவ்வா
நன்னுதல் மகளிர் சிந்தை நன்னெறிப் பால அல்ல;
பின்இது தெரியும் என்னுப் பெய்வளைத் தோளி! என்பால்
என்னை காரியத்தை? சொல்! அஃது இயையுமேல் இழைப்பல் என்றான்.

ஒரு காரியமாக நும்பால் வந்தேன் எனச் சூர்ப்பநகை சொன்ன பொழுது இராமன் இன்னவாறு எண்ணி எதிர் வினவினன். இளமை தவழ எழில் ஒழுக வந்தவளை முதலில் உளம் மகிழ்ந்து நோக்கினன்; பின்பு அவள் உரைகளைக் கேட்கவே பிழைபாடுகளை உணர்ந்து நுழை மதியோடு இக் குலமகன் நிலைமைகளை நினைந்து ஆராய நேர்ந்தான்.

மகளிர் சிந்தை அறிதற்கு ஒவ்வா; நல்நெறிப் பால அல்ல.

இராமன் இப்படிக் கருதியிருக்கிறன். தருண மங்கையாய் வந்த ஒருத்தியினுல் அக் குல முழுவதும் பரிசோதனைக்கு உரிமையாயது. மாதர் தீதுடையர் என ஓத வந்தது

பெண்களுடைய மன நிலைகளையும் எண்ணங்களையும் எவரும் எளிதில் அறிய முடியா என்பார் "மகளிர் சிந்தை அறிதற்கு ஒவ்வா" என்றார். ஒவ்வல் = இயலுதல், முடிதல். ஒவ்வா எனப் பன்மையில் குறித்தது அந் நெஞ்சின் தன்மை தெரிய.

மகளிர் சிந்தை.

எதையும் அளந்து அறிந்து விடலாம்; மகளிர் சிந்தையை யாரும் தெளிவாக யாதும் அறிய முடியாது.

"வாரி ஆழத்தையும், புனல் எறியும் அலைகளையும்,
மானிடர்கள் சனனத்தையும்
மன்னவர்கள் நினைவையும், புருடர் போகங்களையும்,
வானினுயர் நீளத்தையும்,
பாரில் எழு மணலையும், பல பிராணிகளையும்,
படியாண்ட மன்னவரையும்,
பருப்பதத்தின் நிறையும், ஈசுரச் செயலையும்
பனிமாரி பொழிதுளியையும்,
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையும்,
சித்தர் தமது உள்ளத்தையும்,
தெரிவையர்கள் சிந்தையையும் இவ்வளவு எனும்படி
தெரிந்து அளவிடக் கூடுமோ?" (குமரேச சதகம்)

அளவு காண முடியாத பொருள்களுள் மகளிர் சிந்தை முடிவில் வந்துள்ளது. மேலே குறித்தன எல்லாம் ஒருவாறு அளவிடப்படினும், இறுதியில் நின்ற இது எவ்வாற்றானும் எவராயினும் யாதும் அளவிட முடியாது என்பதை முடிவு செய்ய முடிவில் நின்றது.

"ஆழாழி என்ன அளவுபடா வஞ்ச நெஞ்சப்
பாழான மாதர்மயற் பற்றொழிவது எந்நாளோ?"

எனத் தாயுமானவரும் மகளிர் நெஞ்சின் நிலையை நினைந்து அஞ்சியிருக்கிறார். ஆழ் ஆழி = ஆழ்ந்த கடல். கடல் நீரை அளவிடினும் மாதர் மனநீர்மையை அளவிடல் இயலாது என்றமையால் அதன் இயலும் செயலும் மயலும் அறியலாகும்.

பெண்எனப் படுவ கேண்மோ, பீடில; பிறப்பு நோக்கா;
உண்ணிறை உடைய அல்ல; ஓர் ஆயிர மனத்த வாகும்;
எண்ணிப் பத்து அங்கை இட்டால் இந்திரன் மகளும் ஆங்கே
வெண்ணெய்க் குன்று எரியுற்றாற் போல் மெலிந்துபின் நிற்குமன்றே.
(சிந்தாமணி 1597)

எத்துணை யாற்றுள் இடுமணல் நீர்த்துளி
புற்பனி யுக்க மரத்திலை நுண்மயிர்
அத்துணை யுமபிறர் அஞ்சொலி னார்மனம்
புக்கனம் என்று பொதியறைப் பட்டார். (வளையாபதி)

கள்ளூற்ற கூந்தற் கனங்குழைநல் லார்கருத்தில்
கொள்ளப் படுமெண் குறிக்கும் தகைமை யதோ?
தள்ளற்கு அரிதாகித் தமமொடுபன் னாட்பழகி
உள்ளூற்ற தேவும் உணர்தற்கு அரிதன்றே, (கந்தபுராணம்)

அத்தி மலரும் அருங்காக்கை வெண்ணிறமும்
கத்துபுனல் மீன்பதமும் கண்டாலும்—பித்தரே
காணார் தெரியிற் கடவுளரும் காண்பாரோ
மானார் விழியார் மனம். (நீதி வெண்பா)

மகளிர் சிந்தை அறிதற்கு அரிது என்பதை இங்ஙனம் நூல்கள் பலவும் அறிவித்திருக்கின்றன.

அவருடைய உள்ளம் எல்லை காண முடியாதது; ஒரு நிலையில் நில்லாதது; அதி வேகமுடையது; மிகவும் சபலமானது; சில சமயங்களில் மெல்லியதாயினும் பல நிலைகளில் கொடிய

வன்கண்மை வாய்ந்தது; எண்ணிய எண்ணத்தை முடித்துக் கொள்வதில் பெண்மனம் பெருஞ் சூழ்ச்சிகள் வல்லது ஆதலால் அந் நெஞ்சம் பொல்லாதது என யாரும் அஞ்சத் தக்கது ஆயது.

நன்னெறிப் பால அல்ல என்றது அச் சிந்தை தீ நெறிகளில் செல்லும் தீமை தெரிய வந்தது.

உருவ அழகை நோக்கி மதித்தவன் உரைகளில் கள்ளம் தெரியவே உள்ளம் விழித்து எள்ள நேர்ந்தான்.

நெஞ்சில் நெறி யில்லையாயின் பருவ அழகும் இனிய மொழியும் வஞ்சனை தோய்ந்தே வரும். செய்யும் உரிமையும் பெய்யும் அன்பும் வெய்ய சூதாய் விளைந்து விடும் என உணர்ந்து கொண்டமையால் அவளை யாதும் நம்பாமல் இந் நம்பி தெளிந்து நின்றான்.

"Favour is deceitful, and beauty is vain; but a woman that feareth the LORD she shall be praised." (Solomon)

"மனச் சான்றுடன் இறைவனுக்கு அஞ்சி நிறை காத்து நிற்கும் மங்கையே புகழத் தக்கவள்; அல்லாதவளது அழகும் பிரியமும் பழியும் சூதும் உடையன" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

செய்ய நெஞ்சமின்றி மையல் நோக்கடன் அத் தையல் வந்துள்ளதை இந்த ஐயன் யூகமாய் அறிந்து கொண்டான்.

என்னிடம் என்ன காரியம் கருதி வந்திருக்கிறாய்? அதனை விவரமாகச் சொல்; இசையுமானால் கவனிக்கின்றேன் என இங்ஙனம் வினையமாகப் பதில் உரைத்தான்.

இயையு மேல் இழைப்பல் என்றது இயையாதாயின் யாதும் இழையாது ஒழிப்பல் என்றவாறும். இழைத்தல் = செய்தல். வாக்குறுதி மிக்க எச்சரிக்கையுடன் நோக்கி வந்துள்ளது.

நீ சொல்லும் காரியம் நல்லது ஆய், நீதி நெறி தழுவியுள்ளதேல் அதனை ஒல்லையில் முடித்தருள்கின்றேன்; இல்லையேல் என்னால் யாதும் உதவ முடியாது என்பது உரையுள் புதை பொருளாய்ப் பொதிந்து கிடக்கின்றது. பேரருளாளனயினும் பெரிய மதிமான் ஆதலால் பெண் என்று இரங்கிக் கண் மூடித் தனமாய்க் கை தரவில்லை. மதியூகம் அதி சாதுரியமாயது.

அவளது உள்ளக் கள்ளம் உரையில் ஒளி வீசி வருதலை இவ் வள்ளல் தெள்ளிதில் தெரிந்து வெளியே சொல்லாடியுள்ள வித்தகம் வியப்பையும் நயப்பையும் விளைத்து வருகின்றது. உரையிலும் தொனியிலும் உணர்வையும் உயிரையும் நிறை செய்து காண்கின்றான்.

வஞ்ச நெஞ்சமுடைய அவ் வஞ்சகி செவ்வியள் போல் நின்று செஞ்சொல் இயம்பினும் இவ் அஞ்சன வண்ணன் அவ்வளவையும் நெஞ்சறிந்து கொள்கின்றான்.

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்னும் பழமொழி இவளிடம் பிழைபட்டுள்ளது. வெளியே பேரழகு தூயவள் போல் துலங்குகின்றது; உள்ளே யாரும் தெரிய முடியாதபடி பாரிழிவான தீமை பரந்து மண்டி யுள்ளது.

தன் நெஞ்சக் கள்ளத்தை வஞ்ச முகத்தால் மறைத்து இவள் இங்கே வந்துள்ளமை மிகவும் அஞ்சத்தக்கது.

"False face must hide what the false heart doth know."
(Macbeth, *1.7*)

"அகத்தின் கொடிய பழி எண்ணத்தை இனிய முக மினுக்கால் மறைக்க வேண்டும்" என மேக்பெத் என்னும் கொடியவன் குறித்தபடியே இக் கொடியவள் வடிவெடுத்து வந்துள்ளாள்.

முகத்து அழகு அவளது அகத்தை அறிய முடியாதபடி மறைத்து நின்றாலும் வாய்ப் பேச்சு உள்ளத்தை உணர்த்தி வருகின்றது. கள்ளத்தை வெளிப் படுத்துகின்றது.

உரையில் ஓரளவு உணர்ந்தவன் முழுதும் தெளிவாக வெளியே தெரிந்து கொள்ள விழைந்து "வந்த காரியத்தைச் சொல்!" என இந்தவாறு இனிது கேட்டான்.

அவள் சிந்தை திறந்து சொல்லத் தொடங்கினாள். சொன்னது என்ன? பின்னே கண் ஊன்றிக் கவனித்து நோக்குங்கள்.

தாமுறு காமத் தன்மை தாங்களே உரைப்பது என்பது
2776 ஆமெனல் ஆவது அன்றால் அருங்குல மகளிர்க்கு அம்மா!
ஏமுறும் உயிர்க்கு நோவேன்; என் செய்கேன்? யாரும் இல்லேன்;
காமன் என்று ஒருவன் செய்யும் வன்மையைக் காத்தி என்றாள்.

சேணுற நீண்டு மீண்டு செவ்வரி சிதறி வெவ்வேறு
ஏணுற மிளிர்ந்து நாண விசும்புரண்டு இருண்ட வாட்கண்
பூணியல் கொங்கை அன்னாள் அம்மொழி புகற லோடும்
நாணிலள் ஐயன் நொய்யள் நல்லளும் அல்லள் என்றான்.

(சூர்ப்ப நகைப் படலம், 45, 46)

சூர்ப்பநகை சொன்னதும், அவ்வுரையைக் கேட்ட இராமன் தன் உள்ளேயே இகழ்ந்து யாதொன்றும் பேசாமல் அமர்ந்திருந்ததும் இங்கே ஓர் அரிய காட்சியாய் இனிமை மருவி இருவர் நிலைகளையும் கருதி நோக்கி உறுதியுணரச் செய்கின்றன.

தன் உள்ளக் கருத்தை அவள் இவ் வள்ளலிடம் மெல்ல வெளியிட்டிருக்கும் விநயமும் வித்தகமும் வியப்பினை விளைத்து நிற்கின்றன.

தங்கள் காம இச்சையைத் தாங்களாகவே பெண்கள் வாய் விட்டுச் சொல்ல மாட்டார்கள் என முதலில் நல்ல பீடிகை போட்டுக் கொண்டு அவள் பேசியிருக்கும் சாதுரிய சாகசங்கள் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்கத் தக்கன.

சிற்றின்ப போகத்தில் ஆடவரும் மகளிரும் இயல்பாகவே பரவசராய் அழுந்தியிருப்பினும் ஆண்பாலினும் பெண்பாலுக்கு அத்துறையில் ஒரு தனி மாண்பு இனிதமைந்துள்ளது.

தன் உள்ளக் காதலை அடக்க முடியாமல் ஆண்மகன் எளிதே பல்லைக் காட்டி விடுவன். உள்ளே எவ்வளவு ஆசை பொங்கி எழுந்தாலும் அதனை வெளியே காட்டாமல் அரிய அடக்கமுடையளாய்ப் பெண்மகள் யாண்டும் அடங்கி யிருப்பள்.

காமத் துறையில் பெண்கள் பெருஞ் சமர்த்திகள். தம் உள்ளம் பறிபோயினும் உரையை வெளிவிடாமல் ஆடவரை ஆட்டி நாடகம் காண்பர்.

"கையம்பு கொண்டு என்னைக் கண் அம்பால் எய்துகொண்டாள்
மெய்யன் புடையளென மேவினேன்—செய்யவாய்
பேசாமல் என்னைமா பேசும் படியாக்கி
ஆசைநோய் செய்தாள் அவள்."

என்றபடி காம ஆடல் புரிந்து மைந்தரைத் தம் வசப்படுத்தி மையல் செய்வதில் மங்கையர் எங்கணும் கைதேர்ந்தவர்

" Wise men know well enough what monsters you make of them " (Hamlet, 3-1)

"மேதைகளையும் மகளிர் பேதைகளாக்கி விடுவர்" என ஹாம்லெட் என்னும் இளவரசன் இங்ஙனம் கூறியிருக்கிறான்.

மைந்தருக்கு மையல் ஏற்றி அவரைக் குரங்காட்டங் காண்கின்றார் என்றமையால் மங்கையர் உரங் காணலாகும்.

உள்ளத்தில் காதல் வெள்ளம் என மிகினும் அதனை வெளிக் காட்டாமல் அடக்கிக் கொள்ளும் ஆற்றல் பெண்களுக்கு இயற்கையாய் அமைந்திருத்தலால் காமத்துறையில் ஆடவரினும் அவர் சேமம் மிகப் பெற்றார்.

"கடலன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்." (குறள், 1137)

கண்ணும் வாளற்ற; கைவளை சோருமால்;
புண்ணும் போன்று புலம்பும்என் நெஞ்சரோ!
எண்ணில் காமம் எரிப்பினும் மேற்செலாப்
பெண்ணின் மிக்கது பெண்ணலது இல்லையே. (சிந்தாமணி)

"கடலன்ன காமத்த ராயினும் பெண்டிர்
மடலூரார் மைந்தர்மேல் என்ப" (பெரும் பொருள்)

அகத்தே காமம் கதித்தெழுந்தாலும் புறத்தே புலப்படாமல் பெண்டிர் அடக்கிக் கொள்வர் என்பது இவற்றால் அறியலாகும்.

இந்த அரிய தன்மையைத் தனக்கு உரிமையாக்கிக் கொண்டு கள்ள அரக்கி தெள்ளிய சீலனிடம் இங்கே விரகு புரிகின்றாள்.

தமது காம நிலையைக் குல மகளிர் வாய்திறந்து சொல்லார் என்று சொல்லிக் கொண்டே தன் நிலைமையை அவள் சொல்லி விட்டாள். உள்ளக் கள்ளம் ஒளியாமல் வெளியாகின்றது.

தாம் உற்ற காமத்தன்மையை அருங் குல மகளிர் உரையார் என்றமையால் உரைப்பவர் இன்னார் என்பது உணரலாகும்.

நான் ஒரு உயர்ந்த குலமகள்; உங்கள் மேல் மிகுந்த காதல் கொண்டுள்ளேன்; அந் நிலைமையை நான் எப்படி வாய் திறந்து வெளியே பச்சையாய்ச் சொல்லுவேன்? சுகுமாரராகிய நீங்களே அதனைக் குறிப்பாக உணர்ந்து கொள்ள வேண்டும்; என் பெண்மைக்கு இயலா வெண்மை புரிந்து எண்மை எய்தியுள்ளேன்; நம் இருவரையும் இங்ஙனம் கூட்டி வைத்த அரிய விதியைத் தவிர வேறு காதி யாரும் அருகே யில்லாமையால் நானாகவே கூசாமல்

இவ்வாறு கூற நேர்ந்தேன்; என் ஆசை நோயின் அளவை மேலும் பேசுதல் பிழையாம் எனக் கூற வேண்டிய குறிப்புக்களை எல்லாம் அம்மா! என்னும் அவசமான ஒரு வியப்பு ஒலியால் குறிப்பித்து விட்டாள். "எம் உறும் உயிர்க்கு நோவேன்; என் செய்கேன்? யாரும் இல்லேன்" என அவளது காமதாபங்கள் இங்ஙனம் பரிதாப நிலையில் வெளியாகி யுள்ளன. எம உறும் உயிர் என்றது அரிய இன்பநலங்களை அனுபவிக்க வுரிய பெருமை தெரியவந்தது. சிறந்த அரச குமாரி; உயர்ந்த போகங்களை நுகர்ந்து மகிழ உரியவள்; அங்ஙனம் பரம சுகியாய் இருக்க வேண்டிய தனது உயிர் வாழ்க்கை இது பொழுது துயர நிலையில் துடித்து உழலுகிறதே' எனப் பரிவு தோன்றப் பதைத்திருக்கிறாள்.

என் செய்கேன்? என்றது தனது காம வேதனையை நினைந்து யாதும் வெளியே சொல்ல முடியாமல் அல்லலுழந்து செயலழிந்துள்ள நிலைமை தெளிய வந்தது.

தோழி, செவிலித்தாய் முதலிய உரிமையாளர் யாரேனும் ஒருவர் அருகு இருந்தால் அவர் மூலமாகத் தன் உள்ளக் காதலைச் சொல்லி விடுத்துத் தூது அனுப்பி உய்தி பெறலாம்; அப்படி யாதொரு நாதியும் இல்லையே என்பாள் யாரும் இல்லேன் என்றாள்.

இங்ஙனம் ஒருவரும் இல்லாமல் பரிதாப நிலையில் மறுகி யிருத்தலினாலேதான் நாணாகவே வலிய வாய் திறந்து சொல்ல நேர்ந்தது. குலமங்கையர் இயல்பையும் கடந்து செயல் புரியும்படி என் மயல் மிகுந்துள்ளதே! நான் யாது செய்வேன்? என இவ்வாறு சாதுரியமாக ஓதி வந்தவள் இறுதியில் தன் உள்ளத்தைத் தெளிவாகத் திறந்து காட்டினாள்.

"காமன் என்று ஒருவன் செய்யும் வன்மையைக் காத்தி!"

இதில் அவள் தன் தன்மையைக் காட்டியிருக்கும் செம்மையைக் காண்க. அரக்கர் துயரத்தை அஞ்சி அருந்தவர் அபயம் புகுந்துள்ளது போல் மதன விதனத்தைப் பொறுக்க முடியாமல் அரக்கி வந்து இக் கோமகனிடம் இப்படி அடைக்கலம் புகுந்திருக்கிறாள்.

பேதைப் பெண்ணைக் கொடிய ஒருவன் அநியாயமாய்க் கொல்லுகின்றான்; அந்தக் கொலைபாதகனை விலக்கி உழுவலன்புடைய எளிய மங்கையை அளிபுரிந்து காத்தருள வேண்டியது

மகா வீரராகிய உங்களுக்குத் தனியுரிமையான இனிய கடமையாம். அதனை உடனே செய்தருள வேண்டும்; இனிமேல் சிறிது தாமதமாயினும் உயிர் போய்விடும்; பெண் பாவம் பொல்லாதது; பேயும் இரங்கியருளவுரிய அபலைக்குக் கருணை வள்ளலான நீங்கள் உவந்து அருள வேண்டும் என நான் வாயிரந்து கேட்பது நும் வன்மைக்கும் தன்மைக்கும் வசை செய்த படியாம்; ஆயினும் பொழுது வீண் போகின்றதே! என்னும் ஆத்திரத்தால் எனனை மீறி இவ் வார்த்தைகள் வந்தன; பாத்திர நிலை தெரிந்து பரிந்து விரைந்து காத்தருள் என வேகித்து வேண்டி மோகித்து நின்றாள்.

"சேணுற நீண்டு மீண்டு செவ்வரி சிதறி மிளிர்ந்து நாணுவிதம் புரண்டு" என்றது காம வேதனையைக் காத்தருள் என வேண்டிய பொழுது அவள் விழி செய்துள்ள வெளி வேலைகளை விளக்கி நின்றது. அன்று அங்கே நிகழ்ந்த கண் பார்வைகள் இன்று இங்கே நம் எண்பார்வையில் காட்சிக்கு வந்துள்ளன.

இருண்ட வாட்கண் என்றது தெருண்ட சிந்தையரையும் மருண்ட தன்மையரா மாற்றி ஆட்டும் அக் கருங் கண்ணின் ஆற்றலும் அடலும் அறிய வந்தது.

"கல்லளவா நெஞ்சமென வஞ்சமாதர்
　　கண்மாயம் எனுங்கயிற்றால் கட்டுவித்துச்
சொல்லளவாத் துன்பமெனும் கடலில் வீழ்ந்தச்
　　சோர்கின்றேன்; அந்தோநற் றுணை ஒன்றில்லேன்
மல்லளவாய்ப் பவமாய்க்கும் மருந்தாம் உன்றன்
　　மலர்ப்பாதப் புணைதந்தால் மயங்கேன் எந்தாய்!
சல்லமஉலாத் தருந்தணிகை மணியே சிவ
　　சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே!"

(அருட்பா)

அரிய மாதவரும் மாதர் கண் மயக்கை இங்ஙனம் வியந்து பேசியிருத்தலால் அதன் செயலும் மயலும் தெரியலாகும்.

மையல் நோக்கம் பல செய்து இவ்வாறு அவள் உள்ளத்தைச் சொல்லவே இவ் வள்ளல் நெஞ்சம் எள்ளி வெறுத்தது.

நாண் இலள்; நோய்யள்; நல்லளும் அல்லள்.

என அவளை இக் குலமகன் இங்ஙனம் தன்னுள்ளேயே எண்ணி யிகழ்ந்துளான். வெட்கம் கெட்டவள்; காம இச்சையில்

இழிந்தவள்; அற்ப நிலையினள்; தீமை மிக்கவள் என்று தீர்மானித்திருக்கிறான். உறுதி செய்துள்ள மூன்று உரைகளின் ஆன்ற பொருளமைதிகளை ஊன்றி உணர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

பெண்களுக்கு நாணம் உயிரினும் சிறந்தது; அது இவளிடம் யாதும் இல்லை என்பது சொல்லால் விளங்கியது. எவ்வளவு ஆசையிருந்தாலும் ஒரு ஆடவனிடம் நேரே வாய் திறந்து தம் காம நசையை யாரும் கூசாமல் கூறார். இவள் இங்கே சங்கையின்றிக் கூறியிருத்தலால் இழிமகள் என நேர்ந்தாள். அற்ப இச்சையில் சின்னத்தனமாகச்சீரழிந்துள்ளமையைப்போர் அளந்து காட்டியது.

நொய்=சிறுமை, அற்பம். அதனையுடையவள் நொய்யள் என்க.

"நொய்வும் இலேசும் நொய்மை யாகும்" (பிங்கலந்தை)

என்றமையால் அதன் நிலைமை புலனும். ஈன இச்சையில் இழிந்து மானமிழந்துள்ளமையால் இவ் ஊனமடைந்து நின்றாள்.

சில மங்கையர் காதல்மீறி நோதலுறினும் தீதிலராயிருப்பர்; இவள் மாய வஞ்சகங்கள் பல சூழ்ந்து தீய நெஞ்சளாய்த் துணிந்து வந்திருத்தலால் நல்லள் அல்லள் என இச்செல்லமகன் சிந்தை துணிந்தான். உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மையாய் அவளது கொச்சை நிலையைக் குறித்து நின்றது.

உருவ அழகை நோக்கி முதலில் நல்லவள் என நம்பியிருந்தான் ஆதலால் அங்ஙனம் நம்பினது தவறு என்று இது பொழுது தெளிந்து கொண்டான். தன் பொல்லாத் தனத்தை மறைத்து நல்லவள் என இவ் வல்லவன் நினைந்து கொள்ளும்படி அப் பொல்லாதவள் புனைந்து வந்துள்ளாள்.

யாதொரு வஞ்சமும் அறியாத தூய நெஞ்சன் ஆகலான் பேதைப்பெண் என்று இரங்கி ஆதரவுடன் பேச நேர்ந்தான்; அவள் மையல் நோக்குடன் மாறுபாடு மண்டி வந்துள்ளதை வார்த்தையால் அறிந்தவுடனே தூர்த்தை என்று தெரிந்து இப் பெருந்தகை வருந்தினன். பார்த்துப் பேசியது படு பிழை எனப் பரிவு கொண்டான்.

இங்ஙனம் நிலைமை தெரியவே பின்பு யாதும் பேசாமல் அகம் கடுத்து மவுனமா யிருந்தான். அந்த அமைதியின் குறிப்பை

உணராமல் அப் பேதை மகள் ஆசை மீதூர்ந்து மேலும் பேச நேர்ந்தாள்.

பேசலன் இருந்த வள்ளல் உள்ளத்தின் பெற்றி ஓராள்
பூசல் வண்டு அரற்றும் கூந்தல் பொய்ம்மகள் புகன்ற என்கொல்
ஆசைகண்டு அருளிற்று உண்டோ! அன்றெனல் உண்டோ! என்னும்
ஊசலால் உலாவுகின்றாள் மீட்டும் ஓர் உரையைச் சொல்வாள்: (1)

எழுதரு மேனியாய்! ஈண்டு எய்தியது அறிந்திலாதேன்
முழுதுணர் முனிவர் ஏவல் செய்தொழில் முறையின் முற்றிப்
பழுதறு பெண்மையோடும் இளமையும் பயனின்று ஏகப்
பொழுதொடு நாளும் வாளா கழித்தனன் போலும் என்றாள். (2)

தன் காதல் நிலையை யாதும் ஒளியாமல் தான் வாய் திறந்து முன்னம் சொன்னதற்கு இம் மான வீரன் மாறு வேறு கூறாமல் மோனமா யிருந்தமையால் அவள் மோகம் ஏகமாய் வளர்ந்தது.

தன் இச்சைக்கு இசைந்துதான் தனது சம்மதத்தை இப்படி மௌனமாகக் காட்டியிருக்கிறார்; இசைவில்லையானால் "சீ! போ! இவ்வாறு இங்கே பேசாதே?" என்று மாறு ஏதாவது கூறி யிருப்பாரே; அவ்வாறு யாதும் கூறவில்லை; ஆகவே என்பால் காதல் கொண்டுதான் இவர் ஆதரவு புரிந்துள்ளார் என அம் மாய மங்கை பேராசை மண்டிச் சரச மொழிகளை விரசமாக விளம்ப நேர்ந்தாள்.

"வள்ளல் உள்ளத்தின் பெற்றி ஓராள்" என்றது அக்கள்ளி மாறாக ஓர்ந்து கொண்டதை எள்ளி உணர்த்தியது.

பெற்றி = தன்மை. நெறி திறம்பாத புனித நீர்மை.

இச்சை மிகுந்து தன்பால் வந்து இலச்சையை இழந்து வாய் திறந்து கேட்டு ஓர்ந்து பரிந்து நின்றவளுக்கு யாதும் உதவாத இந்த இடத்தில் இவனை இங்கே வள்ளல் என்றது சிந்தனைக்கு உரியது.

தன்பால் உள்ளன எல்லாவற்றையும் எவர்க்கும் வாரி வழங்கும் வள்ளலாயினும் நீதி நெறிகளில் நிலைத்த சீலவான் ஆதலால் தீமைக்கு யாதும் இசையாமல் வாய்மை காத்து நின்றான்.

நல்ல புண்ணியங்களை வளர்த்தலும், தீய பாவங்களைத் தொலைத்தலுமே சிறந்த வள்ளன்மையாம் எனத் தனது உள்ளத் தன்மையை உலகம் அறிய உணர்த்தி யிருக்கிறான்.

தூய இந்த தரும மூர்த்தியிடம் தீய அந்த மாயக்காரி வீணே மையல் கொண்டு நாணமின்றி நகை புரிந்து வருகின்றாள்.

என்கண் ஆசை கண்டு அருள் செய்தானோ? அல்லது இல்லையோ? என அவள் உள்ளமும் உயிரும் மருள் மண்டி ஊசலாடி யுள்ளன.

இங்ஙனம் ஐயம் சிறிது இருந்தாலும் ஆசை மீதூர்ந்தமையால் வாய் கூசாமல் பேசலானாள்: "எழுதரும் மேனியாய்!" என உழுவலன்புடையளாய் உருகி விழித்தாள். ஓவியத்து எழுத ஒண்ணுத் திவ்விய உருவன் என ஆவல் மண்டி அலமந்திருக்கிறாள்.

எழில் தவழும் அம் மேனியைத் தழுவ விழைந்து இழுதை நீரளாய் அவள் இழிந்து துடித்தலை மொழிகள் தோறும் பார்த்து வருகின்றோம். மங்கையர் காமம் மருங்கும் அடக்கமும் ஒருங்கு உடையதாயினும் இவளிடம் அது வரம்பின்றி வளர்ந்துள்ளது.

"எனது இளமையும் எழிலும் வீணே கழிகின்றன; பொழுது பழுதாகின்றது; ஒவ்வொரு நிமிடமும் ஆனந்தத்தில் ஆழ்ந்திருக்க வுரிய அருமையுடையது; அரிய அது வறிதே பாழ் படாமல் அதனை நாம் பயன் படுத்த வேண்டும்; நம் இருவர் அழகும் பருவம் கனிந்துள்ளன; இந்த இனிய யவ்வனங்கள் செவ்வனே சேர்ந்து மகிழின் இவ் வனமே திவ்விய சுவர்க்கமாய்ச் சிறந்து விளங்கும். இனி ஒரு கணம் வீண் கழிப்பினும் அது ஊழியும் பாழான படியாம்; பெண் இன்பம் பெறவே மண்ணும் விண்ணும் மாதவம் புரிகின்றன. அந்தப் பேரின்பம் உங்கள் கண் எதிரே வந்து கைவசமாயது; அதி சுகியான தங்களுக்குப் பேதை நான் யாது கூறுவேன்? காரியம் கருதாமல் வேறு பேசுவது வீண்; திருந்திய போகங்கள் அருந்தி அனுபவிக்க வுரியன; விரைந்தருளுங்கள்" என இங்ஙனம் உருகி வேண்டி அவள் மறுகிநின்றாள்.

அவளுடைய காம வாசகங்கள் இக்கோமகனுக்கு வெறுப்பை விளைத்தனவாயினும் வியப்பையும் நகைப்பையும் விரித்தன.

ஒரு பெண் தன் ஈன இச்சையை ஆடவனிடம் மானமின்றி வாய்திறந்து இப்படிக் கூறியது இவனுக்கு மிகவும் அதிசயமாயது.

இருபாலும் எப்பாலும் நெறி திறம்பாத கோசல நாட்டின் குல நாயகன் ஆதலால் இப் புலை நாட்டத்தைப் புதுமையாய்க் கண்டு இங்ஙனே இத் தலைமகன் வியப்பு மீக் கொண்டான்.

இம் மண்பால் ஒரு பெண்பால் இவ்வாறு இருப்பள் என்பதை எவ்வாற்றானும் இதற்குமுன் இவன் எண்ணி அறியாதவன்; ஈண்டுக் கண் எதிரே காணவே வியப்பு மீதூர்ந்தான்; நகைப்பும் வந்தது. அதனை அடக்கிக் கொண்டான். களினமாக அவளுக்குப் பதிலும் உரைத்தான்.

நிந்தனை அரக்கி; நீதி நிலையிலாள்; வினைமற்று எண்ணி
வந்தனள் ஆகும் என்றே வள்ளலும் மனத்துட் கொண்டான்;
சுந்தரி! மரபிற்கு ஒத்த தொன்மையின் துணிவிற்று அன்றால்
அந்தணர் பாவை நீ, யான் அரசரில் வந்தேன் என்றான்.

இந்தவாறு நம் சுந்தரன் பேசியிருக்கிறான். நிந்தனை அரக்கி; நீதியில்லாதவள்; நிலை கேடானவள்; ஈனமான காரியத்தை இச்சித்து வந்துள்ளாள் என அவளைக் குறித்து நன்கு தெரிந்து கொண்டான். உள்ளத்தே இங்ஙனம் உணர்ந்தும், அவளை எள்ளி வெறுத்து இகழ்ந்து தள்ளாமல் மிகவும் இதமாக அறிவுரை கூறி இவ் வள்ளல் அகற்றி விட முயன்றான்.

சுந்தரி! என்று தன் திருவாய் திறந்து மரியாதையாக விளித்தான். இவ் வுரையைக் கேட்டதும் அவள் உள்ளமும் உயிரும் குளிர்ந்து உவகை மீக் கொண்டாள் தான் கருதி உருகிய அருமைக் காதலன் வாயிலிருந்து என்ன வருமோ? என ஏங்கி எதிர்பார்த்துத் தவித்து நிற்கின்றவளுக்கு இம் மொழி ஓர் அரிய அமுதத் துளியாய் ஆனந்தம் பயந்தது. அடுத்து வருவதை அவாவி நின்றாள்.

நீ பிராமணப்பெண்; நான் அரசர் மரபினன்; ஆதலால் நீ கருதியபடி நாம் இருவரும் மணம் செய்து கொள்வது முறையாகாது; உன் எண்ணத்தை மறந்து விடு என இவ் வண்ணல் உரைத்தருளினான்.

“ அந்தணர் பாவை நீ; நான் அரசர் இல் வந்தேன். ”
இந்தவாறு ஒரு தடையுள்ளமையால் கலியாணம் கூடாது எனக்

குறிப்பித்திருக்கிறான். இக் குறிப்பு நமக்குச் சிரிப்பை விளைக்கின்றது.

தக்க காரணம் ஒன்றைச் சொல்லி இவளை எப்படியாவது வெளியே தள்ளி விடவேண்டும் என்று கருதி இப்படி நளினமாகச் சொல்ல நேர்ந்தான்.

வேண்டாம் என்று உரைத்தற்கு எத்தனையோ காரணங்கள் இருக்க அவற்றுள் ஒன்றையும் உரையாமல் சாதியை மட்டும் இங்கே முதன்மையாகச் சுட்டிக் காட்டியது என்னை? எனின், பூவிலோன் மரபில் வந்தவள் எனத் தன் குலப் பெருமையை அவள் உயர்த்திச் சொன்னாள் ஆதலால் அதனையே பிடித்துக் கொண்டான் என்க. விருப்புக்கு விதைத்தது மறுப்புக்காயது.

தனக்கு அனுகூலமாக அவள் எடுத்துச் சொன்னதை இவனுக்கு இதமாக இசைத்து இனிது மொழிந்தான். சாதி பொருந்த வில்லை என்றமையால் கலியாணத்திற்கு ஒத்த குலம் வேண்டும் என்பது தெரிந்தது. அக்கால நிலையும் காண வந்தது. சாதி வரம்பு கடந்து மணப்பது நீதி வரம்பு கடந்த படியாம்.

## சாதி

மனிதப் பரப்பு முழுவதும் ஒரே இனம்போல் தோன்றினும் உலக நடையில் சில வகைகள் அமைந்தன. அவை நான்காய் நேர்ந்தன. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என இந்த வாறு நான்கு பிரிவுகள் முந்துற மருவி நின்றன. இந்நிலை செம்மையான முறையில் தன்மை தழுவி எழுந்தது.

## அந்தணன்

உலகப் பற்று இன்றி எல்லாஉயிர்களுக்கும் இரங்கி யாண்டும் அருளுடையனாய் என்றும் தெய்வ சிந்தனை செய்து எவர்க்கும் உய்தி நலங்களை உரிமையுடன் உணர்த்திச் செய்தவ நிலையில் சிறந்து கைதவம் கடிந்து வந்தவன் அந்தணன் என நின்றான்.

## அரசன்

உலகத்தைப் பாதுகாத்து நீதிநெறி பிறழாமல் உயிரினங்களை இனிது பேணி உருகி புரிந்து அருள்பவன் அரசன் என வந்தான்.

## வணிகன்

உலகில் விளைகின்ற பண்டங்களைப் பல இடங்களுக்கும் கொண்டு போய்ப் பலர்க்கும் பரப்பி யாண்டும் நிலை திரியாமல் பயன் படுத்தி நின்றவன் வணிகன் என நேர்ந்தான்.

## வேளாளன்

நிலங்களைத் திருத்தி விளைபொருள்களை உளவாக்கி எல்லா வுயிர்கட்கும் உணவு நலங்களை உதவிச் சமுதாய வாழ்க்கையை இனிது வளம் படுத்தி இதம் புரிந்தவன் வேளாளன் என அமைந்தான்.

2 இந் நால்வர் நிலைகளையும் ஆசிரியர் தொல்காப்பியனார் நன்கு உரைத்துள்ளார். இம் மரபு நிலையை மரபியலில் வரன் முறையே வரைந்து குறித்துள்ளமை உணர்ந்து கொள்ளத் தக்கது.

"நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க்கு உரிய." (தொல்காப்பியம்)

என்றமையால் இவ் வுலக வாழ்க்கையைத் துறந்து தவ நிலையில் நிற்கும் அவரது தகைமை புலனும். கரகம் = கமண்டலம். தனக்கு என ஒரு பொருளையும் உரிமை செய்து கொள்ளாமல் மறுமை நோக்குடன் தண்ணளி புரிந்து ஒழுகலால் அந்தணனது புண்ணிய நீர்மையை உவந்து அனைவரும் கண்ணியம் புரிந்தனர்.

"வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி."

(தொல்காப்பியம், மரபியல், 80)

முன்னவர் நிலையும் பின்னவர் இயல்பும் இன்னவாறு குறிக்கப் பட்டுள்ளன. இறுதியில் வைத்ததனுல் இவர் பெருமை குறைந்தவர் அல்லர். உழுவார் என்றதனுல் இக் காலத்தில் சிலர் குறையாக எண்ணுகின்றனர். "உழுவார் உலகத்தார்க்கு ஆணி; உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்." எனத் தேவர் கூறியிருத்தலால் இவரது அரிய மேன்மைகள் தெரியலாகும்.

தொழுங்குலத்தில் பிறந்தால் என், சுடர்முடி மன்னவராகி
எழுங்குலத்தில் பிறந்தால் என், இவர்க்குப்பின் வணிகரெனும்
செழுங்குலத்தில் பிறந்தால் என், சிறப்புடையர் ஆனுல் என்,
உழுங்குலத்தில் பிறந்தாரே உலகுய்யப் பிறந்தாரே. (1)

வெங்கோபக் கலிகடிந்த வேளாளர் விளைவயலுள்
பைங்கோல முடிதிருந்தப் பார்வேந்தர் முடிதிருந்தும்
பொங்கோதைக் கடற்றானைப் போர்வேந்தர் நடத்துபெரும்
செங்கோலை நடத்தும் கோல் ஏராடிக்கும் சிறு கோலே. (2)

(ஏரெழுபது)

உழவின் சீர்மையையும் அதனை யுடையவரது நீர்மையையும் இங்ஙனம் நூல்கள் பல உவந்து புகழ்ந்து கூறியுள்ளன.

உழவுத் தொழில்கள் செய்யாது ஒழியின் உயிர்கள் பசியால் வருந்திப் பாழ்படும் ஆதலால் உழுவார்களே உலகிற்கு உயிராதாரமாய் உறுதி புரிந்து உய்தி செய்துள்ளது.

"There must be work done by the arms, or none of us could live." (Ruskin)

"கைத்தொழில் அவசியம் செய்ய வேண்டும்; இல்லையாயின் நாம் யாரும் உயிர் வாழ முடியாது" என ரஸ்கின் என்பவர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

அவரவர் நிலையில் அவரவர் பெரியராய் அமர்ந்திருத்தலால் எவரிடமும் உயர்வு தாழ்வு காணலாகாது. உலகம் நலமுறும் வகையில் குலங்கள் நான்கும் அமைந்துள்ளமையால் இந்நால்வரும் ஒருமுகமாய் ஒத்த பெருமையில் மருவி யிருக்கின்றனர்.

"ஒருதாயின் திருவயிற்றில் உதித்தகுல மக்கள்என
வருதாயின் புறவமர்ந்து வந்தவகை தாமுணர்ந்து
பொருதாயம் புரியாமல் பூமிநல முறப்புரியின்
கருதாத பேரின்பம் கண்எதிரே கைவருமே."

என்னும் உண்மையை எண்ணி யுணராமல் புன்மை புரிய நேர்ந்தமையால் புலையே மிகுந்து மக்கள் நிலை குலைய லாயினர்.

உலக இயக்கம் கருதிச் செயல் வகையில் இயற்கையாக ஒரு கிளையில் கிளைத்த கிளைகள் போல் தழைத்து வந்த நான்கு குலப் பிரிவுகள் பிற்காலத்தில் பாங்கு படியாமல் பாழ் பாய் விரிந்து மூல நிலையை மறந்து உயர்வு தாழ்வுகளைக் கற்பித்துக் கொண்டு வீணே துயரமடைந்து வெய்தாய் உழன்று பட நேர்ந்தன.

"சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர்!
அலைந்தலைந்து வீணேநீர் அழிதல் அழகலவே;
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே ஞான
நிருத்தமிடும் தனித்தலைவர் ஒருத்தர் அவர் தாமே
வீதியிலே அருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றேன் உமையே."

(அருட்பா)

சாதிச் செருக்கு முதலியவற்றை விட்டொழித்து ஆதி நிலைகளை உணர்ந்து ஒழுகும்படி பேதை யுலகரை நோக்கி மேதைகள் இங்ஙனம் நீதி நலங்களைக் கூறியுள்ளனர்.

ஒரு தாய் வயிற்றில் பிறந்த நான்கு பிள்ளைகளுள் அண்ணன் தம்பிகள் போல் இன்னவர் முன்பு அமர்ந்திருந்தனர். ஒருவர்பால் ஒருவர் மரியாதையும் மதிப்பும் பிரியாமல் நின்றன. பெருமையும் சிறுமையும் பேசிப் பிழைபடாமல் உரிமையும் அன்பும் யாண்டும் ஊடுருவி இனிமையும் இதமும் எவரிடமும் பெருகி உலாவின.

உலக மாதாவின் குலமக்களான இவர் இந்நிலையில் பண்டு நிலவி நின்றனர். நான்கு வகையும் நாட்டுக்கு நலமாய்ப் பாங்குடன் பயின்று வந்தன. ஆதியில் நாலாய் அன்பு கலந்திருந்த சாதிகள் இது பொழுது பலவாய் விரிந்து துன்பு மிகுந்துள்ளன. முன்னாளில் நான்காயிருந்தது பின்னாளில் இங்ஙனம் பெருகி எழுந்ததற்குக் காரணம் மக்கட் குழுவின் மறுக்கமும் பெருக்கமும் ஒக்க வளர்ந்து தந்நல வேட்கைகள் எந்நிலைகளிலும் விரிந்து எங்கும் அருள் மடிந்து மருள் படிந்துள்ளமையேயாம்.

தமது நிலைமையை மறந்து வீணே குலப் பெருமை பேசித் தம்மை உயர்த்திப் பிறரைத் தாழ்த்தி வெம்மை புரிந்து வருதலால் இந்நாட்டில் வெய்ய துயரங்கள் பல விளைந்திருக்கின்றன. உற்ற உண்மையை உணராமல் குற்றம் கொழிக்கவே குணங்கள் மறைந்து போயின. சாதிப் பூசல் மலிந்து மக்களிடையே மனக் கசப்பு மிகுந்துள்ளமையால் இக்காலத்தில் சாதி என்று சொன்னவுடனே சிலர்க்கு வெறுப்பாகின்றது.

மேலே குறித்த சாதி வகை நெறிமுறை தழுவியது; நீர்மை சீர்மைகள் உடையது ஆதலால் அவ் வுரை நிலையின் உண்மையை உரிமையுடன் ஈண்டு உணர்ந்து கொள்ள வேண்டும்.

நீ ஒரு அரசகுமரியாய் வந்திருந்தால் நான் உன்னை மணந்து கொள்வேன்; அந்தணர் பாவை ஆதலால் அது கூடாது என்று இக் கோமகன் உரையில் தொனித்திருத்தலால் அதனை நுனித்துணர்ந்து இனித்த சிந்தையளாய் அவள் விரைந்து பதில் உரைத்தாள். கலியாண காரியம் தடை படுதற்குரிய காரணத்தை அவன் காட்டவே அதனை இவள் பூரணப் படுத்தப் புகுந்தாள்.

"ஆரண மறையோன் எந்தை; அருந்ததிக் கற்பின் எம்மோய்
தாரணி புரந்த சாலகடங்கர்தம் மரபின் தையல்
போரணி பொலங்கொள் வேலாய்! பொருந்தலை இகழ்தற்கு ஒத்த
காரணம் இதுவே ஆயின் என்னுயிர் காண்பென் என்றாள்."

மறையவர் மரபினள் எனத் தன்னைக் குறித்து இறைமகன் தடை கூறியதற்கு அவள் இவ்வாறு விடை கூறி யிருக்கிறாள்.

தந்தை அந்தணன் ஆயினும் என் தாய் உயர்ந்த சத்திரிய குலத்தவள்; ஆதலால் என்னைத் தாங்கள் உரிமையுடன் மணந்து கொள்ளலாம் எனக் குலப் பொருத்தத்தைக் குறித்துக் காட்டினாள்.

சாலகடங்கடை என்பவள் சிறந்த அரசகுல மங்கை. சந்தி என்னும் கந்தருவன் மகள். பேரழகி. அவளை அரக்கர் குல வேந்தனாகிய வித்யுத்கேசன் மணந்து கொண்டான். காம போகங்களில் மூழ்கி இருவரும் களிபேருவகையராய்க் களித்து வந்தனராயினும் அவள் நல்ல தெய்வ சிந்தனை யுடையவள். அவள் வயிற்றில் ஒரு திவ்விய புருடன் பிறந்தான். அவனுக்குச் சுகேசன் என்று பெயர். இளமையிலேயே உமாபதியின் திருவருளையடைந்து உலகம் எல்லாம் புகழ அவன் உயர்ந்து விளங்கினான். அவன் தேய்வவதி என்னும் கந்தருவ மங்கையை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து அரசு புரிந்து வந்தான். இந்த மூல புருடன் தாயாகிய சாலகடங்கடை யிலிருந்து அம்மரபு மேலான நிலைமையை அடைந்து வந்தமையால் அந்த வழியில் வந்த அரச பரம்பரையினர் சாலகடங்கர் என நின்றார். தன் தாய் அந்த மரபில் வந்திருத்தலால் அரச குல மரபு என்று தன் உரிமையைச் சூர்ப்பநகை இங்கே உரிமையுடன் தழுவி உரைத்தாள்.

சத்திரிய மங்கை மறையவனை எப்படி மணந்தாள்? என்று இப்படி ஒரு சந்தேகம் தோன்றும் ஆதலால் அதற்கு அரண் கோலி அருந்ததிக் கற்பின் எம்மோய் என்றாள்.

கன்னியாய் நிறையுடன் நின்ற என் தாயின் தகைமையை யுணர்ந்து அந்தணன் விழைந்து வந்து முறையே உலகம் அறிய மணந்து கொண்டான். என்னைப் பெற்ற தாய் அருந்ததிபோல் மகா பதிவிரதை எனப் புனைந்து மொழிந்தாள்.

கள்ளத்தனமாய் வைப்பு முறையில் மறையவன் மருவினனோ? என இறையவன் கருதாவகை இவ்வாறு நிறைவு செய்தாள்.

தாயைப் போல் பிள்ளை என்றபடி அந்தத்தூயவள் வயிற்றில் பிறந்த நானும் கற்பு நெறியுடையேன்; உங்கள் அற்புத அழகு என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது; உயிர் பறி போயுள்ளேன்; வள்ளலே! விரைந்து மணந்து உயிர்ப் பிச்சை தந்தருள் என்பது குறிப்பு.

தொட்ட இடம் எல்லாம் பெருமித நிலைகளைச் சுட்டிக் காட்டி உயர்நலங்களைக் கட்டிப் புனைந்து இக் குலமகன் தன்னைத் தலைமையாக மதித்துக் கொள்ள வேண்டுமே என்று அவள் படாத பாடுகள் படுகின்றாள். எடாத எடுப்புகள் எடுக்கின்றாள்.

காதல் உள்ளத்தோடு உயிரின் இயல்புகளும் இங்கே காணப் படுகின்றன. தன்னை எல்லாரும் மேன்மையாக எண்ணிக் கொள்ள வேண்டும் என்றே ஒவ்வொரு மனிதனும் உன்னித் துடிக்கின்றான். அதற்காக இல்லாத பெருமைகளை எல்லாம் இருப்பனவாக வெளிக்குக் காட்டி வேடங்கள் போடுகின்றான். புகழ்ச்சியில் மனிதனது ஆசை இயற்கையாகவே எல்லை மீறி யுள்ளது.

"The deepest principle in human nature is the craving to be appreciated." (William James)

"தன்னைப் பிறர் மதித்துப் புகழ வேண்டும் என்னும் பேராவல் மனித இயல்பில் தனி நிலையாய் ஓங்கி யுள்ளது." என வில்லியம் ஜேம்ஸ் என்பவர் கூறியிருப்பது இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது. எவரும் பெருமைக்கு ஏங்கி நிற்கின்றார்.

ஆதி மூல நிலையைக் கோதி எடுத்துத் தன் சாதி நீதி மன்னர் குலம் என ஓதி அடுத்தாள். சத்திரிய சாதியிலும் ஒரு படி உயர்ந்தது என இரு பிறவியின் இயல்பை இணைத்துக் கூறினாள்.

போர் அணி பொலங்கொள் வேலாய்! என்றது வீரநாயகனே என்றவாறு. பொலம் = அழகு. அமரையே ஆபரணமாக் கொண்டுள்ள அழகிய வேல என இவன் உளம் மகிழ உரைத்தாள். வீரன் பான்மையை வேல் மேல் ஏற்றித் தன் கோலம் தெரிய மேலன்பு ஆடினாள்.

சத்திரிய சாதியினர் யுத்தத்தில் பிரியம் மிக வுடையர் ஆதலால் அத் தன்மையில் தலை சிறந்துள்ளவன் என இவனது நிலைமையை உவந்து புகழ்ந்து அதனால் தானும் அம் மரபினள் என்று நம்பிக்கையை விளைத்து நளினமாக நுழைந்துகொண்டாள்.

தன்னை இராமன் மணந்து கொள்ளுதற்குச் சாதித் தடை ஒன்று இடையே குறுக்கிட்டு உள்ளது எனக் குறித்துள்ளமையால் அந்த இடையூறும் நீங்கியது; ஒத்த குலத்தினேன்; இனி மாறு வேறு கூறாமல் மணந்து கொள்ளுவான் எனப் பேதை மகிழ்ந்து கொண்டாள்.

''காரணம் இதுவே ஆயின் என் உயிர் காண்பென்.''

என்ற இதில் அவள் உள்ளத்தைக் காண்கின்றோம்.

என்னை விழைந்து ஏற்றுக் கொள்ளாமல் இகழ்ந்து நீக்குதற்குக் குலம் பொருந்த இல்லையே என்ற இந்தக் காரணம் ஒன்று தான் என்றால் நான் பூரணமாய் உயிர் பிழைத்தேன் என்று உள்ளம் பூரித்திருக்கிறாள். அவளது தவிப்பு தனி நிலையது.

இதுவே ஆயின் என்றமையால் வேறு காரணங்களும் ஏதேனும் இருக்குமோ? என்னும் ஐயமும் அவளுக்கு வெய்ய துயரை விளைத்துள்ளமை வெளியாயது.

இராமன் என்னைச் சேர்த்துக் கொள்ளான் ஆயின் நான் செத்தே போவேன்; உயிர் வைத்திருக்க முடியாது என உள்ளம் பதைத்து மறுகியுள்ளமையை என் உயிர் காண்பென் என்றதனால் காணலாகும்.

''மரபு பொருந்த வில்லை என்று கூறினான்; அதனைப் பொருத்திக் காட்டினேன்; இனி யாதும் மறுக்க மாட்டான்;

சேர்த்துக் கொள்வான்" என ஆர்த்தி மீதூர்ந்து நின்றமையால் "அம்மா! என் உயிர் பிழைத்தது" என்று பெருமூச் செறிந்து ஆனந்தம் அடைந்திருக்கிறாள். அவளுடைய காமதாபங்கள் மரண வேதனையாய் உயிரை உருக்கியுள்ளமை உரையில் தொனித்து நிற்கின்றன.

நான் அரச குலமங்கை; கன்னிகை; என் மரபையும் தகவையும் உணர்ந்து விரைந்து இசைந்தருள் என்று பசைந்து நின்றாள். அவளது நிலைமையை நினைந்து இக் குலமகன் உள்ளூற நகைத்து வெளியே அளியோடு பேசினான்.

*அருத்தியள் அனையாள் கூற அகத்துறு நகையின் வெள்ளைக்*
*குருத்தெழு கின்ற நீலக் கொண்டல் உண்டாட்டம் கொண்டான்*
*வருந்தல் நீங்கு அரக்கர் தம்மில் மாறுபட்டார் மணத்தல் நங்கை!*
*பொருத்தம் அன்றென்று சாலப் புலமையோர் புகல்வர் என்றான்.*

அந்தணர் பாவையை அரசகுமரன் மணத்தல் தகாது என்று முன்னம் இக் குலமகன் உரைத்தான்; உரைக்கவே தானும் ஒரு அரச குமரியே என மூல நிலைகளைக் குறித்துக் காட்டி மணம் புரிய உரிய தனது தகுதியை அவள் விளக்கினாள். அதனைக் கேட்டதும் இவனுக்குச் சிரிப்பு வந்தது; அடக்கிக் கொண்டான்; அமைதியாக பதில் உரைத்தான். அவ் வுரை யாடும் பொழுது இவன் இருந்த நிலைமையை வரைந்து காட்டுகிறார்.

நகையின் வெள்ளைக் குருத்து எழுகின்ற நீலக்கொண்டல்

இந்த உருவக் கோலத்தைக் கொஞ்சம் கருத்து ஊன்றி நோக்குங்கள். புன்னகை தவழ்ந்த முகமும் அஞ்சன வண்ணமும் நம் கண் எதிரே தோன்றிக் களிப்பு அருள்கின்றன.

குலப் பொருத்தம் இல்லை என்று முதலில் விநயமாக உரைத்தான்; அவ் வுரைக் குறிப்பை உணராமல் மேலும் அவள் வலிந்து தொடர்ந்தாள்; அவளது மடமையை நினைந்து வியந்து இக் கோமகன் கொஞ்சம் விளையாட நேர்ந்தான்.

உண்டாட்டம் = உல்லாச விளையாட்டு. மங்கையரோடு சரச சல்லாபங்களாடி மைந்தர் வினோதமாய்ப் பொழுது போக்குவதை உண்டாட்டு என்பர்.

"நண்டாக் காதலின் உண்டாட்டு உரைப்பேன்;
வண்டார் சோலை வளாகச் சாரல்
உண்டாட்டு அயர்பவால் உவகையுள் மகிழ்ந்து."

(பெருங்கதை)

உண்டாட்டத்தின் நிலையை இதனால் உணர்ந்துகொள்ளலாம். உன் ஈன இச்சைக்கு இங்கே இடம் இல்லை; ஓடிப்போ என ஒரே அடியாய்க் கடிந்து ஒழிக்காமல் பசை உள்ளது என்று அவள் நசை கொள்ளும்படி ஆசை வார்த்தைகளைப் பேசி இந்த ஐயன் சிறிது விளையாட நேர்ந்தது வினையின் திருவிளையாடலேயாம்.

இம் மேதை இள நகை செய்தது அப்பேதையின் உள நிலையையும் உரைகளையும் நினைந்து. அம் முறுவலை அவள் சிறிதும் அறியாவகை செறிவு செய்து கொண்டது இவனது அடக்கத்தையும் அமைதியையும் கம்பீரத்தையும் தெளிவு செய்துள்ளது.

நீ சத்திரிய குல மங்கையாயினும் இராக்கதர் இனத்தைச் சேர்ந்தவள்; நான் மனிதர் வகுப்பினன். இராக்கத கணத்துக்கும் மனித கணத்திற்கும் பொருத்தம் இல்லை என்று சோதிட நூல்கள் விதித்திருக்கின்றன. இராசி, நட்சத்திரம், இரச்சு, வேதை முதலாகப் பத்துப் பொருத்தங்கள் விவாகத்திற்கு உரியவை. அவற்றுள் கணப்பொருத்தம் மணப்பொருத்தத்திற்கு அவசியம் தேவை. அப் பொருத்தம் நமக்கு அமையாது போயது; ஆகவே நாம் மணந்து கொள்வது முறையாகாது என்றான்.

புலமையோர் என்றது கணித நூல் வல்லவர்களை. மேலோர் நூல் விதி நமக்கு இடையூறாக உள்ளதே என்று குறை கூறிய படியாய்த் தடை கூறினான். குலம் ஒருவாறு பொருந்தினாலும் கணம் சிறிதும் பொருந்தவில்லையே; என் செய்வது?

இத் தடைக்கு அவள் விடை கூறுகின்றாள்.

"பராவரும் சிரத்தை யாரும் பத்தியின் பயத்தை ஓராது
இராவணன் தங்கை என்று மறைப்பது அலது என்று
அராவணை அமலன் அன்றாய்! அறிவித்தேன் முன்னம்தேவர்ப்
பராவினன் நிற்கின்றேன்அப் பாற்படு பிறவி என்றாள்."

"எனது பத்தி சிரத்தைகளை உணர்ந்து பாராமல் இராவணன் தங்கை என நினைந்து மாறுவது தவறு; நான் பிறவியில் அரக்கி

ஆயினும் தேவர் இயல்பினை அடைந்து திவ்விய நிலைமையைப் பெற்றிருக்கிறேன்; எனது உருவ அழகுகளைக் கண்டும் அம் மரபினள் என மறுகலாமா? இராக்கத குலத்திற்கு இத்தகைய சவுந்தரியம் உண்டா? கணப் பொருத்தம் இல்லை என்று தாங்கள் எண்ணுவது பெரும் பிழை. நான் தெய்வ கணம் ஆதலால் மனித கணத்துக்கு மிகவும் இனிமையாம். நமது மங்கலப் பொருத்தம் தனி மகிமையுடையது. உங்களைக் கண்ட பொழுதே என் உள்ளம் உருகிப் பொருந்தி விட்டது; மனப் பொருத்தமே எல்லாவற்றிலும் சிறந்தது; கணப் பொருத்தங்கள் யாதும் கருதவே வேண்டா; மனப்பொருத்தமே மணப்பொருத்தம் என்னும் பழமொழி கணித விதிகளை எல்லாம் கடந்து மனித உலகிற்கு மங்கலம் பயந்துள்ளது'' என இங்ஙனம் இனிது கூறினாள்.

''இராவணன் தங்கை என்றது ஏழைமைப்பாலது'' என இரங்கி வருந்தியிருக்கிறாள். இதில் அவள் மனக் கடுப்புத் தெரிகின்றது. ஏழைமை = பேதைமை.

பெரிய மேதையாயிருந்தும் பிறப்பு நிலையை மட்டும் குறித்து மறுப்பது கொடிய மடமையாம் என்பது குறிப்பு. உருவ அழகு உள்ளன்பு முதலிய உயர் நலங்களை எல்லாம் நேரே கண்டும் பேரளவில அரக்கர் குலம் என அஞ்சி இரிவது இரக்கம் கெட்ட செயலாம். அன்புநலம் தெரிந்த எவரும் இவ்வாறு துன்ப நிலையில் சூழ்ந்து இன்ப நலனை இழந்து நில்லார் என்று துடித்திருக்கிறாள்.

இராவணன் தங்கை என்று ஏன் சொன்னேன்? அது பெரிய தடையாய்ப் பெருகி எழுந்ததே! இதமாகும் என்று குறித்தது இடறியதே! இடநிலை தெரியாமல் அங்ஙனம் உரைத்தது மடமை எனத் தன்னையே உள்ளுற இகழ்ந்து கொண்டபடியாயும் இது இசைந்திருக்கின்றது.

அராவணை அமலன் அன்னாய்! என்றது இவனது திவ்விய உருவக் கோலத்தைக் கருதி அவள் உள்ளம் உருகியுள்ளமை உணர வந்தது. சாதாரண மனிதன் அல்லன்; தெய்வீக நிலையினனே என நினைந்து வியந்துள்ளாள். பரந்தாமனே பாருய்ய வந்துள்ளான் என்னும் உண்மை வெய்யவள் வாயிலிருந்தும் வெளிப்பட்டுள்ளது. மையல் மறுக்கத்திலும் மெய் ஒளி மிளிர்கின்றது.

கணப் பொருத்தம் சரி இல்லையே என்று இந் நல்லவன் மெல்லச் சரிந்தான்; எல்லாப் பொருத்தங்களும் சரியாகவே இசைந்திருக்கின்றன என்று அப் பொல்லாதவள் பொருந்த விரைந்தாள்.

இராம நாமத்துக்கும் காமவல்லிக்கும் பெயர்ப் பொருத்தம் மிகவும் பொருந்தியிருக்கின்றது என அவள் சொல்லாது விட்டது இவன் பெயர் தெரியாமையாலேயாம்.

இங்ஙனம் பல இசைவுகளையும் படைத்துக் கூறி நகையுடன் அவள் வாதாடவே இவன் வேறு ஒரு இசைவும் வேண்டும் என மாறாடினான். இந்த ஆண்டகை ஈண்டு வேண்டியது என்ன? எதைக் கருதி இருப்பன்? சிறிது சிந்தித்துப் பாருங்கள்! பார்ப்பின், பின் வருவது பெருமகிழ்வு தருவதாம்.

எவ்வகையிலாவது அவளை அயல் ஒதுக்கி நீக்கி விட வேண்டுமே என்று ஊக்கி முயன்று வருகின்ற இவ் வுத்தமன் உரையை இங்கே நாம் நோக்க வருகின்றோம்.

ஒருவனே உலகம் மூன்றிற்கு ஒங்குஒரு தலைவன்; ஊங்கில்
ஒருவனே குபேரன் நின்னோடு உடன் பிறந்தவர்கள்; அன்னார்
தருவரேல் கோடும்; அன்றேல் தமியை வேறிடத்துச் சார
வெருவுவென் நங்கை என்றான் வேதத்தின் அறிவை வென்றான்.

குலம் கணம் யாவும் இசைந்துள்ளன; விரைந்து இசைந்தருள் என்று அவள் பரிந்த பொழுது பதில் இங்ஙனம் விளைந்து வந்தது.

"உன் உடன் பிறந்தவர்கள் உடன் படுவார்களாயின் உன்னை நான் மணந்து கொள்ளுகின்றேன்; அவருடைய சம்மதத்தைத் தெரிந்து வா!" என இந் நம்பி மொழிந்தது இதை முன்னிட்டாவது அவ்வம்பி வெளியே போய்த்தொலைவாள் என்று நம்பியே.

"காவலோன் பின்னை; செங்கையோன் தங்கை;" என முன்னம் அவள் பன்னிப் பாராட்டிப் புகழ்ந்து சொன்னதைப் பற்றிக் கொண்டு இன்னவாறு பரிகாசமாய் உரையாடலாயினான்.

"ஒரு அண்ணன் மூன்று உலகங்களுக்கும் தனி அதிபதி; மற்று ஒரு தமையன் எல்லாம் வல்ல ஈசனுக்கு நண்பன்; அத் தகைய பெரு மகிமையாளர் இருவருக்கும் நீ ஒரு அருமைத்

தங்கை; உன் பெருமையையும் அருமையையும் கருதி நோக்கி நான் மறுக்கின்றேன். உன் மேன்மையும் என் தாழ்மையும் மலையும் அணுவும் போல் நிலை பிறழ்ந்துள்ளன. உனது தலைமைக்கும் நிலைமைக்கும் தகுதியானவனை நாடிக் கொள்க; நான் உனக்கு எவ்வகையிலும் தகுதி அல்லன். என்னை நீ விழைவது உன் குலத்துக்கே குறைசெய்த படியாம். குடி இருக்க ஒரு வீடும் இல்லாமல் வனவேடனாய்க் காட்டுவாழ்க்கை வாழ்கின்ற நான் குபேர சம்பத்துடைய உன்னை எப்படி வைத்து வாழ்வேன்? என் நிலைமையை ஒரு சிறிது உணரினும் பின்பு நீ என்னை வெறுத்து விடுவாய்; மேலெழுந்தபடியாய் என்மேல் நீ காதல் செய்வது முடிவில் நோதலேயாம்; ஆதலால் இப்பொழுதே விலகி விடுவது நல்லது. உன் நன்மையை நாடிச் சொல்கின்றேன்; உண்மையை உணர்ந்து ஒதுங்கிப் போ'' என இங்ஙனம் இதமொழிகளைப் பதமாக இனிது புகன்றான். மதிநலம் கூறியும் அவள் யாதும் அகலாமல் மதம் மீறி நின்றாள். பின்பு மாறு ஒன்று கூறினான்.

''நான் என்ன சொன்னாலும் கேட்கவில்லை; என்னையே மணந்து கொள்ள வேண்டும் என்று மன்றாடுகின்றாய்; அப்படியாயின், உன் அண்ணன்மார் இருவரும் இங்கே நேரே வந்து உன்னைக் கன்னிகாதானமாக என் கையில் தருவாராயின் ஏற்றுக் கொள்ளுகின்றேன்.'' என இசைவதை எடுத்துக் காட்டினான்.

''அன்னார் தருவரேல் கோடும்'' என்றது அவரை உடனே போய் அழைத்து வா என்று குறிப்பித்தபடியாம். எப்படியாவது அவளை அந்த இடத்தை விட்டு ஓட்டி விட வேண்டும் என்று உள்ளம் ஊக்கியுள்ளது.

இராவணனை முதலில் குறித்தது அவளோடு உடன் பிறந்துள்ள உரிமையும், உத்தண்ட நிலைமையும் கருதி.

ஒருவர் மட்டும் இசைந்தால் போதாது; இருவர் சம்மதமும் வேண்டும் என்பதாம். கோடும் = கொள்ளுவோம். மணம் செய்து கொள்வோம் என அவள் நினைந்து கொள்ளும்படி வந்தது.

கொள்வேன் என ஒருமையில் கூறாது பன்மையில் குறித்தது, பெரிய இடத்துச் சம்பந்தம் ஆதலால் அதற்கு இசைய மாப்பிள்ளை மிடுக்கில் வார்த்தையும் விளைந்தது. இலக்கண மரபில் பேசி வருதலால் கலைத்திறத்தின் ஒளி செழித்து வருகின்றது.

தருவரேல் என்றது அவர் வருவதும் தருவதும் ஒரு நாளும் நேரா என்னும் துணிவினால் நேர்ந்தது. அன்னார் வந்து தந்தால் என்னால் ஏற்றல் இயையும்; உன்னால் முன்னால் செய்ய வேண்டியது அது; அதைப் போய்ச் செய் என அவ்வெய்யவளை விரட்டியவாறிது. பெரிய வீர சூரர்களுடைய தங்கையான உன்னோடு நான் இவ்வளவு தூரம் பேசினதே தவறு; இதனை அவர் கண்டால் என் கதி என்னும்? நீ விரைந்து வேறிடம் போய் விடுவது நல்லது; தருணமங்கையான நீ இங்கே தனியே நிற்பதை நினைந்து என் உள்ளம் பதறுகின்றது.

"வெருவுவென் நங்கை என்றான் வேதத்தின் அறிவை வென்றான்." இந்த வாசகத்தைக் கொஞ்சம் கூர்ந்து நோக்கவேண்டும்.

அச்சம் என்பதை யாதும் அறியாத மகாவீரனாகிய இராமன் இங்கே தன் வாயால் வெருவுவென் என்று பாசாங்கு செய்துள்ளான். வெருவுதல் = அஞ்சுதல்.

அஞ்சா நெஞ்சனான அஞ்சன வண்ணன் நஞ்சம் அனைய வஞ்சகியை வஞ்சிக்க இவ் வெஞ்சொல் இயம்பினான்.

அந்த அருமைத் திருவாயிலிருந்து "வெருவுவென்" என்ற வார்த்தை இந்த ஓரிடத்தில் மாத்திரம் விநோதமாய் வெளிவரலாயது. எவ் வழியும் இல்லாதது இவ் வழி வந்தது.

தீவினைக்கு அஞ்சுதல் விழுமிய புண்ணிய சீலர்களுடைய இயல்பு ஆதலால் இவ்வெருவல் இங்கே கண்ணியமாகக் கருத உரியது. வெருவுவென் என ஈண்டு உரைத்தவன் யாவன்?

வேதத்தின் அறிவை வென்றான்

இப்பெயர் நிலை உயர் இயல்புடையது. அறிவுமயமான வேதமும் யாதும் அறியமுடியாமல் அலமந்துழல நிலை நிமிர்ந்துள்ளவன் என்பதாம். அவ்வேத நாயகன் ஒரு பேதையோடு உல்லாசமாய்ப் பேசிவிளையாடுகின்றான். அவனது அரிய சீர்மையும் எளிய நீர்மையும் அதிசய நிலையங்களாய் ஒளி மிகுந்து உயிரினங்கள் உயர்நலமடைய வழி செய்து வருகின்றன.

இராமன் என்னும் பிள்ளைத் திருநாமம் ஒன்றே உடைய இக்கோமகனுக்கு நம் கவி பல பெயர்கள் சூட்டிப் பாராட்டிவரு

கின்றார். அப்பெயர்களை எல்லாம் ஒருங்கே வரிசையாகத் தொகுத்துவைத்து அவற்றின் காரணங்களையும் கருத்துக்களையும் குறிப்புகளையும் கூர்ந்து உணர்தல் ஒரு இன்ப நிலையமான பொழுது போக்காம். அமையம் அமையுமேல் அதனைப் பின்பு காணலாம்.

தமையன்மார் வந்து உரிமையுடன் உவந்து தந்தால் அக்கினி சாட்சியாக முறையே உன்னை மணந்து கொள்வேம் எனத் தொனித்து வந்த இம்மொழியைக் கேட்டதும் எப்படியும் காரியம் கைகூடிவிடும் என்று அவள் உள்ளம் களித்தாள்.

குலம் முதலியன பொருந்தவில்லையே என்றதற்கு முன்னம் சமாதானம் சொன்னவள் இதற்கும் ஒன்றை இசைவு பெற எடுத்துக் கூறினாள்.

இங்கே அவள் சொல்ல உரியது என்ன? பெற்றோரைக் குறியாமல் உடன் பிறந்தார் உடன்பாடுவேண்டும் என அவளை விலக்கி ஒழிக்க வழி நாடி இக் குலமகன் குறித்தான். உள்ளபடி கன்னிகையாய் இருந்தால் ஒருவாறு அண்ணனிடம் போய்ச் சொல்லுவாள்; அவளோ மாயக் கள்ளி; அங்கே எவ்வாறு செல்லுவாள்? இங்கேயே மண்டி நின்று சண்டி வழக்குப் பேசி ஆளைக் கைக் கொண்டு விடலாம் என்று கருதி முயல்கின்றாள்.

கலியாணமுறைகளையும் விதி நியமங்களையும் எடுத்துக்கூறி அடுத்து மருவக் கடுத்து நின்றாள்.

"காந்தர்ப்பம் என்பது உண்டால் காதலிற் சிறந்த சிந்தை
மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம்
ஏந்தற்பொன் தோளினாய்! இஃது இயைந்தபின் எனக்கு மூத்த
வேந்தர்க்கும் விருப்பிற்று ஆகும்; வேறும் ஓர் உரையுண்டு என்றாள்.

முனிவரோ டுடையர் முன்னேமுதிர்பகை; முறைமை நோக்கார்;
தனியைநீ ஆதலால மற்று அவரோடும் தழுவற்கு ஒத்த
வினையம் ஈது அல்லது இல்லை; விண்ணும் மண் ஆட்சி ஆக்கி
இனியராய் அன்னார்வந்து உன் ஏவலின் நிற்பர் என்றாள்."

(சூர்ப்பநகை, 54, 55)

அவளுடைய அறிவும் ஆவலும் சூழ்ச்சியும் பேச்சுகளும் எவ்வழியும் தாழ்ச்சியின்றி இவ்வாறு பெருகி வருகின்றன.

"உற்றார் உறவினர் சூழ, உணர்வற்ற சடங்குகள் பல செய்து மணந்து கொள்வது பெருந் தொல்லை; அம் மணம் அவ் வளவு சிறந்ததும் அன்று; காந்தருவ விவாகமே மாந்தருக்கு இன்ப நிலையமானது. எவ்வழியும் உயர்ந்தது; வேதங்களே அதனை விழைந்து கூறியிருக்கின்றன; அன்பு நலங் கனிந்த அந்த இன்ப மணம் இங்கே நமக்கு இனிமையாய் வாய்ந்துள்ளது. அம்முறையில் நாம் மருவி மகிழலாம். அரிய காலம் வறிதே கழிகின்றது; அதி மேதையான உங்களுக்கு எல்லா விதி முறைகளும் நன்கு தெரியும். காதல் மணத்தை இங்கே நாம் இப் பொழுதே செய்துகொள்வோமாயின் பின்பு தமையனார் அறிந்து பெருமகிழ்வு கொள்வார். இன்று நான் போய்ச் சொன்னால் இகழ்வார். உங்களைப்போல் தவவேடம் புனைந்துள்ள முனிவர்களிடமெல்லாம் முதிர் பகையுடையராய் அவர் வெறுத்து நிற்கிறார் அவ்வெறுப்பு நம் விருப்புக்கு மறுப்பாம். தங்களுடைய அருமை பெருமைகளை அவர் யாதும் அறியார். என்னை நீங்கள் மணந்து கொண்டால் தம் அருமை மைத்துனன் என்று உரிமை மிகப் பாராட்டி யாண்டும் அன்பு புரிந்துவருவார். இன்பம் மிகச் செய்வார். என்மேல் வைத்துள்ள பிரியத்தால் மண்ணுலகையும் விண்ணுலகையும் அண்ணர் உங்களுக்கே உவந்து தந்தருளுவார். நீங்கள் கருதியபடியெல்லாம் அவர் கீழ்ப்படிந்து நடப்பார். ஒரு பெண்ணைக் கொண்டதால் விண்ணும் மண்ணும் ஒருங்கே பெற்று யாவரும் ஏவல் செய்யத் தேவரும் போற்ற நீங்கள் பெரிய வேந்தர் பிரானாய் வீற்றிருக்க நேர்ந்துள்ளது. இந்த அரிய பாக்கிய நிலையை நோக்கியருள வேண்டும். அளவிடலரிய இன்பமும் மகிமையும் வலிய வந்துள்ளன; காலத்தை வீணே போக்கலாகாது." என அப் பாக்கியவதி பரிந்து உரைத்தாள்.

"காந்தர்ப்பம் என்பது காதலில் கலந்த சிந்தையது; மறைகளே வகுத்தது" என விவாகத் துறைகளைத் தொகுத்துக் காட்டித் தன் மனத்திற்கு இசைந்த மணத்தை இங்கே மதித்துப் பாராட்டியிருக்கிறாள். அவளது காமவேட்கை கடுவேகமாய் மூடுகின்றது.

## காந்தருவம்

கந்தருவர் என்பவர் தேவ கணத்துள் ஒரு பிரிவினர். சிறந்த போக நிலையினர். அழகும் இளமையும் என்றும் குன்றாமல் விழுமிய அன்பினராய்ப் பருவ மங்கையும் உருவ மைந்தனும் ஒரு முகமாய் மருவி இன்ப நலங்களை நுகர்ந்து திளைக்கும் இயல்பினர். பிறர் கொடுப்பதும் கொள்வதும் இல்லாமல் தாமே எதிர்ப்பட்டுக் கண்டவுடனே காதல் மண்டி ஒருபாலும் கோடாமல் இருபாலும் கலந்து மகிழும் இன்ப மரபினர் ஆதலால் அன்பு நலங்கனிந்த அந்தக் கந்தருவ வழக்கம் காந்தருவம் என வந்தது. எண் வகை மணங்களுள் இது இன்பநலம் கனிந்தது. உற்றார் உறவினர் ஒருவரும் காணாமல் இருவரும் தனியே உவந்துகொள்ளுவது ஆதலால் களவு என மேலோர் இதன் உளவு அறிய உரைத்தார்.

அன்பின் ஐந்திணைக் களவுஎனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர். (இறையனார்)

காமக் கூட்டம் காணும் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே.
(தொல்காப்பியர்)

உளமலி காதல் களவுஎனப் படுவது
ஒருநான்கு வேதத்து இருநான்கு மன்றலுள்
யாழோர் கூட்டத்து இயல்பினது என்ப. (நம்பியார்)

ஆடவரும் மகளிரும் மணந்துகொள்ளும் வகைகள் எட்டு வகையின என்று சுட்டிவிட்டு அவற்றுள் கந்தருவ மணத்தை மட்டும் நூல்கள் விரித்து விளக்கி யிருத்தலால் அதன் வியன் நிலை புலனும். யாழோர்=கந்தருவர். கூட்டம்=மணம்.

## எட்டு வகை மணங்கள்.

பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என மணங்கள் எண் வகையாய் எண்ணப்பட்டுள்ளன. மக்கட் கூட்டத்தில் இவை மருவி வருகின்றனவாயினும் வெளியே தெரியாமல் அருகி நிற்கின்றன.

1. பிரமம் : நல்ல விரத சீலனான பிரமச்சாரிக்குத் தன் கன்னியை ஒருவன் பொன் அணி புனைந்து கொடுப்பது.
2. பிரசாபத்தியம் : ஒத்த குலத்து மைத்துனக் கோத்திரத்தானுக்கு உரிமை புரிந்து தருவது.
3. ஆரிடம் : தக்க வானுக்குத் தாரை வார்த்து உதவுவது.
4. தெய்வம் : மாதவனுக்கு ஆதரவுடன் அருள்வது.
5. காந்தருவம் : யாரும் கொடாமல் தாமாகவே காதலால் கூடிக் கலந்து மகிழ்வது.
6. ஆசுரம் : ஆடவன் வீரம்காட்டி விழைந்து கொள்வது.
7. இராக்கதம்: பிறர் சம்மதம் பெறாமல் வலிந்துகவர்வது.
8. பைசாசம் : கழிந்த காமியாய் இழிந்து கலப்பது.

உலகில் நிகழும் காமக் கலப்புகளை நூலோர் இங்கிலைகளில் வகுத்து நெறி செய்துள்ளனர். இவற்றுள் காந்தருவம் ஒத்த உள்ளக் காதலால் உதித்து வருதலால் அது மிகவும் மதிக்கப் பட்டுள்ளது.

"அதிர்ப்பில்லைபம் பூணாரும் ஆடவரும் தம்முள்
எதிர்ப்பட்டுக் கண்டியைதல் என்ப—கதிர்ப்பொன்யாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்
கந்தருவர் கண்ட கலப்பு."

தெய்வத் திருவினராகிய கந்தருவர் கலந்து வரும் கலப்பு இவ் வையம் மாந்தரிடைத் தோய்ந்து காந்தருவம் என நேர்ந்து ஆர்ந்த இன்ப நலங்களை யாண்டும் சார்ந்து மிளிர்கின்றது.

கண்டவுடனேயே இருவரும் பருகு காதலராய் உருகி விழைந்து மருவி மகிழ்தலால் காந்தருவத்தை அன்பு மணம் என்பர்.

"Who hath loved that loved not at first sight" (Marloe)

"பார்த்தபொழுதே காதல்கொள்ளாதவர் உண்மையான காதலராகார்" என மார்லோ என்பவர் கூறியிருக்கிறார்.

இருபாலும் சமமாய் எழின் அது இன்பக் காதலாய் இனிமை மிகச் செய்யும்; ஒரு பால் மட்டும் உறின் துன்பத்தொடர்பாய்த் தொல்லையே மிகுந்து அல்லலும் அவமானமும் தரும்.

இந்த இழிந்த நிலையில் ஒருதலைக் காமமாய்க் கடுங்காதல் மண்டிச் சூர்ப்பநகை இங்கே அழிந்து அலமருகின்றாள்.

இக் கோமகன் குறிப்பையும் உணராமல், சொல்லுகின்ற கேலிகளையும் தெரிந்து கொள்ளாமல் காம பரவசையாய்ப் பரிந்து விரைகின்றாள். ஆசை மீறவே அறிவு நாசம் ஆயது.

"It is impossible to love and be wise" (LOVE)

"காதல் மிகின் அங்கே உணர்வு இராது" என்னும் இது ஈண்டு உணர வுரியது.

காமக் கேட்டால் அவள் தீமை மிக அடைகின்றாள். தன் பொல்லாக் காதலைச் செல்லாத இடத்தில் செலுத்தி அல்லலுழந்து படுகின்றாள்.

"Nuptial love maketh mankind; friendly love perfecteth it: but wanton love corrupteth and embaseth it."
(Bacon)

"மனைவியின் காதல் சந்ததியை உண்டாக்குகின்றது; நண்பன் அன்பு பண்பை வளர்க்கிறது; இழிந்த காமக் காதல் பழியையும் அவமானத்தையும் விளைக்கின்றது" எனப் பேக்கன் என்னும் பேராசிரியர் கூறியுள்ளது கூர்ந்து நோக்கத்தக்கது.

காதல் உயிர் வேட்கையாய்ப் பரிணமித்து வருகின்றது; அது நெறியே செல்லின் உயர்வடைகின்றது; பிறழின் இழிவுறுகின்றது உள்ளத்தின் அனுபவ உணர்ச்சி ஆதலால் அதனை உரையால் தெளிவு படுத்த இயலாது.

"The greatest argument for love is love" (Dryden)

"காதல் வாதம் காதலேயாய்" என்னும் இது ஈண்டு அறியத் தக்கது. புல்லி நுகர்வது சொல்லில் அமையாது.

ஒத்த பண்பு, ஒத்த அறிவு, ஒத்த அன்பில் உதித்து எழுகின்ற உத்தமமான காதல் மணத்தை எத்துணையும் யாதும் ஒவ்வாத அப் பேதை விழைந்து பெரிதும் ஏகம் புரிகின்றாள்.

தன்னை ஆதரித்துக்கொள்ளின் ஊதியங்கள் பல உளவாம் என ஆசையை மூட்டித் தன் ஓசையை நீட்டினாள். அரிய அரச பதவி கிடைக்கும்; பெரிய மேன்மைகள் யாவும் பெருகிவரும்.

கொடிய வீரராய்ப் பகை மண்டியுள்ள அண்ணன்மார் இனிய நீரராய் உறவுகொண்டு உதவி புரிவர். அளவிடலரிய பெருமைகள் எல்லாம் ஒருங்கே விளையும் என வளமை கொழித்தாள். அவளுடைய உரைகளைக் கேட்ட பொழுது இவ் வுத்தமன் உள்ளத்தில் எழுந்த சிரிப்பை அடக்க முடியவில்லை. நகைத்து விட்டான். அந் நகையோடு வெளி வந்த உரைகள் அயலே வருகின்றன.

நிருதர் தம் அருளும் பெற்றேன்; நின்நலம் பெற்றேன்; நின்னோடு
ஒருவரும் செல்வத்து யாண்டும் உறையவும் பெற்றேன் ; ஒன்றோ
திருநகர் தீர்ந்த பின்னர்ச் செய்தவம் பயந்தது என்னா
வரிசிலை வடித்த தோளான் வாள் எயிறு இலங்க நக்கான்.

பரிகாச வார்த்தைகளால் உருவாகி வந்துள்ள இப்பாடலைக் கருத்தூன்றிப் படிக்கின்ற எவரும் சிரிக்காமல் இருக்கமுடியாது. அரிய அடக்கமுடையனாயினும் இராமன் பெரிய சரசி என்பதை இங்கே தொடர்ந்து அறிந்து வருகின்றோம்.

"உன்னைக் கலியாணம் செய்துகொண்டு உன்னோடு கூடி உவந்து வாழும்படியான உயர்ந்த பாக்கியத்தைப் பெற்றேன். அரக்கர்களுடைய அன்பும் அருளும் கிடைத்தன; அரிய அரச பதவியும் வந்தது ; என் தவப்பயன் தான் என்னே! " என வியப்பும் விம்மிதமும் வெளிப்பட்டு விளங்க, உள்ளே இகழ்ச்சியும் நகைப்பும் பொங்க உரைகள் ஒலித்திருக்கின்றன.

"திருநகர் தீர்ந்த பின்னர்ச் செய்தவம் பயந்தது."
நான் அயோத்தியிலேயே தங்கியிருந்தால் இந்தப் பாக்கியங்கள் எல்லாம் கிடைக்குமா? ஊரைவிட்டுக் காட்டுக்கு வந்த பின்பு தான் எனது அரிய தவம் உரிய பலனை உதவ நேர்ந்தது; பெரிய செல்வங்களை எய்தினேன் எனத் தன் புண்ணியப்பேற்றை எண்ணி மகிழ்ந்தபடியாய் இது நண்ணி வந்துள்ளது.

"மண் அரசிழந்து வறியனாய் வந்துள்ள நான் இடையே ஒரு அரிய பெண் அரசும், பெரிய விண்ணரசும் பெற்று எவரும் எண் அரசாயினேன்; இவ்வளவு பெரும்பேறுகள் வலிய வந்து சேரவேண்டுமாயின் நான் எவ்வளவு தவங்களைச் செய்திருக்க வேண்டும்? " என எண்ணியிருப்பதுபோல் வார்த்தைகள் எழுந்திருக்கின்றன. நவமான சுவைகள் மொழிகளில் நடமாடுகின்றன.

அப்பேதை வினை உவகையுறும்படி இம்மேதை பேசியிருக்கும் விநய வார்த்தைகளை நினையும்தோறும் நெஞ்சில் நகை வருகின்றது.

எதிர்மறை ஒலிகளாய் வந்துள்ள இவ்வசனங்கள் அதிசாதுரியமானவை. மதிநலங்கனியச் சரசமொழிகள் ஆடுவதில் இத்தலைமகன் தலைசிறந்துள்ளமையை இப் படலத்தில்தான் காண்கின்றோம். வேறு எங்கணும் இங்ஙனம் காணமுடியாது.

எயிறு இலங்க நக்கான் என்றது அப்பொழுது சிரித்திருக்கும் சிரிப்பு நிலையை வெளிப்படுத்தி யுள்ளது. எயிறு=பல். தந்தங்கள் வெளியே தெரியும்படி நகைத்துள்ளமையால் அது பெருஞ் சிரிப்பாய் உள்ளக் கருத்தை நயமா விளக்கி நின்றது.

## நகை வகை நான்கு.

அகத்தில் உவகை யுறின் மனிதன் முகத்தில் நகையுண்டாம். இவ்வுண்மை உயிர்களின் பொது இயற்கையாய் மருவியிருக்கின்றது. சிரிப்பினாலேதான் மனிதன் தனியே சிறப்புற்று நிற்கின்றான். மிருகங்களுக்குச் சிரிக்கத் தெரியா. அந்த அரிய சிரிப்பை விசேடமாகப் பெற்றிருத்தலால் மனிதன் சிரிக்கத் தெரிந்த பிராணி என்று குறிக்கப்பட்டான். இயற்கை நியமமான இம்மகிழ்ச்சிச் சிரிப்பைத் தவிர வேறு சில காரணங்களாலும் அது விளைந்து வருகின்றது.

பிறருடைய மடமையைக் கண்டபோதும்,கோபம்கொண்டபோதும் சிரிப்பு உண்டாகின்றது. வீரச் சிரிப்பு, கேலிச்சிரிப்பு, கோபச் சிரிப்பு, உவகைச் சிரிப்பு, கோட்டிச் சிரிப்பு என நகை பலவகையாய் மருவியிருப்பினும் ஆசிரியர் தொல்காப்பியனார் அதனை நான்காகத் தொகுத்திருக்கின்றார்.

எள்ளல் இளமை பேதைமை மடன் என்று
உள்ளப் பட்ட நகைநான்கு என்ப. (தொல்காப்பியம்)

இந்த நான்கு நிலையுள் இங்கே நம் நம்பி நகைத்தது எந்த வகையைச் சேர்ந்தது? அவளுடைய மடமையை நினைந்து எள்ளி நகைத்திருத்தலால் இதன் இயல்பினை உள்ளி உணர்ந்து கொள்ளலாம். சிரிப்பிலும் சீர்மை தெரிகின்றது.

சிரிப்பும் பரிகாசமும் ஆன இவ்வுரைக் குறிப்புக்களை ஓர்ந்து உணராமல் அவள் காமவேட்கை மீதூர்ந்து விரைந்து துடித்தாள். உள்ளமும் உயிரும் ஆசைவெள்ளத்தில் ஆழ்ந்துபோயுள்ளமையால் எள்ளல் நிலைகளை அக்கள்ளி ஏதும் தெரிந்திலள்; இவ் வள்ளல் தன் வசமாகி விடுவான் என்றே அவள் அவசமாய் நின்றாள்.

உள்ளப் பண்பு நிறைந்த உயர்ந்த பெருந்தகை இங்கே உல்லாச விநோதமாய் விளையாட நேர்ந்தது பொல்லாத நிலைமை வளர வாய்ந்தது.

உன்னை நான் மணந்துகொள்வதற்குக் குலம் பொருந்த இல்லையே என்றான்; அதனை அவள் பொருத்திக் காட்டினாள்; கணம் சரியில்லை என்றதைச் சரிப்படுத்தினாள்; தமையன்மார் வந்து அக்கினி சாட்சியாய்த் தாரை வார்த்துத் தந்தால் கொள்ளுகின்றேன் என்றான்; உலகில் பொதுவாக நிகழுகின்ற அந்தச் சடங்கு முறை தேவையில்லை; கந்தருவ மணமாய்க் கலந்து கொள்ளலாம் என்றாள். காதல் வாதம் கோதல் மீதூர்ந்து ஏதமாய் வளர்ந்தது. தன் இச்சைக்கு உடன்படுவது போல் இந்தவாறு நகை மூட்டி வந்தமையால் காம ஆசையில் அவள் விசை மூண்டு நின்றது. மானம் மாண்டு மையல் நீண்டது.

## சானகி வந்தது.

இந்த நிலையில் அதி விசித்திரமான நிகழ்ச்சியொன்று இடையே நேர்ந்தது. பன்னசாலையிலிருந்து தற்செயலாய்ச் சீதை அப்பொழுது இராமனிடம் வந்தாள் அப்பெண்ணரசி இக்கண்ணன்பால் அணுகியதை நம் கவியரசர் கண்குளிரக் காட்டுகின்றார்.

விண்ணிடை இம்பர் நாகர் விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம்
கண்ணிடை ஒளியின் பாங்கர்க் கடிகமழ் சாலை நின்றும் 2789
பெண்ணிடை அரசி தேவர்பெற்றநல் வரத்தால் பின்னர்
மண்ணிடை மணியின்வந்த வஞ்சியே போல்வாள் வந்தாள்.

அந்த வஞ்ச மகளுடைய வார்த்தைகள் மேலே வளராதபடி அஞ்சன வண்ணனை நோக்கி இந்த வஞ்சி வந்துள்ள காட்சி அதிசய நிலையமா விதி செய்த வகையாய்ச் சுவை சுரந்துள்ளது.

இருவருடைய உரைகளும் எதிர் எதிர் வளர்ந்து வருகின்றன. மேல் முடிவு என்னை? என நெடிது நோக்கும் நெஞ்சுகளுக்கு ஓர் விடிவு தோன்றியது. கதை நிகழ்ச்சி அற்புத நாடகக் காட்சியாய் இங்கே அமைந்திருக்கின்றது.

சீதை இடையே வந்தது காதை நடைக்கு ஒளி புரிந்தது.

விண்ணவர் மண்ணவர் நாகர் பிரமன் முதலிய யாவருக்கும் கண் இடை ஒளி என இராமனை இங்கே காட்டியிருக்கும் காட்சி மதி நலம் கனிந்து மாட்சி மிகுந்துள்ளது. பாங்கர் = பக்கம், அருகு. ஒளி என்ற மொழியில் எவ்வளவு பொருள்கள் வெளியே தெளிவாய் ஒளி செய்து மிளிர்கின்றன.

எல்லா உயிர்களுக்கும் கண்ணின் ஒளியாய் நண்ணியுள்ள பொருள் ஓர் அழகிய மரகத வண்ணமாய் உருவம் கொண்டு இம் மண்ணில் மருவியுள்ளது. உயிர்களை இயக்கி ஒளி புரிந்தருளும் உண்மை நிலை உய்த்துணர வந்தது.

ஆன்மகோடிகள் எல்லாம் கண் எனக் கருதிப் போற்ற உரிய பரமான்மா என இதமாகக் காட்டியருளினர். மனித வுருவில் மருவியுள்ள இப் புனிதனைக் கருதுந்தோறெல்லாம் கவி உருகி வருதலை உரைகள் வெளிசெய்து வருகின்றன.

இந்தக் கண் ஒளியின் பாங்கர் வந்த அப்பெண் ஒளி எத்தகையது?

தேவர் பெற்ற நல் தவத்தால் மண்ணிடை மணியின் வந்த பெண்ணினுக்கு அரசி என்னும் இவ் வாசகத்தை எண்ணி அறிக.

தேவர் செய்த புண்ணியத்தால் இம் மண்ணில் வந்து உதித்துள்ள பெண்மணி எனச் சீதையை இங்ஙனம் சுட்டியது அவதார மூலத்தை எட்டியுணர. வானவர் துயர் தீர்க்கத் திருமால் இங்கு வருமுன்னரே திருமகள் மிதிலையில் வந்து முந்தியுள்ளமையைச் சிந்தை தெளிய வைத்தார்.

பண்டு தேவர் வரத்தால் வந்தது இன்றுதான் இங்கே பலனுக்குத் தலை நீட்டுகின்றது. மாய மோகினியாய் வந்து வாதாடி நிற்கின்ற அத் தீயவள் இந்தப் பாவையைக் கண்டதும் சிந்தை திகைத்து வியந்து மகிழ்ந்து நயந்து கருதிய நிலைகளையும், பின்பு துணிந்து செய்த செயல்களையும் அயலே காண வருகின்றோம்.

அஞ்சினள் அஞ்சி அன்னம் பின்னிடை அலச ஓடிப்
பஞ்சின்மெல் அடிகள் நோவப் பதைத்தனள் பருவக் கால
2797 மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி என்னக்
குஞ்சரம் அனைய வீரன் குவவுத் தோள் தழுவிக்கொண்டாள்.

வளை எயிற்றவர்களோடு வரும்விளையாட்டென்றாலும்
2795 விளைவன தீமையேயாம் என்பதை உணர்ந்து வீரன்
உளைவன இயற்றல் ஒல்லை உன்னிலை உணருமாயின்
இளையவன் முனியும் நங்கை ஏகுதி விரைவின் என்றான். (10)

(சூர்ப்பநகைப்படலம், 57-67)

சூர்ப்பநகை சீதையைக் கண்டதும், திகைத்து வியந்ததும், அதிசயித்து அயர்ந்ததும், இருவரையும் கருதி உறுதி செய்ததும், வஞ்சம் சூழ்ந்ததும், வசை உரைத்ததும், இராமன் பரிகசித்து நகைத்ததும், அக்கொடியவள் சனகியை வெருட்டியதும், அம் மெல்லியல் வெருவி ஓடி வந்து ஒல்லையில் நாயகனைத் தழுவிக் கொண்டதும், இவ் வீரன் உள்ளம் வருந்தி வெறுத்து மொழிந்ததும் மேலே குறித்த கவிகளில் முறையே காணலாம்.

கவிகளைக் கருத்தூன்றி நோக்கிய அளவே உரைகளில் பொதிந்துள்ள உணர்ச்சி நலங்கள் உள்ளத்தில் தெளிவாக விளங்கும் ஆதலால் எதையும் ஆழ்ந்து நோக்குதல் யாண்டும் நலமாம். அறிவுக் காட்சியில் விரைந்து ஓடாமல் அமர்ந்து காண்பவர் அரிய பெரிய பொருள்களை எளிதே அடைந்துகொள்ளுகின்றனர்.

கதை நிகழ்ச்சிகளை வார்த்தைகளில் வார்த்துக் கவி ஆர்த்தியுடன் தருகின்றார்; அவற்றை உள்ளக் கண்களால் ஊன்றிப் பார்க்கின்றவர்கட்கு உருவ நலங்கள் யாவும் பருவ அழகுகளுடன் எதிரே தெரிகின்றன. தெரியவே காலதேசங்கள் எல்லாம் கடந்து சரித பாத்திரங்களை நேரில் அளவளாவிச் சாலவும் மகிழ்ந்து மேலான இன்ப நலங்களை அவர் மேவுகின்றனர். உள்விழி எலையற்ற நிலையில் ஒளி வீசியுள்ளது. அவ் ஒளியில் காணும் காட்சிகளையும் மகிழ்ச்சிகளையும் வேறு வெளியில் எங்கும் காண முடியா. காண்பார் இன்பம் பூண்பார் ஆகின்றார்.

"அரக்கர் என்னும் கான்சுட முளைத்த கற்பின் கனலி" எனச் சீதைக்கு இப்படி ஒரு பெயரை இங்கே கற்பித்திருக்கிறார். கனலி = தீ. வந்து முளைத்துள்ள வகை யுணர வந்தது.

சூர்ப்பநகை சீதையைக் கண்டாள் என்று சொல்லவேண்டிய இந்த இடத்தில் நெருப்பைக் கண்டாள் என்றது குறிப்பு கூர்ந்து சிந்திக்கற்பாலது.

கண்டாலும் நினைத்தாலும் கண்ணும் மனமும் தித்திக்கும் உத்தமியைத் தீ என்று சுட்டியது அரக்கர் குலத்தை அழிக்க வந்திருக்கும் அவதி கருதி.

“விண்ணும் மண்ணும் விரிந்த போர் அரக்கர்” என்றது உலகம் எங்கணும் பரவியுள்ள அந்த இராக்கத குலத்தின் பெருக்கமும் பேராற்றலும் போர் வன்மையும் நேரே அறிய வந்தது. அத்தகைய மரபுமுழுவதும் எரி எதிர்ப்பட்ட பஞ்சுப்பொதிகள் போல் சீதையின் கற்புத் தீயால் அழிந்தொழிய விரைந்துள்ளது.

இப்பத்தினியை அரக்கர் குலமுதல்வன் அநியாயமாய்க் காதலித்துத் தன் வருக்கம் அடியோடு அழிய மூண்டுள்ள முடிவினைச் சூர்ப்பநகை இங்கே விரைந்து முடிக்க வந்துள்ளாள் ஆதலால் அவள் கண்ணில் கண்ட பொருளை நம் எண்ணில் காண இப்படிக் காட்டி அருளினர்.

தன் குலம் சுட வந்திருக்கும் இத்தூய தீயை அத்தீயவள் பார்த்ததும் சிந்தை திகைத்தாள்; “அம்மா! இதுஎன்ன அழகு? என்ன உருவம்? என்ன பருவம்? என்ன சாதி? என்ன சோதி?” என விம்மிதம் எய்தி வியந்து நின்றாள்.

“வான்சுடர்ச் சோதி வெள்ளம்” என்றதனால் சீதையின் திவ்விய சவுந்தரியத்தின் தெய்வீக ஒளி நிலை தெளியலாகும். உருவ நாறும் சோதி என்றது, அந்தத் திருமேனியின் இயற்கையான அரிய பரிமளத்தையும் இனிய எழில் விளக்கத்தையும் தெளிவுறுத்தி நின்றது. நாறுதல் = தோன்றுதல், மணம் வீசுதல்.

இராமனையே உருகி நோக்கி நின்ற அந்த அரக்கி இடையே வந்து வீசிய ஒரு வகை இனிய வாசனையையும் ஒளியையும் உணர்ந்து அயலே விரைந்து பார்த்தாள்; தழைக் குடிசையிலிருந்து சானகி வருதலைக் கண்டாள்; கண்டவள் என்றுங் காணாத வியப்புமீக் கொண்டாள். அந்த அதிசய அழகையும் அமைதியையும் விழிகள் இமையாமல் நோக்கிப் பல பல நினைந்தாள்.

இந்த அழகனுடைய உண்மை மனைவியோ? என முதலில் கருதினாள்; கருதினவள் அவ்வாறு இருந்தால் என்று உறுதி செய்தாள். உத்தமச் சத்திரியனான இவன் தனது அருமை மனைவியை அந்தப் புரத்தை விட்டு வெளியே கொண்டு வாரான்; அரச சாதியுள் தலைமை அரசியாயுள்ளவள் அங்ஙனம் வெளிவருதல் எவ்வகையிலும் இயலாது; இந்த உலகத்தில் இத்தகைய திவ்விய சவுந்தரியமுடையவர்களை வேறு யாண்டும் யாரும் நான் பார்த்ததில்லை. வன தேவதைகள் கந்தருவ மங்கையர் நாக கன்னியர் முதலிய யாவரையும் நான் நேரில் பார்த்திருக்கிறேன்; இவ்வளவு பேரழகைக் கண்டது இல்லையே! மனித உருவில் மருவியுள்ள இப்புனித எழில் தனி நிலையதாய் இனிது ஓங்கி மிளிர்கின்றதே! மின்னல் ஒளிபோல் மின்னி வருகின்றது; என்னே இது! என இன்னவாறு நெடிது சிந்தித்து நெஞ்சம் திகைத்தாள்.

"அரவிந்த மலருறை நீங்கி அடியிணை படியில் தோயத், திரு இங்கு வருவாள் கொல்லோ" என இறுதியில் கருதினாள். அரவிந்தம் = தாமரை. படி = தரை, நிலம்.

திருமகளே இவ்வாறு வடிவம் கொண்டு அடி படியில் தோய இங்கே வருகின்றாளோ! என்று மறுக மயங்கினாள்; மயங்கினவள் அந்த உருவ எழிலில் உள்ளம் பறிபோய் உயிர் உருகினாள்.

சிருட்டி கர்த்தாவாகிய பிரமனும், சித்திரங்களை விசித்திரமாக வரையும் ஓவிய நிபுணர்களும் தங்களுடைய அறிவாற்றல்களுக்கு அமைந்த அளவில் உருவங்களை அமைக்கின்றார்களே அன்றி, பூரண அழகையும் அவரால் வெளிப்படுத்த முடியாது. அழகு கடவுள் தன்னையே ஒரு வடிவில் அமைத்து. எவ்வளவு திவ்வியமாய்ப் படைத்தாலும் அவ்வளவையும் கடந்து அது தனியே ஓங்கியுள்ளது. அதன் நிலைமை மிகவும் தலைமையானது.

"படைக்குநர் சிறுமை அல்லால் அழகிற்கு எல்லை இல்லை." என இங்ஙனம் கம்பன் குறித்துள்ளான். பிரம சிருட்டிக்கும் எட்டாததாய் அழகு எல்லை கடந்திருக்கின்றது என எதிரே கண்ட பேரெழிலை அவசமாய் இவ்வாறு சொல்லாடி நின்றாள்.

கையால் சிறப்பித்துப் பிறப்பியாத அழகு என உளம் உருகியிருக்கிறாள். செய்ய முடியாதது வையமிடை வந்தது.

மனிதரினும் அரக்கர் மிஞ்சிய வலியினர்; தேவரோடு எதிர்த்துப் போராட வல்லவர்; ஓரளவில் அவர்க்கு நேரான நிலையினர்; அந்த மரபில் வந்த ஒரு அரச மங்கை வாயிலாகப் பிராட்டியின் பெருமை இங்கே பேசப் படுகின்றது.

தான் கண்ட அதிசய சவுந்தரியத்தை அவள் துதி செய்திருப்பதில் அழகின் அற்புத நிலைமை வெளியா யுள்ளது. அழகிற்கு எல்லை இல்லை என்னும் இவ்வாக்கியம் அறிவின் எல்லையைக் கடந்து நிற்கின்றது. எல்லை காண முடியாத ஒன்றை எல்லை கண்டு சொல்லியபடியாய் இச் சொல் ஓடிவந்துள்ளது.

தான் ஒரு பெண் மகளாயிருந்தும் தன்னையும் அந்த உருவப் பொலிவு பருகிவிட்டதே என்று மறுகி மூட்டுகிருள்.

தன் கண்ணையும் கருத்தையும் பறிகொடுத்து விட்டு வறிய நிலையில் உருகி நின்று அருகே எதையும் நோக்காமல் அலமருகின்ருள். மது உண்ட வண்டாய் மனம் மயங்கி அயர்ந்தது.

பெண் பிறந்தேனுக்கு என்றதில் அவள் எண் பிறந்துள்ளமை எளிதறிய வந்தது. இயற்கை நியதியையும் கடந்து பெண் அழகு பெண் உள்ளத்தை மயக்கி யுள்ளது. கண் அளவில் நில்லாமல் கருத்தும் பறிபோயது. விசித்திர கதியில் அழகு இங்கே வேலை செய்திருக்கின்றது.

இராமனது உருவ நிலையில் உள்ளம் பறிபோய்க் கண் ஊன்றி நின்றவள் அயலே சீதையைக் கண்டதும் இங்ஙனம் வியப்பும் விம்மிதமும் கொண்டு மெய்ம் மறந்து நின்ருள்.

“தோளில் நாட்டங்கள் ஊன்றினள் பறிக்க ஓர் ஊற்றம் பெற்றிலாள்” என மாற்றம் பெற்று நின்றவள் அயல் வருவதை நோக்கவே செயல் பிறிதாயினள். முன் கண்ட காட்சியை மறந்து பின் கண்டதில் பேராவல் மண்டினுள்.

அந்த அழகனை மருவினல் ஒழிய அமுதம் உண்ணினும் உயிர் பிழையாது என மயலேறி நின்றவள் அயலே வந்த அழகியால் இங்ஙனம் சிந்தை பறிபோயினள் என்ருல், அந்த உருவத்தின் எழில் நலங்களையும் இனிமைப் பண்புகளையும் அருமை பெருமைகளையும் எவ்வாறு உரைகளால் வரைந்து கூற முடியும்?

இவ்வாறு அதிசய நிலையில் மதிமயங்கி நின்ற அவள் சானகியின் திருமுக மண்டலத்தை உள்ளங் குளிர உவந்து நோக்கி முன்னே கண்ட இராமனது உருவப்பொலிவோடு இணைத்து எண்ணி இரண்டையும் பிணைந்து நோக்கினாள்.

"பொருதிறத்தானை நோக்கிப் பூவையை நோக்கி."

சூர்ப்பநகையின் கண்ணும் மனமும் பட்டிருக்கும் பாட்டை இப்பாட்டு காட்டி நிற்கின்றது. பொருதிறத்தான் என்று இராமனை இங்கே வீரத்திறலோடு விழைந்து குறித்தது தன் மரபை ஆற்றலால் பொருது தொலைக்க வந்தவன் தன்னை முன்னதாக அழகால் பொருது தொலைத்துப் பரிதபிக்கச் செய்துள்ள பாடு தெரிய வந்தது.

அரச வீறு பொலிய அமர்ந்திருக்கும் அவ்வீரக் காட்சியைக் கண்கொண்ட மட்டும் பருகிக் களிப்பேறி யுள்ளமை உரையில் வெளிப்பட்டு நின்றது. அழகும் வீரமும் ஓர் உருவமாய் மருவி விழுமிய பேரானந்தமாய் விளங்கி உளங் கவர்ந்திருக்கின்றன.

பருவ அழகுகளே உருவங்களாய்ப் படிந்து வந்துள்ளபடி இருவர் நிலைகளும் எதிர்ந்து நின்றன.

இவ்வாறு இருவரையும் ஒரு முகமாய் மாறி மாறி நோக்கி உருகி நின்றவள் தன் உள்ளே கருதலாயினாள். "பிரமதேவன் வேண்டும் என்றே மிகவும் உரிமையுடன் அருமையாகக் கருதிச் சிருட்டித்த உருவங்கள் இவை. அகில உலகங்களிலும் விரிந்து பரந்துள்ள சீவ கோடிகளுக்கெல்லாம் இந்த இருவரும் சீவ நாடிகளாய் உள்ளனர். ஆண் குழுவுக்கு இந்த அழகனும், பெண் மரபிற்கு அந்த அழகியும் மேலவரிச் சட்டமாய் மேவி யிருக்கின்றனர். கமலத்துக் கடவுளான பிரமதேவன் நெடுங்காலம் நெடிது சிந்தித்து எல்லையில்லாத இந்த எழில உருவங்களைத் தன் வல்லமை தெரிய வாஞ்சையோடு வார்த்து வைத்திருக்கிறான்."

"ஒரு திறத்து உணர நோக்கி உருவினுக்கு உலகம் மூன்றின்
இரு திறத்தார்க்கும் செய்த வரம்பு இவர் இருவர் என்றாள்"

ஆண்பால் பெண்பால் என்னும் இரு பாலார்க்கும் இந்த இருவரும் அழகு முதலிய எந்த வகையிலும் முறையே தலைமையான

நிலைமையில் நிலவியுள்ளனர். உலகம் மூன்றின் இருதிறத்தார்க்கும் உருவினுக்கு இவர் இருவர் வரம்பு என அவள் வரம்பு செய்துள்ளமை நினைந்து மகிழ வுரியது. வரம்பு = முடிவான எல்லை.

அண்ட கோடிகளுள் அன்று முதல் இன்றுவரை தோன்றியுள்ள ஆடவர் மகளிர் எவரினும் இவ் இருவரும் மேலான அழகராய் மேவியுள்ளனர்.

பிறர் எவரும் நிகரில்லாத இந்தப் பேரழகர் தம்முள் ஒருவரை ஒருவர் நிறை ஒத்து நிற்கின்றனர். அருமையாக வனைந்து புனைந்து வெளியிட்ட அயனும இந்த வனப்பு வடிவங்களைக் கண்டு கண்டு தன் படைப்பின் வியனை வியந்து மகிழ்ச்சி மீக்கொள்வன். அதிசயமான அழகுக் காட்சிகளுக்காக விதி செய்த விபன் வடிவங்கள் இவை; மதி செய்து மதிக்க முடியாதன; துதி செய்து தொழ உரியன.

ஆண்பால் இம்மைந்தனால் மேன்மை அடைந்தது; பெண்பால் அம் மங்கையால் பெருமை மிகப் பெற்றது.

இங்ஙனம் இறும்பூதாகப் பெரும் பூரிப்புடன் கருதி மயங்கி உருகி நின்றவள் உடனே மாறு ஒன்று மறுகி நினைந்தாள்:

"அவள் இவன் சொந்த மனைவியாய் இருக்க முடியாது. அரச மங்கையை அடவிக்குக் கொண்டுவாரான். தனியே வெளி ஏறி வழியே வந்தவனை வன தேவதை போன்ற அவள் எப்படியோ இடையே கண்டு பெரு மோகங் கொண்டு மறுகியிருக்கிருள்; அவளது உருவ எழிலையும் பருவ நிலையையும் நோக்கி இவனும் உருகி இசைந்துள்ளான். விதி முறையே மணந்தவள் அன்று; தொடுப்புத்தான்; இதில் சந்தேகமே இல்லை" என்று இந்தவாறு சிந்தை துணிந்திருக்கிருள்.

"என்னைப்போல் இடையே வந்தாள்"

எனத் தன்னைப்போலவே இவள் எண்ணியிருக்கும் விசித்திரம் நுண்ணிய மானச தத்துவங்களை நுனித்து நோக்கச் செய்கின்றது. மயல் இயலில் தான் கள்ளியாய் வந்துள்ளமையால் அயலையும் அவ்வாறே கள்ளம் ஆக உள்ள நேர்ந்தாள். தீய நெஞ்சம் தூய பொருள்களையும் தீமையாகவே காண்கின்றது.]

பிராட்டியின் உருவப் பொலிவில் உள்ளம் பறிபோய் உவந்து வியந்து நயந்து வந்தவள் உடனே இவ்வளவு தவறாக மாறுபட்டது வெவ்விய தனது மாறுபாட்டை வெளிப்படுத்தி நின்றது.

பிழைபாடான இந்த எண்ணம் அந்த அழகியால் பின்னே இவள் செய்யவுள்ள இன்னமைக்கு ஓர் இனிய வித்தாய் முன்னே ஈண்டு மூண்டிருக்கின்றது.

"என்ன உருவம்! என்ன அமைதி! என்ன பொலிவு! என்ன ஒயில்! என்ன ஒளி! என்ன எழில்! பெண்ணுலகமெல்லாம் பெருமையடைய வந்துள்ளதே இந்தப் பேரழகு!" என இன்னவாறு பேராவலோடு பேரதிசயங்கொண்டு ஆர்வம் மண்டி நின்றவள் நேரே விரைந்து மாறியது ஆறாதகாமவேகத்தின் விறேயாகும்.

தான் அள்ளிப் பருகலாம்; அமுதம் கைக்கு அமைந்து விட்டது என இக்கள்ளி உள்ளி உருகி நிற்கும் சமயத்தில் அவ்வுத்தமி தோன்றினாள்; அந்த எழில் வெள்ளத்தில் சித்தம் திரும்பிச் சிறிது மயங்கினாள்; வறிது நீளாமல் வேகமாய் மீண்டு தன் மையலில் மூண்டு ஐயன்பால் ஆழ்ந்தாள்.

ஐயோ! எனக்கு இடையூறாக வந்தாளே! என்று அச்செய்யவள் மேல் சினந்து இவ்வெய்யவள் படுசூழ்ச்சி செய்யமுனைந்தாள்.

பெருகு காதலோடு இராமனை மறுகிநோக்கினாள்: "வீர நாதா! இதோ வருகின்ற பெண் உண்மையாக மானுட மங்கை அல்லள். மாய மோகினி; வஞ்ச நெஞ்சினள்; பொல்லாத அரக்கி; அந்த அழகும் இளமையும் ஒளியும் மெய் அல்ல; பொய்யான போலித் தோற்றம்; கள்ளம் கபடு யாதும் அறியாத வள்ளலான உங்களை அக்கள்ளி வஞ்சிக்க வந்திருக்கிறாள்; அவ் வஞ்சகியைக் கண்டு என் நெஞ்சம் அஞ்சுகின்றது; அவளுடைய நிலைமையை எவரும் எளிதில் அறிய முடியாது; தெய்வத் திருவருளால் சிறிது நான் இதுபொழுது அறியலானேன்; அருகே வருகின்றாள்; பயமாயிருக்கின்றதே! அயல் அணுக ஒட்டாமல் விரைந்து விரட்டி விடுங்கள்; நெருங்கினால் பெருங்கேடாம்" என இவ்வாறு அவள் துணிந்து கூறித் துடித்து நின்றாள்.

அவளுடைய நீலித்தனமும், நிட்டூரமும், பேச்சுத் திறமும், சாகசங்களும், வஞ்சச் சூழ்ச்சிகளும் உரைகள் தோறும் பெருகி வருகின்றன. இறையும் அஞ்சாமல் இவ் வீரன் எதிரே வீரகு புரிகின்றாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் இராமன் யாது செய்தான்? என்ன பதில் சொன்னான்? எது பேசியிருக்கலாம்? அந்தப் பேச்சைக் கொஞ்சம் கூர்ந்து கேளுங்கள்.

''மங்கையர் திலகமே! உன் அறிவே அறிவு; உன் பார்வையில் தெரியாத தீர்வை யாதும் இல்லை; உன்னை வஞ்சிக்க வல்லவர் யார்? உனது நெஞ்சத் தெளிவுதான் என்னே! நெடு நாளாகக் கண்டு கொள்ளாமல் ஏமாந்து போயிருந்த உண்மையை இன்று தான் உன்னால் நேரில் கண்டு கொண்டேன். நீ வாய் திறந்து சொல்லிய பின்னரே உள்ளது தெரிந்தது; அதோ வருகின்ற அவள் உள்ளபடியே கள்ள அரக்கிதான்; இந்த உண்மையை உணர்த்தியதற்கு உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்? கொடிய இராட்சசி நீண்ட காலமாக என்னை ஏமாற்றிக் கொண்டிருந்தாள்; இன்று கள்ளம் தெளிந்தேன்'' என வெள்ளிய முறுவல் வெளியே தோன்றக் குலுங்கக் குலுங்கச் சிரித்தான்.

''மின்னே! உன்னை யார் ஒளிக்கும் ஈட்டார்? உன் உணர்வு ஒள்ளிது; அம்மா! உன் சிந்தனை தெரிந்தது; கள்ள வல் அரக்கி போல் ஆம் இவளை நீ காண்டி!'' எனத் தன்னை நோக்கி வருகிற சானகியைச் சுட்டிச் சூர்ப்பநகையிடம் இராமன் கூறியிருக்கிற இந்த வார்த்தைகளை எவரும் ஆர்த்தியுடன் நோக்கி மகிழ்வர்.

இப்படி நளினமாகப் பரிகாச மொழிகளாடவும் இந் நம்பி நன்கு பழகியிருக்கின்றான். தன்னோடு உரையாடுகின்றவரது தகுதிக்குத் தக்கபடியே உரைகள் வெளி வருகின்றன. வசிட்டர் முதலிய ஞான சீலர்களுடன் பேசும் பொழுது இம் மான வீரனுடைய மதி மாட்சிகளையும் உரைகளின் ஆட்சிகளையும் அறிந்து வந்திருக்கிறோம்.

காதல் கொண்டு பேதைமை மண்டி நிற்கும் அப் பேதையிடமும் இம்மேதை பேசுவது மேதகவாகவே மேவி ஒளிர்கின்றது. பரிகாச வார்த்தைகளிலும் அறிவொளிகள் ததும்பி மிளிர்கின்றன. உவகை இரசங்கள் பொங்கி வழிகின்றன.

உழுவலன்புடைய தனது அருமை மனைவியைக் குறித்து அப் பழிகாரி கூறிய பழுதுரைகளையெல்லாம் முழுதும் கேட்டு அதி விநயமாகச் சரச நலம் கனிய இம் மதியாளன் எதிர்மொழி தந்துள்ளது முதிர் சுவையுடைய தாய்ப் புதிர் பலிந்து மிளிர்கின்றது.

அம்மா! உன் சிந்தனை தெரிந்தது என்றதில் நிந்தனை நிறைந்திருக்கிறது. மாய வஞ்சனையுடைய தீய நெஞ்சினள் என்பது உன் சொல்லாலேயே தெரிந்துகொண்டேன் என்பது குறிப்பு. "அம்மா" என்றது அவனுக்கு மரியாதை விளியாகத் தோன்றி உள்ளே வியப்பூர்ந்த இளிப்பாய்த் தோய்ந்து நின்றது

என்ன தைரியம்! எவ்வளவு துணிவு! அவள் என்னை மயக்க இங்கே வருவது என அந்தச் சுந்தரியைச் சொல்லியதுபோல் இந்தக் கள்ள வல்லரக்கியை எள்ளியிருக்கிறான்.

இவ்வாறு இவ் இருவரும் பேசிக்கொண்டுள்ள வார்த்தைகள் சீதையின் காதில் யாதும் விழவில்லை. பர்ணசாலையிலிருந்து புறப்பட்டுத் தன் அருமை நாயகனை நோக்கி உரிமையுடன் வருகின்றாள்; வரும்போதே அருகே ஒரு அழகி நிற்பதைக் கண்டாள்; யாரோ ஓர் மங்கை என யாதொரு சங்கையும் கொள்ளாமல் அக்கற்பரசி கணவனை அணுகினாள். அணுகவே இக்கொடியவள் "யாரடி நீ இங்கே வருவது? வஞ்ச அரக்கி! உன் கள்ளம் தெரிந்தது; ஓடிப்போ!" என இடையே கடுத்துப் பாய்ந்து சீதையை உருத்து அதட்டினாள். பாவம்! புலியைக் கண்ட புள்ளிமான் போல் அம்மெல்லியல் அஞ்சி நடுங்கி அலமந்து ஓடித் தன் நாயகன் மீது போய்ப் பாய்ந்து வீழ்ந்தாள்.

"அஞ்சினள் அஞ்சி அன்னம் மின் இடை அலச ஓடிப்
பஞ்சின் மெல் அடிகள் நோவப் பதைத்தனள்."

அந்தப் பாதகி போட்ட சத்தத்தைக் கேட்டு இவ்வுத்தமி பட்டுள்ள பாட்டை இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம். திடீர் என்று பேய்க் கூச்சலிட்டு அத்தீயவள் பாய்ந்திருக்கின்றாள் ஆதலால் இத் தூயவள் இவ்வாறு பயந்து போயினாள். பயந்தவள் அயல் எங்கும் அகலாமல் விரைந்து ஓடிப்போய் இராமன் மெய்யைத் தன் இருகைகளாலும் இறுகத் தழுவி மருவிக்கொண்டாள்.

"மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி என்னக்
குஞ்சரம் அனைய வீரன் புயவுத்தோள் தழுவிக் கொண்டாள்"

அரக்கிக்கு அஞ்சிப்போய் அஞ்சன வண்ணனைச் சானகி தழுவியிருந்த காட்சியை இங்ஙனம் காட்டியிருக்கிறார். பருவக் கால மஞ்சு = கார் காலத்தில் மழை பொழிய நீர் சுரந்து நின்ற

காளமேகம். இராமனது திரு உருவம் படிப்படியாக வருணிக்கப்பட்டு வருகின்றது. இங்கே பயன் நிறைந்துள்ள வியன் அறிய வந்தது. சிவந்த திருமேனியளான சீதைக்குப் பவளக்கொடி உவமையாயது.

அரிய கரு மேகத்தில் இனிய பவள வல்லி புல்லி இருந்தது போல் இம் மெல்லியல் தன் கொழுநனை மேவியிருந்தாள்.

தோளைத் தழுவிக் கொண்டாள் என்றமையால் பின்புறம் போய்ப் பாய்ந்து பிடித்திருக்கின்றாள் என்று தெரிகின்றது. குவவு = திரண்டு உருண்டிருக்கும் தகவு. வெற்றித் திரு வீற்றிருக்கும் அத்திண்தோளை இத்திரு பற்றிக்கொள்ளவே பயம் தொலைந்து போயது. உரியவனை ஆரத்தழுவி உயிர் உவந்துள்ளாள். ஆதலின் அமைவு ஆர்வம் மீதூர்ந்தது.

தனது அருமை மனைவி தன்மேல் மறுகி வந்து வீழவே அவளை உரிமையுடன் தழுவிக்கொண்டு அரக்கியை இவ்வீரன் வெகுண்டு நோக்கினான். இதுவரையும் பரிகாச நிலையில் உல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்தவன் பெண்டாட்டிக்கு அல்லல் நேரவே உள்ளம் வெறுத்தான். அரிய உரிமையில் கை வைக்கவே உயிர் உயர் வேதனை அடைந்தது. இதுகாறும் அவளோடு விளையாட்டாகப் பேச நேர்ந்தது பெரிதும் தவறு என்று மறுகி வருந்தினான்.

“விளையாட்டு என்றாலும் விளைவன தீமையே ஆம்”

தீயவர்களோடு விளையாட்டாகச் சிறிது பேசினும் அதனால் கொடிய தீமையே விளையும் என உணர்ந்திருத்தலால் தான் செய்ததை நினைந்து இரங்கியுள்ளமை விளங்கி நின்றது.

அரிய பண்பாடுடைய பெரிய உள்ளம் ஆதலால் நேர்ந்த குறையை உடனே ஓர்ந்து திருந்தியது.

இங்ஙனம் கவன்றவன் அவளைக் கடுத்து நோக்கி, “இனிமேல் இங்கே நில்லாதே; வெளியே ஓடிப்போ” என்று வெகுண்டு மொழிந்தான். அவள் அசையாமல் நின்றாள்.

“இளையவன் முனியும் நங்கை! ஏகுதி விரைவின்”

என்று இவ்வாறு வேகமாய் வெருட்டினான். என் தம்பி கண்டால் உன்னைக் கொன்று தொலைப்பான்; விரைவில் ஓடிப்போய்

விடு என்று உரைத்த பொழுதுதான் துணைவன் ஒருவன் வேறே இருக்கின்றான் போலும் என அவள் உணர்ந்து கொண்டாள்.

இளையவன் முனியும் என்றது மேல் விளைய உள்ளதற்கு வித்திட்டபடியாயது. தான் சொன்னால் போகமாட்டாள் என்று தெரிந்து தன் தம்பியை சுட்டிக் காட்டினான். காட்டியும் அவ் வம்பி அகலாமல் இந் நம்பியை நயந்து நோக்கி, "உங்களுக்கு என்ன பைத்தியமா? இந்த மாயக்காரி உங்களுக்கு நல்ல மாயப் பொடி போட்டிருக்கிறாள்; இவளுடைய மையலில் விழுந்துள்ள மையினாலேதான் நீங்கள் மதியிழந்து நின்றீர்கள்; தேவர்களும், தேவதேவரும், தெய்வ கந்தருவரும், மன்மதனும் என்னைப்பெற வேண்டும் என்று பேராவல் கொண்டு பெருந்தவம் செய்து வருந்தி முயல்கின்றார்கள்; அவர்கள் எல்லாரையும் இகழ்ந்து விட்டு உங்களை விழைந்து வந்திருக்கிறேன்; என் உள்ளத்தை நீங்கள் உணர்ந்து கொள்ளாமல் இந்தக் கள்ளியை விரும்பி வீணே இழிந்து படுகின்றீர்கள்; இது நல்லதன்று; உங்கள் நன்மையை நாடிச் சொல்லுகின்றேன்" என்று பொல்லாத மொழிகளைப் புகன்று நின்றாள்.

அவளுடைய நிலைமையை நினைந்து இக்குலமகன் மிகவும் வெறுத்தான். கொடிய நெஞ்சினளான அத்தூர்த்தையோடு இனி வார்த்தையாடலாகாது என்று துணிந்து சீதையை அழைத்துக் கொண்டு இராமன் பன்னசாலைக்குப் போயினான்.

"மின்னொடு தொடர்ந்து செல்லும் மேகமேபோல்மிதிலைவேந்தன்
பொன்னொடும் புனிதன் போய் அப்பூம்பொழிற்சாலை புக்கான்."

கால மின்னலுடன் மிளிர்கின்ற கோல மேகம் போல் இக் கோமகன் பன்னியுடன் போய்க் குளிர் பொழிலிடையுள்ள குடிசையுள் புகுந்தான். ஒரு மொழியும் கூறாமல் உரியவளை மருவி இவன் ஒருவிப் போகவே அவள் பெருமூச்சு எறிந்து பெரிதும் மறுகி ஏங்கிப்பார்த்துக்கொண்டே விழித்த கண் இமையாமல் வெய்துயிர்த்து நின்றாள்.

உணர்விழந்து உள்ளம் திரிந்து செயல் மறந்து மயல் உழந்து நின்ற அவள் பிராட்டி மேல் கொடுங் கோபம் கொண்டாள். "அந்தக் குடிகேடி இடையே வந்து என் இன்ப வாழ்வைக் கெடுத்தாளே!" என்று இழுதை நீளாய் ஏங்கிப் பதைத்தாள்.

"தேவியோ திருமங்கையிற் செவ்வியாள்
பாவி யேனையும் பார்க்குங் கொலோ?"

எனப் பரிதபித்திருக்கிறாள். கொடுமையான காமவேதனை யிலும் சனகியை வியந்து மனம் புழுங்கியுள்ளாள். தன்னைப் பாவி என்றதனால் அவள் புண்ணிய உருவம் என்பது புலனாய் நின்றது. எப்படியும் இத்தேவியைப் பிரித்துவிட வேண்டும் என்று அப்பாவி உள்ளம் பதைத்து நிற்றலை உரைகளில் நுனித்து உணர்ந்து வருகிறோம். அவளது வஞ்ச நெஞ்சம் நஞ்சம்போல் வெஞ்செயல்களை விழைந்து பரிதாப நிலைகளில் வழிது ஓடி உழல்கின்றது.

இந்நம்பி வெம்பி வெறுத்தும் அவ்வம்பி யாதும் நாணாமல் பெருமோகியாய் மறுகி யுருகி மாலுழந்துபடுகின்றாள். அஞ்சனக் கிரியாய் அருளாய்! என இன்னவாறு தன்னை மறந்து இரவு முழு வதும் விழி துயிலாமல் பல பல புலம்பிப் பரிதபித்துள்ளமை யால் அவளது காம வேட்கையின் கடுநிலை காணலாம்.

"ஆவி ஓயினும் ஆசையில் ஓய்விலாள்"

காமமோகம் அவள் உயிரை வாட்டி உருக்கியுள்ள நிலையை இவ்வாசகம் உணர்த்தி நிற்கின்றது. கருதியபடி கைகூடாமை யால் அக்காதல் சாதலில் மூண்டு நோதலில் நீண்டது.

ஆவி பதைத்து இங்ஙனம் அவள் அலமந்து கிடந்தாள். இரவு கழிந்தது; பொழுது விடிந்தது. அன்று உதித்த அந்தச் சூரிய உதயம் கவியின் இதயத்தில் என்றும் யாரும் இன்புற இனிது உதயமாயது. கலையின் காட்சி சீரிய கூரிய காரிய நிலைய மாய்க் கதிர் ஒளி வீசி வீரிய மாட்சிகளை விளக்கி வருகின்றது.

ஒரு நாள் தோன்றிய ஆதவனை வருநாள் எல்லாம் மக்கள் ஊன்றிஉணர்ந்து உவந்து வரும்படி அது உணர்த்தியருள்கின்றது.

ஆன்ற காதல் அகத்துற எய்துழி
மூன்று லோகமும் மூடும் அரக்கராம்
ஏன்ற காரிருள் நீக்க இராகவன்
தோன்றினான் என வெய்யவன் தோன்றினான்.

தன்னைக் காதலித்து எவள் சாதல் நிலையில் நோதலடைந் துள்ளாளோ அவளுடைய வருக்கம் முழுதும் அடியோடு ஒழிய உதித்துள்ள சூரியன் என இராமனை இங்கே துதித்திருக்கிறார்.

உயிர்களுக்கு அச்சத்தையும் துயரங்களையும் விளைத்து நிற்றலால் அரக்கர் இருள் என நேர்ந்தார். சூரியன் முன்னிலையில் இருள் ஒழிதல் போல் இராமன் எதிரே இராக்கதர் எளிதே அழிவர் என்னும் குறிப்பு இதில் தொனித்திருக்கின்றது.

கதிர் மதி உதயங்களைக் கதா நாயகனோடு இணைத்து மதி நலங்கனியச் செய்து வருவது அதி நயமுடையது. வாய்த்த இடங்களில் எல்லாம் ஆர்த்தி மீதூர்ந்து அண்ணலைப் போற்றி வருகின்றார். அறிவும் அன்பும் மொழிகளில் ஒளி விடுகின்றன.

செய்யவனை வெய்யவன் என்றது இயற்கையான வெம்மையின் தன்மை கருதி. அன்றைய உதயத்திலிருந்தே பிராட்டிக்கு அபாயம் தொடங்குகின்றது ஆதலால் அந்த வெய்ய வேதனைக் காலம் தொனிக் குறிப்பாய் நுனித்துணர வந்தது.

இரவி உதயம் ஆகவே இராகவன் எழுந்து போய்க் கோதாவரி நதியில் நீராடி நியமம் முடித்துக் கொண்டிருந்தான். தவச் சாலையில் சீதை தனியே அமர்ந்திருந்தாள்.

## அங்கம் பங்கம் ஆனது.

இரவெல்லாம் கண்ணுறங்காமல் காமத்துயரால் மறுகிக் கிடந்த சூர்ப்பநகை காலையில் எழுந்த வுடனேயே வேலையில் மிடைந்து பன்னசாலையிருந்த சோலையை அடைந்தாள்.

தீய சூழ்ச்சியுடன் அத்தீயவள் ஆண்டு வந்தாள் ஆதலால் யாரும் அயலே அறிந்துகொள்ளா வகையில் கள்ளத்தனமாய் மெள்ளப் புகுந்தாள். முதல் நாள் கண்ட அப்பேரழகி உடன் இருக்கும் வரையும் தன்னை இக்கோமகன் விரும்பான் என்று அக் கொடியவள் முடிவு செய்து கொண்டாள் ஆகையால் எப்படியும் அவளைக் கடிந்து ஒழித்து விட வேண்டும் என்னும் பழி நினைவோடு ஒளி மறைவாய்ப் பதுங்கி வந்தாள். குடிசையை நெருங்கினாள். மரங்களின் மறைவில் ஒதுங்கி நின்று குடிலைக் கூர்ந்து நோக்கினாள். தழை குழைகளால் இனிது வேய்ந்துள்ள புனிதமான அத் தவச் சாலையுள் சானகி தனி இருப்பதைக் கண்டாள். தான் கருதி வந்த கொலையைச் செய்தற்கு இதுதான் நல்ல சமையம் என்று உறுதி மீக் கொண்டாள். நேரே துரிதமாய் வந்தாள்.

அதுபொழுது அயலே பொழில் மறைவில் விழி இமையாமல் வில்லுங்கையுமாய்க் காத்து நிற்கின்ற இலக்குவன் இவள் கடுத்து வருவதைப் பார்த்துக் கொண்டான். அவ் வீர மகன் நிற்பதை இவ் வீண மகள் காணவில்லை; தூர வரும்போதே கண்டுகொண்ட அவனும் உடனே கடுத்து விலக்காமல் அடுத்து நிகழ்வதை ஆவலோடு ஆய்ந்து நின்றான்.

இவள் உள்ளே ஒல்லையில் நுழைந்தாள்; நுழையு முன்னரே இளையவன் "அடியே! நில்." என்று வல் விரைந்து பாய்ந்து கூந்தலை இடக்கையால் பற்றிச் சுழற்றி வெட்டி இழுத்தான். இக் கொடியவள் அக் குமரனைச் சீறிப் பிடித்து வாரி மேல் எழுந்தாள். பெண் என்று இரங்கி நின்ற அவன் இவளது பலத்தையும் அடாத்தையும் ஆங்காரத்தையும் உணர்ந்து உடனே உடைவாளை உருவி மூக்கையும் காதையும் அறுத்து எறிந்து வயிற்றில் உதைத்துத் தள்ளினான். இப் பொல்லாதவளை அச் செல்வ மகன் மல்லாடி உருட்டி விட்டு வில்லோடு அயலே வெகுண்டு நின்றான்.

நில் அடீஇ எனக் கடுகினன் பெண்என நினைந்தான் 2824
வில் எடாது அவள் வயங்கெரி யாம்என விரிந்த
சில்லல் ஓதியைச் செங்கையில் திருகுறப் பற்றி
ஒல்வயிற்று உதைத்து ஒளி கிளர் சுற்றுவாள் உருவி. (1)

ஊக்கித் தாங்கிவிண் படர்வெம் என்று உருத்து எழுவாளை
நூக்கி நொய்தினில் வெய்திழையேல் என நுவலா
மூக்கும் காதும் வெம்முரண் முலைக் கண்களும் முறையால் 2825
போக்கிப் போக்கிய சினத்தொடும் புரிகுழல் விட்டான். (2)

அக்கணத்தவள் வாய்திறந்து அரற்றிய அமலை
திக்கனைத்தினும் சென்றது தேவர்தம் செவியும் 2826
புக்கது உற்றது புகல்வது என்? மூக்கெனும் புழையூடு
உக்க சோரியின் ஈரமுற்று உருகியது உலகம். (3)

கொலை துமித்துயர் கொடுங்கதிர் வாளின் அக் கொடியாள்
முலை துமித்துயர் மூக்கினை நீக்கிய முறைமை 2827
மலை துமித்தென இராவணன் மணியுடை மகுடத்
தலை துமித்தற்கு நாட்கொண்டது ஒத்ததுஓர் தன்மை. (4)

அடாதன செய்ய வந்த சூர்ப்பநகை இப்படிப் படாதன பட்டுப் பதைக்க நேர்ந்தாள். அந் நிலைமையைக் கவி இங்கே

வரைந்து காட்டியிருக்கும் காட்சிகள் வியந்து நோக்கத் தக்கன. உயர்ந்த உணர்ச்சிகள் கலைச் சுவையோடு கலந்து விளைந்திருக்கின்றன. வினை நிகழ்ச்சிகள் விழி எதிர் மிளிர்கின்றன.

இலக்குவனது காப்புத் திறனும் கைத்திறனும் வியப்பினை விளைத்துக் களிப்பை மிகத் தருகின்றன. கையில் வில் இருந்தும் கடுத்து அம்பு தொடுத்து அவளை எய்து தொலைக்காமல் மேலே பாய்ந்து தலைமயிரைப் பற்றிப் பிடித்திருக்கிருன். கையால் தொடாமலே கணையால் அடு கொலை செய்திருக்கலாம்; அங்ஙனம் செய்ய வில்லை. ஏன்?

பெண் என நினைந்தான் ஆதலால் வில் எடாது அவள் ஓதியைப் பற்றினன் என ஏதுவை விளக்கி யிருக்கிருர். ஒரு பெண்ணின் மீது பாணத்தைத் தொடுப்பது தன் ஆண்மைக்குப் பிழையாம் என இக் குலமகன் எண்ணி யிருத்தலால் இவனது மேன்மையான வீரப் பான்மை வெளியாய் நின்றது. சில்லல் ஓதி=செறிந்து பரந்த கூந்தல்.

தலையைப் பற்றி இழுத்து அவளை வெளியே தள்ளி விட வேண்டும் என்று கருதியே முதலில் தாவிப் பிடித்தான்; அவள் மாறிச் சீறி மல்லாடி அல்லல் புரியவே இவ் வீரன் வாளை உருவி மூக்கை அறுத்தான்.

"ஊக்கித் தாங்கி விண்படர்வெம் என்று உருத்து எழுவாளை"

என்றதனல் இலக்குவனைத் தூக்கிக் கொண்டு அவள் மேலே போக முயன்றுள்ளாள் என்று தெரிகின்றது. அவளுடைய ஆங்காரத்தையும் ஆற்றலையும் கொடுமையையும் கொலை நோக்கை யும் அறியவே அங்கபங்கம் செய்து அவள் பிடியிலிருந்து இவன் அயல் அகல நேர்ந்தான். பார்வையில் பெண்ணயினும் தீர்வையில் படுகொலையாட்டியாயிருத்தலைச் செயலில் காணவே இக் குமரன் கொதித்து வேலை செய்தான்.

மூக்கை அரிந்தது நோக்க உரியது. கை கால்களுள் எதை யாவது ஒன்றை வெட்டித் தள்ளி யிருக்கலாம்; அங்ஙனம் செய் யாமல் காதையும் மூக்கையும் கடிந்து விட்டது பேதைப்பெண் என்னும் ஏதுவினலேயாம். ஏற்ற தண்டம் ஆற்ற நேர்ந்தது.

அழகி என்று செருக்கி வந்தவளை அவலட்சணமாக்கியிருக்கிறான். ஆணுக்குக் கண்ணும், பெண்ணுக்கு மூக்கும் களைவது கடுந்தண்டனையின் அடையாளங்களாகும். தான் செய்யத் தொடங்கிய தீமைக்கு உரிய வெய்ய பயனை அவள் விரைந்து அடைந்தாள்.

கூரிய வாள் ஆதலால் செவி நாசிகளை வெய்து கொய்து விடுங்கால் முலைகளையும் சிறிது வீசிப் போயது. மங்கையர்க்குத் தலை சிறந்த அங்கங்கள் இங்கே நிலை குலைந்து போயின.

ஒரு உத்தமியைக் கொலை செய்யும் நோக்கோடு கொதித்து வந்து கொடுமை புரிந்திருந்தும் அக் கொடியவளைக் கொன்று விடாமல் இங்ஙனம் குறை செய்து விட்டான்.

இந்த அங்க பங்கம் அரிய ஒரு காரிய முடிவுக்கு நேரிய விளைவாய் ஈண்டு நேர்ந்திருக்கின்றது. கவி அதனை அதி விநயமாய் நினைவூட்டியுள்ளார்.

சூர்ப்பநகை மூக்கு இன்று இங்கே அறுக்கப்பட்டது இராவணன் தலை அங்கே அறுபடுவதற்கு ஒரு நல்ல அறிகுறியாய் அமைந்திருக்கிறது என்றது எவ்வளவு சுவையாய் இசைந்து மிளிர்கின்றது.

"மூக்கினை நீக்கிய முறைமை, இராவணன் தலை துமித்தற்கு நாட் கொண்டது ஒத்தது ஓர் தன்மை" என இனிமேல் நிகழ்வதை இங்ஙனம் இனிது குறித்திருக்கிறார். தங்கை மூக்கிற்கும் அண்ணன் தலைக்கும் என்ன உரிமை!

இந்த மூக்கு அறுபட்ட போதே அந்தத் தலையும் அறுபட்டதாம் என நிலைமையை நினைவுறுத்தியிருக்கும் அழகை நோக்குக.

தங்கை மூக்கைத் தம்பி அறுத்தது, தமையன் தலையை இனி அண்ணன் அறுப்பான் என்னும் உண்மையை உணர்த்தி நின்றது. முன்னோன் பின்னே செய்யவுள்ள பெருவினைக்குப் பின்னோன் முன்னதாக ஒருவழி செய்து வைத்துத் தொழில் புரிந்துளான்.

அரிய பெரிய ஒரு காரியத்தை முடித்தற்கு மூண்டு நிற்பவர் அக் கருமம் இனிது முடியும் பொருட்டு நல்ல ஒருநாளில் சுபமான ஓரையில் காரிய சித்தி கருதித் தெய்வ சிந்தனையுடன் அதனைத் தொடங்கிக் கொள்வர்; சுப முகூர்த்தத்தில் செய்து கொள்ளும் அதனை "நாள் செய்து கொண்டோம்" என்பர்.

கால மழை பெய்தவுடன் உழவர் நல்ல ஓரையில் செய்து கொள்ளும் உழவை நாள் ஏர் என்று கூறுவர்.

கலியாணம் செய்தற்குக் காப்புக் கட்டுதல், வீடு கட்டுதற்கு மூலைப் பிடித்தல் போல் அரிய இராவண வதத்திற்கு உரிமையான ஒன்று பூர்வாங்கமாய் இங்கே புகுந்திருக்கின்றது.

நல்ல மங்கல காரியத்திற்கு மஞ்சளும் குங்குமமும் மருவி வரும்; பல கோடி கொலைகள் விழவுரிய கோரமான கொடிய போர் விளைவுக்கு உகந்த வழி ஆதலால் சிவந்த குருதி சிந்த நேர்ந்தது.

பாரதப் போருக்கு அரவானைக் களப்பலி யூட்டியது போல் இராமாயணப் போருக்குச் சூர்ப்பநகை வேறொரு வகையில் ஈண்டு ஊட்டப் பட்டுள்ளாள்.

மணியுடை மகுடத்தலை என்றது வேந்தர் பிரானாய் வீற்றிருக்கின்ற இராவணனது வியத்தகு நிலைமையை விளக்கி நின்றது.

இளைய பெருமாள் செய்த காரியம் இனி மூத்தபெருமான் செய்யவுள்ள வீரிய வினைக்கு முன் அறிகுறியாய் மூண்டது என மேல் முடிவு நிலைகளை நெடிதுணர்த்தியிருக்கும் திறம் வியந்து சிந்திக்கற்பாலது. சரித வரலாறுகளைச் சரித நோக்கில் சுட்டி அரிய காட்சிகளை ஈட்டச் செய்கின்றார்.

மூக்கு அறுபட்ட இவள் இலங்கைக்கு ஓடி இராவணனை ஏவி விடுகின்றாள்; அவன் வந்து தேவியைக் கவர்ந்து தன் குலத்தோடு அழிகின்றான்; அந்த அழிவு நிலைகளை அழகாகத் தெளிவுறுத்தி மொழிகள் ஒளிசெய்துள்ளன.

உறுப்பு அறுபட்டவுடனே சூர்ப்பநகை துடித்துப் புலம்பிய நிலைகளை அடுத்து வரும் பாடல்களில் தொடுத்துப் பார்க்க.

உயரும் விண்ணிடை; மண்ணிடை விழும்; கிடந்து உழைக்கும்;
2823 அயரும்; கை தலைத்து அலமரும்; ஆருயிர் சோரும்;
பெயரும்; பெண்பிறந்தேன் பட்டபிழை எனப் பிதற்றும்;
துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத் தொல்குடிப் பிறந்தாள்.

ஒற்றும் மூக்கினை; உலையுறு இளகா உயிர்க்கும்;
2833 எற்றும் கையினை நிலத்தினில்; இணைத்தடங் கொங்கை
பற்றும்; பார்க்கும்; மெய்வெயர்க்கும்; தன்பருவலிக் கரலால்
சுற்றும் ஓடும்; போய்ச் சோரிநீர் சொரிதரச் சோரும். (2)

ஊற்று மிக்கநீர் அருவியின் ஒழுகிய குருதிச் 2831
சேற்று வெள்ளத்துள் திரிபவள் தெவ்வரும் திரியக்
கூற்றும் உட்கும்தன் குலத்தினோர் பெயரெலாம் கூறி
ஆற்றுகிற்றிலள் ; பற்பல பன்னி நின்று அழைத்தாள். (3)

உறுப்புகளை அறுத்துவிட்டபொழுது அரக்கி பட்ட பாட்டுகளை இப்பாட்டுகள் நமக்கு நேரே காட்டி நிற்கின்றன. இயற்கை நிகழ்ச்சிகள் வியத்தகு நிலையில் வெளிப்பட்டு மிளிர்கின்றன. துயரத் துடிப்புகள் ஆங்காரத்தோடும் அடலாற்றல்களோடும் ஓங்கி உலாவுகின்றன.

பொல்லாத ஒரு பெண்ணின் பதைப்புகளைக் கண் எதிரே கண்டும் எண்ணம் இரங்காமல் உல்லாச விநோதமாய் உவந்து நோக்கி உள்ளம் களிக்கின்றோம்.

"ஒற்றும் மூக்கினை" என்றது எத்துணை இயற்கைக் காட்சி? அறுபட்டுக் கீழே விழுந்து கிடந்த மூக்கினைத் தன் கையால் எடுத்து மீளவும் மூக்கொடு பொருத்திப் பார்க்கின்றாள் என்றமையால் அந்த உறுப்பை இழந்ததில் அவளுக்கு உண்டான மனத் துயரத்தையும் சினக் கொதிப்பையும் துணித்து உணர்ந்து கொள்ளுகின்றோம். துக்கத்தின் மெய்ப்பாடுகள் பக்கம் எங்கும் பாவி நடித்தலை ஒக்க நோக்குகின்றோம்.

அங்க பங்கமான அந்த அரக்கி மயமாகவே நின்று கவி நடித்திருக்கிறார். இந்த நடிப்பில் நாடகத்தின் பரிபூரண இயல்புகள் இடங்கள் தோறும் பரிமளித்து வருகின்றன.

அவளுடைய மன நிலை, மையல் நோக்கம், பேச்சு, செயல் விசித்திரங்கள் எல்லாம் உயரிய சித்திரங்களாய் ஒளி வீசியுள்ளன.

பழி நோக்கோடு வந்த அவள் பழுதடைந்து பதைத்து நொந்தாள். காம நோய் முதிர்ந்து தீமை செய்யத் துணிந்து தீங்கடைந்து துடித்தாள். இங்ஙனம் துடித்துப் பிதற்றுகின்றவள் யார்? என்பதை வடித்துக் காட்டுகின்றார்.

"துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத் தொல்குடிப் பிறந்தாள்"

இங்கே இது பொழுது அங்க பங்கமாய்த் துயரடைந்து துடிக்கின்ற சூர்ப்பநகையை இங்ஙனம் குறித்திருக்கிறார். இந்த வாக்கியத்தைக் கொஞ்சம் மனம் ஊன்றி நோக்குங்கள்.

துயரமும் அஞ்சி நெருங்காத தொல்குடி என அவளுடைய குடிப் பிறப்பை விளக்கி யிருக்கும் இவ் விளக்கம் வியப்பு மிக வுடையது. இயற்கை நியதியை மிஞ்சியது.

துயரம் என்றால் எவரும் அஞ்சி நடுங்குவர். எல்லாருக்கும் என்றும் இயல்பாகவே அச்சத்தை விளைத்துத் தான் யாண்டும் அஞ்சாமல் உச்ச நிலையில் நிற்கின்ற துயரம் இவள் குடும்பத்தை மட்டும் அணுக அஞ்சி ஆகிமூதல் அயலகன்றுள்ளது என்றதனால் அக் குடியின் வியனிலை விளங்கி நின்றது.

எவரையும் அச்சுறுத்தி வருகின்ற துயரம் இராவணன் மரபினை அணுக அஞ்சுகின்றது; ஏன்? அணுகின் இலங்கேசனை அவன் தன்னைக் கதி கலங்கச் செய்து மிகவும் துயரப் படுத்துவான் என்று கருதித் துயரம் பயந்துள்ளமையால் அருகே யாதும் நெருங்காமல் அயலே ஒதுங்கிப் போயது என்க.

எல்லாரையும் கொன்று வருகின்ற காலனும் அவன் ஊரில் கால் வைக்க மேல் நடுங்குகின்றான்; எங்கும் நுழைகின்ற காற்றும் அங்குப் புக அஞ்சுகின்றது; சிருட்டிக்கு மூல காரணமாயுள்ள பஞ்ச பூதங்களும் அவனுக்கு அஞ்சி ஏவல் செய்கின்றன. எவரையும் நிலை குலைக்கும் துயரமும் அவன் குல மரபை அணுக முடியாமல் அயல் விலகிக் குலை நடுங்கி நிற்கின்றது.

இங்ஙனம் தலைமையான நிலையில் தனி வீறு பெற்றுள்ள அந்த வீரக் குடியில் பிறந்தவள் இங்கே வந்து மூக்கு அறுபட்டு எங்கும் கேட்கும்படி பொங்கி ஓலம் இடுகின்றாள்.

இதுவரை யாதொரு துயரமும் தொடாத தொல்குடி இதிலிருந்து கொடுந் துயரங்களை யெல்லாம் அடைந்து நொந்து அழிய நேர்ந்துள்ளது என மேல் விளைவதை விழி தெரிய விளக்கி யிருக்கிறார்.

முகம் காதுகளிலிருந்து உதிரம் சோர ஆங்காரத்துடன் அதிர வீறிட்டவள் பின்பு தன் உறவினங்களைக்கூவி ஓலமிட்டாள்.

"கூற்றும் உட்கும் தன்குலத்தினோர் பெயரெலாம் கூறி அழைத்தாள்"

என்றதனால் அவளது இனத்தின் ஆற்றலும் ஏற்றமும் எளிது தெளிவாம். அரிய கொடிய வீர மரபினள் என்பது அறியவந்தது.

உடன் பிறந்தாரையும் உற்றாரையும் தனித்தனியே அழைத்து அவள் ஒப்பாரி வைத்திருக்கும் நிலை கலைமணம் கமழ்ந்து தலைமை யான நிலையில் தழைத்து வந்திருக்கின்றது. மடுத்த துயரால் கடுத்த குரலில் அவள் எடுத்துப் புலம்பியுள்ளன அடுத்துக்காண்க.

ஒப்பாரி நிலை.

நிலைஎடுத்து நெடுநிலத்து நீ இருக்கத் தாபதர்கள்
சிலைஎடுத்துத் திரியுமிது சிறிதன்றோ தேவர்எதிர் 2832
தலைஎடுத்து விழியாமைச் சமைப்பதே தழல்எடுத்தான்
மலைஎடுத்த தனிமலையே இவை காண வாராயோ? (1)

புலிதானே புறத்தாகக் குட்டிகோட் படாதென்ன
ஒலியாழி உலகுரைக்கும் உரைபொய்யோ? ஊழியினும் 2833
சலியாத மூவருக்கும் வானவர்க்கும் தானவர்க்கும்
வலியானே யான்பட்ட வலிகாண வாராயோ? (2)

ஆர்த்தானைக் கரசுந்தி அமரர்கணத் தொடும் அடர்ந்த
போர்த்தானை இந்திரனைப் பொருதவனைப் போர்தொலைத்து 2834
வேர்த்தானை உயிர்கொண்டு மீண்டானை வெரின்பண்டு
பார்த்தானே யான்பட்ட பழிவந்து பாராயோ? (3)

காற்றினையும் புனலினையும் கனலினையும் கடுங்காலக்
கூற்றினையும் விண்ணினையும் கோளினையும் பணிகொண்டற்கு
ஆற்றினை நீ ஈண்டு இருவர் மானுடவர்க்கு ஆற்றாது 2835
மாற்றினையோ உன்வலத்தைச் சிவன்தடக்கை வாள் கொண்டாய்!

உருப்படிவம் மன்மதனை ஒத்துளரே ஆயினும் உன்
செருப்படியில் பொடிஒவ்வா மானிடரைச் சீறுதியோ 2836
நெருப்படியிற் பொடி சிதற நிறைந்தமதத் திசையானை
மருப்பு ஒடியப் பொருப்புஇடியத் தோள்நிமிர்த்த வலியோனே!

இந்திரனும் அரன்அயனும் இமையவரும் பணிகேட்பச்
சுந்தரிபல் லாண்டிசைப்ப உலகேழும் தொழுதேத்தச் 2839
சந்திரன்போல் தனிக்குடைக்கீழ் நீயிருக்கும் சபைநடுவே
வந்தடியேன் நாணாது முகம்காட்ட வல்லேனே. (6)

உரன் நெரிந்து விழ என்னை உதைத்துருட்டி மூக்கரிந்த
நரனிருந்து தோள்பார்க்க நான் கிடந்து புலம்புவதோ? 2840
கரன் இருந்த வனம்அன்றோ இவைபடவும் கடவேனோ
அரன் இருந்த மலைஎடுத்த அண்ணாவோ! அண்ணாவோ! (7)

நகையாலே மூக்கிழந்து நாணமிலா நான்பட்ட
2341 வசையாலே நினதுபுகழ் மாசுண்ட தாகாதோ?
திசையானை விசைகலங்கச் செருச்செய்து மருப்பொசித்த
இசையாலே நிறைந்த புயத்து இராவணனே! இராவணனே!

கானமதி னிடைஇருவர் காதொடுமூக் குடன்அரிய
மானமதால் பாவியேன் இவ்வகையாக் கடவேனோ
2342 தானவரைக் கருவறுத்துச் சதமகனைத் தளையில் இட்டு
வானவரைப் பணிகொண்ட மருகாவோ! மருகாவோ! (9)

ஒருகாலத்து உலகேழும் உருத்தெரியத் தனுஒன்றால்
திருகாத சினம்திருகித் திசையானைத்தும் செலநூறி
2343 இருகாலிற் புரந்தரனை இருஞ்சிறையின் இருவித்த
மருகாவோ! மானிடவர் வலிகாண வாராயோ? (10)

கல்லிரும் படைத்தடக்கை அடல்கரதூ டணர்முதலா
அல்லிரும் சுடர்மணிப்பூண் அரக்கர்குலத் தவதரித்தீர்!
2344 கொல்லிரும் படைக்கும்ப கருணனைப்போல் குவலயத்துள்
எல்லிரும் உறங்குதிரோ யான் அழுதல் கேளீரோ? (11)

என்றின்ன பலபன்னி இகல்அரக்கி அழுதிரங்கிப்
பொன்றுன்னும் படியகத்துப் புனைகின்ற பொழுதகத்து
2345 நின்றுஅந்த நதியகத்து நியமத்தின் குறைமுடித்து
வன்றிண்கைச் சிலைநெடுந்தோள் மரகதத்தின் மலைவந்தான். (12)

(சூர்ப்பணகைப்படலம். 101-114)

அங்கபங்கமான அம்மங்கை அழுதிக் கூவியுள்ள இப்புலம்பலில் இயற்கையான உள்ளத் துடிப்புகளும் உரிமைக் கிளர்ச்சிகளும் உணர்ச்சி ததும்பி யிருக்கின்றன. அவளுடைய ஆங்காரங்கள் உரைகள் எங்கணும் ஓங்கி நிற்கின்றன.

தன்னுடைய அண்ணனது வீர பராக்கிரமங்களை யெல்லாம் பன்னிப் பாராட்டி எண்ணிக் கூவியிருக்கிறாள்.

தழல் எடுத்தான் என்றது சிவபெருமானை. மழுமுதல் பரமன் எழுந்தருளியுள்ள கைலாசகிரியைக் கையால் வாரி எடுத்தவ ஐயா! உனது தனி ஆட்சியில் பரதேசிகளான இருவர் வில்லும் கையுமாய்த் திரிந்து பொல்லாத்தனங்கள் புரிகின்றனரே; பெரிய மலை எடுத்த நீ சிறிய இவரைத் தலை எடுக்க விடலாமா? சிலை எடுத்த இவர் கொலை எடுத்தவராய் உன் தங்கையை நிலைகுலைத்துப் புலை விளைத்துள்ளார்; இவ் விளைவினை வந்து ஓ அண்ணா! உன் வீரக் கண்ணால் நேரே பார்த்தருள்.

மலை எடுத்த தனிமலையே! இவை காண வாராயோ?

இந்த வாக்கியம் வனப்பு மிக வாய்ந்தது. தனிமலையே என இராவணனை இனிது குறித்தது அவனது அரிய வலியும் பெருமித நிலையும் கருதி. கொடிய நிலையாயினும் தன் குடியையும் குலத்தையும் பெரிதாக நினைந்து நெடிது புகழ்ந்து வருகின்றாள். அழுது புலம்புவதிலும் ஆற்றலும் வீரங்களும் ஏற்றமாய்த் தோன்றி எழுகின்றன.

தாய்ப்புலி அருகே இல்லையாயினும் புலிக்குட்டியிடம் எவரும் கிட்ட நெருங்கார்; எந்த மிருகமும் அதற்கு யாதொரு தீங்கும் செய்யாது. "புலிக்குட்டிக்குப் புறக்காவல் வேண்டுமா?" என்னும் உலக வழக்கு அதன் நிலைமையை விளக்கியுள்ளது. இந்த முதுமொழியைத் தனக்குச் சொந்தமாக ஈண்டு அவள் எடுத்துக் காட்டியிருக்கிறாள். வலிய புலி மரபு எனத் தன் இனத்தைப் பெருமைப் படுத்திப் பேசியுள்ளாள். உலகிலுள்ள பிற சாதியார் முயல் புல்வாய் நரி முதலிய எளிய பிராணிகளைப் போல்பவர்; தன் குலம் ஆற்றல் மிக்க புலி போல்வது எனப் போற்றிப் புகழ்ந்தாள்.

அத் தகைய வீறுடைய வீரயான குலத்தில் பிறந்த தன்னைச் சிறிய மனிதர் சிதைக்க நேர்ந்தாரே! எவரையும் போரழித்துப் புறங்காண வல்ல அண்ணா! இங்கே வந்து இந்த இழிவினை உன் விழியால் நேரே பார்; அசுரர் அமரர் இந்திரன் முதலிய யாவரையும் வென்று புகழையே கண்டு வந்த கண்ணால் இந்தப் பழியையும் வந்து காண் அண்ணா! கனல் புனல் காற்று கூற்று விண் மண் யாவும் அடக்கி ஊழியம் செய்ய அடலாற்றி நிற்கும் அரசே! மானுடரை மட்டும் மிஞ்சவிட்டிருக்கின்றாயே! அன்று ஒரு பொருளாக மதியாமல் நீ இகழ்ந்து தள்ளிவிட்ட அவர் இதுபொழுது வளர்ந்து தலை நிமிர்ந்து உன்னை மதியாமல் எழுந்து மதமீறி உலாவுகின்றார்.

"உருப்பசு வாம் மன்னர் நினை ஒந்துளரே ஆயினும் உன்
செருப்பு அடியில் பொரு ஒவ்வா மானிடரைச் சீறுதியோ?"

இந்தத் தொடர் எவரையும் விருப்புடன் நோக்கச் செய்யும் வியப்பு மிகவுடையது. அரக்கியின் மனக்கடுப்பும் சினக்கொதிப்பும் இதில் இப்படி வெப்ப மோடு வெளிப்பட்டிருக்கின்றன.

அண்ணனை மிகவும் கண்ணியமாக எண்ணிப் பேசுகின்றாள். அவனது ஆற்றலும் வீரமும் அளவிடலரியன. மருப்பு என்றது திக்கு யானைகளின் தந்தங்களை. பொருப்பு=மேருமலை.

"மருப்பு ஒடியப் பொருப்பு இடியத் தோள் நிமிர்த்த வலியோனே!" என்றது அத்தகைய வீரனை உன்னோடு உடன் பிறந்த தங்கையின் உறுப்பை அறுத்து எறிய ஒருவன் துணிந்தானே; இன்னும் அவன் உயிரோடு நிற்கின்றானே! என நிலைமையை நினைந்து நெஞ்சம் கொதித்துள்ளாள்.

சினந்து சீறித் திட்டுகின்ற போதும் இராமன் மீது கொண்டுள்ள காம மோகம் நெஞ்சை விட்டு நீங்கவில்லை. அழகில் மன்மதனை அனையவர் என மனம் கனிந்து நினைந்தாள்; நினைந்தும் நிட்டூரமாகத் திட்ட நேர்ந்தாள்.

உன் செருப்பு அடியில் பொடி ஒவ்வா மானிடர் என்றதில் வெறுப்பும் வேகமும் எவ்வளவு விரிந்திருக்கின்றன!

இராவணனுடைய காலில் நேரே ஒட்டிய தூள் மேலான மேன்மையுடையது எனக் கருதியுள்ளமையால் அதனினும் கீழானதைச் சுட்டிச் சொன்னாள்.

அவன் பாதம் படியில் படியாது; எப்பொழுதும் அழகிய உறையினுள்ளேயே மருவியிருக்கும்; அம்மருமமும் இங்கே நுணுகி அறிய வந்தது.

உன்னுடைய கால் செருப்பின் அடியில் ஒட்டிய ஒரு சிறு தூசிக்கும் ஒப்பாகாத அற்ப மனிதர் என அவமதித்து இகழ்ந்து பேசியுள்ளாள். அண்ணனை எண்ணிய பொழுது எவரையும் எளிதாக எண்ண நேர்ந்தாள்.

தனக்கு இடர் இழைத்தது இளையவன் ஆயினும் மூத்தவனையும் இணைத்துச் சேர்த்துக்கொண்டாள். தன் இச்சைக்கு உடனே அவன் இசைந்திருந்தால் இந்த இழவு நேர்ந்திராதே! என்று வருந்தியிருக்கிறாள்.

காமக் காதலால் கருத்துருகி நின்றவள் உறுப்பு அறுபடவே உள்ளம் கொதித்து இவ்வாறு வெறுப்புடன் வீறிட்டாள்.

இராமனைக் கருதும்தோறும் உருகி உவந்து முழு முதல் கடவுள் என உழுவலன்பு கனிய அழகிய மொழிகளால் துதித்து வழிபட்டு வருகின்ற கவி இங்கே முழுவதும் மாறிப் பழிபடப் பேசியிருக்கிறார். இங்ஙனம் பேசியதுபோல் இனி வேறு எங்கணும் காணமுடியாது.

இவன் அடிப்பொடிக்குப் புரந்தரனும் ஒவ்வான் என யாண்டும் நிரந்தரமாய்ப் புகழ்ந்து போற்றி வருகின்ற இராமனை ஈண்டு இராவணன் செருப்படியின் பொடிக்கும் நிகராகான் என்றது அதிசய சிந்தனையாய் மதிநிலையைக் கடந்திருக்கின்றது. உண்மைக் கவியின் தன்மை ஒளி மிகுந்துள்ளது.

சூர்ப்பநகையின் உள்ளத்தையும் உயிரையும் ஒருங்கே உட்கொண்டு கவி உரையாடியிருக்கும் ஒருமைப்பாடு அருமை மிகவுடையது. அவள் மயமாகவே மாறியுள்ளமையால் பரிபூரணமான நடிப்பு இதில் சொலித்து நிற்கின்றது.

எந்தப் பாத்திரம் அரங்கில் வந்து நடிக்கின்றதோ அந்தப் பாத்திரமாகவே ஆகிவிடுகின்றார். ஆதலினாலேதான் இக் காவியம் தொட்ட தொட்ட இடம் எல்லாம் சுவை சுரந்து திவ்விய தேசுடன் சிறந்து திகழ்கின்றது. சீவிய ஓவியங்கள் யாண்டும் தேவியல்புகளாய்ச் செழித்து மிளிர்கின்றன. இயற்கைக் காட்சிகள் இன்ப நிலையங்கள் ஆகின்றன.

செருப்படியில் பொடி என்றதில் வேறு ஒரு பொருளும் தொனித்திருக்கின்றது. செரு=போர். படி=நிலம். அரிய அழகுடையராயினும் பொரு களத்தில் உன் எதிரேவரின் சிறிய தூசி போல்வர் என அவள் ஏசி இளித்தபடியாகவும் இவ் வாசகம் அமைந்திருக்கிறது.

இந்தப் பொருளை யாதும் எண்ணவில்லை; மூந்தையதையே அவள் சிந்தை துணிந்துள்ளாள்; ஆயினும் இந்த வண்ணமும் கவி இடம் பெற்றுள்ளது.

போர் குறித்து அடிக்கும் பறையைச் செருப்பறை (புறம், 279) என்பது போல் இங்கே இரண்டாவது பொருளில் "செருப்படி" வந்தது. செருப்பு அடி, செருப்படி என இரு பொருள் படப் பிரித்திசைப்பினும் அவள் குறிப்பே இதில் உருப்படியாய் ஒருப்பட்டிருக்கின்றது.

இலங்கை வேந்தனுடைய போராற்றலும் பெருமித நிலைகளும் இத்தங்கை வாயிலாக இங்கே பல வெளிப்படலாயின. அண்ணனைக் குறித்து இங்ஙனம் கூறியவள் பின்பு மருமகனையும் நினைந்து புலம்பினாள்.

"இருகாலில் புரந்தரனை இருஞ்சிறையின் இடுவித்த
மருகாவோ! மானிடவர் வலிகாண வாராயோ?"

இந்திரசித்தைக் குறித்து இவ்வாறு கூறியிருக்கிறாள். தேவராசனையும் சிறையில் இட்ட ஓ வீர மருகா! உன் மாமியை மனிதர் செய்திருக்கும் அவமானத்தை ஓடி வந்து பார்! சுத்த வீரனை உனது அத்தை இனி இத்தரையில் இருக்கலாமா? இவ்வாறு பல பல சொல்லிப் புலம்பினவள் உதவிக்கு ஒருவரும் உடனே வராமையால் உள்ளம் வெறுத்தாள். இறுதியில் மனம் நொந்து ஏசினாள்.

"கும்பகருணனைப் போல் எல்லீரும் உறங்குதிரோ? யான் அழைத்தல் கேளீரோ" அவள் அலுத்துச் சலித்துப் பேசியுள்ளமையை இதில் அறிந்து கொள்ளுகின்றோம். பெண்ணான நான் இங்கே பிழைபட்டுத் துடிக்கின்றேனே; நீங்கள் எல்லாரும் அங்கே தூங்கு மூஞ்சிகளாய் உறங்கிக் கிடக்கின்றீர்களே! உங்களுடைய மானம் வீரம் யாவும் மாண்டு போயினவே! இனி மீண்டு நீவிர் தலை நீட்டி வெளிவர நீதியுண்டா? என்று பழிபடப் பேசியிருக்கிறாள்.

தம்பியான வீபீடணனைக் குறித்து இங்கே அவள் யாதும் கூறவில்லை. அவன் சாதுவானவன்; போர் முதலிய பொல்லாக் காரியங்களுக்கு ஏதும் ஒல்லான் என அவனை எள்ளி இகழ்ந்துள்ளமையால் ஒன்றும் சொல்லாது விட்டாள்.

ஆங்காரத்தோடு ஓலமிட்டு அவள் ஒப்பாரி வைத்திருப்பதில் அவளது குலப் பெருமைகளும் குடியின் ஆற்றல்களும் சலஞ் சாதிக்கும் கொடுமைகளும் நிலம் காண வெளிப்பட்டிருக்கின்றன.

## இராமன் கண்டு வினவியது.

இங்ஙனம் அவள் அழுது புலம்பி அடங் கொண்டிருக்குங்கால் இராமன் நதியிலிருந்து நியமம் முடித்து அங்கே வந்தான்.

"நின்று அந்த நதியகத்து நிறைதவத்தின் குறைமுடித்து
வன்திண்மைச் சிலைநெடுந்தோள் மரகதத்தின் மலைவந்தான்"

காலையில் எழுந்தவுடனே நம் கோமகன் கோதாவரிக்குச் சென்று நீராடி வருமுன் இப் போராட்டம் நிகழ்ந்துள்ளமை இங்கே புலனாய் நின்றது. காலக் குறிப்பைச் சாலவும் உரிமையாகக் காட்டி வருகின்றார்.

நிறை தவத்தின் குறை முடித்து என்னும் இவ்வுரை முடிவை உவந்து நோக்குகின்றோம். நிறைவில் ஒரு குறைவு எவ்வாறு மருவியிருக்கும்? நதியின் தவ நிறைவா? தவத்தின் தவ நிறைவா? தனது தவ நிறைவா? இந்தக் குல மகன் காலையில் செய்த கருமக் கடன் எந்தக் கருமத்தை நிறைவு செய்து குறை தீர்த்தருளியது? இந்தவாறான சிந்தனைகளை முந்திய வாக்கியம் விளைத்திருக்கிறது.

இனிய சீவ நதிகளும், அரிய தவங்களும், பெரிய புண்ணியங்களும் இவன் தொடர்பால் நிறை தவம் உடையனவாய் நிலவி ஒளிர்கின்றன. அமரர் குறை முடிக்க வந்தவன் தவம் முடித்து வந்தான்.

நல்லன எல்லாம் நிறைவுற வந்த இவ்வல்லவன் பொல்லாதவளது குறைபாடுகளையும் முறையீடுகளையும் இடையே காண நேர்ந்தான். நதியிலிருந்து விரதசீலனாய்ச் சாலையை நோக்கி வருகின்ற அவ்வுருவ நிலையை நம் விழிகள் களிப்பக் காட்டுகின்றார்.

சிலை நெடுந்தோள் மரகதத்தின் மலை வந்தான்

எழிற்கோலத் திருமேனியனை இராமன் அன்று அங்கே நடந்து வந்த காட்சி நம் கண்ணினும் நெஞ்சினும் என்றும் நிலையாய் நின்று நிறைந்த மகிழ்ச்சியைச் சுரந்து வருகின்றது.

விழிகளிப்ப இன்னணம் வழியே நடந்து வந்தவன் குடிசை அயல் அணுகவும் அக்கொடியவள் கண்டாள். அலறி எழுந்து எதிரோடி வந்து காலில் விழுந்தாள்.

"அந்தோ உன் திருமேனிக்கு அன்பு இறைந்த வன்பிழையால்
எந்தாய்! யான்பட்டபரிசு இதுகாண் என்று எதிர்விழுந்தாள்."

உன் உருவ அழகில் மயங்கி ஆசைகொண்ட பருவ மங்கைக்கு இந்தப் படு கேடு வந்ததே என்று அழுது புலம்பினாள்.

உடல் முழுதும் உதிரம் படிந்து மூக்கிழந்து தலைவிரி கோலமாய் நிலை குலைந்து புலம்புகின்ற அப்புலைமகளைக் கண்டதும் இக் குலமகன் உள்ளம் இரங்கினான்; உற்றதை ஓர்ந்தான்; "இக் கொடியவள் ஏதோ தீங்கு செய்துள்ளாள்; இளையவன் செய்த வேலை இது" என உளம் உணர்ந்து கொண்டான்.

அவளை யாதும் அறியாதவன் போல் "நீ யார் அம்மா?" என்று நேரே வினவினான். அதைக் கேட்டு அவள் திகைத்தாள். "அதற்குள் இனந்தெரியாமல் மறந்து போயினீரே!" என்று மனம் புழுங்கி நொந்தாள்.

தன்னைத் தெளிவாக விளக்க நேர்ந்தாள்.

"வேம் இருந்தை எனக்கனலும் வெங்காம வெம்பிணிக்கு
மாமருந்தே! நெருநலினும் வந்திலனோ யான்?"

"நேற்று என்னுடன் நீங்கள் நெடுநேரம் அன்பாகப் பேசிக் கொண்டிருந்தீர்களே! இன்று அடையாளம் தெரியவில்லையா? என் கட்டழகு பட்டொழிந்ததே! மூக்கையும் காதையும் அறுத்து எனது அரிய எழிலைப் பாவி கெடுத்துவிட்டானே! இனி நான் என் செய்வேன்? உங்களைக் கண்டு காதல் கொண்ட எனக்கு இப்படி அலகேடு வரலாமா? நேற்றுப் பேசிய உங்கள் ஆதரவான வார்த்தைகளை இப்பொழுது நினைந்தாலும் என் நெஞ்சம் களிக்கின்றதே! நான் எண்ணியிருந்த இன்ப நலங்கள் எல்லாம் மண்ணாய்ப் போயினவே! அந்தோ? அஞ்சன வண்ணா! என்னைக் கண் பார்த்தருள்" என்று காலடியில் விழுந்து கதறி அழுதாள்.

இந்த அல்லலிலும் காமதாபம் அவள் உள்ளத்தைவிட்டு ஒழியவில்லை என்று தெரிகின்றது. இருந்தை = கரி. விறகு பற்றிய தழலைப்போல் வெளியே கொழுந்துவிட்டு எரியாமல் உள்ளே மண்டி மறுகிக் காம நசை கனன்று கொண்டிருந்தமையால் வேம் இருந்தை எனக் கனலும் வெங்காம வெம்பிணி எனத் தன் பிணியை வெளிப்படுத்தினாள். வேம் = வேகின்ற. காமத் தீயால் உள்ளம் வெந்து தவிக்கும் விதம் அறியவந்தது.

உறுப்புக் குறைபட்டும் உள்ளே காமம் குறையவில்லை.

காம வெம்பிணிக்கு மாமருந்தே! என இராமனுக்கு இவ்வாறு ஒரு பெயர் தந்திருக்கிறாள். மரணவேதனையாய்த் தன்

உயிரை வருத்தும் கொடிய நோயை உடனே தீர்க்க வல்ல உயர் மருந்து என்பது மா என்னும் அடையால் காண வந்தது.

இந்த மருந்தைத் தவிர வேறு எந்த மருந்தாலும், எவ்வித மந்திரங்களாலும் யாதும் தீராது எனத் தன் பிணியின் நிலைமையை ஆராமையோடு அறிவித்தாள்.

பிணிக்கு மருந்து பிறமன்; அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து. (குறள் 1102)

தான் கருதிய உருவம் மருவினால் அன்றிக் காமப் பிணிக்கு வேறு மருந்தில்லை என்பதை இதனால் அறிந்துகொள்கின்றோம். இப் பொய்யா மொழியை அப்பொய் மொழியாள் பொருள் மொழியாக்கி உய்வழி நாடினாள்.

சாதலான நோதல் நிலையிலும் காதல்மீதூர்ந்து அவ்வம்பி இங்ஙனம் பேசவே நம்பி புன்னகையுடன் தம்பியை நோக்கி, “இவள் என்ன பிழை செய்தாள்? நீ இன்ன துயர் செய்ய?” என நன்னயமாக நவின்றான். நிகழ்ந்ததை இளையவன் உளைந்து உரைத்தான்.

“யாது கருதியோ இத் தீய பாதகி தாய்மேல் பாய்ந்தாள்” என்று அவ்வீரமகன் சொல்லி முடிக்குமுன்னரே இவள் கோரமாய்த் துள்ளி எழுந்து அச்சொல்லை இடை மறுத்துச் சுளித்துப்பேசினாள். அவள் உரைத்த பதில் சிரிப்பை விளைக்கின்றது. அடுத்து வருகின்றது.

ஏற்றவளை வரிசிலையோன் இயம்பாமுன் இகல் அரக்கி
சேற்றவளை தன்கணவன் அருகிருப்பச் சினம் திருகிக் 2855
கூற்றவளை நீர் உழக்கும் துறைகெழுநீர் வளநாடா!
மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனம் என்றாள்.

அவளது வம்புவாதங்கள் எவ்வளவு தெம்பாய் எழுந்திருக்கின்றன! வளைத்த வில்லுடன் அதுபொழுது இலக்குவன் நின்ற நிலைமை தெரிய வளைசிலையோன் என்றார். இவ்வில்லாளி சொல் எதிரே அப்பொல்லாதவள் சொல்லாடினாள்.

வளநாடா! என இராமனை உளம் நாடி விளித்தது, தேச அதிபதியாய்ச் சிறந்திருக்கும் அவனது உயர்ந்த அரசமாட்சியை வியந்து. சிறந்த சுகி எனச் சுவை விழைந்து குறித்தாள்.

நாட்டு வளத்தைக் காட்டி நயங்களைப் போற்றித் தன் உள்ளத்தைக் ஆர்ப்பவளை இதில் காட்டியிருக்கிறாள். இப்பாட்டு நகைச்சுவையுடையதாய அகப்பொருள் துறை படிந்து ஆழ்ந்த நோக்குடன் ஆழ்ந்து வந்துள்ளது.

"ஒரு ஆண் தவளை பெண் சங்கின் அயலில் ஒரு நாள் இயல்பாக இருந்தது. அந்த நிலையை அதன் பெண் தவளை கண்டது; அப்பொழுது அது கருவுற்றிருந்தது; அங்ஙனம் சூல் கொண்டிருந்தும் தன் கணவன் அச்சங்கு அருகே தங்கியுள்ளதைச் சகிக்காமல் பொங்கிய கோபத்தோடு தன் காலால் தண்ணீரைக் கலக்கிச் சஞ்சலம் மிகுந்தது; அத்தகைய நீர்வளம் நிறைந்த நில மண்டலத்தை ஆளும் ஓ அரசர் பெருமானே! ஒரு சக்களத்தியைக் கண்டால் என் உள்ளம் எப்படிச் சகிக்கும்? இதனை உணர்ந்து யோசியுங்கள். நான் பிழை செய்ய நேர்ந்ததாக இந்த இளையவன் பேசுவது எவ்வளவு பிழை? ஒரு பிழையும் அறியாதவள்; தன் உரிமைப்பொருளை உவந்து பேண வந்தவளை இப்படிச் சிறுமைப்படுத்திவிட்டானே! இவன் ஒரு ஆண் பிள்ளையா? யாரும் தொடாத ஒரு இளம் பெண்ணைத் தொட்டுப் பிடித்து அங்கபங்கம் செய்வது மரியாதையா? வல்லவன் போல வில்லையும் வைத்துக்கொண்டு மேலும் உங்கள் எதிரே பொல்லாத வார்த்தைகளைச் சொல்லவும் துணிந்தான்; எல்லாவற்றை நன்றாக ஆராய்ந்து எனக்கு நீதிபுரிந்து என்னை ஆதரித்தருள வேண்டும்" என அவள் வாதாடினாள்.

தனக்குச் சாதகமாக வாதத்தில் அவள் கையாண்டுள்ள குறிப்புரைகள் கூர்ந்து நோக்கத் தக்கன.

வளை = சங்கு. சேற்று வளை என்றது சேறு படிந்தது என அதன் அசுத்த நிலை தெரிய வந்தது. சேற்றில் அளைந்து இழிந்து திரிவது என இகழ்ச்சிக் குறிப்பில் வந்தது.

சூற்றவளை = சூல் கொண்ட தவளை. நிலைக்குறிப்புக் காட்டியது கலவிக்கு உரிமையின்றி விலகியிருக்கும் கால நிலை தெரிய.

கருவடைந்த பின் நாயகனோடு மருவ முடியாத இயல்பு விலங்கினங்களிடம் இயல்பாக அமைந்திருக்கின்றன. மானிடங்கள் இந்நிலையில் ஊனம் அடைந்துள்ளன.

ஞானமுடையனவாய் நன்கு அமைந்து வந்தும் சில வகைக ளில் கான விலங்கினும் மனித இனம் கடைப்பட்டிருப்பது இயற்கை விநோதமாயுள்ளது.

இழிந்த நீர்வாழ் சந்துவின் இயல்பை எடுத்துக் காட்டி தனக்கு ஓர் உயர்ந்த வாழ்வை ஆக்கி வேண்டியிருக்கிறாள்.

கலவி இன்பத்தை அனுபவிக்க முடியாதபடி கருவுற்று விலங்கி யிருக்கும் காலத்தும் தனது துணைவனை அயல் ஒரு பெடை அருகே காணவும் சகிக்காதே உன் நாட்டுத் தவளை; எல்லா இன்ப நலங்களையும் நன்கு அனுபவிக்க உரிய பருவம் கனிந் துள்ள நான் உரிமையாளனான உன்னை வேறு ஒருத்தியிடம் விட்டு வைக்க முடியுமா? ஒரு வேளை நான் இசைந்தாலும் என் உள்ளம் பொறுக்குமா? உயிர் இருக்குமா? வள்ளலே உணர்ந்தருள்.

மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனம்?

இந்தக் கேள்வி எப்படி? இராமன் திரு முகத்தை நோக்கி உரிமையுடையளாய் அவள் இவ்வாறு உளறியிருக்கிறாள்.

அன்பு நலம் கனிந்த இன்பக் காதலைத் தான் ஏக போக மாய் அனுபவிக்க ஒட்டாமல் பாகம் கொள்ள வந்துள்ளவள் மேல் நான் கோபம் கொள்ளாமல் இருப்பேனோ? என்று தன் தாபத்தை வெளிப்படுத்தித் தனது கடமையை உணர்த்தினள். சக்களத்திகளுக்கு உள்ள பகைமைக் காய்ச்சலைத் தனக்குத் தகைமை செய்துகொண்டாள்.

தான் ஒருத்தியே இராமனுக்கு என்றும் சொந்தமாக ஏற்ற வள் என்பது தெரியச் சீதையை மாற்றவள் என்றாள்.

என்னைப்போல் இடையே வந்தவள் என முன்னம் தன்னுள் எண்ணிய எண்ணம் இந்த மொழிவழியே வெளியாயது.

செற்ற வளை சீதைக்கும், சூல் தவளை சூர்ப்பநகைக்கும், ஆண் தவளை இராமனுக்கும் ஒப்பாம். உவமானங்களிலிருந்து உவமேய நிலைகள் வெளியாகின்றன.

தானும் இராமனும் ஒரே இனம்; சீதை அன்னிய சாதி என்பது குறிப்பு. நல்ல நீர்த் தவளைக்கும், செற்ற வளைக்கும் எங்கேயாவது சம்பந்தம் உண்டா? சாதி கெட்டவள் என் காதல னைக் காதலித்து வந்து என்னைச் சோதனைக்குள் ஆக்கினள் என நோதல் மிக்கவளாய் வேதனையுற்றுள்ளாள்.

சூல் தவளை என்று தன்னைச் சுட்டியிருத்தலால் அப்பொழுது ஏதாவது வயிற்றில் அவள் உண்டாகியிருப்பாளோ? என்று சந்தேகம் உண்டாகின்றது.

சக்களத்திப் போர் என இந்நாட்டில் வழங்கிவரும் பழமொழிப் பொருள் இப்பாட்டில் தொனிக்கின்றது. இருதார வாழ்வு பரிதாபம் என்பதை ஒருவாறு இதில் உணர்கின்றோம்.

முதலில் மணந்து கொள்வது தான் தாரம்; இரண்டாவது நேரின் அது பாரம்; மூன்றாவது ஆயின் கோரம் ஆம் என்னும் உலக வசனமும் ஈண்டு நினைவு கூர வுரியது.

இரு மனைவியர் ஒரு மனமாய் இசைந்திருத்தல் பெரிதும் அரிது; கலகமும் கடுப்பும் எப்பொழுதும் அவரிடை விலகாமல் விளைந்து கொண்டே யிருக்கும்.

> "எந்தவூர்? எந்தச்சாதி? யார்மகள்? யாவர்காணச்
> செந்தழல் சான்றா எங்கோன் கடிமணம் செய்துவந்த
> கொந்தவிழ் கோதைநீ? என் கொழுநனுக்கு ஆசைப்பட்டு
> வந்தவ ளான காமக் கிழத்திக்குஏன் வாயும் வீறும்?"
>
> (திருவிளையாடல்)

என இவ்வாறு நிந்தனைகள் சக்களத்திகளுள் நிகழும் ஆதலால் அவர் தம் சிந்தனைகளும் சிறுமைகளும் தெரியலாகும்.

இங்கே அரக்கி மூண்டதுதான் வியப்பாகின்றது. ஒருநாள் கண்டாள்; தனக்குள்ளேயே உரிமை செய்து இங்ஙனம் போராட நேர்ந்தாள்.

மாற்றவள் என்று தூற்றியிருத்தலால் தன்னை மூத்தவள் என்று கருதிக் கொண்டாள். இயல்பாகவே என்றும் இளையவள் மயலான இவள் வாயினாலும் இன்று இளையவளாயினாள். இளையவள் = இலட்சுமி. சீதேவிக்கு எதிரே இப்படி ஒரு மூதேவியும் வந்து சேர்ந்தாள்.

தன் நாட்டுத் தண்ணீர் வாழும் பிராணியும் நன்னீர்மையுடன் வாழ்தலை நயந்து காட்டிப் பெண்ணீர்மை தெரிந்து தன்னைப் பேணிக்கொள்ளும்படி அப்பொல்லாதாள் இந்நல்லாளை நயந்து வேண்டினாள். அப் புல்லிய சொல்லைக் கேட்டதும்

இவ் வில் வீரன் வெகுண்டான். தன் அருமை மனைவிக்கு அபாயம் செய்ய நேர்ந்தாள் என்றதைக் கேட்டவுடனே இந்த ஆண்டகையின் உள்ளம் துடித்தது. அக்கள்ளியை எள்ளி இகழ்ந்து அவ்வனத்தை விட்டு விரைந்து ஒழிந்துபோம்படி கடிந்து மொழிந்தான். அக்கோப வார்த்தைகள் அடியில் வருவன.

"பேடிப்போர் வல்லரக்கர் பெருங்குலத்தை ஒருங்கு அவிப்பான்
தேடிப்போந்தனம்; இன்றுதீமாற்றம் சில விளம்பி
வீடிப்போகாதே! இம்மெய்வனத்தை விட்டகல
ஓடிப்போ"

என உருத்து உரைத்திருத்தலால் இவன் உள்ளம் கொதித்து வெறுத்துள்ளமை அறியலாகும்.

அப் பேதைமேல் எழுந்தகோபம் அவளது சாதி முழுவதையும் வளைந்து கொண்டது. நெஞ்சில் பதிந்துள்ளது நேரே வெளி வந்தது. வஞ்ச மகளுடைய வெஞ் செயலும் வாயாடித் தனமும் வன் சினத்தை வளர்த்தது.

விளையாட்டு நோக்கோடு முன்னம் சிறிது பேச நேர்ந்தது வீணாய் மூண்டதே எனப் பெரிதும் வருந்தி இவ் வீர மகன் சீறியிருக்கிறான்.

அரக்கர் குலத்தை ஒருங்கு அவிப்பான் தேடிப் போந்தனம் என்றது தாம் உண்மையாக நாடி வந்துள்ளதை வெளிப்படுத்தியது. தன்மைப் பன்மை தம்பியையும் தழுவி அன்பு கனிந்தது. பேடிப்போர் என்றது நீதி நெறி பிறழ்ந்து நேர்மையின்றி வஞ்சப் போர் புரிபவர் என அரக்கரது வெஞ்செயலை வெறுத்து வந்தது.

சத்தியமும் சுத்தமும் நேர்மையும் சீர்மையு முடையது வீரப் போர்; அவை இல்லாதது பேடிப்போர் என்க.

அரக்கர்களுடைய அரிய திறல்களையும், பெரிய போராற்றல்களையும் ஒரு சிறிதும் மதியாமல் இவ்வீரன் உறுதி கொண்டுள்ளமை இவ்வுரையால் வெளியாயது.

உன் குலத்தை அடியோடு ஒழிக்க வழி நாடி வந்திருக்கிறோம்; இனி வீணே இங்கு நின்று பேசினால் நீ செத்துத் தொலைவாய்; ஓடிப்போ என இவ்வுச்ச வீரன் அக்கொச்சை மகளை எச்சரித்தான். உத்தம உள்ளம் உருத்து எழுந்தது.

பழைய சரச மொழிகள் பறந்து போயின; இப்பொழுது வெறுப்பும் கோபமும் வேகமாய் விளைந்தன. தன் ஆவி அனைய தேவிக்கு அப்பாவி இடர் இழைக்க எண்ணினமையால் இக் கண்ணனுக்குக் கடுஞ்சினமாயது. பெண் உருவில் வந்த பேய் என்று இகழ்ந்து ஒழிந்துபோ என உருத்து முடுக்கினன்.

வீடிப்போகாதே ஓடிப்போ என்றது தம்பி கையால் அவ் வம்பி கொலையுண்டு அங்கே இறந்து போகாதபடி பரிந்து கூறிய படியாம். வீடுதல் = அழிதல், சாதல். இங்ஙனம் கருணையோடு கடிந்து கூறியும் அக்கள்ளியின் உள்ளம் கலங்கவில்லை. இவ்வீரனை விழைந்து நோக்கி அதி தீரமோடு ஆர்வ மொழிகள் ஆடினள்.

"அண்ணலே பெண் என்று இரங்காமல் இவ்வண்ணம் பேசுவது பிழை; இங்கே நின்றால் வீடிப்போவேன் என அச்சுறுத்தி என்னை ஓடிப்போ என்று வெருட்டுகிறீர்கள்; நான் ஓடிப்போ போனால் நீங்கள் உடனே வீடிப் போவீர்களே! என்ற இரக்கத்தினாலேதான் என் மனம் கேளாமல் மறுகி உருகி நிற்கின்றேன். எனது அண்ணனுடைய அருந்திறலையும் மன நிலையையும் நீங்கள் தெரிந்து கொள்ளவில்லை; தேவ தேவர்களும் அவனுக்கு அஞ்சி அடங்கியுள்ளனர். மூவுலகங்களும் ஏவல் செய்கின்றன. அதி சூரனை அந்த வீர சக்கரவர்த்தியின் உடன் பிறந்த தங்கை நான்; என்னை நீங்கள் மானக்கேடு செய்திருக்கிறீர்கள்; இதனை அவன் அறிந்தால் உங்களை மட்டும் அன்று உங்கள் குல முழுவதையும் ஒருங்கே நாசம் செய்து விடுவான்; அந்த நாசம் உங்களுக்கு நேராதபடி நான் இந்தவாறு ஆசையால் இங்கே மண்டி மன்றாடுகின்றேன்; இந் நிலைமையை உணர்ந்துகொள்ளவேண்டும்; எவ்வழியும் உங்கள் நன்மையையே நாடி உள்ளம் உருகி உரிமை கொண்டுள்ள என்னை வெளியே தள்ளிவிட எண்ணுவது அநியாயமாகும்; பழியும் அழிவும் நேராதபடி நோக்கிக் கொள்ளுங்கள்" என இங்ஙனம் ஊக்கி உரைத்தாள்.

அவளுடைய இச்சையும் அச்சுறுத்தல்களும் கொச்சை நிலைகளில் குலாவி நிற்கின்றன. அவள் ஊக்கிக் கூறிய உரைகள் அவளது உள்ளத்தை வெளிப் படுத்தி புல்லிய காமக் களிப்பை நோக்கச் செய்கின்றன. அயலே வருவன நோக்குக.

ஆக்கரிய மூக்குங்கை அரியுண்டாள் என்றுரை 2856
நாக்கரியும் தயமுகனார் நாகரிகர் அல்லாமை
மூக்கரிந்து நும்குலத்தை முதல் அரிந்தீர்! இனி உமக்குப்
போக்கரிது இவ் அழகை எல்லாம் புல்லிடையே உகுத்தீரே. (1)

வான்காப்போர் மண்காப்போர் மாநாகர் வாழுலகம் 2857
தான்காப்போர் இனித் தங்கள் தலைகாத்து நின்றுங்கள்
ஊன்காக்க உரியார் யார்? என்னையுயிர் நீர்காக்கின்
யான் காப்பென் அல்லால் அவ் இராவணனார் உளர் என்றாள். (2)

காவலின் கற்பமைந்தார் தம்பெருமை நாம்கழறோர் 2858
ஆவல்பேர் அன்பினால் அறைகின்றேன் ஆமன்றோ
தேவர்க்கும் வலியான் தன் திருத்தங்கையாள் இவள் கண்டு
ஏவர்க்கும் வலியாள் என்று இளையானுக்கு இயம்பீரோ? (3)

மாப்போரில் புறம்காப்பேன்; வான்சுமந்து செலவல்லேன்; 2859
தூப்போலக் கனிபலவும் சுவையுடைய தரவல்லேன்;
காப்போரைக் கைத்துளென்? நீர் கருதியது தருவென் இப்
பூப்போலும் மெல்லியலால் பொருள் என்னோ? புகல்வீரால்! (4)

குலத்தாலும் நலத்தாலும் குறித்தனவே கொணர்தக்க 2860
வலத்தாலும் மதியாலும் வடிவாலும் மடத்தாலும்
நிலத்தாரும் விசும்பாரும் நேரிழையார் என்னைப்போல்
சொலத்தான் இங்கு உரியாரைச் சொல்லீரோ வல்லீரேல். (5)

போக்கினீர் என நாசி போயதென்? நீர் பொறுக்குவிரேல்
ஆக்குவென் ஓர் நொடிவரையின் அழகமைவென் அருள் கூரும் 2861
பாக்கியம் உண்டெனின் அதனால் பெண்மைக்கு ஓர் பழுதுண்டோ
மேக்குயரும் நெடுமூக்கும் மடந்தையர்க்கு மிகை அன்றோ? (6)

விண்டாரே அல்லாரோ வேண்டாதார் நான் வேண்டின்
உண்டாய காதலின் என் உயிர் என்பதும் அது அன்றோ 2862
கண்டாரே காதலிக்கும் கட்டழகும் விடம் அன்றோ
கொண்டாரே கொண்டாடும் உருப்பெற்றால் கொள்ளீரோ. (7)

சிவனும் மலர்த் திசைமுகனும் திருமாலும் தெறுகுலிசத் 2863
தவனும் அடுத்து ஒன்றாகி நின்றனைய உருவோனே!
புவனம் அனைத்தையும் மற்றுந்தன் பூங்கணையால் உயிர் வாங்கும்
அவனும் உனக்கு இளையானோ? இவனேபோல் அருளிலனால்.

(சூர்ப்பநகைப் படலம், 125-132)

பங்கம் அடைந்தும் அவள் இங்ஙனம் பேசியிருக்கிறாள். உருட்டலும் மிரட்டலும் வெருட்டலும் பேச்சில் வெளிப்பட்டு

நிற்கின்றன. தன்னுடைய பக்க பலங்களையும் தான் ஒரு செல்வச் சீமாட்டியாய்ச் சிறந்திருத்தலையும் சுட்டிக் காட்டி ஒட்டிக்கொள்ள ஊக்கி யுள்ளாள்.

எனது பிறப்பு நிலையையும் சிறப்புரிமையையும் ஒரு சிறிதும் உணராமல் எனக்கு நீங்கள் பிழை செய்துவிட்டீர்கள். இச் செயல் உங்கள் தலைகளோடு நில்லாமல் குலங்களுக்கும் நாச மாய்க் கொடிது மூண்டது. ஈண்டு நிகழ்ந்துள்ளதை என் அண்ணு அறிந்தால் அந்தோ என்னும்?

"இலங்கேசா! உங்கள் தங்கையை வனத்தில் ஒருவன் மூக்கை அறுத்துவிட்டான் என்று யாரேனும் போய்ச் சொன்னல் அப்படிச் சொன்ன அந்த நாக்கை அப்பொழுதே அடியோடு அறுத்துவிடுவானே! அவ்வளவு கொடிய கோபியாயிற்றே! உங் கள் குடி அடியோடு போய் விடுமே! நிலைமை தெரியவில்லையே!" எனத் தனது தலைமையை விளக்கி புலையாடுகின்றாள்.

"உன் தங்கை மூக்கு அரியுண்டாள் என்றுரைத் தயமுகன் நாக்கு அரியும்" என்றது இராவணனது கொடுங்கோபத்தையும் கடுந்தண்டத்தையும் காட்டி நின்றது.

தன் குலத்தவர்க்கு எமனும் இடர் செய்யான்; தேவ தேவ ரும் அஞ்சுவர்; அங்ஙனம் இருக்கத் தன் தங்கை மூக்கு அறு பட்டாள் எனின், அது அதிசய சம்பவமாய் அவனுக்குக்கொடிய கோபத்தை மூட்டியது. மூட்டவே அத்திய செய்தியை வாய் திறந்து கூறியவனது நாவை அறுத்து எறிய நேர்ந்தான்.

தன் மனதிற்குச் சிறிது வெறுப்பை விளைத்தாலும் முன் னும் பின்னும் பாராமல் உடனே எதிர்நின்றவரைக் கொன்று தொலைக்கும் கொடிய மூர்க்கததனம் இவ்வாறு விளக்கப்பட்டது.

நாகரிகா அல்லாமை என்றது இரக்கம் யாதும் இன்றி வன் கண்ணுய்க் கொடுமை மண்டியுள்ள அரக்கத் தன்மையை உணர் த்தியது.

## நாகரிகம்.

நாகரிகம் என்பது தயை தாட்சணியங்களை முன்னம் குறி த்து வந்துள்ளது. பிற உயிர்களுக்கு இரங்கி அருளும் இனிய நீர்மையான அது உயர்பெருந்தகைமையாய் ஒளிசெய்துநின்றது.

பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். (குறள், 580)

முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர். (நற்றிணை, 355)

பழகின உரிமையாளர் கண் எதிரே நின்று நஞ்சைக் கொடுத்தாலும் அதனை மறுக்க மாட்டாமல் வாங்கி யுண்ணுகின்ற அந்த அரிய கண்ணோட்டம் உடையவரே சிறந்த நாகரிகர் என இவை காட்டியுள்ளன. பிறரிடம் கண்ணோடி இரங்கித் தண்ணளி புரியும் புண்ணிய நீர்மையாளர்க்குக் கண்ணியமான ஒரு பெயரை மேலோர் தந்திருக்கும் காட்சி சாலவும் சிந்திக்கத் தக்கது.

கருணைப் பண்பில் பண்டு இங்ஙனம் மருவி யிருந்த நாகரிகம் என்னும் அருமை மொழியை இக் காலத்தில் வேறு சிறுமை வழிகளில் திருப்பிப் பேதை உலகர் தமக்கு உரிமை செய்து கொண்டு பேயாட்டம் ஆடுகின்றனர்.

தன் முகத்தைத் தன் கையால் தானே சிரைப்பதும், தலைமயிரை நிலை குலைத்து நெடு நேரம் புலையாக்குவதும், பகட்டான உடைகளை வனைந்து புனைந்து வெளியே மினுக்கித் திரிவதும் முதலிய களிப் பாட்டங்களை நாகரிகம் என இன்று களித்து நிற்றலால் பழைய அதன் பொருள் நலம் எவ்வளவு மருள் நிலையில் இழிந்திருக்கின்றது! என்பது எளிதே தெளிந்து கொள்ளலாம்.

அன்பும் பண்பும் அமைந்து ஆருயிர்களுக்குப் பேரருள் புரியும் பெருந்தகைமையே நாகரிகம் ஆகும்.

தம்மை நாகரிகர் என எண்ணி நிற்பவர் இத் தன்மை தம்பால் எவ்வளவு படிந்துள்ளது என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். ஆன்ம பரிசோதனையால் மேன்மை விளைகின்றது.

கண்ணோட்டம் உடையவரே நாகரிகர் என்றதனால் அஃது இல்லாதவர் அநாகரிகர் என்பது பெறப் பட்டது.

இரங்கி அருள் புரியும் தன்மை தன் தமையனிடம் இல்லை என்பாள் தயமுகனார் நாகரிகர் அல்லர் என்றாள்.

அவன் கோபத்திற்கு ஆளாகாமல் என்னை நீங்கள் உரிமையாக்கிக் கொள்ளுங்கள்; இல்லையேல் உங்களையும் அழித்து,

உங்கள் குலத்தையும் ஒழித்து விடுவான் எனச் சூர்ப்பநகை இப்படிப் பயங்காட்டிப் பயன் பெற முயன்றிருக்கிருள்.

என் மூக்கு அரிந்து நும் குலத்தை முழுது அரிந்தீர்!

என்றது தனக்குச் செய்த பிழையால் விளையும் விளைவுகளை அறிவுறுத்திஞள். இனிமேல் நீவிர் யாதும் தப்பிப் பிழைக்க முடியாது என்பாள் "இனி உமக்குப் போக்கு அரிது" என்றுள். செத்துத் தொலையாமல் சீக்கிரம் வழி தேடிக் கொள்க என அவர்பால் அளி நாடியவள் போல் தனக்கு வழி தேடியுள்ளாள். நய பயங்களை வியனுகக் காட்டிச் சயங்காணத் தவித்து உழல்கின்றுள்.

அழகை எல்லாம் புல் இடையே உகுத்திரே!

என்னும் இச் சொல் இடையே அவள் உள்ளத்தை உகுத்துளாள். கண் கொள்ளாத கட்டழகு முழுவதும் பட்டழிய நேர்ந்ததே! என்று பரிந்து பரிதபித்தவளாய்த் தன்னை அறிந்து கொள்ளச் செய்திருக்கிருள்.

அரிய அரச குல மங்கையான எனது பெருமையை உணராமல் என்பால் சிறுமை செய்து அதனல் உங்கள் உயிர் அழிய நேர்ந்தீர்; இந்த அழிவு நிலையிலிருந்து உங்களைப் பாதுகாத்தருள வேறு யாராலும் முடியாது; தேவ தேவர்களும் காக்க மாட்டோம் என்று கை ஒதுக்கி விடுவர். இவ்வாறு எங்கும் எவரிடமும் புக விடம் கிடையாமல் மரணத்தின் வாயில் மறுகி நிற்கின்ற நும்பால் பரிவு மீதூர்ந்து நான் உருகி நிற்கின்றேன். எனது உரிமையை உணர்ந்து உயிர் உய்ந்து கொள்க.

என்னை உயிர் நீர் காக்கின், யான் காப்பென்.

தன்னை இவ்வாறு அவள் காட்டியிருக்கிருள். காம வேதனையால் கடுந் துயரடைந்துள்ள அவளை ஆதரித்துக் கொண்டால் இராவணனிடம் போய் யாதும் சொல்லாமல் அருள் புரிவதாக இராமனிடம் இங்ஙனம் அவள் உறுதி மொழி கூறிஞள்.

தன்னைக் கைவசம் செய்து கொண்டால் உய்தி உண்டு; இல்லையாயின் தப்பாமல் செத்தே போவீர் என்று பித்தேறி அப் பேதை பேசியிருக்கும் வாதங்கள் காதல் கனிந்து வந்துள்ளன.

பல வகையான அன்புநலங்களும் இன்ப ஊதியங்களும் தன்ஞல் உளவாம் என மேலும் பன்னி வீணே புலையாடுகின்றுள்.

"காட்டில் வந்துள்ள உங்களுக்குக் கண் போல் இருந்து நல்ல வழிகளைக் காட்டுவேன்; இனிய கனி முதலிய அரிய புதிய உணவுகளை ஊட்டுவேன்; கருதியது எதையும் அதி விரைவில் கொண்டு வந்து தருவேன். வான விமானம் போல் ஆகாய கமனமாய் உங்களைச் சுமந்து கொண்டு போவேன்; தானவர் அரக்கர் எவரேனும் உங்களுக்கு இடர் செய்ய நேர்ந்தால் நானே எதிர்த்து அவர்களைத் தொலைத் தருளுவேன். பூவினும் மெல்லியளாய் ஒல்கி ஒசிந்துள்ள இப் புல்லியளால் யாது பயன்? இனிய இன்ப நலங்களையும், அரிய அன்புரிமைகளையும், பெரிய ஆனந்த போகங்களையும் என்பால் பெறுவதுபோல் வேறு எவள் பாலும் நீங்கள் அடைய முடியாது. குலத்திலும் குணத்திலும் நலத்திலும் பலத்திலும் அறிவிலும் உருவிலும் அழகிலும் திருவிலும் எனக்கு நிகரான ஒருத்தி எந்த உலகங்களினும் யாண்டும் இல்லை. அந்தவாறு எவளாவது இருந்தால், எங்கே அவளைச் சொல்லிக் காட்டுங்கள்? தனக்கு உவமையில்லாமல் இங்ஙனம் அதிசய நிலையில் உதித்துள்ள நான் ஏதோ உங்களைக் கண்டது முதல் பெரும் பாசம் கொண்டு பேதை உள்ளம் வாதனை உறுகின்றது. காதல் வேதனை சாதல் நோதலாய் என்னுள் சாதனை மண்டி என்னைச் சோதனை புரிகின்றது. ஆதரவை நாடி அலமருகின்றேன். பேதை மங்கை என்று யாதும் அருளாமல் தீது செய்து விட்டீர்! ஆயினும் அதனால் என்ன? நாசி சிறிது போனதினால் என் தேசு முழுதும் போய் விடுமா? உங்கள் கருணை மட்டும் இருந்தால் எல்லாம் சரியாய் வந்து விடும். எதையும் நான் படைத்துக் கொள்வேன். என் மூக்கு கொஞ்சம் நீண்டிருந்தது; அதனை வேண்டாம் என்று நீங்கள் நீக்கி விட்டீர்கள். அளவுக்கு மிஞ்சியிருப்பது அழகுக்குக் கொஞ்சம் குறையே. அக் குறை நீங்கியது. அதுவுமன்றி அதிசய சவுந்தரியத்திற்கு இப்படி இடையே ஒரு மறு இருப்பதும் நலமே. கொண்டவன் ஒருவன் உவந்து கொள்ளும் படியான உருவமே பெண்டிருக்குப் போதுமானது; கண்டவர் எவரும் காதலிக்கும் வகையில் பேரழகு அமைந்திருத்தல் தீமே யாகும்" என இவ்வாறு காதல் மீதூர்ந்து சாதனையுடன் வாதாடுகின்றாள்.

[கண்டாரே காதலிக்கும் கட்டழகும் விடம் அன்றோ? அழகைப் பற்றி இப்படி ஒரு முடிவு ஈண்டு வெளிப் பட்டுள்ளது. அழகு அரும் பெறல் அமுது என்னும் பெரும் புகழுடையது;

அதனை அம் மட மாது விடம் என நேர்ந்தாள். தனக்கு நேர்ந்துள்ள அங்கப் பழுதை ஆதரித்து இங்கு இப்பொழுது இவ்வாறு அவள் பேசலானாள். ஆயினும் அவ் வாயுரையில் எவ்வாறோ ஒரு வாய்மையும் மருவியுள்ளது.

இராமனது கட்டழகு தனக்கு விடமாய்த் துன்பம் தந்துள்ளதை அனுபவத்தில் கண்டாள்; சீதை அழகு இராவணனது நாசத்திற்குக் காரணம் ஆய்க் கதித் திருப்பதைத் தொனிக் குறிப்பாய் அவள் வாய்ச் சொல் உணர்த்தி நின்றது.

அழகு எவராலும் விழையத் தக்கது ஆதலால் அது அளவு மீறி அமைந்த பொழுது உளவாம் விளைவையும் ஓரளவு இது விளக்கியது. "பார்யா ரூபவதீ சத்ரு" என ஆரியத்திலும் கூறியிருக்கிறார். கூறிய பொருளைக் காரிய முறையில் கூரிய அறிவால் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

குறித்த இடமும் கருத்தும் குறிப்பும் நுனித்து உணரின் விருத்தம் யாதும் இன்றி யாவும் திருத்தமாகத் தெளிவுறும்.

தன் காரிய சாதனையில் கண்ணூன்றி அவள் வாயுரை யாடி வருகின்றாள். மூவா முதல்வராகிய மூவரும் தேவராசனும் ஒன்று சேர்ந்து ஓர் உருவமாய் உதித்து எழுந்த பேரொளியே! என இராமனை விளித்தது, அவளது அதிசய ஆர்வத்தை வெளிப் படுத்தியது. குலிசத்தவன் = இந்திரன்.

சிவன் அயன் மால் இந்திரன் ஆகிய நால்வரும் ஒன்றாகி நின்ற உருவன் என இவ்வென்றிவீரனை வியந்து உருகி இருக்கிறாள்.

பகையை அழிக்கும் ஆற்றலும், கலையறிவும், அடுத்தவரைக் காக்கும் ஆண்மையும், அரிய போக நலங்களும் உரிமையுடன் பெருகி ஒருங்கே நிறைந்துள்ள நிலைமை தெரிய வந்தது.

சூர்ப்பநகையின் உருவைப் போர்த்துக் கொண்டு கவி உருவகித்துவரும் காட்சி உணர்வு நலம் சுரந்து வருகின்றது.

அகில உலகங்களையும் தனது ஒரு பூங்கணையால் வென்று அதிசயமான விசயம் எய்தியுள்ள காமனும் இராமனுக்குத் தம்பியே என்று அவ் வம்பி சொல்லியது அவளது உள்ள நிலையை உலகம் அறியச் செய்தது. தோய்ந்திருக்கும் அனுபவங்கள்

உரைகளில் பாய்ந்து வெளிவருகின்றன. காமத்துயரால் கலங்கி அயர்பவள் சேமத்துறையை விழைந்து உழல்கின்றாள்

புவனம் அனைத்தையும் ஒருதன் பூங்கணையால் உயிர்வாங்கும்
அவனும் உனக்கு இளையானோ? இவனே போல் அருள் இலனால்.

இராமனை நோக்கி அரக்கி இங்ஙனம் உருக்கமாக வினவியிருக்கிறாள். மதனவிதனத்தால் அவள் மறுகியிருக்கும் நிலை மொழிகள் தோறும் வெளியாய் விழிகள் தெரிய வருகின்றது.

உயிர் வாங்கும் என்றதனால் காமவேதனையால் ஆவி அலமந்துள்ள அவளது அவலக் கவலை அறியலாகும். தனது அனுபவத்தை உலகத்தோடு இணைத்துப் பிணைத்தாள்.

அவன் என்றது மன்மதனை. இவன் என்றது இலக்குவனை.

"தெய்வத்தேசுடன் மிளிர்கின்ற ஓ தருமமூர்த்தியே! மன்மதனும் உனக்குத் தம்பியா? இந்த இளையவனைப் போலவே யாதும் இரங்காமல் ஏதும் இளையாமல் எனக்கு ஓயா வேதனையாய்த் துயர் புரிகின்றானே!" என்று அயர் வுரையாடினாள்.

இவன் புறத்தே உடலுறுப்பைக் கொய்து தொலைத்தான்; அவன் அகத்தே உயிரை வாங்குகின்றான். என் உடலுயிர்களுக்கு எமன்களாய் நும் இளையவர் வளையலாயினர் என உளையலாயினாள்.

இந்த இரண்டு தம்பிகளையும் அதட்டி அடக்கி என்னை நீ காத்தருளவேண்டும் என்பது கருத்து.

"உருவப்பொலிவும் பருவ அழகும் அருமையாக மருவியிருந்தும் பெண்பால் என்று என்பால் இரங்கி அருள் புரியவில்லையே! தம்பிகளைப் போலவே நீயும் வம்பு செய்து வருகின்றாயே! நம்பியே! உன்னையே நான் நம்பியுள்ளேன்; அன்பு செய்தருள்க" என அவ்வம்பி வெம்பி வெய்துயிர்த்து வாதாடுகின்றாள்.

சிவன் முதலிய நால்வரை ஒத்துள்ள ஒருவன் மூவர் துணைவருடன் பிறந்தான்; இங்கே நால்வர் என நேர்ந்தான்.

காமனும் தனக்குத் தம்பி என்னும்படி இராமன் அழகு மிகுந்து விளங்குகின்றான்; அவன் எதிரே அவமானமான அவளும் யாதும் நாணாமல் பன்னிப்பன்னிக் காதல் புரிந்து மேலும் மேலும் நோதலுழந்து ஏதமாய் வாது பேசுகின்றாள்.

பொன்னுருவப் பொருகழலீர்! புழைகாண
மூக்கரிவான் பொருள் வேறு உண்டோ?
2864 இன்னுருவம் இதுகொண்டிங் கிருந்தொழியும்
நம்மருங்கே; ஏகாள் அப்பால்;
பின்னிவளை அயலொருவர் பாரார் என்
றே அரிந்தீர் பிழைசெய் தீரோ?
அன்னதனை அறிந்தன்றோ அன்பிற்பட்டு
பூண்டதுநான் அறிவிலேனோ? (1)

வெப்பழியா நெடுவெகுளி வேலைக்கர்
ஈதறிந்து வெகுண்டு நோக்கின்
அப்பழியால் உலகனைத்தும் நும்பொருட்டால்
2865 அழிந்தனவாம்; அறத்தை நோக்கி
ஒப்பழியச் செய்கிலார் உயர்குலத்துத்
தோன்றினார் உணர்ந்து நோக்கி
இப்பழியைத் துடைத்துதவி இனிதிருத்தீர்
என்னொடும் என்று இறைஞ்சி நின்றாள். (2)

இப்படி அவள் வேண்டியிருக்கிறாள். அவளுடைய மனவுறுதியும் மையல் நிலையும் வெய்ய நிலையில் வேலை செய்கின்றன.

பொன் உருவப் பொரு கழலீர்! என வீரப்பாடு தோன்ற விளித்தது, அவரது வெற்றித் திறத்தை ஊன்றி உணர்ந்து

யாரும் இயற்கையாக முகத்தை நோக்கிப் பேசுவதே வழக்கம். இங்கே அவள் காலை நோக்கிக் கூறியிருக்கிறாள். ஏன்? மூக்கு அறுபட்டுப் போனமையால் எதிரே தலை நிமிர்ந்து முகத்தைப் பார்த்துப்பேச நாணியுள்ளாள் என்று தெரிகின்றது.

தன்னை அங்க பங்கம் செய்தது தன்மேல் வைத்துள்ள காதலாலேயாம் என அவள் ஓதியிருப்பது நகைவிருந்தின் தொகையாயுள்ளது. நகையின் நுண் வகையும் இசையாகின்றது.

என் மூக்கை நீங்கள் அடியோடு அறுத்துவிட்டதற்கு உரிய காரணத்தை நான் நன்கு உணர்ந்துகொண்டேன்: இந்தப் பேரழகி நம்மை விட்டு என்றும் பேராமல் இருக்கவேண்டும் என்னும் ஆர்வத்தினாலேதான் இந்தக் காரியத்தை ஆற்றியிருக்கிறீர்கள்: "நாமோ காட்டுக்கு வந்திருக்கிறோம்; இந்த அதிசய அழகி

இடையே நமக்குத் தெய்வாதீனமாய்க் கிடைத்திருக்கிறாள்; அய லார் எவரேனும் கண்டால் இவள்மேல் மயலாகி விடுவார்; அவ் வாறு ஆகாமலும், எவ்வகையிலும் இவள் வேறுபிரிந்து போகா மலும், இங்கேயே நிலையாய் இருந்து வரவும் தகுந்த ஓர் உபா யத்தை நாம் செய்து கொள்ள வேண்டும்" என்று மிகுந்த ஆலோசனையோடு இவ் வுறுப் பறுப்பைச் செய்திருக்கிறீர்கள். என்மேல் ஆசை மண்டி உரிமையுடன் செய்துள்ள அவ் வுண் மையை நான் தெளிவாக ஓர்ந்து கொண்டதினாலேதான் முதலில் கண்டபோது இருந்ததை விட இப்பொழுது மிகவும் அதிகமாக அன்பை உங்கள்பால் உவந்து கொண்டிருக்கிறேன்.

[அன்னதனை அறிந்து அன்றோ அன்பு இரட்டி பூண்டது?

இன்னவாறு கூறியிருத்தலால் அவளது நன்னய சாகசம் நன்கு அறியலாகும். மூக்கு அறுபடுமுன் கொண்டதினும் அறு பட்டபின் இருமடங்கு ஆயது எனத் தன் அன்பை அளந் தெடுத்துக் கிளர்ந்து காட்டி நுழைந்து கொள்ள விழைந்து நிற்கின்றாள்.

என்மீது கொண்டுள்ள உள்ளக்காதலின் அந்தரங்கத்தைத் தெள்ளத் தெளிந்தேன் ஆதலால் வெளியே நேர்ந்த எள்ளலை யெல்லாம் மறந்து உள்ளம் குழைந்து உயிர் உருகி நிற்கின்றேன். இல்லையாயின், இப்படிப் பங்கப்படுத்திப் படு துயர் செய்தவர் மேல் பிரியம்கொண்டாட நான் என்ன அவ்வளவு மானம்கெட்ட மூடமா? என்று தன் ஞான நலத்தை மெச்சி யிருக்கிறாள்.

"நான் அறிவிலேனோ?" என்றது தனது செயல் அறிவீ னம் போல் வெளியே தோன்றும் ஆயினும் உண்மை தெரிந்தவர் தன் உணர்வு நிலையை உவந்து கொள்வர் என்றவாறு.

தன்னை வெறுத்து மூக்கை அறுத்தவரைக் கோட்டிக்காரி கூட விரும்பமாட்டாளே; மகாபுத்திசாலியான நான் விரும்பு வேனோ? இப்படி விரும்புவது என்றால் அதற்குத் தக்க காரணம் உள்ளே உறைந்துள்ளமையை யாரும் ஊகித்து உணர்ந்து கொள் வர் என மோகித்து மொழிந்துளாள். எவ்வளவு காமியும் இவ் வளவு நாணம் இழந்து வீணமொழி பேசாள். பேச்செல்லாம் சூழ்ச்சியில் தோய்ந்து சூது பாய்ந்து தீது வாய்ந்து வருகின்றன.

வெட்கம் அற்றவள்; அறிவிலி; கடுங்காமி; எனத் தன்னை இராமன் நினைந்துகொள்ளாதபடி புனைந்து வனைந்து இப்படிப் பேச நேர்ந்தாள். பாசம் படிந்து ஊசலாடி உழல்கின்றாள்.

என் நிலைமையை உணராமல் இளையவர் பழியான காரியத்தைச் செய்துவிட்டார்; இதனை என் அண்ணா அறியின் உங்கள் குல முழுவதையும் அழித்துவிடுவார்; அவ்வாறு அழிவு நேராமல் என்னைத் தழுவி வாழுங்கள் என இராமனைத் தொழுது வேண்டினாள்.

அவளது காம நிலையையும் தீமையையும் கடுத்து வெறுத்து இக்கோமகன் மிகவும் கடிந்து மொழிந்தான்.

நாடறியத் துயரிழைத்த நவை அரக்கி
நின் அன்னை தன்னை நல்கும
தாடகையை உயிர்கவர்ந்த சரம் இருந்தது;
2866 அன்றியும் நான் தவமேற் கொண்டு
தோடகைய துறுமலர்த்தார் இகல் அரக்கர்
குலம் தொலைப்பான் தோன்றி நின்றேன்
போடகலப் புல்ஒழுக்கை வல்அரக்கி
என்றிறைவன் புகலும் பின்னும். (1)

தரையளித்த தனிநேமித் தயரதன்தன்
புதல்வர்யாம்; தாய்சொல் தாங்கி
விரையளித்த கான்புகுந்தேம்; வேதியரும்
மாதவரும் வேண்ட நீண்டு
2867 கரையளித்தற் கரியபடைக் கடலரக்கர்
குலம் தொலைத்துக் கண்டாய் பண்டை
வரையளித்த குலமாட நகர் புகுவேம்
இவை தெரிய மனக்கொள் என்றான். (2)

நெறித்தாரை செல்லாத நிருதர் எதிர்
நில்லாதே நெடிய தேவர்
மறித்தாண்டு இவர் இருவர் மானிடவர்
2868 என்னாது வல்லை யாகின்
வெறித்தாரை வேல்அரக்கர் விறல் இயக்கர்
முதலினார் நீ மிடலோர் என்று
குறித்தாரை யாவரையும் கொணருதியேல்
நின்எதிரே கோறும் என்றான். (3)

(சூர்ப்பணகைப்படலம் 135-137)

இராமன் சீறி உரைத்துள்ள இத்திர மொழிகள் வீர ஒளி களை வீசி வீறு கொண்டு உலாவுகின்றன.

எவ்வளவு கடிந்து மொழிந்தும் அத்தீயவள் அயல் ஒழிந்து போகாமல் மயலுழந்து மன்றாடி நின்றமையால் இவ்வீரன் கொன்று தொலைத்து விடுவதாகக் குறித்துப் பேசினான்.

தாடகையை உயிர் கவர்ந்த சரம் உள்ளது என்றது பெண்ணைக் கொலை செய்ய மாட்டேன் என்று எண்ணாதே என்றவாறு. "முன்னம் ஒருத்தியைக் கொன்றிருக்கிறேன்; என்னை இன்னான் என்று தெரிந்து கொள்ளாமல் வீணே இழிந்து நின்று அழிந்து படாதே; அரக்கர் வருக்கத்தை எரித்து அழிக்க வந்த நெருப்பு என என்னை நினைந்துகொள்; உன் குலத்தை அடியோடு தொலைத்து ஒழித்த பின்புதான் நான் என் தலத்தை அடைவேன்; அரிய பெரிய கொடிய பலசாலிகள் என்று நீ கருதியுள்ள போர் வீரர்கள் எல்லாரையும் ஒருங்கே திரட்டிக்கொண்டுவா; அவ்வளவு பேரையும் உன் கண் எதிரே கொன்று மண்ணில் உருட்டு கின்றேன்" என இங்ஙனம் இக்கோமகன் கொதித்துக் கூறினான்.

அரக்கர் இயக்கர் யாவரையும் கொணர்க என்றது இவ்வீரனுடைய விறலையும் தெறலையும் வெளிப்படுத்தி நின்றது.

மிடலோர் = உடல் வலியும் படை வலியும் உடையோர். அடுந்திறலும் கொடும் போரும் பெரும் படைகளும் நிறைந்துள்ள அந்நிலைகளை யெல்லாம் சுட்டி மிடலோர் என்றான். மிடல் = வலி.

குபேரனைத் தனக்கு அண்ணன் என முன்னம் அவள் சொன்னமையால் அந்த இயக்கர் குலமும் இணைக்க நேர்ந்தது.

அற்ப நிலையினளான அப்பெண்ணின் முன்னிலையில் இவ்வீர மகன் இவ்வண்ணம் கூறியது, தனது அண்ணனுடைய வீரப் பிரதாபங்களை யெல்லாம் எண்ணிக் களித்துள்ள அவளது இறுமாப்பை நீக்கவும், மாயா வல்லவர்களான தீயவர்கள் யாவரையும் தீர்த்தொழிக்க வந்துள்ள தனது வரவு நிலையை உணர்ந்து அவள் விரைவில் ஒழிந்து போகவுமேயாம்.

இனிமேல் பெண் என்று இரங்கி நில்லேன்; நின்னைக் கொல்வேன் என்பான் தாடகையைச் சுட்டிக் காட்டினான்; எண்ணிடலரியனவாய் மண்ணும் விண்ணும் பரந்துள்ள அரக்கர்குலம்

முழுவதையும் ஒரு நொடியில் அழித்து ஒழிப்பேன் என்பான் “நின் எதிரே கோறும்” என்றான். கோறும்=கொல்லுவேம்.

“நெறித்தாரை செல்லாத நிருதர்” என்றதனால் நீதி நெறியில் ஒழுகாமல் யாண்டும் தீது புரியும் பாதகர் என அரக்கரை வெறுத்துள்ளமை வெளிப்பட்டது. தாரை=ஒழுங்கு, வழி.

நெறிமுறை ஒழுகுவோரை ஆதரித்தருளவும், அல்லாதாரை அழித்தொழிக்கவுமே வில் ஏந்தி இவ் வீர மூர்த்தி வெளிவந்துள்ள உண்மை தெளிவாய் நின்றது.

அரக்கரது பேராற்றலையும் போர் வீரத்தையும் பரக்கக் கூறி அவள் பயங் காட்டியதினால் இங்ஙனம் இவன் வியங்காட்ட நேர்ந்தான். பிறர் வீரம் பேசியவுடனே அசகாயசூரனான இவனிடமிருந்து விசய வெற்றிகள் வீறுகொண்டு விசையோடி வருகின்றன.

அரக்கர் குலம் தொலைத்து நகர் புகுவேம் என்றதனால் இவன் காடு புகுந்த காட்சியும் வீடு திரும்பும் மீட்சியும் காண நேர்ந்தன.

வந்த காரியம் சிந்தை தெரிய வந்தது. உள்ளத்தில் ஊன்றியுள்ளது உரையில் தோன்றி விடுகின்றது.

உக்கிர வீரமான இவ் விக்கிரம வசனங்களைக் கேட்டும் அக் கோட்டி மகள் போகாமல மீட்டும் நாட்டமாய்க் கோட்டி கொண்டாடினாள். பாட்டுகள் வருகின்றன.

காம்பறியும் தோளாளைக் கைவிடார்
எனினும்யான் மிகையோ? கள்வர்
2870 ஆம்பொறியில் அடலரக்க ரவரோடே
செருச்செய்வான் அமைந்தீராயின்
தாம்பொறியிற் பலமாயம் தரும்பொறிகள்
அறிந்தவறறைத் தடுப்பேன் அன்றே
பாம்பறியும் பாம்பின்கால் என மொழியும்
பழமொழியும் பார்க்கிலீரோ? (1)

உளம் கோடல் உனை இழைத்தாள் உளள் ஒருத்தி
என்றுதியேல் நிருத ரோடும்
2871 களம் கோடற்கு உரியசெருக் கண்ணியக்கால்
ஒருமூவேம கலந்த காலைக்

குளம்கோடும் என்றிதுவும் உறுகோளே
என்றுணரும் குறிக்கோள் இல்லை
இளங்கோவோடு எனை இருத்தின் இருகோளும்
சிறைவைத்தாற்கு இளையேன் என்றாள். (2)

பெருங்குலா வுறுநகர்க்கே ஏகுநாள்
வேண்டுமஉருப் பிடிப்பேன்; அன்றேல்
அருங்கலாம் உற்றிருந்தான் என்னினுமீங்
கிளையவன்தான் அரிந்த நாசி
2872 ஒருங்கிலா இவளோடும் உறைவேனோ
என்பானேல் இறைவ! ஒன்றும்
மருங்கிலா தவளோடும் அன்றோ நீ
நெடுங்காலம் வாழ்ந்தது என்பாய்! (3)

அவள் சூழ்ந்து மொழிந்துள்ள இவ்வுரைகள் அவளது கொடிய காமத்தையும், மூழு மூடத்தையும் வெளிப்படுத்திப் பெரிய சிரிப்பை விளைத்திருக்கின்றன.

"உங்கள் உள்ளம் கவர்ந்த அந்தச் சுந்தரியை நீங்கள் கைவிட மாட்டீர்கள் எனினும் என்னையும் இளையவளாக ஏற்றுக் கொள்ளுங்கள்; அரக்கப் பூடுகளை அழித்து ஒழித்தற்கு உங்களுக்கு நான் பலவகையிலும் உதவி புரிவேன்; அத்தீயவர்கள் மாயையில் மிகவும் வல்லவர்கள். யாராலும் அறிய முடியாத கபட வினைகளை யுடையவர். அவரது பொல்லாத சூதுகளை யெல்லாம் ஒல்லையில் உணர்த்துவேன். என்னைத் தவிர வேறு எவரும் அவற்றைக் கண்டு பிடிக்கமுடியாது. கொடிய அபாயங்களிலிருந்து உங்களை எங்கணும் காத்தருளுவேன்; உங்களோடு நான் சேர்ந்துள்ளதை அறிந்தால் பகைவர் அஞ்சி நடுங்குவர். மகாவீரனான இராவணனுக்கு நான் பிறப்பில் இளையவள் ஆயினும் சிறப்பில் மூத்தவள். எனது ஆற்றல் ஏற்றங்களை நோக்கி அவனும் அஞ்சுவான். என்னை நீங்கள் மணந்து கொள்ளாது போயினும் உங்கள் தம்பியோடாவது சேர்த்து வையுங்கள்; என் வார்த்தையை நம்புங்கள்; என்னால் பல உபகாரங்களைப் பார்த்து மகிழ்வீர்கள். மூக்கு இல்லாத மூளியுடன் நான் எப்படிக் கூடிவாழ்வேன்? என்று தம்பி ஒருவேளை உங்களிடம் வாதாடினால் தக்க ஏதுவைச்சுட்டிக் காட்டி அவருக்கு அறிவு போதித்தருளுங்கள். "இடையில்லாதவளோடு கூடி நான் வாழவில்லையா அப்பா! சும்மா சேர்ந்து வாழ்;

உள்ளன்புடைய அவள் பலவகையிலும் உனக்கு நல்ல இன்பங்களை நல்கி வருவாள்'' என்று புத்தி சொல்லுங்கள். கொஞ்சம் முன் கோபக்காரர்; என் கைவசம் ஆனல் கொஞ்சநாளில் சாந்தசீலராய் என்மேல் பிரியம் மீதூர்ந்து என்னை யாண்டும் பிரியாதிருப்பர். மீண்டு நீங்கள் திருவயோத்திக்குப்போகும்பொழுது அந்நாட்டுக்கு வேண்டிய நல்ல உருவத்தை நான் எடுத்துக்கொள்வேன். இப்படி ஒரு அழகி கிடைத்தாளே! என்று தேசம் முழுவதும் வியந்துகொண்டாடும்படி உயர்ந்து விளங்குவேன்; எவ்வழியும் உங்களுக்கு வெற்றியும் புகழும் விளைத்து யாண்டும் உற்ற துணையாய் இருப்பேன்; என்னைப் பக்கம் வைத்துக்கொள்ளுங்கள்'' என இங்ஙனம் தக்க காரணங்களையெல்லாம் எடுத்துக்காட்டித் தன்னை அடுத்துக் கொள்ள அவாவி வேண்டினுள்.

அவள் பட்டுவரும் பாட்டை நாம் பார்த்து வருகின்றோம்.

நிருதர் குலம் தொலைப்பதே தனது விரதம் என இவ்வரதன் சொல்லவே அதற்குத் தக்க அனுகூலங்களைத் தான் பக்கம் நின்று செய்வதாக உறுதிகூறி அவள் உரிமை காட்டினுள்.

குலத்துரோகம் செய்யவும் அக்கொடியவள் துணிந்தது நெடிய காமத்தின் நிலை தெரிய நின்றது. எதையும் செய்யத் துணிந்தவளாய் மதம் மீறி நிற்கின்றாள்.

பாம்பின் கால் பாம்பு அறியும் என்பது பழமொழி.

அதனைக் குறித்துக் காட்டித் தனது கிழமையையும் திறமையையும் உளவறிந்து உதவும் நிலைமையையும் தெரிய விளக்கினுள்.

அரக்கர் மிகவும் மாயாவிகள்; கொடிய வஞ்சச் சூழ்ச்சியர்; அந்த மாயச் சூதுகளை அரக்கியாகிய நானே நன்கு அறிவேன் என்பாள் இம் முதுமொழியை இங்கு எடுத்து உரைத்தாள்.

பாம்பு என்ற குறிப்பினுல் அரக்கரது தீம்பும், அவளது தீமையும் ஒருங்கே தெரியவந்தன.

கடிய நஞ்சுடைய பாம்புபோல் கொடிய நெஞ்சுடைய அவள் வாயினுலேயே தீயவள் என்பது வெளியாயது. யாரும் அறிய முடியாததை அறிவேன் என்றவள் தன்னையும் தன் இனத்தையும் இன்னவாறு எதிரிகள் தெளிவுற இனிது அறிவித்தாள்.

புலமிக் கவரைப் புலமை தெரிதல்
புலமிக் கவர்க்கே புலனாம்—நலமிக்க
பூம்புனல் ஊர! பொதுமக்கட்கு ஆகாதே
பாம்பறியும் பாம்பின கால். (பழமொழி, 7)

புலவர் நிலைமையைப் புலமையாளரே அறிவர் என்பதற்கு முன்பு உவமையாய் வந்துள்ள பழமொழி ஈண்டுப் பொல்லாதவர் நிலைமைக்கு மிகவும் பொருத்தமாக எடுத்துக்காட்டப்பட்டது. தன் அறிவாற்றலை விளக்க நேர்ந்து தனது இயற்கைக் கடுமையையும் மரபின் கொடுமையையும் அவள் உணர்த்தலாயினள்.

அரக்கர் கொலைத் தீமை நிறைந்த கொடிய தீய இனம் என்பது பாம்பு என்னும் தொனிக்குறிப்பினால் வெளிப்பட்டு நின்றது.

"They are as the uncharmable serpent, the cockatrice, which slew by seeing" (Ruskin.)

"அவர் கண்டவுடனே கொல்லும் கொடிய பாம்புகள்" எனத் தீம்பரை மேல்நாட்டுப் புலவரும் இங்ஙனம் குறித்திருக்கின்றனர்.

இனம் இனத்தை அறியும் என்றபடி அரக்கரது மனத்தையும் மாயைகளையும் அந்த இனத்தவளாகிய நானே தெளிவாக அறிவேன்; அதனால் அவர் புரிகின்ற தீமைகளிலிருந்து ஒதுக்கி உங்களைச் சேமமாக் காப்பேன் எனத் தனது கூட்டுறவால் உளவாகும் ஊதியத்தை ஓதி உணர்த்தினாள்.

ஒரு தாரத்தைத் தவிர மற்று எவளையும் மணப்பது இல்லை என்று தாங்கள் உறுதியாக விரதம் பூண்டிருந்தால் தம்பியோடாவது என்னைச் சேர்த்துவையுங்கள் என அவ் வம்பி நம்பியை நயந்து ஆர்த்தி மீதூர்ந்து வேண்டினாள்.

இந்த வார்த்தையை அவள் சொன்னபோது இலக்குவனுக்குக் கடுங்கோபம் மூண்டது. அண்ணனை நோக்கினான்: "என்ன இளக்காரம் இது! இப்புலைமகளை இப்பொழுதே தலை துணித்து எறிவேன்" எனத் தன் உடை வாளை உருவினான்.

என்றவள்மேல் இளையவன்தான் இலங்கிலைவேல்
கடைக் கணியா இவளை ஈண்டு 2875
கொன்றுகளை யேம்என்றால் நெடிதலைக்கும்
அருள் என் கொல்? கோவே! என்ன

நன்றதுவே யாமன்றே போகாளேல்
ஆக என நாதன் கூற
ஒன்றும் இவர் எனக்கு இரங்கார் உயிரிழப்பேன்
நிற்கின் என அரக்கி உன்னு; (1)

ஏற்றநெடுங் கொடிமூக்கும் இருகாதும்
முலை இரண்டும் இழந்தும் வாழ
ஆற்றுவனே? வஞ்சனையால் உமையுள்ள
பரிசறிவான் அமைந்தது அன்றே?
காற்றினிலும் கனலினிலும் கடியானைக்
கொடியானைக் கரனை உங்கள்
கூற்றுவனை இப்பொழுதே கொணர்கின்றேன்
என்றுசலம் கொண்டு போனாள். (2)

(சூர்ப்பநகை, 142-143)

இங்கே நிகழ்ந்துள்ள இறுதி நிகழ்ச்சிகள் அரிய காட்சிகளாய் மானச தத்துவங்களை மருவி வந்திருக்கின்றன. உள்ளத்தின் உணர்ச்சிகளை மொழிகள் ஒளி செய்து காட்டுகின்றன.

இளங்கோவோடு எனை இருத்தி என்றவுடனே இளையவன் உளம் கனன்றிருக்கின்றான். அத் தீயவள் வாய்ச்சொல் இத் தூயவனுக்குச் சுடு நெருப்பாய்த் தோன்றி யிருத்தலால் சுடர் வாளை அடலோடு எடுக்க நேர்ந்தான்.

இராமனுவது அப் பொல்லாக் காமியுடன் கிண்டலாகக் கொஞ்சம் கேலி வார்த்தைகள் பேசினான். இலக்குவன் அவளது புல்லிய சொற்களுக்கு ஒரு சிறிதும் செவி சாய்க்காமல் உள்ளம் கொதித்திருக்கிறான்.

பிரமச்சரிய விரதத்தில் தமையனைக் காட்டிலும் தம்பி இங்கே தனி நிலையில் உயர்ந்திருக்கிறான். வனவாச காலம் முழுவதும் இவனது மன நிலை அரிய தவ யோகிகளுக்கும் எட்டாத பெரிய புனித நெறியில் உறுதியாய் உறைந்துள்ளது. காமம் கடிந்து, கண்ணுறக்கம் தடிந்து, யாண்டும் அண்ணனது சேமத்தையே எண்ணி எண்ணி இவன் எல்லை கண்டு வருகின்றான்.

உத்தமமான நல்ல பரிசுத்தன் ஆதலால் புல்லிய காமப் பேச்சைக் கேட்டவுடனே உள்ளம் கனன்று உருத்து அவளை ஒழிக்கத் துணிந்தான். துணிந்தும் அண்ணன் உத்தரவை எதிர்

பார்த்தான். "இவளைக் கொன்று களையேம் என்றால் நெடிது அலைக்கும் அருள் என்கொல்? கோவே!" என இளையவன் உளைந்து கூறவே மூத்தவன் விரைந்து இசைந்தான்.

"களையேம்" என்ற சொற் குறிப்பால் அவள் இருப்பின் இளிவும் பழியும் பெருகி அழி துயரங்கள் விளையும் என்பது வெளியாயது. களையைப் பறித்து எறிதல் போல் அவள் தலையைத் துணித்து எறிய வேண்டும் என்று துடித்திருக்கின்றான்.

தம்பி இங்ஙனம் கடுத்துத் துடிக்கவே நம்பி சொன்னது என்ன? அந்த நனின மொழி அதி நய முடையது.

போகாளேல் ஆக.

இராமன் திருவாயிலிருந்து வந்துள்ள இம்மொழியை வெளி விழியால் நோக்குகின்றோம்; ஒலியை உள்ளச் செவியால் கேட்கின்றோம்; பொருளை உள்ளுணர்வால் ஊன்றி உணர்கின்றோம்.

இம் மூன்று நிலைகளுக்கும் ஆன்ற இன்பம் சுரந்து இம் மொழித் தொடர் உணர்ச்சி ஒளி வீசியுள்ளது.

கொன்று தொலைக்கின்றேன் என்று தம்பி ஆயுதபாணியாய்க் கொதித்து மூளவே, அப்படியே செய்க என இந் நம்பி கூறி விடவில்லை. இன்னும் அவ்வம்பி போகாமல் நின்று சண்டித்தனம் செய்வாள் ஆனால் தண்டித்து விடு என்று தாங்கி மொழிந்துளான். விரைந்து ஒழிக்க வேண்டிய தீயவர்களிடத்தும் தண்ணளி புரிந்து கூடுமான வரையும் இத் தூயவன் பொறுத்தே பார்க்கின்றான்.

## சூர்ப்பநகை பழித்துப் போனது.

தம்பி நிற்கின்ற நிலையையும், நம்பி உரையையும் அறிந்த அவ்வம்பி இனிமேல் இங்கே நின்றால் கொன்றே விடுவர் என்று நன்கு தெளிந்து கொண்டாள். செத்துப் போகாமல் உடனே தப்பிப் போய்விட வேண்டும் என உளம் துணிந்த அவள் விரைந்து எழுந்தாள். இராமனைச் சினந்து சீறிச் செயிர்த்து நோக்கினாள்: "என் மூக்கையும் காதையும் முலைகளையும் அறுத்த உங்கள் தலைகளை நான் இனி அறுக்காமல் விடேன்; அங்க பங்கம் செய்த

கொடியவர்களாகிய உங்களோடு கூடி வாழ்வதாகப் பாசாங்கு செய்தேனே யல்லாமல் உண்மையாக யாதும் பேசவில்லை. மான முடைய நான் ஈனமடைந்து வாழ்வேனே? உங்கள் மன நிலைகளையும் செயல்களையும் பரிசோதிக்கவே காதலுடையவள் போல் இதுவரையும் இங்கே வாதாடி நடித்தேன். மன்மதனையும் தேவர்களையும் மதியாத நான் புல்லிய மனிதர்களாகிய உங்களை ஒரு பொருளாக மதிப்பேனே? தனியே வந்தேன் என்று எண்ணி என்னைத் தொட்டுப் பிடித்து மான பங்கம் செய்து விட்டீர்கள்; இப்பொழுதே உங்களுக்கு எமனைக் கொண்டு வருகின்றேன்; கொஞ்சம் நில்லுங்கள்" என்று சொல்லிவிட்டு அக் கொடியவள் தென் திசை நோக்கி விரைந்து சென்றாள்.

அவளுடைய பேச்சு நடத்தைகள் எல்லாம் வெகு விசித்திரங்களாய் மேவித்து நிற்கின்றன. மானம் இழந்து ஆனவரையும் மறுகிப் பார்த்தாள்; இவர் யாதும் இசையாது போகவே அவள் மாறி விசை மீறினாள். "வெட்கம் கெட்டவள்; வெய்ய காமி" என்று இவர் எண்ணிவிடலாகாதே! என்று மேட்டிமையாய் அவள் ஏற்றம் காட்ட நேர்ந்தாள். தான் இது வரை நண்ணிநின்றதெல்லாம் வெறும் நடிப்பே; உள்ளத்தைச் சோதிக்கச் செய்த கள்ளமே என அக் கள்ளி புனைந்து வனைந்து பொதிந்து பேசியிருக்கும் சாதுரியம் நினைந்து வியந்து கொள்ளவுரியது. பெண்கள் சுபாவமும் இதில் கண்கள் காண வந்துள்ளது. தான் விரும்பினவன் தன்னை வெறுத்து விடின், அவன் வலிந்து காதலித்ததாக இகழ்ந்து பேசி எள்ளித் தள்ளியது போல் போலிப் பாவனை செய்து நீலித்தனம் காட்டுவதில் மகளிர் மிகவும் கை தேர்ந்தவர்.

அவரது நெஞ்சச் சூதுகளும், வஞ்சச் சாகசங்களும், வாது மொழிகளும் யாதும் அளவிடலரியன. யாரும் அஞ்சத் தக்கன.

மங்கையர் மாய வஞ்சம் மாயனும் அறிய மாட்டான்;
இங்கெவர் அறிய வல்லார்? இனியவர் போல நின்று
தங்கையில் அமைந்த பேர்க்குத் தனங்கையில் அமையத் தந்தே
அங்கவர் உயிரை வாங்கி அயலிடம் அளிப்பர் அம்மா!

இம்மாதிரியான பழிப்பிலும் இளிப்பிலும் அவர் விழிப்பேறி யுள்ளனர். அவரது மாய வசனங்கள் ஆய முடியாதன.

பரிசு அறிவான் அமைந்தது என்றது, உங்கள் நிலைமையைத் தெளிவாக அறியும்பொருட்டே ஒளிவாக வேலை செய்தேன் என்றவாறு. பரிசு = தன்மை, இயல்பு.

காற்றினிலும் கடியான்; கனலினிலும் கொடியான் எனக் கரனைக் குறித்திருத்தலால் அவனது ஆற்றலும் அடலும் அறிய வந்தன. தான் கொண்டு வருஞ்சரக்கைக் கண்டுணரக்குறித்தாள்.

"உங்கள் கூற்றுவனை இப்பொழுதே கொணர்கின்றேன் என்று சலம் கொண்டு போனாள்" என்ற இதில் அவள் சீற்றம் மீறி வார்த்தையாடி வன்மங்கொண்டு வழி விரைந்து போயிருக்கும் போக்கை நேரே பார்த்து நிற்கின்றோம்.

கரன் கொடிய போர்வீரன்; நெடிய படைகளையுடையவன்; அவன் இவரை எளிதே கொன்று அழித்துவிடுவான் என்று உறுதியாக அவள் நம்பி இருத்தலால் உங்கள் கூற்றுவன் என அவனை ஏற்றிப் புகழ்ந்து இங்ஙனம் தூற்றிப் போனாள்.

சலம் = கோபம், வயிரம். பழிவாங்கும் கருத்துடன் வஞ்ச நெஞ்சளாய்ச் செயிர்த்துச் சீறிச் சென்றுள்ளமையால் அவளது செலவு நிலை தெரிய வந்தது. கூற்றுவனைக் கொண்டு வரச் சலம் கொண்டு போனாள் என அவள் போன போக்கை நிலம் கண்டு கொள்ள நிலை கொண்டு கூறினார்.

வெறுங்கையோடு போகவில்லை; அரியவனை அழைத்துவர உரிய பொருளுடனே போயிருக்கிறாள்; விரைந்து திரும்பி வருவாள் என இனி வரவுள்ள வினைவிளைவுகளை அழகாக விளக்கியிருக்கிறார். வஞ்சம் என நஞ்சம் என வஞ்சமகள் வந்தாள் என முன்னம் வரவுவகை குறித்தார்; சலம் கொண்டு போனாள் என இப்பொழுது செலவு நிலை தெரித்தார்.

சூர்ப்பநகை வந்தது, இராமனைக் கண்டது, காதல் கொண்டது, கருதிமுயன்றது, இடையே சீதையைப் பார்த்தது, சிந்தை வியந்தது, தீதுசெய்யத் துணிந்தது, தீங்கு அடைந்தது, ஏங்கி நொந்தது, முடிந்த வரையும் படிந்து பதம் பார்த்தது, முடிவில் எழுந்து முனிந்து சென்றது முதலியன முறையே சிந்தனைசெய்ய வந்தன. இதில் கனிந்து சுரந்துள்ள கலைப் பண்புகளும், உறுதி நலங்களும் கருதி உணர வுரியன.

இத்துடன் சூர்ப்பநகைப் படலம் முடிந்தது; மேல் கரன் வதைப் படலம் வருகின்றது. அடுத்து வரும் கதை நிகழ்ச்சி இன்னதுதான் என்று கதை முன்னுறக் கொடுத்துச் சுட்டி வாசகர் உள்ளங்களை உவக்கியிருக்கிறார். சரிதத்தை நடத்திச் செல்லும் கவி சாதுரியம் அதிசயமுடையதாய் மதிநலம் தோய்ந்து வருகின்றது.

### கரனைக் கண்டது.

வன்சினங்கொண்டு வழி விரைந்துபோன சூர்ப்பநகை கரனைக் கண்டாள். அங்கபங்கமாய் அவநிலையில் வந்துள்ள இவளைக் கண்டதும் சிங்கப்பேடா இங்ஙனம் சிறுமை அடைந்தது! என அவன் சிந்தை திகைத்துச் சீறி விரைந்து யார் இது செய்தார்? என ஆர்த்துக் கேட்டான். அதற்கு இவள் சொன்ன பதில் என்ன? அடியில் வருவது காண்க.

இருவர் மானுடர் தாபதர் ஏந்திய
வரிவில் வாட்கையர் மன்மதன் மேனியர்
2578 தருமநீரர் தயரதன் காதலர்
செருவில் நேரும் நிருதரைத் தேடுவார். (1)

ஒன்றும் நோக்கலர் உன்வலி ஓங்கு அறன்
நின்று நோக்கி நிறுத்தும் நினைப்பினர்
2579 வென்றி வேற்கை நிருதரை வேர் அறக்
கொன்று நீக்குதும் என்றுணர் கொள்கையார். (2)

மண்ணில், நோக்கரு வானினில், மற்றினில்
எண்ணி நோக்குறின் யாவர்க்கும் நோக்கலாப்
2580 பெண்ணின் நோக்குடையாள் ஒரு பேதை என்
கண்ணின் நோக்கி உரைப்பரும் காட்சியாள். (3)

கண்டு நோக்கரும் காரிகையாள் தனைக்
கொண்டு போவல் இலங்கையர் கோக்கு என்று
2581 விண்டு மேல்விழுந்தேனை வெகுண்டவர்
துண்டம் ஆக்கினர் மூக்கு எனச் சொல்லினாள். (4)

(கரன் வதைப் படலம் 4-7)

கரன் எதிரே சூர்ப்பநகை இவ்வாறு கூறியிருக்கிறாள்.

பேச்சில் எல்லா விவரங்களும் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. பேசியிருக்கும் முறை விநோதமாயுள்ளது.

தன் மூக்கை அறுத்ததை முடிவில் குறித்தாள்; அந்த அறுப்பாளரது வரலாறுகளையும் நிலைமைகளையும் முன்னுற முறையே உரைத்தாள். அவளுடைய அறிவும் திறனும் விரகும் காவும் மனமும் சினமும் உரைகளில் பெரிதும் தெரிகின்றன.

இலங்கேசன் தங்கையாகிய தன்னை இப்படிப் பங்கம் செய்தவர் யார்? எவ்வளவு பேர் திரண்டு கூடி இவ்வெவ்வினையை விளைத்தனர்? எவரும் அருகே நெருங்கவும் அஞ்சுகின்ற பெரிய வீர மரபில் பிறந்த ஒரு அரச மங்கையைத் துணிந்து அவமானம் செய்துள்ளமையால் பலபேர் ஒருங்கே திரண்டுதான் இச் சதியைச் செய்திருக்கவேண்டும் என அவன் எண்ணுவன் ஆதலால் அதனை எதிரறிந்து இருவர் என எண்ணல் அளவில் அண்ணல் இளவலை உன்னி முன்னம் இசைத்தாள்.

அந்த இருவர் யார்? தேவரா? அசுரரா? கந்தருவரா? இயக்கரா? நாகரா? சித்தரா? அரக்கரா? எனின், அவ்வாறு யாரும் இலர்; நமக்கு ஊணுணவுபோல் எளிய ராயுள்ள மனிதரே என்பாள் மானுடர் என்றாள். அவர் இதுபொழுது கானில் வந்து கனி காய்களைத் தின்று தவக்கோலங்கொண்டு தவசிகளாயுள்ளனர் என்பாள் தாபதர் என்றாள். அவ்வாறு துறவி வேடம் பூண்டு சாதுக்களாய் இருந்தாலும் கைகளில் வில்லும் வாளும் கொண்டு எவரையும் வெல்ல வல்ல வீரசூரர்களாய் விறல் மிகுந்திருக்கின்றனர் என்பாள். வரிவில் வாட்கையர் என்றாள். தன்னை மூளியாக்கிய வாளும் கையும் அவள் நினைவில் நீள நிலைத்துள்ளமையை வாய்மொழி விளக்கியுள்ளது.

மன்மதன் மேனியர் என்றதுதான் அவளது உண்மையான மன நிலையை வெளிப்படுத்தியது. தனக்கு இன்னல் மிக இழைத்திருந்தும் அந்த அழகர் மேல் கொண்டுள்ள இனிய ஆர்வம் இன்னமும் அவள் இதயத்தில் மன்னியுள்ளமை தெரிகின்றது. உருவத்தில் மன்மதன் என உயர்ந்த எழில் நிறைந்திருந்தாலும் உள்ளத்தில் அந்தக் காமனைப்போல் இவர் காமி அல்லர் என்பது மேனியர் என்ற தொனியால் வெளியாயது.

பலமுறையும் முயன்று அனுபவ நிலையில் கண்டவள் ஆதலால் இக் குலமக்கள் உள்ளத்தை உகைதறிய உணர்த்தினள்.

விண்ணில் வேறு எங்கும் காண முடியாத கட்டழகு அது; அந்த அற்புத அழகினைக் கண்டதும் நான் அடைந்த ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. அகில உலகங்களையும் ஆளுகின்ற நம் அண்ணாவுக்கே மிகவும் தக்க பொருள் என்று மிக்க ஆசையுடன் எண்ணி அவளை எடுக்கப் போனேன்; அவர் கடித்து வந்து என்னை இப்படி அங்க பங்கம் செய்து விட்டார்; இனி நான் உயிர் வைத்திருக்கலாமா? எங்ஙனம் உயிர் வாழ்வேன்?" என இங்ஙனம் அவள் சொல்லி முடிக்கவே கரன் கடுங் கோபத்துடன் துடித்து எழுந்தான்.

### படைத்தலைவர் மூண்டது.

அடுத்து நின்ற சேனாதிபதிகள் அவனைத் தடுத்து நிறுத்தினார். "தேவர்களையும் வெல்ல வல்ல தாங்கள் மனிதர் மேல் செல்வது மிகவும் அவமானமாகும். நாங்கள் போய் அவரை விரைந்து கொன்று வருகின்றோம்" என்று கொதித்து எழுந்தார்.

நன்று சொல்லினிர் நான் இச்சிறார்கள் மேல்
சென்று போர் செயில் தேவர் சிரிப்பரால்
287 கொன்று சோரி குடித்து அவர் கொள்கையை
வென்று மீளுதிர் மெல்லியலோடு என்றான்,

இங்ஙனம் கரன் சொல்லிவிடவே கொடிய ஆயுதபாணிகளாய்ப் பதினான்கு சேனைத்தலைவர் உள்ளம் களித்துத் துள்ளிச் சென்றார். சூர்ப்பநகை வழி காட்டி முன்னே போனாள். காலதூதன் போல் இவள் முன் போக அவர் பின் போயினர். பன்னசாலையை அணுகினர். ஆரவாரத்தோடு அவர் வருவதை அறிந்ததும் இராமன் வில்லும் கையுமாய்க் குடிசை அயல்வந்து நின்றான். எல்லாரும் வளைந்து கொண்டு பிடி அடி குத்து வெட்டு கொல்லு என்று துள்ளிக் குதித்து வேல் வாள்களை வீசி மேலே பாய்ந்தார்.

இராமன் விரைந்து கணைகளை ஏவினான். கொதித்து மூண்டு கொல்ல வந்தவர்களுடைய வலக்கைகள் யாவும் நிலத்தில் வீழ்ந்தன. வீழ்ந்தும் அவர் யாதும் அஞ்சாமல் விரைந்து நெருங்கி வெகுண்டு சூழ்ந்தனர். இராமன் கடு வேகத்துடன் பகழிகள் வீசினான். அனைவர் தலைகளும் ஆகாயத்தில் துள்ளின. இவன் சரங்கள் எழுந்ததும் அவருடைய சிரங்கள் விழுந்ததும் அன்று ஓர் அதிசயமான வீரப் போர்க் காட்சியாய் விளங்கி நின்றது.

மரங்கள் போல்நெடு வாளொடு தோள்விழ
உரங்களான் அடர்ந்தார்க்கு உரவோன்விடும் 2394
சரங்கள் ஓடின தைக்க அவர்கள் தம்
சிரங்கள் ஓடின; தீயவள் ஓடினாள்.

சூர்ப்பணகை அங்கிருந்து ஓடியிருக்கும் ஓட்டத்தை இது காட்டியுள்ளது. துண்டமான தலைகளும், முண்டமான உடல்களும் கீழே வீழும் முன்னரே அவள் குடல் கலங்கி ஓடியிருக்கின்றாள் என்று தெரிகின்றது. சிரங்கள் ஓடின தீயவள் ஓடினாள் என்றமையால் அப்பேதையின் அச்சமும் திகிலும் அறிய வந்தன. ஒரு மூக்குக்குப் பலஉயிர்களைப் பலிகொடுக்க நேர்ந்தாள்.

வந்தவர்கள் கொடிய பலசாலிகள்; அந்தரவாசிகளும் அஞ்சி நடுங்குகின்ற அடலாண்மையுடையவர். எந்த வேளையும் கரனுக்கு அருகிருந்து ஆலோசனை சொல்பவர்; அவனது சிந்தை மகிழும்படி செய்துவரும் தீரச் செயலினர். பதினாலு உலகங்களையும் தனித்தனியே வெல்ல வல்லவர் என அப்பதினான்கு படைத்தலைவரையும் அவன் உவந்து பாராட்டி வந்தான்.

அவர் இந்தவாறு மாண்டுபோகவே மீண்டுபோன அரக்கி கரனிடம் உற்றதை உரைத்தாள். அவன் உள்ளம் கொதித்தான்; உணர்வு திகைத்தான். மனிதர் செயலா இது! என்று மறுகித் துடித்தான்; பல்லைக் கடித்தான். தன் படைகளையெல்லாம் திரட்டி வரப் பணித்தான். போர் முரசங்கள் அறைந்தனர். வீரர்கள் திரண்டனர். ஆரவாரங்கள் நிறைந்தன.

## கரன் நிலை.

கரன் என்பவன் இராவணனுடைய சிறிய தாயான கும்பீநசியின் புதல்வன். தனக்குத் தம்பி முறையில் உள்ள இவன்பால் அவன் அன்பு புரிந்து ஆதரித்து வந்தான். பின்பு சனத்தானம் என்னும் நில மண்டலத்துக்கு இவனைத் தலைவன் ஆக்கினான். அந்த இலங்கை வேந்தனுக்குப் பலவகையிலும் இனிய துணைவனாய் இதம் புரிந்து வந்தான். அறுபது லட்சம் போர் வீரர்கள் அடங்கிய பெரிய சேனைக்கு இவன் தனி அதிபதி. சிறந்த சூரர்களான பதினாறு படைத்தலைவர்களை நியமித்து அச்சேனையைப் பாதுகாத்துத் திசைகாவல் புரிந்துதசமுகனுக்கு

இவன் இசை மிகுத்து நின்றான். யாண்டும் அஞ்சா நெஞ்சன். எதிரிகளுக்கு எமன்போல் மிகவும் கொடியவன். வில் வாள் மல் முதலிய பலவகைப் போர்களிலும் இவன் தலை சிறந்தவன்.

தூடணன், திரிசிரா, மாகபாலன், தூலாக்கன், பிரமாதி, சினகாமி, பிருதுக்கிரீவன், பருடன், விகங்கமன், துர்ச்சயன், கரவீராக்கன், காலகார்முகன், மேகமாலி, மகாமாலி, சர்ப்பாசியன், உதிராசனன், என்னும் இப் பதினறு சேனைத் தலைவரும் இவனுடைய ஏவலைச் சிரமேல் ஏந்தி யாண்டும் ஆண்மை செலுத்தி வந்தனர். முதலில் உள்ள இருவரும் கரனுக்குத் தம்பியர்.

இங்ஙனம் பெரிய படையும் அரிய திறலும் உடைய கரன் தனது சக்கரவர்த்தியின் தங்கைக்கு நேர்ந்த அங்க பங்கத்தை நினைந்து நெஞ்சம் கொதித்து உள்ள சேனைகளையெல்லாம் ஒருங்கே திரட்டிப் போர்மேல் மூண்டு பொங்கி எழுந்தான். கவசம் முதலியன தரித்து யுத்த சன்னத்தனாய் அவன் தேர்மேல் ஏறிய பொழுது படை வீரர்கள் யாவரும் அவனைப்புடைசூழ்ந்து நின்றனர். கொடிய ஆயுதங்களுடன் நெடிது நிறைந்த அந்தப் போர்வீரர் நிலைகளைக் கவி குறித்துக் காட்டியிருக்கிறார். அக் காட்சியைக் கொஞ்சம் கூர்ந்து காண்போம்.

உரத்தினர்; உரும்என உரறும் வாயினர்;
2913 கரத்தெறி படையினர்; கமலத் தோன்தரும்
வரத்தினர்; மலைஎன மழைதுயின் றெழு
சிரத்தினர்; தருக்கினர்; செருக்கும் சிந்தையார்; (1)

விண்ணள விடநிமிர்ந் துயர்ந்த மேனியர்;
கண்ணள விடவரு மார்பர்; காலினல்
2914 மண்ணள விடுநெடு வலத்தர்; வானவர்
எண்ணள விடஅருஞ் செருவென் றேறினர்; (2)

இந்திரன் முதலினோர் எறிந்த மாப்படை
2915 சிந்தின தெறித்துகச் செறிந்த தோளினர்;
அந்தகன் அடிதொழுது அடங்கும் ஆணையார்
வெந்தழல் உருவுகொண் டனைய மேனியார். (3)

சூலமும் பாசமும் தொடர்ந்த செம்மயிர்ச்
சாலமும் தறுகணும் எயிறும் தாங்கினர்;
2916 ஆலமும் வெளிதெனும் நிறத்தர்; ஆற்றலால்
காலனும் காலன்என்று அயிர்க்கும் காட்சியார். (4)

கழலினர் ; தாரினர் ; கவச மார்பினர் ;
நிழலுறு பூணினர் ; நெறித்த நெற்றியர் ; 2917
அழலுறு குஞ்சியர் ; அமரை வேட்டு வந்து
எழலுறு மனத்தினர் ; ஒருமை எய்தினார். (5)

தூடணன் திரிசிராத் தோன்றல் ஆதியர்
கோடணை முரசினம் குளிறு சேனையர் ; 2925
ஆடவர் உயிர்கவர் அலங்கல் வேலினர் ;
பாடவ நிலையினர் பலரும் சுற்றினர். (6)

ஆன்றமை எறிபடை அழுவத் தார்கலி
வான்தொடர் மேருவை வளைத்த தாமென 2926
ஊன்றின தேரினன் ; உயர்ந்த தோளினன்
தோன்றினன் யாவரும் துணுக்கம் எய்தவே. (7)

படைவீரர்களுடைய உடல்வலி, உள்ளத் திறன், ஊக்கப்பாடு, போராண்மை போராற்றல் முதலியன நேரே தெரிகின்றோம். மேருமலையைச் சூழ்ந்து பரந்த கடல்போல் கரனுடைய தேரை வளைந்து சேனைத்திரள்கள் நிறைந்து நின்றன என்றதனால் அந்தப் படை எழுச்சியின் ஆரவார நிலை அறியலாகும். ஆர்கலி = கடல். அழுவம் = பரப்பு.

தோன்றினன் யாவரும் துணுக்கம் எய்தவே.

கரன் போருக்கு எழுந்தவுடனே தேவர் முதல் யாவரும் நடுங்கினர் என்றமையால் அவனுடைய அருந்திறல்களும் கொடுமைகளும் கொலை பாதகங்களும் வெளிப்பட்டு நின்றன. துணுக்கம் = அச்சம், நடுக்கம்.

இராவணன் திக்கு விசயம் செய்த காலத்தில் பக்கவுதவியாய்ச் சென்று படுகேடுகள் செய்துள்ளமையால் இவன் பேரைக் கேட்டவுடனே எவர்க்கும் பெரும்பீதி உண்டாம். யாரும் அஞ்ச அழிவுகள் ஆற்றினான். தன் பெயருக்கு உரிய இயல்பை இவன் செயலில் காட்டினான். கரம் = நஞ்சு, விடம்.

"மண்டுபெரும் கொடுவிடம்போல் மன்னுயிரைக்
கொன்றழிக்கும் மரபு காணப்
பண்டுகரன் எனும்பெயரைப் படைத்தெழுந்து
பாரடர்ந்து படர்ந்து நின்றான்."

என்றதனால் இவனது நிலையும் கொலையும் நிலை தெரியலாகும்.

கொடிய இவன் நெடிய படைகளுடன் பஞ்சவடியைநோக்கிக் கடிது வந்தான். போர்ப்பறைகள் முழங்க ஆர்ப்பரித்துச் சேனைகள் செருக்கி நடந்தன. கருந்தூளும் செந்தூளும் எங்கணும் கலந்தெழுந்தன. வனவிலங்குகள் எல்லாம் வெருவி ஓடின. பறவை யினங்கள் கதறிப் பறந்தன. அரக்கி வழி காட்ட அடு திறலுடன் முடுகி வந்த சேனைகள் குடிசையை நெருங்கின.

வந்தது சேனை வெள்ளம் வள்ளியோன் மருங்கு மாய
பந்தமா வினையை மாளப் பற்றறு பெற்றியோர்க்கும்
2930 உந்தரு நிலையதாகி உடனுறைந்து உயிர்கள் தம்மை
அந்தகற்கு அளிக்கும் நோய்போல் அரக்கிமுன்னாக அம்மா!

தூரியக் குரலின் வானின் முகிற்கணம் துணுக்கம்கொள்ள,
2931 வார்சிலை ஒலியின் அஞ்சி உரும்எலாம் மறுக்கம் கொள்ள,
ஆர்கலி ஆர்ப்பின் உட்கி அசைவுற, அரக்கர் சேனை
போர்வனத் திருந்த வீரர் உறைவிடம் புக்க தன்றே. (2)

தூளியின் படலை வந்து தொடர்வுற மரமும் தூறும்
2933 தாளிடை ஒடியும் ஓசை சடசட ஒலிப்பக் கானத்து
ஆளியும் அரியும் அஞ்சி இரிதரும் அலக்கண் நோக்கி
மீளிமொய்ம் பினரும் சேனை மேல்வந்த துளதென் றுன்னா.

மின்னின்ற சிலையன்; வீர கவசத்தன்; விசித்த வாளன்;
பொன்னின்ற வடிம்பின் வாளிப் புட்டிலன்; புகையும்நெஞ்சன்;
நின்னின்று காண்டி யான்செய் நிலையென விரும்பி நேரா
முன்னின்ற பின்வந்தோனை நோக்கினன் மொழியல் உற்றான்.

கரனுடைய படைகள் வந்த வரவையும், ஆரவாரத்தையும், வீரர்கள் நிலைகளையும் ஈண்டு நேரே காண்கின்றோம்.

சூர்ப்பநகை முன்னும் சேனைகள் பின்னும் ஆக வந்ததற்கு ஓர் உவமை வந்துள்ளது. கதை நிகழ்ச்சிகளைச் சொல்லிவரும் பொழுதே அரிய கருத்துக்கள் துள்ளி வருகின்றன. கவியின் கலைவளங்கள் புவியினர் உய்யத் தலையளி புரிந்து தழைத்து வருதலை உணருந்தோறும் உள்ளம் உவகையில் திளைத்து வருகின்றது.

சேனை வெள்ளம் வள்ளியோன் மருங்கு வந்தது

இராமனது தவக்குடிசை அருகே கடல் அனைய படைகள் நெருங்கின என்பதை இங்ஙனம் காட்டியிருக்கிறார்.

வீரவில்லி எனச் சொல்லவேண்டிய இந்த இடத்தில் இராமனை வள்ளியோன் என்றது உள்ளி யுணர வுரியது.

அள்ளிக் கொடுக்கின்ற கொடை வள்ளல் என மேல் ஆகவுள்ளதைக் கவி சொல்லிக் கொடுக்கின்றார்.

தான் உறுதியாகச் செய்து தருவதாக முனிவர்களுக்கு முன்னம் வாக்குறுதி தந்ததை ஈண்டு முடித்தருள இந்த ஆண்டகை மூண்டு நேர்ந்துள்ளமையால் வாக்கு மாருத வண்மையும் திண்மையும் உண்மையும் நோக்கி அவ்வுயர் பெயர் வந்தது.

நரிகளுக்கும் நாய்களுக்கும் பருந்துகளுக்கும் எமனுக்கும் கொள்ளை கொள்ளையாக வாரி வழங்கிப் பெருவிருந்து செய்யப் போகின்ற அரிய வீரக் கொடையும் அறிய நின்றது.

தீமைகளையே செய்து பாவங்கள் மண்டியுள்ள தீயவுடல்களை மாய்த்து அரக்கர் உயிர்களைத் தூயனவாக்கித் துறக்க போகங்களை அவற்றிற்கு இரக்கமுடன் அளிக்க எழுந்துவந்துள்ள நல்ல வள்ளல் என உண்மை தெளிந்து உள்ளம் உருகி யுள்ளமையால் அவ் வண்மை நிலையை உலகம் தெளிய உணர்த்தினர்.

சூர்ப்பநகை வழி காட்டி அழைத்து வந்த படைகள் எல்லாம் அடியோடு அழியப் போகின்றன என்பதை உவமைக் குறிப்பால் தெளியப்படுத்தினர்.

“உயிர்களை அந்தகற்கு அளிக்கும் நோய்” என அவனை இந்த வண்ணம் குறித்திருக்கிருர். அந்தகன் = எமன்.

உடல்களை ஒட்டியிருந்துகொண்டே நோய் உயிர்களைநீக்கும்; அதுபோல் அரக்கர்களை அடுத்து நின்றே அவரைக்கொல்ல நேர்ந்துள்ளமையால் நோய் அவனுக்கு உவமையாய் வந்தது.

காலம் ஓர்ந்து உடன் உறை கடிய நோயனுள்.

என முன்னம் * சொன்னது கண் எதிரே அனுபவத்துக்கு வந்துள்ளமையால் அதனையே ஈண்டு அநுவதித்து மொழிந்தார்.

அங்கே குறித்ததை விட இங்கே நோய் ஏற்றம் மிகப்பெற்றுள்ளது. பற்று அற்ற அரிய பெரிய தவஞானிகளாலும் நீக்க

* இந்நூல் பக்கம், 1713 வரி 3 பார்க்க,

முடியாத நிலையினையுடையது என நோயின் நிலைமையையும் தலைமையையும் விளக்கி யிருக்கிறார்.

இருவினைப்பற்றுக்களும் நீங்கிய தத்துவ ஞானிகளாயினும் உய்த்த பிராரத்த வினைப்பயனை அனுபவித்தே தீர வேண்டும் ஆதலால் வினைவிளைவான நோயை யாராலும் எளிதே விலக்கி விடமுடியாது என்பார் "பற்று அரு பெற்றியோர்க்கும் உந்தரும் நோய்" என்றார். உந்துதல் = தள்ளுதல், நீக்குதல்.

அத்தகைய நோயை அரக்கிக்கு ஒப்புக்கூறியதனால் யாரும் அவளைத் தப்பிப் பிழைக்க முடியாது என்பது பெறப்பட்டது.

அரிய அருள் ஞானிகளையும் வதைக்கும் நோய்போல் பெரிய அரக்க வீரர்களையெல்லாம் அவள் ஒழிக்க மூண்டுள்ளாள் என்க.

## இலக்குவன் எழுந்தது.

அவள் கொண்டுவந்த படைகளின் ஆரவாரங்களைத் தூர வரும்போதே இலக்குவன் கேட்டான். விரைந்து வெகுண்டு யுத்த சன்னத்தனாய் மூண்டு அண்ணன் எதிர்வந்து நின்றான்.

"மின் நின்ற சிலையன் ; வீர கவசத்தன் ; விசித்த வாளன் ; வாளிப்புட்டிலன்; புகையும் நெஞ்சன்;" என்றமையால் அது பொழுது இளவல் நின்ற நிலைமையும் வீரப்பாடும் அறியலாகும். அரசகுல வீறுகள் அதிசய நிலையில் விரசி மிளிர்கின்றன.

மார்பில் கவசம் அணிந்து, இடையில் உடைவாள் மடுத்து, தோளில் அம்பறாத்தூணி இறுக்கி, கையில் வில் எடுத்துத் துடி துடித்து நிற்கும் அப்பிள்ளையை நோக்கி நாம் உள்ளம் உவந்து ஊக்கி நிற்கின்றோம்.

"வீரநாயகா! அடியேன் செய்கின்ற சிறிய தொண்டினை அந்தக் கமலக்கண்களால் கண்டு கொண்டே ஈண்டு நின்றருளுங்கள்" என்று அண்ணனுடைய பாதங்களைத் தொட்டு வணங்கித் தம்பி விரைந்து நின்றபொழுது நம்பி தடுத்து நிறுத்திக் கடுத்து எழுந்து நேரே போர்மேல் மூண்டான்.

"நில்; நின்று காண்டி ;" எனப் போராவல் மண்டிப் போராவலோடு இளையவன் வேண்டி மூண்டதை விலக்கி மொழிந்து இந்த ஆண்டகை வில் ஏந்தி வெளிவந்த கோலம் ஞாலம் சொல் ஏந்தித் துதிக்க நின்றது. உள்ள வீரம் உருவில் ஒளிர்கின்றது.

நெறிக்கொள்மா தவர்க்கு முன்னே நேர்ந்தனென் நிருதர் ஆவி
பறிக்குவென் யானே என்ற பழமொழி பழுதுறுமே
வெறிக்கொள்பூங் குழலி ஞனை வீரநீ வேண்டினேன் யான் 2935
குறிக்கொடு காத்தி இன்னே கொல்வென்இக் குழுவை என்ன;

மரன்படர் கானம் எங்கும் மதர்பட வந்த சேனை
கரன்படை என்பது எண்ணிக் கருநிறக் கமலக் கண்ணன்
சரன்படர் புட்டில் கட்டிச் சாபமும் தரித்தான் தள்ளா 2936
உரன்படர் தோளின் மீளாக் கவசமிட்டு உடைவாள் ஆர்த்தான்;

மீளரும் செருவில் விண்ணும் மண்ணும் மென்மேல் வந்தாலும்
நாளுலந் தழியும் அன்றே நான் உனக்கு உரைப்பது என்னே? 2937
ஆளியின் துப்பிஞய்! இவ் அமர் எனக்கு அருளி நின்றுஎன்
தோளினைத் தின்னுகின்ற சோம்பினைத் துடைத்திஎன்ருன்.(3)

என்றனன் இளைய வீரன் இசைந்திலன் இராமன்; ஏந்தும்
குன்றன தோளின் ஆற்றல் உள்ளத்தின் உணரக் கொண்டான்
அன்றியும் அண்ணல் ஆணை மறுக்கிலன் அங்கை கூப்பி 2938
நின்றனன் இருந்தான் கண்ணீர் நிலனுறப் புலர்கின்ருள்பால்,

குழையுறு மதியம் பூத்த கொம்பனுள் குழைந்து சோரத்
தழையுறு சாலை நின்று தனிச்சிலை தரித்த மேரு 2939
மழைஎன முழங்கு கின்ற வாள்எயிற்று அரக்கர் காண
முழையில்நின் றுஎழுந்துசெல்லும்மடங்கலின்முனிந்துசென்ருன்.

இலக்குவனைச் சமாதானப்படுத்தி நிறுத்திவிட்டுப் போர்க் கோலம் பூண்டு வில்லும் கையுமாய் வீரப்பொலிவுடன் இராமன் வெளிவந்து நிற்கும் காட்சியை இங்கே கண்டு வியந்து கருதி மகிழ்ந்து உறுதி மீதூர்ந்து மேல் விளைவதை ஊக்கி நோக்கி ஆக்கம் அவாவி வேட்கையுற்று நிற்கின்றோம்.

படை வந்ததை அறிந்ததும் இலக்குவன் விரைந்துபோர்க்கு மூண்டு அண்ணனிடம் விடை வேண்டி நின்றது, தான்ஒருவனே அனைவரையும் வென்று விடலாம் என்ற வீரத் துணிவும், முன்னவனுக்கு யாதொரு இன்னலும் நேராதபடி என்ன வகையிலும் பாதுகாத்து வருகின்ற பாச நேசமும் அப்பின்னவனிடம் பெருகியுள்ளமையை உலகம் அறிய வெளிப்படுத்தியது.

இங்ஙனம் விரைந்து நின்ற இளவலை இராமன் பரிந்துநோக்கி, “தம்பி! அரக்கர் வருக்கத்தை நானே தொலைத் தருள்வதாக

முனிவர்களிடம் முன்னே உறுதி கூறியிருக்கிறேன்; அவ்வுரை தவறலாகாது; சொல்லிய வாக்கு வழுவாமல் நானே சென்று எல்லாரையும் வென்று வருகின்றேன்; நீ இங்கேயே உன் அண்ணியைப் பாதுகாத்து நில்!'' என இவ் அண்ணல் நிறுத்தி எழுந்தது நெஞ்சை உருக்குகின்றது.

கொடிய இராட்சதர்கள் எதிரே தம்பியைத் தனியே விடலாகாது என்னும் பாசம் உள்ளே பொங்கியுள்ளது; அதனை மறைத்து வைத்துக்கொண்டு வெளியே இவ்வாறு நம்பி பேசியிருக்கிறான். அதற்கு ஆதாரவை எடுத்துக் காட்டினான்.

" மாதவர்க்கு முன்னே நேர்ந்தனென் " என்றது அவ்வாக்குத்தத்தத்தை நானே இன்று பூர்த்தி செய்யவேண்டும் என்றவாறு. " அரக்கரை வேர் அறுப்பன்; வெருவல்மின் நீர்!" என முன்னம் தவசிகளுக்கு அபயம் அருளியதை அறிவித்தருளினான்.

காரியங்களை நெறிமுறையே செய்து முடிக்க வேண்டும் எனத் தனது நீர்மையையும் நேர்மையையும் நினைவுறுத்தினான்.

"நிருதர் ஆவி பறிக்குவென் யானே என்ற பழமொழி பழுதுறுமே" எனக்கு அமரை உரிமை செய்துவிடுக எனத் தம்பியை இந்நம்பி நயந்து வேண்டியிருக்கிறான். பொருகளம் புகுவதில் ஒருவரைவிட ஒருவர் அவாவி விரைதலால் இருவர் நிலைகளையும் நாம் ஒரு முகமாய் உணர்ந்து கொள்கின்றோம். பசி கொண்ட சிங்கம் போல் வீர வெறி மண்டி விசைகொண்டு நிற்கின்றார்.

நிருதர் ஆவி பறிக்குவென் என்ற வார்த்தையிலுள்ள வேகத்தை நுனித்து நோக்குக. உலக உயிர்களுக்குத் துயரமாயிருத்தலால் அந்தப் பாவிகளின் ஆவிகளைக் களைகளைப்போல் பறித்து எறிவேன் என்றான்.

போரில் யான் யாதும் வருந்தேன்; அரக்கர் அனைவரையும் எளிதே அழித்துவிடுவேன் எனத் தம்பியைத் தேற்றும் பொருட்டுத் தன் ஆற்றலை இவ்வாறு வெளிப்படுத்தினான்.

பண்டு சொன்ன பழமொழி பழுதுறாமல் இன்று நானே தொழில் புரியவேண்டும் என இக்கோதண்டவீரன் மூண்டெழுந்து தம்பியை மாதண்டை நின்றருள வேண்டி விரைந்தான்.

*வெறிக்கொள் பூங்குழலினாளை வீர நீ காத்தி!*

தனது அருமைத் திருமனைவியைக் காத்து நிற்கும்படி உரிமைத் தம்பிக்கு அண்ணல் இவ்வண்ணம் உத்தரவு தந்திருக்கிறான். கடமைக் காப்பில் கண்ணோடியுள்ளது.

இயற்கையாகவே பரிமளம் கமழ்கின்ற கூந்தலையுடையாள் ஆதலால் குழலினாள் என அவ்வழகியை விழைந்து கூறினான். வெறி = வாசனை. மயிர் மணம் உயிர் மணந்து ஒளிர்கின்றது.

வீரப்போர்மேல் வெகுண்டு செல்லும் போதும் ஈரக்காதலி பால் ஆர்வம் மீதூர்ந்துள்ளது. தற்காப்பைத் தகவுடன் செய்து பகைமேல் எழுந்திருக்கிறான்.

குறிக்கோடு காத்தி! என்றது அரக்கர் திரள்கள் நெருக்கி வந்துள்ளன; மிக்க கவனத்தோடு காக்கவேண்டும் என எச்சரித்த படியாயது. காவலில் இவனது ஆவல் நிலை தெரிகின்றது.

படைவீரர்கள்மேல் என்னை விடாமல் ஒரு பெண்ணைக் காத்து நிற்கச் சொல்கின்றாரே அண்ணா என எண்ணாதே அப்பா! பலகோடி சத்துருக்களைச் சங்கரித்து வெல்பவனைவிட ஓர் உத்தமியைக் காத்தருளுபவனே பெரிய சுத்த வீரனாவான் என்பதை உய்த்துணர்ந்து கொள்க என்பான் வீர நீ என்றான்.

இவ் வீரக் குரிசில் தம்பியை ஆதரித்து அன்பு புரிந்து வருவது பண்பு பல படிந்து இன்ப நிலையமாய் இனிமை சுரந்து உயிரினங்களுக்கு உயர்தகைமைகளை உணர்த்தியருள்கின்றது.

இவ்வாறு உறுதி கூறி இளையவனை நிறுத்திவிட்டு அமர்க் கோலத்துடன் இராமன் வெளி ஏறினான். மீளவும் இலக்குவன் மறுகினான். அண்ணனைப் பரிவுடன் நோக்கி விண்ணும் மண்ணும் திரண்டு மேலும் மேலும் வெகுண்டுவரினும் உங்கள் முன்னே அவை யாவும் அழிந்து ஒழியும் என்பது எனக்கு நன்கு தெரியும்; ஆயினும் இந்தப் போரை மட்டும் அடிமைக்கு நல்கி அருளுங்கள்; நீங்கள் தாயருகே நில்லுங்கள்; நாயேன் சென்று விரைந்து வென்று வருகிறேன் என்று பரிந்து தொழுது விழைந்து வேண்டினான்.

செல்வனிடம் வறியவன் பொருள் இரந்து நிற்றல்போல் பெரியவனிடம் இளையவன் அமர் வேட்டு அலந்து நின்றான்.

என் தோளினைத் தின்னுகின்ற சோம்பினைத் துடைத்தி! போர் வேட்கையில் இலக்குவன் பொங்கி நிற்கின்ற நிலையை இவ்வாக்கியம் நன்கு உணர்த்துகின்றது. தோள்கள் தினவு தின்னுகின்றன என்றமையால் அமர் அமையாமல் அவன் அவாவி யுள்ளமை அறியவந்தது.

## இராமன் கரன் படைமேல் சென்றது.

இங்ஙனம் விநயமாக வேண்டியும் தம்பியை அமரில்விட இசையாமல் இராமனே போர்மேல் விரைந்து போயினான். இளையவன் கண்ணீர் சிந்திக் கைதொழுது நின்றான்.

அண்ணல் ஆணை மறுக்கிலன்; அங்கை கூப்பி நின்றனன். என்றமையால் அவனது நெஞ்சின் நீர்மையை நன்கு தெரி கின்றோம் எங்கும் உள்ளப் பாசம் துள்ளி மிளிர்கின்றது.

தமையன்மேல் தம்பி வைத்திருக்கும் அன்பும் மரியாதையும் ஆழ்ந்து நோக்குந்தோறும் என்னையும் உருக்குகின்றன.

முன்னவன் அமர் மேல் ஏகப் பின்னவன் இன்னவாறு இன்னலுடன மறுகி அண்ணி அயலே நின்றான். அப்பொழுது அப்புண்ணியவதி என்ன நிலையில் இருந்தாள்?

கண்ணீர் நிலன் உறப் புலர்கின்றாள்.

கடல்போல் பொங்கி வந்துள்ள படைகள் மேல் தன் நாயகன் தனியே செல்லுங்கால் அந்நாயகி நண்ணியிருந்த நிலையை இக் கண்ணீர் நம் கண் எதிரேகாட்டி உண்ணீர்மையை உணர்த்துகின்றது. உள்ளம் உருகி அவள் உயிர் பதைத்துள்ளது.

வீரக்குடியில் பிறந்த சிறந்த சத்திரிய குல மங்கையாயினும் படைத்துணை யாதும் இன்றித் தன்னந்தனியே கொடியவர்களோடு தன் கணவன் இன்னவாறு போர் ஆட மூண்டதை நினைந்து இன்னலுழந்து சானகி மனம் மறுகி யிருக்கிறாள்.

குழையுறு மதியம் பூத்த கொம்புஅனாள் குழைந்துசோர.

இந்த உருவக வருணனை அந்தத் திருவின் உருவ நிலையை ஒளிசெய்து காட்டுகின்றது. மெல்லிய பூங்கொம்பு வெயிலில் வாடியதுபோல் சீதை துயரில் வாடித் துவண்டிருக்கின்றாள்.

இங்ஙனம் குழைந்து சோர்கின்ற இன்னுயிர்த் துணைவியை இளையவன் பாது காவலில் இருத்திவிட்டு இக்கோமகன் கோதண்டத்தோடு வெளியேறியது ஓர் அரிய வீரக்காட்சியாய் ஒளியேறி நின்றது.

தழையுறு சாலைநின்று தனிச்சிலை தரித்த மேரு
முழையில்நின்று எழுந்து செல்லும் மடங்கலின் முனிந்து சென்றான்.

இந்தக் காட்சியைக் கொஞ்சம் கண் ஊன்றிப் பாருங்கள்.

மலைக் குகையிலிருந்து வெளியே பாயும் சிங்க ஏறுபோல் தழைக் குடிசையிலிருந்து இராமன் புறப்பட்டிருக்கிறான்.

பகைவரை நினைந்து யாதும் அஞ்சாமல் அடலாண்மையோடு கம்பீரமாய்ச் சென்றுள்ளமையை உவமானம் உணர்த்திநின்றது.

மதயானைகளைப்போல் பருத்துக் கொழுத்துச் செருக்கி வந்திருக்கும் அரக்கர் திரள்களை யெல்லாம் எளிதே அழித்துத் தொலைத்து ஆர்த்து மீளுவன் என்பது அறிய வந்தது. எழுச்சியிலேயே விளைவதை விளக்கிக் கவி மகிழ்ச்சியை விளைத்திருக்கிறார்.

இங்ஙனம் பகைவர் எதிரே தோன்றி நின்ற இராமனைச் சூர்ப்பநகை கரனுக்குக் கை நீட்டிச் சுட்டிக் காட்டினாள்.

தோன்றிய தோன்றல் தன்னைச் சுட்டினள் காட்டிச் சொன்னாள்
வான்தொடர் மூங்கில் தந்த வயங்குவெந் தீயிது என்னத் 2940
தான்தொடர் குலத்தை எல்லாம் தொலைக்குமா சமைந்துநின்றாள்
என்றுவந்து எதிர்த்தவீரன் இவன்இகல் இராமன் என்ன; (1)

கண்டனன் கனகத் தேர்மேல் கதிரவன் கலங்கி நீங்க
விண்டனில் நின்ற வென்றிக் கரன்எனும் விலங்கல் தோளான் 2941
மண்டமர் யானே செய்துஇம் மானிடன் வலியை நீக்கிக்
கொண்டனன் வாகை என்று படைஞரைக் குறித்துச்சொன்னான் (2)

மானிடன் ஒருவன் வந்த வலிகெழு சேனைக்கு அம்மா!
கானிடம் இல்லை என்னும் கட்டுரை கலந்த காலை 2942
யானுடை வென்றி என்னாம்? யாவரும் கண்டு நிற்றிர்
ஊனுடை இவனை யானே உண்குவென் உயிரை என்றான். (3)

(கரன்வதைப்படலம் 66-68)

வில்லுடன் வீறுகொண்டு நேரேவந்து நின்ற இராமனைக் கரனுக்குச் சுட்டிக்காட்டி "இவன்தான் நமது பகைவன்" என

அந்தப் படி நீலி உரைத்தாள். அவளுக்கு இங்கே மூங்கில் தீ உவமையாக வந்துள்ளது.

## மூங்கில் தீ

மூங்கிலில் இருந்து வெடித்த தீ அந்தக்காட்டை யெல்லாம் எரித்து அழிப்பது போல் தான் பிறந்த குலத்தை முழுவதும் அழிக்கவந்திருக்கிறாள் ஆதலால் அது இவளுக்கு ஒப்பாய்வந்தது.

"ஒளிகழை முழங்கழல் வயமா வெரூஉம்
குன்றுடை அருஞ்சுரம்." (ஐங்குறுநூறு, 307)

"கனைகதிர் தெறுதலின் கடுத்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழல்"
(கலி 150)

"கைப்பொருத ஓசையால் கண்ணுமிழ்ந்த செந்தியால்
மெய்ப்பொருது மீதெழுந்த வெம்புகையால்—நைப்ப
வெதிர்வேம் கடுங்கானம் போன்றதே வெம்போர்
எதிர்வேந்தர் செய்த இடம். (பாரதவெண்பா)

"வயிரம் எனும் கடு நெருப்பை மிகமூட்டி
வளர்க்கினுயர் வரைக்காடு எனனச்
செயிர்அமரில் வெகுளிபொரச் சேரஇரு
திறத்தேமும் சென்றுமாள்வேம்." (பாரதம்)

மூங்கிலிற் பிறந்த முழங்குதீ மூங்கில்
முதலற முருக்குமா போல
தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து
தன்னுறு கிளையெலாம் தகிக்கும்
ஆங்கதன் வெம்மை அறிந்தவர் கமையால்
அதனை உள்ளடக்கவும் அடங்காது
ஓங்கிய கோபத் தீயினை ஒக்கும்
உட்பகை உலகில் வேறுண்டோ? (உத்தரகாண்டம்)

மூங்கிலில் தீ உண்டு என்பதும், அது வெளிப்படின் அவ் வனம் முழுவதும் எரிந்து அழிந்துபடும் என்பதும் இவற்றால் அறியலாகும். கழை, காம்பு, வெதிர், வரை என்பன மூங்கிலைக் குறித்து வரும் பெயர்கள்.

தீங்குடைய அரக்கியை மூங்கில் தீ என்றது அவள் பாங்கு தெரிய. கடிய நோய் என முன்னம் குறித்தார்; இங்கே அவளைக்

கொடிதீ என்றார். தன் குலத்திற்கே நாசகாலியாய் வந்திருத்தலால் அவளது நீச நிலையை வாசகர்களுக்கு இங்ஙனம் நினைவுறுத்தினார்.

## கரன் கடுத்து மொழிந்தது.

இத்தீயவள் வாய்ச் சொல்லைக் கேட்டதும் தேர்மேல் நின்ற அவ்வீரன் ஆங்காரங்கொண்டு ஆரவாரத்துடன் வீர வாதம் கூறினான். அவ்வுரையில் செருக்கும்திமிரும் செறிந்துநிற்கின்றன.

அற்பமான இந்த மனிதனைக்கொல்ல இவ்வளவு படைகளைக் கொண்டு வந்தது எவ்வளவு மதியீனம்? ஒருசிறு எலியை வேட்டையாடப் பல புலிகளைத் திரட்டிக் கொண்டு அரிய வீரச் சிங்கம் வந்ததுபோல் இன்று நான் இங்கே வந்திருக்கின்றேனே! என்று அவன் சிந்தை மிக நொந்தான். ஆளைக்காணவே அவனுக்கு நாணம் மிக உண்டாயது.

தேவர் திரள்களையும் அசுரக் கூட்டங்களையும் பலமுறை வென்று சுவை கண்டவன் ஆதலால் ஈண்டு நேர்ந்த எதிரியைக் கண்டதும் பெரிய அவமானம் நேர்ந்தது என்று அவன் மறுகி நின்றான். மானிடரை அரக்கர் இளிவாக எண்ணியுள்ளமை அவனுடைய மொழியால் வெளியாயது.

எவரையும் தன் வசமாக்கிப் பரவசப் படுத்துகின்ற இராமனது அரிய உருவ அழகையும் அவன் உவந்து நோக்கவில்லை; சிறிய ஒரு மனிதனோடு சண்டை செய்ய மூண்டதே பெரிய வசை என்று கருதிப் பெருமிதம் பேசினான்.

"மானிடன் ஒருவனை வெல்ல வந்த சேனைக்குக் கான் இடம் இல்லை" என்றதனால் அன்று அவன் கொண்டுவந்துள்ள படைகளின் எல்லை காணலாம். அவ்வனம் முழுதும் நிறைந்து மேலும் இடம் இல்லாமையால் சேனைகள் அயலிடங்களிலும் பரவியிருந்தன என்று தெரிகின்றது.

அம்மா! என்றது அதிசயக் குறிப்பாய் இகழ்ச்சிமேல் எழுந்தது. இம்மாதிரி இதுவரை வந்ததே இல்லை; இந்த ஈனப்போர் மானக்கேடாய் நேர்ந்தது என்று சினந்து சீறி அயலே நின்ற சேனாதிபதிகளை விரைந்து நோக்கினான். வீறுகள் மொழிந்தான்:

பொரும்படி வந்த பெரும் படைகள் எல்லாம் யாதொன் றும் செய்யாமல் வேடிக்கை பார்த்து நிற்கட்டும்; நான் ஒருவனே சென்று இந்த மனிதனைக் கொன்று உயிர் குடித்துத் தின்று வரு கின்றேன் என்று செருக்கி எழுந்தான். அப்பொழுது அகம்பன் என்னும் மதிமான் தடுத்தான்.

## அகம்பன் அறிவுறுத்தியது.

இவன் விஞ்சைகள் பல பயின்றவன். வஞ்ச வினைகளில் சிறந்தவன். பறவை மிருகங்களினுடைய வாயொலிகளால் அவற் றின் இயல்களையும் செயல்களையும் நன்கு தெளிந்தவன். நிகழ் கின்ற குறி குணங்களை ஓர்ந்து எதிர் கால பலன்களைத் தெளி வாகச் சொல்ல வல்லவன். சிறந்த நிமித்திகனுன இவனை இலங்கை யிலிருந்து இராவணன் கரனுக்கு உதவியாக அனுப்பியிருந்தான். இவன்பால் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டு அவன் பேணி வந்தான். பல சூழ்ச்சிகளைச் சொல்லிக் கொடுத்து ஒரு மதி மந்திரிபோல் அவனுக்கு இவன் ஆதரவு புரிந்து நின்றான்.

அத்தகைய அவன் இங்கே எதிர்வந்து நிற்கின்ற உத்தமனைக் கண்டதும் உள்ளம் திகைத்தான். சுற்றிப் பார்த்து கடல்போல் சூழ்ந்து நிற்கும் படைகளை ஒரு சிறிதும் மதியாமல் வெற்றிப் பொலிவோடு வீர மடங்கல்போல் வீறுகொண்டுள்ள நம் தீரனது நிலையை நினைந்து நினைந்து நெஞ்சம் கலங்கினன். உடனே அஞ் சலியுடன் கரனை அணுகி, “இன்று போர் புரியலாகாது; விரை வில் மீளவேண்டும்; இரத்த மழை சொரிவது போல் மேலே மேகங்கள் சிவந்து தோன்றுகின்றன; உங்கள் தேரில் உலாவு கின்ற கொடியில் காக்கைகளும் பருந்துகளும் கதறி விழுகின்றன. வாளாயுதங்களின் வாய்களில் ஈக்கள் மொய்க்கின்றன. குதிரை கள் தலைகள் கவிழ்ந்து நிற்கின்றன; நாய்களும் நரிகளும் ஊளை யிடுகின்றன; உங்கள் முடி மாலைகள் புலால் வீசுகின்றன; எனது இடத்தோள் துடிக்கின்றது; தானைத் தலைவர் முகங்களில் சவக் களைகள் தோன்றுகின்றன; அமர் தொடங்கின் எல்லாரும் ஒருங்கே அழிந்து படுவோம். இந்தக் குறிகளையும் எதிரியையும் நோக்கினல் நமக்குச் சாவு நிச்சயம் என்று தெரிகின்றது; இவனை ஒரு மனிதன் என எளிதாக எண்ணுவது பெரிய மடமையாகும்” என்று அம் முதியோன் மதி நலத்துடன் அறிவுறுதி கூறினன்.

"இனைய ஆகலின் மானிடன் ஒருவன் என்று இவனை
நினைய லாவது ஒன்று அன்று; அது நீதியாம்; நின்ற
வினைஎலாம் செய்து வெல்லலாம் தன்மையன் அல்லன்;
புனையும் வாகையாய் பொறுத்தி என் உரையெனப் புகன்றான்."

அந்த நிமித்திகன் நிலைமைகளை நுனித்துணர்ந்து தலைவனிடம் இப்படித் தகுதியுடன் உரைத்திருக்கிறான்.

வில் வேல் வாள் முதலிய கொடிய ஆயுதங்களாலும், வஞ்சமான மாய விஞ்சைகளாலும் எவ் வகையிலும் யாதும் இவனை யாரும் வெல்ல முடியாது என்பான், "வினை எலாம் செய்து வெல்லலாம் தன்மையன் அல்லன்" என்றான்.

பிறரை வெல்லும் தன்மையே பிறப்புரிமையாக இக் குல மகனைப் புல்லி யுள்ளது; செயராமன் என்னும் அவ் வுண்மை பகைவர் வாயிலிருந்தும் உலகம் அறிய ஈண்டு உதயமாய் வந்தது.

### படை வளைந்தது.

நிலைமையை உரிமையாளன் இவ்வாறு தெளிவாகச் சொல்லியும் கரன் அதனை மதிக்கவில்லை. இகழ்ந்து சிரித்தான். சிரிக்கவே படை வீரர்கள் பாய்ந்து இராமனை வளைந்து கொண்டனர். இவன் வில்லும் வளைந்தது. வேலை செய்தது.

உரைத்த வாசகம் கேட்டலும் உலகெலாம் உலையச் 2948
சிரித்து நின்றனன் சேவகம் தேவரைத் தேய
அரைத்த அம்பியார் அலங்கெழில் தோளமர் வேண்டி
இரைத்து நீங்குவை மானிடற்கு எளியவோ? என்றான். (1)

என்னும் மாத்திரத்து எறிபடை இடிஎன இடியா
மன்னர் மன்னவன் மதலையை வளைந்தன வளைந்து 2949
பின்னும் வாளினை மடங்கலை முனிந்தன வேறும்
துன்னி னெலனர் சுடுசினத் தரக்கர்தம் தொகுதி. (2)

வளைந்த காலையில் வளைந்தன இராமன்கை வரிவில்
விளைந்த போரையும் ஆவதும் விளம்புதும் விசையால் 2950
புளைந்த பாய்பரி புரண்டன புகர்முகப் பூட்கை
உளைந்த மால்வரை உருமிடி படஒடிந் தென்ன' (3)

சூலம் அற்றன; அற்றன சுடர்மழுத் தொகை; வாள்
மூலம் அற்றன; அற்றன முரண் தண்டு; பிண்டி 2951
பாலம் அற்றன; அற்றன பகழி; வெம் பகுவாய்
வேலும் அற்றன; அற்றன வில்லொடு பல்லம். (4)

தொடி துணிந்தன; தோளொடு தோமரம் துணிந்த;
அடி துணிந்தன கடக்களிறு; அச்சொடு நெடுந்தேர்
2955 கொடி துணிந்தன; குரகதம் துணிந்தன; குலமா
முடி துணிந்தன; முளையொடு துணிந்தன முசலம். (5)

கைகள் வாளொடு களம்படக் கழுத்தறக் கவசம்
மெய்கள் போழ்படத் தாள்விழ வெருவிட நிருதர்
2956 செய்ய மாத்தலை சிந்தின திசையுறச் சென்ற
தையலார் நெடு விழியெனக் கொடியன சரங்கள் (6)

மாரி யாக்கிய வடிக்கணை வரைபுரை நிருதர்
பேரி யாக்கையின் பெருங்கரை வயின்தொறும் பிறங்க
2957 ஏரி யாக்கின யாறுகள் இயற்றின நிறையச்
சோரியாக்கின போக்கின வனம் எனும் தொன்மை. (7)

சொரிந்த பல்படை துணிபடத் துணிபடச் சரத்தால்
அரிந்து போந்தன சிந்திடத் திசை திசை அகற்றி
2960 நெரிந்து பார்மகள் முதுகிற வனம் முற்றும் நிறைய
விரிந்த செம்மயிர்க் கருந்தலை மலையென வீழ்த்தான். (8)

மருள் தருங்களி வஞ்சனை வாள்எயிற்று அரக்கர்
கருடன் அஞ்சுறு கண்மணி காகமும் கவர்ந்த
2962 இருள் தரும்புரத் திழுதையர் பழுதுறற்கு எளிதே
அருள் தருந்திறத்து அறன் அன்றி வலிய துண்டாமோ? (9)

கரனுடைய படைகள் இராம பாணங்களால் பட்டுள்ள பாடுகளையும் அழிவு நிலைகளையும் இங்கே பார்த்து வியக்கின்றோம்.

அகம்பனது அறிவுரையை அவமதித்துக் கரன் அகம்பாவமாய்ப் பேசவே சேனைகள் மூண்டு சூழ்ந்து கொடிய ஆயுதங்களைக் கொதித்து வீசின; வீசவே இராமன் கோதண்டத்திலிருந்து அம்புகள் எழுந்தன. அடு தொழில்கள் புரிந்தன; எங்கும் படு கொலைகள் விழுந்தன.

"மன்னர் மன்னவன் மதலையை வளைந்த" என இன்னவாறு சொன்னது சக்கரவர்த்தித் திருமகன் தனியே நின்று பொர நேர்ந்தமைக்கு இரங்கி.

எவ்வளவோ படைகளையுடைய மன்னர் பிரானுடைய அருமைத் திருமகன் ஒன்றும் இல்லாதவனைப் போல் தன்னந் தனியனாய்ப் பொல்லாத இராட்சதர்களோடு போராட நேர்ந்தது கவிக்கு ஆராமையை விளைத்திருக்கிறது.

இக்கோமகன் அம்புகள் எடுத்ததும், வில்லில் தொடுத்ததும், பகைவர்மேல் விடுத்ததும் வகை விவரமாய்ச் சொல்லவில்லை; ஏன்? அந்தக் கரவேக சரவேகங்கள் அறிவின் எல்லையைக் கடந்து உரைகளால் அளவிடலரியனவாய் அதிசய நிலையில் துதி செய்ய வுள்ளமையால் அவற்றின் விளைவுகளை மாத்திரம் வழி தெரிய விளக்கினார்.

அரக்கர் ஆர்த்து வீசிய சூலங்கள், வேல்கள், வாள்கள், மழுக்கள், முசலங்கள், அம்புகள், பிண்டி பாலங்கள், தண்டுகள் முதலிய யாவும் கண்ட துண்டங்களாய் உதிர்ந்தன. கைகள் இழந்தும், கால்கள் ஒழிந்தும், தோள்கள் துணிந்தும், தலைகள் போயும் படை வீரர்கள் நிலை குலைந்து மாண்டனர். குதிரைகளும் யானைகளும் தேர்களும் காலாட்களும் அங்கங்கே இடிகள் வீழ்ந்த நெடு மரங்கள் போல் கடிது மாண்டு தரையில் உருண்டன. எவ்வழியும் இரத்த வெள்ளங்கள் ஓடின; பிண மலைகள் குவிந்தன. எங்கும் சிவந்த குருதிகள் பாய்ந்து யாண்டும் பிணக்காடுகளாய்ப் பொங்கி நின்றமையால் வனம் எனும் பெயர் மங்கிப் போய் அந்த இடம் ஓர் புதிய உருத்திர பூமியாய்ப் பொலிந்து தோன்றியது. கழுகுகளும் பருந்துகளும் காகங்களும் பறந்து வந்து விரைந்து வட்டமிட்டு இறந்து பட்ட பிணங்களை அருந்தி மகிழ்ந்தன.

கருடன் அஞ்சுறு கண்மணி காகமும் கவர்ந்த
அருள்தரும் திறத்து அறன்அன்றி வலியது உண்டாமோ?

போராட்டமான கொலைக்கள நிகழ்ச்சியிலும் தருமத்தின் பெருமையையும் வலிமையையும் அறிவுறுத்தி இவ்வாறு கவி நீதி உபதேசம் செய்திருக்கிறார்.

கருடன் பறவைகளுக்கு அரசன்; திருமாலின் வாகனமான பெருமை மிகவுடையவன்; அத்தகைய பட்சிராசனும் அரக்கரைக் காணின் அச்சம் அடைந்து ஓடுவன்; அவ்வளவு கொடிய உச்ச வீரராய் நின்ற அவர் இன்று இராம பாணங்களால் செத்து வீழவும் அவருடைய கண்களைக் காக்கைகள் சூழ்ந்து கொத்தித் தின்றன ஆதலால் கருடன் அஞ்சுறு கண்மணி காகமும் கவர்ந்த என்றார். பண்டிருந்த தலைமையும் இன்று நேர்ந்த நிலைமையும் கண்டு தெளிந்து காரியம் உணர இங்ஙனம் காட்டியருளினார்.

"அருள் தரும் திறத்து" என்றது தருமத்தின் பொருள் தெரிய வந்தது. எவ்வுயிர்க்கும் இரங்கி யருளும் தண்ணளியே புண்ணிய நீர்மை ஆதலால் அந்தக் கருணையுடையது அறம் என நின்றது. அதன் எதிரே மறம் மாண்டு படுகின்றது.

இரக்கமற்ற கொடிய பாவிகளாய் இருந்தமையால் அரக்கர் மடிந்து அழிந்து இழிந்து ஒழிந்தார் என அந்த அழிவு நிலையைத் தெளிவாக விளக்க அறத்தை எடுத்து இவ்வாறு காட்டினார்.

அறன் அன்றி வலியது உண்டாமோ ?

இதில் ஓகார வினா எதிர்மறைப்பொருளாய் இல்லை என்பதை உணர்த்தி நின்றது. அறனே வலியது ; அதன் எதிரே எவ்வலியும் எளியதாய் இழிந்து படும் என்க.

உடல் வலியும் படை வலியும் மிகுந்து, அரிய பெரிய செல்வங்களை அடைந்து, எவ்வளவு செழிப்புடையராய்ச் சிறந்திருந்தாலும் அறம் இல்லையாயின் அவர் பரிதாபமாய் இழிந்துஅழிந்து படுவர் என்பது தெளிந்து கொள்ள வந்தது.

தருமமே பலம் ; தருமமே சயம் என்பது கருத்து.

இராமன் ஒருவன் தனியே நின்று பல்லாயிரக் கணக்கான அரக்கர் திரள்களை எளிதே அழித்தொழிக்கின்றனே ! என்னே இது ? என அதிசயமடைந்து வியந்து நிற்கின்றவர்க்குத் தருமத்தின் மருமத்தை இங்ஙனம் திறந்து காட்டியிருக்கிறார்.

இராமன் தருமகுணசீலன் ஆதலால் அவன் எதிரே பாவிகளான அரக்கர் தாமாகவே ஆவி யழிந்து போகின்றார்.

"The moral is to the physical as ten to one." (Napoleon)

"தேக பலத்தினும் தரும பலம் பலமடங்கு உயர்ந்தது" எனச் சிறந்த போர்வீரனாகிய நேப்போலியன் இப்படி உரைத்திருக்கிறான். வீரமும் சீலத்தை வியந்து கொண்டாடுகின்றது.

படைவீரர்களும் அறந்தழுவி நின்ற அளவே வென்றியுடையராய் விளங்கி வருவர் என்றதனால் மறத்துறையிலும் அறத்தின் திறம் அறியலாகும். அறம் இன்றேல் யாவும் குன்றும்.

"என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்." (குறள், 77)

என்றபடி இரக்கம் அற்ற அரக்கர்கள் இரக்கமுடைய புண்ணியவான் முன் பொன்றி ஒழிகின்றார். தரும சூரியன் முன் பாவ இருள்கள் பாழாகின்றன.

அல்லவை செய்வார்க்கு அறம் கூற்றம் (நான்மணிக்கடிகை) ஆதலால் அப் பொல்லாதவர் எல்லார்க்கும் இந்நல்லவன் ஓர் எமனாய் நின்று கொல்ல நேர்ந்தான். தருமம் தழைத்து ஒளிர்கின்றது; பாவம் இளைத்து ஒழிகின்றது.

" Strength is goodness, weakness is sin. " (Vivekananda)

"நல்லவர் வலியராய் உயர்கின்றார்; தீயவர் மெலியராய் இழிகின்றார்." என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

நல்ல அருளும் அறமும் உடையராய் உலக மக்கள் ஒழுக வேண்டும் என அமரிடையும் நினைவுறுத்தி இங்ஙனம் அருளியுள்ளமையால் கவியின் அருள் அற நீர்மை அறியவந்தது.

தானைத் தலைவர் பொருதது.

மூண்டு பொருத படைத்திரள்கள் இவ்வாறு மாண்டுபோகவே படைத்தலைவர்கள் வேகமாய்க் கொதித்து வளைந்து அடுந்திறலுடன் கொடும்போர் புரிந்தனர்.

பதினன்கு வெண்கல ரதங்களைச் செலுத்திப் பல ஆயிரம் படைகளுடன் வந்து சேனாதிபதிகள் மானவீரங்கள் மிகுந்து வானவரும் அஞ்ச வன்போராடினர்.

நாகத்தனி ஒருவில்லியை நளிர்முப்புரர் முன்னாள் 2971
மாகத்திடை வளைவுற்றனர் எனவள்ளலை மதியார்
ஆகத்தெழு கனல்கண்வழி உகவுற்றெதிர் அழன்றார்
மேகத்தினை நிகர்வில்லியை வளைத்தார்செரு விளைத்தார். (1)

எய்தார்பலர்; எறிந்தார் பலர்; மழுவோச்சினர் எழுவால்
பொய்தார்பலர்; புடைத்தார்பலர்; கிடைத்தார்பலர்; பொருப்பாப் 2972
பெய்தார்மழை; பிதிர்த்தார்எரி; பிறைவாளெயிற் றரக்கர்
வைதார்பலர்; தெழித்தார்பலர்; மலையாமென வளைத்தார். (2)

பண்டு திரிபுர அசுரர்கள் சிவபெருமானை ஆகாயத்தில் வளைந்துகொண்டதுபோல் இன்று அரக்கர்கள் இராமனைப் பூமியில் சூழ்ந்துகொண்டு பொல்லாத போர்களைச் செய்தனர் என்ற

தனால் அவரது அழிவு நிலை தெளிய வந்தது. மாகம்=ஆகாயம். நாகம்=மேருமலை.

அந்த மேரு வில்லியோடு இந்த வீர வில்லியை ஒப்புரைத்தது, அப்பரமனது புன்னகையால் அசுர குழாம் எளிதெரிந்து போனதுபோல் இவனது உல்லாச வில்லாடலால் எல்லாரும் விரைந்து ஒழிந்துபோவர் என்பதைச் சொல்லாமல் சொல்லிய படியாம்.

அரக்கர் திரள்கள் ஆர்த்து எழுந்து கொடிய படைக்கலன்களை வீசின; தேர்களைக் கடாவி நான்கு புறமும் சூழ்ந்து நின்று சேனாதிபதிகள் கூரிய பாணங்களை மேலும் மேலும் பொழிந்தனர். எல்லாவற்றையும் அம்புகளால் மாற்றி யாதொன்றும் தன்மேல் வீழாதபடி இவ்வில்லாளி வேலை செய்து வந்தான். சிறிது நேரத்துள் சுற்றி நின்ற படைகள் முற்றும் பாழாயின. தானைத் தலைவர்கள் வீரவெறிமண்டி வெகுண்டு போராடினார். அவர் ஏறிவந்த தேர்களை இவ்வீரன் அழித்தான். பாகர்கள் இறந்து பாரில் உருண்டனர். புரவிகள் மடிந்து புரண்டன. அவர் கடுத்து மூண்டு கணைகள் தொடுத்தார். இவன் விடுத்த பகழிகள் அவருடைய வில்லுகள் அனைத்தையும் துணித்துப் போயின. மானத்தால் புழுங்கி மரங்களையும் கல்லுகளையும் அப்பொல்லாதவர் வாரி வாரி இவன்மேலே வீசி வீறு கொண்டு நெருங்கினர்.

வில்லிழந்து அனைவரும் வெகுளி மீக்கொளக்
கல்லுயர் நெடுவரை கடிதின் ஏந்தினர்
2982 ஒல்லையின் உருத்துயர் விசும்பின் ஓங்கி நின்று
எல்லுயர் பொறியுக எறிதல் மேயினர். (1)
கலைகளின் பெருங்கடல் கடந்த கல்வியான்
இலைகொள் வெம்பகழி ஏழிரண்டு வாங்கினான்
2983 கொலைகொள் வெஞ்சிலையொடு புருவம் கோட்டினான்
மலைகளும் தலைகளும் வீழ்ந்த மண்ணினே. (2)

சேனைத் தலைவர்கள் இப்படிச் செத்து ஒழிந்தனர். எறிதற்காகக் கைகளில் ஏந்திய மலைகளோடு தலைகளும் மண்ணில் விழுந்தன என்றதனால் அவர் அழிந்து பட்ட நிலை தெளிந்துகொள்ள வந்தது. உயிரழியும் வகையும் செயிரழியாமல் சீறிப்போராடியுள்ளனர்.

கலைகளின் பெருங்கடல் கடந்த கல்வியான்

என இராமனை இங்கே இங்ஙனம் குறித்தது, கலைதெரி புலமையோடு சிலைதெரி வீரமும் தலைமையான நிலைமையில் இக் குலமகனிடம் குலாவியுள்ளமையை வியந்து. கலைக் கடலைக் கடந்தவன் பகைக்கடலைக் கடந்து வருகின்றான்.

## திரிசிரா எதிர்ந்தது.

இவன் கரனுடைய தம்பி. தூடணனுக்கு இளையோன். போர் முறைகளில் நன்கு கைதேர்ந்தவன். மூன்று தலைகளை யுடையவன் ஆதலால் திரிசிரா என்னும் காரணப் பெயரோடு சிறந்து நின்றான். மாயவிஞ்சைகளில் மிகவும் வல்லவன்.

அத்தலைத் தானையன் ; அளவில் ஆற்றலன் ;
முத்தலைக் குரிசில் ; பொன்முடியன் ; முக்கணன் 2987
கைத்தலைச் சூலமே அனைய காட்சியான் ;
வைத்தலைப் பகழியான் ; மழைசெய் வில்லியான்.

இவனுடைய ஆற்றலும் தோற்றமும் ஏற்றமும் இவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளன. சூலம் மூன்று கவடுகளை யுடையது ஆதலின் அத்திரிசூலம் இத் திரிசிராவுக்கு உவமையாய் வந்தது. திரி=மூன்று. சிரம்=தலை. சாதாரணச் சூலத்தைக் குறியாமல் முக்கணன் கைத்தலைச் சூலமே அனைய காட்சியான் என்றது இவனது சத்துரு சங்காரத்தையும் வித்தகத்திறலையும் விளக்கி நின்றது.

சேனைத் தலைவர்கள் செத்து விழவே இவன் சீறி எழுந்து தன் தானைகளோடு தேரைச் செலுத்திப் போர் முகம் புகுந்து இராமனை நேர்முகமாய் வளைந்து கொண்டான்.

அன்னவன் நடுவுற ஆழி ஊழியீது
என்னவந்து எங்கணும் இரைத்த சேனையுள்
தன்னிகர் வீரனும் தமியன் வில்லினன் 2988
துன்னிருள் இடையது ஓர் விளக்கில் தோன்றினன்.
(கரன் வதைப்படலம், 114)

ஊழிக் கடல்போல் பொங்கி வந்த சேனை வெள்ளத்துள்ளே நம் வள்ளல் அகப்பட்டுக் கொண்டதைக் கவி இப்படி விளக்கியிருக்கிறார். தன் நிகர் வீரன் என்றது தலைமை தெரிய வந்தது.

கரிய பெரிய கொடிய ஒரு இருள் கூட்டத்தின் நடுவே சிறிய விளக்கு ஒளிபோல் இராமன் மருவி நின்றான் என்ற இவ்வுவமை உருகி உணர வுரியது. விளக்கில் தோன்றினான் என்றது மேல் விளைவதை விளக்கி நின்றது.

விளக்கு.

இருள் எவ்வளவு அடர்ந்து நின்றாலும் ஒளிமுன் எளிதே அது ஒழிந்து போதல் போல் அரக்கர் திரளனைத்தும் இராமன் எதிரே விரைந்து அழிந்துபோம் என்பது உணர்ந்துகொள்ள வந்தது. ஒப்பின் நுட்பம் உய்த்து நோக்கத் தக்கது.

கார் இருள் செறிந்த காட்டின் இடையே ஒரு சிறு பச்சை விளக்கு ஒளிர்தல்போல் இராக்கதர் குழுவுள் இவ்வுச்ச வீரன் ஒளிர்கின்றான் என்னும் இக்காட்சியைக் கண்ணூான்றி நோக்குக.

இருளுடைவைகலேம் இரவி தோன்றினாய் என்று முன்னம் முனிவர் உவந்து சொன்னபடியே ஈண்டு அரக்கரை அழிக்க மூண்டுள்ளான் ஆதலால் அந்த இருளை ஒழிக்கும் விளக்கு என நேர்ந்தான்.

அஞ்ஞான இருளை நீக்க மெய்ஞ்ஞான தீபமாய் மேவியுள்ளவன் இங்கே வீர சோதியாய் விளங்கி ஒளிர்கின்றான்.

"சோதியே சுடரே சூழ்ஒளி விளக்கே" (திருவாசகம்)
"தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே!"
(மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்)

"விண்ணொடு மண்ணை விழுங்கி அருட்கதிர்
விரியும் இளஞ்சுடரே

மெய்ப்புலன் மேய்ந்து சமைந்ததொர் வீட்டை
விளக்கும் விளக்கு ஒளியே!"
(முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்)

சிவன், உமை, முருகன் என்னும் இம்மூவரும் விளக்கு என முறையே இவற்றுள் தோன்றியிருத்தல் காண்க.

ஒளி மயமான பரதேவதை அளிபுரிந்து அவனியை விளக்க வந்துள்ள உண்மை நிலையையும் இவ்விளக்கு விளக்கி நின்றது

அரக்கர் திரள் நடுவே இங்ஙனம் அகப்பட்டு நின்ற இவ் வீரன் தனது வில்லின் வேலையை விறலுடன் ஆற்றினான். நான்கு

திசைகளிலும் நின்று கல்மாரி போல் பல்லாயிரம் படை வீரர்கள் இடையறாது வீசிய படைக்கலன்களை எல்லாம் துடைத்து ஒழித்து இவன் கடுத்துத் தொடுத்த பகழிகளால் தலைகளும் உடல்களும் எங்கும் நிலை குலைந்து சிந்தின. தாள் தோள் முதலிய உறுப்புக்கள் துண்டங்களாய் முண்டங்கள் குவிந்தன. இரண களம் முழுவதும் பிண மலைகள் பெருகி எழுந்தன.

இராம பாணங்களால் இறந்து பட்ட அரக்கர்கள் சிறந்த பதங்களை அடைந்தனர். கடல்போல் வளைந்த படைகள் யாவும் அடியோடு அழிந்தது அதிசயமாயது. ஒரு வில்லால் பல்லாயிரம் இராக்கதர்கள் ஒல்லையில் மாண்டு உருண்டமையால் அந்த அழிவு நிலை வியக்கத் தக்கதாய் நின்றது.

கைக்கரி அன்னவன் பகழி கண்டகர்
மெய்க்குலம் வேரொடும் துணித்து வீழ்த்தின; 2993
மைக்கரு மனத்து ஒரு வஞ்சன் மாண்பிலன்
பொய்க்கரி கூறிய கொடுஞ்சொல் போன்றவே.

(கரன் வதை **124**)

கொலைகளை விளைத்துள்ள இராமபாணத்தின் நிலைமை இங்ஙனம் விளக்கப்பட்டுள்ளது. சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம் என முனிவரது சாபமொழியை முன்பு உவமை கூறினார்; இங்கே இவ்வாறு வேறு ஒரு சொல்லைக் குறித்துக் காட்டியிருக்கிறார்.

கொடிய வஞ்சகன் ஒருவன் நியாயசபையில் பொய்ச்சாட்சியாய் நின்று சொல்லிய பொல்லாச் சொல் இராமபாணத்துக்கு ஈண்டு உவமையாய் வந்தது. அச் சொல் அவன் குடியை அடியோடு கெடுப்பதுபோல் இப்பகழி அரக்கர் குலத்தை அழித்தது என்க. கண்டகர் = இராக்கதர். பிறருக்கு அல்லல்களைச் செய்பவர் என்பது இச் சொல்லின் பொருளாம். அழிவு பாட்டுக்குரிய பழி தீமைகள் விழி தெரிய வந்தன.

மிதம் மீறிய படைகள் வளைந்தும் யாதும் கலங்காமல் மத யானை போல் கம்பீரமாய் நின்று வேலை செய்துள்ளமையால் "கைக்கரி அன்னவன்" என்றார். கரி = யானை.

பகழி, பொய்க்கரி கூறிய கொடுஞ் சொல் போன்றவே.

அம்பு செய்த அழிவு நிலையை இது எளிது தெளிவுறுத்தியது. வஞ்சன் மாண்பிலன் என்றது அவனது நெஞ்சின் தீமையையும் சிறுமையையும் விளக்கியது.

## பொய்க்கரி.

படு சூழ்ச்சியுடைய கொடிய தீயவன் மெய்யான சாட்சி போல் பேசும் வெய்ய பொய்ச் சொல்லை நம்பி அரசன் நீதி கெடுகின்றான். அது அவனது அரசுக்கு அவலம் ஆகின்றது; வாதியும் உரிய வழக்கை இழந்து கொடிய துயரங்கள் அடைகின்றான்; ஆகவே பொய்க்கரி பெரிய பாதகமாய் விளைந்து பேசியவன் குடியை நாசம் செய்கின்றது.

வளம் பெற்று வளர்ந்திருந்த செல்வக் குடியும் அப்பாபத்தால் இருந்த இடமும் தடந் தெரியாமல் அழிந்து போதலால் செழித்துக் கொழுத்து நின்ற அரக்கர் குழாத்தை அழித்து நீக்கிய பகழிக்கு அது உவமையாய் வந்தது.

பொய்ச் சாட்சி மிகவும் கொடியது; அதனை மனிதன் யாதும் மருவலாகாது என்பதை இவ்வாறு விநயமாகக் கவி உணர்த்தியருளினர்.

மொய்த்த மீன்குலம் முதலற முருங்கின மொழியில்
6613 பொய்த்த சான்றவன் குலமெனப் பொருகணை எரிய
உய்த்த கூம்புடை நெடுங்கலம் ஓடுவ கடுப்பத்
தைத்த அம்பொடும் திரிந்தன சாலமீன் சாலம்.

(வருணனை வழி வேண்டு படலம் 25)

இராமபாணத்தைக் கடலில் ஏவிய பொழுது அது பட்ட பாட்டைக் குறித்தபடியிது. பொய்ச்சாட்சி சொன்னவன் குலம் எரிந்தது போல் கடல் எரிந்தது எனக் காட்டியுள்ள காட்சியைக் கருதிக் காண்க. பொய்க்கரி குலக்கேடு செய்யும் என்பதை இவ்வாறு விளக்கியிருக்கிறார். முன் குறித்ததற்குப் பின் வந்துள்ள இது பெரிய வியாக்கியானமாய் விரிந்திருக்கின்றது.

தனியே பொய் பேசுவதே குற்றம். நீதி மன்றம் ஏறிப் பொய்யாகச் சாட்சி சொல்வது பெரிய தீமை ஆதலால் அதனைச் செய்யலாகாது என அறிவுறுத்தினர்.

பொய்க்கரி போகன் மின்! (சிலப்பதிகாரம்)

என இளங்கோவடிகள் வழங்கியுள்ளதும் ஈண்டு எண்ணத்தக்கது.

அறிவு கூறும் முறையில் இது விதிவாசகமாய் வந்துள்ளது. அது அச்சமும் திகிலும் விளைத்து நீதி நெறியை உச்ச நிலையில் உணர்த்தியிருக்கிறது.

அரச மன்றத்தில் பொய்க்கரி கூறுவோரை நம் கவி அரு வருத்து வெறுத்திருத்தலால் அக்கொடுமையைக் கடுமையாகக் கண்டிக்க நேர்ந்தார்.

"ஆரம்பூண்ட மணிமார்பா! அயோத்திக்கு அரசே! அண்ணுகேள்;
ஈரம் இருக்க மரம்இருக்க இலைகள் உதிர்ந்த வாறேது?
வாரம்கொண்டு வழக்குரைத்து மண்மேலிருந்து வலிபேசி
ஓரம்சொன்ன குடியிதுபோல் உதிர்ந்து கிடக்கும் தம்பியரே!"

வனத்தில் நடந்து போகும் பொழுது ஒருநாள் இலக்குவன் ஒரு மரத்தைக்கண்டான்; இலைகள் யாவும் உதிர்ந்து அது வறிதே நின்றது. பட்டுப் போகாத பச்சை மரமாயிருந்தும் அது அவ்வாறு மொட்டையாய் நிற்பதை நோக்கி வியந்து அண்ணனை வினவினன். அதற்கு இராமன் பதில் உரைத்தபடியாய் இக்கவி வந்துள்ளது.

மன்றில் இருந்து வஞ்சம் பேசுதல் மாபாதகம் என்பதை இவ்வாறு சாதுரியமாக விளக்கி நீதி போதித்திருக்கிறார். ஓரம் சொல்லல்=நடுவு நிலைமையின்றி ஒருதலைப் பட்சமாய்ப்பேசுதல். "ஓரம் பேசேல்" என்றதும் காண்க.

கல்வி யுடையீர்! கருங்கா னகத்திடையே
நெல்லி இலையுதிர்ந்து நிற்பதெவன்—வல்லாய்கேள்
வெல்லா வழக்கை விலைவாங்கி வெல்விக்கும்
வல்லாளன் சுற்றம்போல் மாண்டு. (ஒளவையார்)

பொய்க்கரி கூறல், ஓரம் பேசல், அழி வழக்கு ஆடல் பழி துயரங்களாம் என மேலோர் இங்ஙனம் உணர்வு நல்கி யுள்ளார்.

காவிய நாயகனுடைய வீரப் போரைக்குறித்து வியந்து பேசி வருங்கால் நீதி நெறி ஒன்றையும் இடையே நயந்துகூறினர். மனித வாழ்வு எவ்வகையும் புனிதம் அடைய வேண்டும் என நம் கவி கருதி வாழ்ந்துள்ளமை உரைகளில் வெளியாகி வருகின்றது.

இங்ஙனம் படைகள் மாண்டுபோகவே திரிசிரா கொதித்து மூண்டான். தேரில் நின்று கொண்டு சரங்களை மாரி போல்

வாரி வீசினான். ஒரு கரிய மேகம் பச்சை மலை மேல் நீரைப் பொழிவது என இராமன் மீது அவன் பாணங்களைச் சொரிந்தான். அவனது ஆரவாரமும் போர் வேகமும் பேரதிசயங்களாய்ப் பெருகி நின்றன.

ஊன்றிய தேரினன்; உருமின் வெங்கணை
3002 வான்தொடர் மழைஎன வாய்மை யாவர்க்கும்
சான்றென நின்றஅத் தரும மன்னவன்
தோன்றல்தன் திருவுரு மறையத் தூவினான்.

திரிசிராவின் பொரு திறலும் பெரு வலியும் சரவேகங்களும் இதனால் அறியலாகும். சத்தியத்திற்கு உத்தம சாட்சியாய் நின்ற தரும சீலனுடைய அருமை மகனது உருவம் தெரியாதபடி அரக்கன் பொரு கணைகள் தூவினான் என ஒரு கணம் நம்மைத் திகைக்கச் செய்திருக்கிறார்.

தசரதனை இங்கே உவந்து பாராட்டியது அந்தப் புண்ணிய வான் பிள்ளையைப் பாவி இவ்வாறு செய்தானே! என்று ஆவி உருகியபடியாயது.

கூரிய பாணங்களை அவன் சீறி ஏவவே சக்கரவர்த்தித் திருமகன் கையிலிருந்து சரங்கள் உக்கிர வீரமாய் ஒலி செய்து எழுந்தன. மூன்று கணத்துள் அவன் ஏறி வந்த தேரழிந்தது; பாகன் தலை யிழந்து தரையில் உருண்டான். உருளவே அவன் அந்தரத்தில் ஆர்த்துப் பாய்ந்தான். பாயும் போதே அவனுடைய தலைகளுள் இரண்டு அயலே அறுபட்டு விழுந்தன.

தேர்அழிந்து அவ்வழித் திரிசிரா எனும்
3005 பேர் அழிந்ததனினும் மறம் பிழைத்திலன்;
வாரழிந் துமிழ்சிலை வானநாட்டுழிக்
காரிழிந்தால்எனக் கணைகள் சிந்தினான், (கரன்வதை 131)

அவனது மன வுறுதியையும் வீரப்பாட்டையும் தெரிந்து இங்கே வியந்து மெச்சுகின்றோம். இரண்டு தலைகளையும் இழந்து ஒரு சிரசுடன் நின்றமையால் திரிசிரா என்னும் பேர் அழிந்தது என்றார். அழிவு நிலையை விளக்கியிருக்கும் அழகை நோக்குக.

நான்முகன் படைத்த திரிசிராவை ஏக சிரசன் ஆக்கி இவ் வேக வீரன் வீறுகொண்டு போரில் மூண்டு வேலை செய்தான்.

இரு தலைகள் இழந்தும் உள்ளம் உறுதி குன்றாமல் பொரு திறலில் மூண்டு பொங்கி நின்றான் ஆதலால், "தேர் அழிந்தும், பேர் அழிந்தும், மறம் பிழைத்திலன்" என அவனது வீரத்தை வியந்து பாராட்டினர். மறம்=போர் வீரம்.

படைத்துணைகள் அழிந்தும் கடுத்து மூண்டு கோபதாபத்துடன் கொதித்துப் பொருதான். யாதும் முடியாமையால் முடிவில் ஆகாயத்தில் மறைந்தான். மாய விஞ்சையில் வல்லவன் ஆதலால் அந்தரத்தில் கரந்துநின்று கொண்டு சரங்களை ஏவினன். அத்தீயவனுடைய மாயப் போரை நோக்கி இத் தூயவன் சினந்து சுடுகணை தொடுத்தான். அது அவன் வில்லை அழித்து வேகமாய்ச் சென்றது.

வில்இழந்தனன் என்னினும் விழித்தவாள் முகத்தின் 3007
எல்இழந்திலன்; இழந்திலன் வெங்கதம்; இடிக்கும்
சொல்இழந்திலன்; தோள்வலி இழந்திலன்; சொரியும்
கல் இழந்திலன்; இழந்திலன் கறங்கெனத் திரிதல் (1)

ஆள் இரண்டுநூறுள என அந்தரத்து ஒருவன்
மூளிரும்பெரு மாய வெஞ் செருமுயல் வானைத் 3008
தாளிரண்டையும் இரண்டு வெங்கணைகளால் தடிந்து
தோளிரண்டையும் இரண்டு வெங்கணைகளால் துணிந்தான் (2)

எல்லா ஆயுதங்களும் ஒழிந்த பின்பும் அப்பொல்லாதவன் இவ்வாறு போராடியிருக்கிறான். பயங்கரமான இரு நூறு தானைத் தலைவர் உருவங்களில் எதிரே தோன்றி வானத்தில் நின்று அவன் கொடிய மாயப் போர் புரியவே இவ்வீரன் நாலு கணைகளை ஏவி அவனுடைய தாள்களையும் தோள்களையும் ஏககாலத்தில் துணித்து வீழ்த்தினன். அடுத்து ஒரு பகழியால் அவன் தலையை அறுத்து எறிந்தான்.

அவன் இறந்து படவே இருந்தவர் எல்லாரும் நான்கு திசைகளிலும் விரைந்து ஓடினர். படைகள் உடைந்து ஓடுவதைக் கண்டதும் தூடணன் உள்ளம் கொதித்தான். தேர்மேல் நின்று கொண்டு ஓடாதீர்! ஓடாதீர்! என்று உருத்துக் கூவினன்.

### தூடணன் கூறிய வீர வுரைகள்.

மானத்தால் புழுங்கி மனம் கொதித்து அத் தானைத் தலைவன் அன்று ஊக்கியுரைத்த உறுதி மொழிகள் அவன் உள்ளத்தின்

**தீரத்தையும், வீரத் திறலையும் விளக்கி நிற்கின்றன. அஞ்சி ஓடுகின்ற படை வீரர்கள் அச்சம் நீங்கி மீளும்படி உச்ச நிலையில் ஓங்கி எழுந்த அப் போர் அரங்கப் பிரசங்கம் ஈங்கு ஓர் அரங்கமாய் ஓர்ந்து மகிழத் தக்கது.**

வச்சை யாம்எனும் பயம்மனத் துண்டென வாழும்
கொச்சை மாந்தரைக் கோல்வனே மகளிரும் கூசார்;
3016 நிச்சயம்எனும் கவசந்தான் நிலைநிற்ப தன்றி
அச்சம் என்னும் ஈது ஆருயிர்க்கு அருந்துணையாமோ? (1)

பூவராவு வேல் புரந்தரனொடு தான், பொன்று
மூவரோடு தான் முன்னின்று முட்டிய முனையில்
3017 ஏவர் ஓடினர் இராக்கதர்? நுமக்கிடைந்து ஓடும்
தேவரோடு கற்றறிந்துளி ராமெனத் திகைத்தீர். (2)

இங்குஓர் மானிடற்கு இத்தனை வீரர்கள் இடைந்தீர்!
3018 உங்கைவாளொடு போய்விழுந்து ஊர்புகல் உற்றீர்
கொங்கை மார்பிடைக் குளிப்புறக் களிப்புறும் கொழுங்கண்
நங்கை மார்களைப் புல்லுதிரோ நலம் நுகர்வீர், (3)

செம்பு காட்டிய கண்ணிணை பால்எனத் தெளிந்தீர்
வெம்பு காட்டிடை நுழைதொறும் வெரிநுறப் பாய்ந்த
3019 கொம்பு காட்டுதிரோ? தடமார்பிடைக் குளித்த
அம்பு காட்டுதிரோ? குலமங்கையர்க்கு அம்மா? (4)

ஏக்கம் இங்கிதன் மேலுமுண்டே இகல் மனிதன்
ஆக்கம் வெஞ்சமத்து ஆண்மையவ் அமரர்க்கும் அரிதாத்
3020 தாக்க ரும்புயத் துங்குலத் தலைமகன் தங்கை
மூக்கொ டன்றியும் முதுகொடும் போம்பழி முயன்றீர், (5)

ஆர வாழ்க்கையின் வணிகராய் அமைதிரோ? அயில்வேல்
3021 வீர வாட்கொடு வேல்மடுத் துழுதிரோ? வெறிபோர்த்
தீர வாழ்க்கையில் தெவ்வரைச் செருவிடைப் பறித்த
வீர வாட்கையீர்! எங்ஙனம் வாழ்திரோ? விளம்பீர்! (6)

என்று தானும்தன் எறிகடற் சேனையும் இறைநீர்
3022 நின்று காண்டிர்என் நெடுஞ்சிலை வலிஎன நேராச்
சென்று தாக்கினன் தேவரும் மருள்கொண்டு திகைத்தார்
நன்று காத்தி என்று இராமனும் எதிர்செல நடந்தான். (7)

(கரன்வதை, 142-148)

வீரப் பேச்சுகளையும் போர்க் காட்சிகளையும் ஈண்டு நேரே கண்டு நெஞ்சம் களிக்கின்றோம். புறங்காட்டி ஓடிய படைகளை நோக்கித் தூடணன் மறங்காட்டிப் பேசியுள்ளதில் மான வீரங்கள் பல மருவி யிருக்கின்றன.

"ஓ வீரர்களே! ஏன் ஓடுகின்றீர்கள்? பயங்கொள்ளிகளைப் பெண்களும் மதியார்; இகழ்ந்து எள்ளுவர்; ஆண்மையாகிய கவசத்தை இழந்து மானம் அழிந்து போகலாமா? தேவ தேவர் களோடு பொருத போதும் நம்மவருள் யாரும் ஓட வில்லையே; ஒரு மனிதனுக்குப் பயந்து ஓடுவது எவ்வளவு ஈனம்! மானம் கெட்டுப் போன உங்களை இனி மங்கையர் மருவுவரா? அவ ருடைய கொங்கைகளைத் தழுவி இன்பம் நுகரலாம் என்று நீவிர் குறித்துப் போயினும் அவர் வெறுத்துத் தள்ளுவர். உங்கள் பெண்டாட்டிமார் எதிரே போய் நின்று மார்பில் பாய்ந்த அம் பைக் காட்டாமல் முதுகில் பட்ட கொம்பைக் காட்டுவீரோ? ஐயோ! உங்கள் அறிவீனந்தான் என்னே! ஒரு சின்ன மனித னுக்கு எவ்வளவு மகிமையைக் கொடுத்து விட்டீர்கள்! தேவர்களை வென்ற அரக்கரை நான் ஓடச் செய்தேன் என்று அவன் பெருமைபேசிக் களிக்கும்படி சிறுமை செய்து போயினீர்! நம் சக்கரவர்த்தியுடைய தங்கை மூக்கு அறுபட்ட பழியினும் உங்கள் போக்குப் பெரும் பழியாயது; கையில் உள்ள வீர ஆயுதங்களை எல்லாம் தூர எறிந்து விட்டு உப்பையும் மிளகையும் விற்றுச் செட்டிகளாய் வாழப்போகிறீர்களா? அல்லது மண்ணுங்கட்டிகளை உழுது உழவர்களாய் உழல நேர்கின்றீர்களா? வீர மரபில் பிறந் தும் வெட்கம் இன்றி ஓடுகின்றீர்களே! இது பேடித்தனமல்லவா? விரைந்து திரும்புங்கள்; பிறந்த குலத்தின் பெருமையை நிலை நாட்டுங்கள்" என இங்ஙனம் சேனைத் தலைவன் கூறவே மானம் அழிந்து ஓடினவருள் சிலர் மறுகி வந்து படையுள் நுழைந்தனர்.

வீர வாழ்க்கையை வியனாக அவன் மதித்துள்ளமையால் வணிக வாழ்வையும், உழவு தொழிலையும் இகழ நேர்ந்தான்.

அச்ச முடையவரைக் கொச்சை மாந்தர் என்று இளித்திருக் கிறான். அஞ்சாமை ஆண்மையின் பான்மையாய் மேன்மை மிகுந்துள்ளமையால் அச்சம் கீழ்மையாக இழிக்கப்பட்டது. வச்சை=வசை, பழி, இளிவு. மகளிரும் மதியார் என்றது மானம்

வில் முரிந்ததைக் குறித்தோ, வேறு யாதொரு துணையும் இன்றித் தான் தனியாய் நிற்றலை நினைந்தோ உள்ளத்தில் எள் அளவு கவலையும் இராமன் கொள்ளவில்லை என்பதை இதனால் அறிகின்றோம். சின்னம்=சிதைவு, முறிவு.

சிந்தியான் என்றது சிந்திக்க வேண்டிய அபாய நிலைமையைத் தெளிவுறுத்தி நின்றது. எல்லை மீறிய அல்லலிலும் உல்லாசம் உலாவுகின்றது.

## வேறு வில் வந்தது.

எந்த வீரனும் நெஞ்சம் கலங்கி நிலை குலையும்படி நேர்ந்த ஆபத்தில் இந்த வீரன் யாதும் கலங்காமல் போர் முகத்தில் நேர் முகந்து நின்றுள்ளான். ஒடிந்த வில்லை உல்லாச விநோதமாய் அயலே எறிந்துவிட்டுத் தனது வலது கையைத் தலைக்கு மேலே பின்புறம் நீட்டினான். நீட்டவே உடனே ஒரு புதிய வில் அதிசயமாகக் கையில் வந்தது. அந்த வில்லைத் தந்தது யார்?

கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்.

பரசுராமனிடம் பண்டு பறித்த வில்லை வருணன் கையில் இராமன் அப்பொழுது தந்து வைத்தான்* ஆதலால் அதனை ஈண்டு அவன் கொண்டுவந்து கொடுத்தான். கொடுத்தவனையும் கொண்டவனையும் கருதி நோக்கும்படி சரிதம் உரிமை செய்துள்ளது. சீதையை மணந்து புது மணக்கோலத்துடன் திரு வயோத்தியை நோக்கி வருங்கால் இடையே வந்து தடையாய் மறித்துப் போராடித் தோல்வியடைந்து தன் வில்லை இழந்து வழுவோடு அம்மழு வாளி போன பொழுது அச்சிலையை இம் மான வீரன் வானவர் குழுவுள் வருணனிடம் சேமமாக வைத்திருக்கும்படி தந்தருளினான். அதனை அவன் நன்கு பாதுகாத்து வைத்திருந்தான். இராமன் வனவாசம் வந்த பொழுது அந்த வில்லை அகத்திய முனிவரிடம் தந்து இவ்வீரனுக்கு நேரே கொடுத்தருளும்படி குறிப்பித்து நின்றான். அம்மாதவர் கொடுத்ததை ஆதரவுடன் வாங்கி அயல் வந்த பின் மீண்டும் வருணனிடமே இச் சுந்தரன் தந்து வந்தான். ஆபத்து நேரும் பொழுது “இவ்வில்லை ஒல்லையில் உதவியருள்” என்று சொல்லி வந்தபடியே ஈண்டு இந்த நல்ல சமையத்தில் அவன் கொடுத்தருளினான்.

---

* இந்நூல் பக்கம் 1284, வரி 23 பார்க்க.

படைத்தலைவரது நிலைமையும் தலைமையும் ஊறு நேர்ந்த இடத்தில் அவர் கூறும் நீரவாசகங்களும் வீர வேகங்களும் இதனால் அறியலாகும்.

## தூடணன் போர்.

ஓடிய படைகளுக்கு இங்ஙனம் உறுதிகூறித் தனது இரதத்தைக் கடாவிச் சேனைகளோடு சீறி வந்து போரில் மூளவே நம் வீர வில்லியும் நேர் ஏறி எதிர்த்தான்.

நன்று காத்தி என்று இராமனும் எதிர்செல நடந்தான்.

ஏந்திய வில்லுடன் எதிரியின் தேர் எதிரே நம் ஏந்தல் எதிர்ந்து சென்ற வீரக் காட்சியை வியந்து நோக்குகின்றோம். இதோ நான் வென்று தொலைக்கின்றேன்; நின்று காணுங்கள் என்று வீரவாதம் கூறி ஓடிப்போனவர்களை ஊக்கித்திரட்டி உக்கிர வீரமாய் உருத்து வந்தான் ஆதலால் அவன் எதிரே இராமனும் இவ்வாறு உரையாடி நேர்ந்தான்.

நன்று காத்தி என்றது இகழ்ச்சிக் குறிப்பில் வந்தது. இராமனது வீரப்பிரதாபத்தை இவ்வுரை விளக்கி நிற்கின்றது.

தான் இல்லாமையால் படைகள் கொல்லப்பட்டன; இருந்தால் கொல்லமுடியாது; என்னும் குறிப்போடு தன் காப்புத் திறத்தை விளக்கி ஆரவாரத்துடன் அவன் வீறுகொண்டு நேர் எதிர்ந்தமையால் இவ்வீரமகன் வாயிலிருந்து இத்தீர மொழி வெளி வந்தது. வில்லும் சொல்லும் வெல்லும்படி மேவின.

உன் சேனைகளையும் உன் உயிரையும் நன்றாகக் காத்துக் கொள் என்று இவ்வெற்றி வீரன் எதிர் ஏறிச் சென்றது அவனை வரையும் விரைந்து கொன்று தொலைக்கும் கொற்றத்தை வெளிப்படுத்தி நின்றது. உள்ளத்தின் உறுதியும் முடிவும் உரையில் துள்ளி மிளிர்கின்றன.

படைகளோடு சீறி வந்த தூடணன் வீர வெறிகொண்டு வெம்போர் புரிந்தான். அவன் ஏவிய அம்புகளை யெல்லாம் இராமன் எதிர் அறுத்துவந்தான். புடை சூழ்ந்த படைவீரர்களை இடையழித்து எதிரி புரிகின்ற கடும்போரையும் தடை செய்து வருங்கால் அவன் இடை தெரிந்து மூன்று பகழி

களை ஒரு தொடையில் குறி செய்து விட்டான். அந்த அம்புகள் விரைந்து வந்து இந்த நம்பியின் நெற்றிப்பட்டத்தில் பாய்ந்தன; பாயவே தேவரும் நடுங்கினர். பட்ட அம்புகள் யாதொருதீதும் ஆற்றாமல் பாரில் உதிர்ந்தன. அவனது கரவேகத்தையும் சர வேகத்தையும் மெச்சி இவ்வீரன் சிறுநகைசெய்து ஒரு கணை தொடுத்தான். அவன் ஏறியிருந்த தேர் உடைந்தது. மறு கணையில் அவன் தலை தரையில் உருண்டது. இவனது வீர வேகம் அதுபொழுது அதிசய நிலையில் வேலை செய்தது.

தூர வட்ட எண் திசைகளைத் தனித்தனி சுமக்கும்
பார எட்டினோடு இரண்டினில் ஒன்றுபார் புரக்கப்
3033 பேர விட்டவன் நுதலணி ஓடையில் பிறழும்
வீர பட்டிகை பட்டன விண்ணவர் வெருவ. (1)

எய்த காலமும் வலியும்நல் எனநினைந் திராமன்
செய்த சேயொளி முறுவலன் கடுங்கணை தெரிந்தான்
3034 நொய்தின் அங்கவன் நொறில்பரித் தேர்பட நூறிக்
கையின் வெஞ்சிலை அறுத்தொளிர் கவசமும் கடிந்தான் (2)

தேவர் ஆர்த்தெழ முனிவர்கள் திசைதொறும் சிலம்பும்
3035 ஓவில் வாழ்த்தொலி நாற்கடல் முழக்கென ஓங்கக்
காவடா இது வல்லையேல் நீஎனக் கணைஒன்று
ஏவினான் அவன் எயிறுடை நெடுந்தலை இழந்தான். (3)

தூடணன் பொருதுமாண்ட நிலையை இதில் அறிகின்றோம். இராமனது நெற்றியில் அவன் குறி வைத்து அடித்தது அவனுக்குப் பெரிய வெற்றியாயது. வீரபட்டிகை என்பது உயர்ந்த வெற்றி வீரங்களுக்கு அடையாளமாக நெற்றியில் அணிகின்ற பொன் தகடு. அதில் அம்பு படவே அமரரும் வெருவினர் என்றது இந்நம்பி பால் அவர் கொண்டுள்ள அன்புரிமையை விளக்கி நின்றது. தெய்வங்கள் யாவும் உய்தி நாடி உரிமை கூர்ந்து வருகின்றன.

இராமனை இங்கே வெளிப்படையாக உரையாமல் குறிப்பாய்க் கூர்ந்து நோக்கும்படி சுட்டியிருக்கிறார்.

திசைகளைச் சுமக்கும் எட்டு என்றது திக்கு யானைகளை.

ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீபம் என்னும் இந்த எட்டு

யானைகள் கிழக்கு முதலிய எட்டுத் திக்குகளிலும் முறையே உரிமையுடன் நிற்கின்றன. இந்திரன், அக்கினி முதலிய திக்கு பாலகரைப்போல் இவையும் உலகிற்கு ஆதாரமா உறுதி பூண்டு உள்ளமையால் உலகம் தாங்கிகள் என உபசரிக்கப் பெற்றன.

சிருட்டி முறைப்படி இங்ஙனம் சுமந்து நிற்கும் அந்தத் திசை யானைகளோடு தன் தம்பியையும் கூட அனுப்பி நாட்டைப் பாதுகாக்கச் செய்தவன் என்பார், "எட்டினோடு ஒன்று பார் புரக்க விட்டவன்" என்றார். சுமையின் அமைதி அறிய நின்றது.

இரண்டினில் ஒன்று என்றது பரதனை. சங்கு சக்கரம் என்னும் இரண்டின் அமிசங்களாய்ச் சத்துருக்கனும் பரதனும் முறையே உதித்துள்ளமையால் அந்த இரண்டினுள் ஒன்று என இங்ஙனம் விதந்து குறித்தார்.

பேரவிட்டவன் என்றது தன்னை விட்டுப் பிரியமாட்டேன் என்று ஆர்வ மீதூர்ந்து சேரவந்தவனை அரசை ஆளும்படி வற்புறுத்திப் பிரித்துவிட்ட பெரியவன் என்பதாம். அந்தப் பிரிவினையின் அருமை தெரிய வந்தது. பேர்தல் = பெயர்ந்துபோதல். கருதிவந்த உறுதி குன்றி தம்பி மறுகி மீண்டமை பேர என்றதனால் ஓரலாகும். பேராதவனைப் பேரவிட்டவனுக்கு நேராத ஆபத்து ஈண்டு நேர நேர்ந்தது.

தன்னலந்துறந்து உலக நலத்தையே பாதுகாத்து வந்த புண்ணிய சீலன் ஆதலால் நண்ணிய இன்னல் நழுவி வீழ்ந்தது.

ஓடை = யானையின் நெற்றிப் பட்டம். இராமன் நுதலில் அணிந்திருந்த வீர பட்டிகை யானையின் நெற்றிப்பட்டம் போல் ஒளி விட்டு விளங்கியது என உவமையால் விளக்கினார்.

வீரர்களுடைய போர்க் கோலங்களுள் வீர பட்டிகை தலை சிறந்தது. சிறந்த வெற்றி வீரனைத் தவிர வேறு யாரும் அணியக் கூடாத தனி மேன்மையுடையது.

அந்த வெற்றிச் சின்னத்தில் பாய்ந்த அம்புகள் மலையில் எறிந்த மண் பாண்டங்களைப் போல் தலை சிதறித் தகர்ந்து வீழ்ந்தன ஆதலால் பட்டன என்றார்.

நெற்றிப் பட்டத்தில் பட்ட பகழிகள் பட்டுப் போயின என அவை பட்ட பாட்டை விநயமாகச் சுட்டி யருளினார்.

அயல் நெருங்கிய சேனைகளை அழித்துப் பராமுகமாய் நிற்கையில் தன் நெற்றியில் பட்டதைக் கண்டு பகைவனை இக்கோமகன் நகை முகத்துடன் நோக்கினான்.

சேய் ஒளி முறுவலன் என்றதனால் புன்னகை பூத்த முகத்தனாய் அது பொழுது இவன் விளங்கி யுள்ளமை வெளியாயது.

எய்தகாலமும் வலியும் நன்று என அவனை வியந்தது, இகழ்ச்சிக் குறிப்பில் விளைந்தது. யாரும் செய்யாத வேலையைச் செய்து விட்டாய்! இனி உனக்கு உய்தியை நாடிக்கொள் என உருத்து ஒரு கணை எய்தான். அது அவன் வில்லையும் கவசத்தையும் அறுத்துப்போயது. அறுபட்ட சிலை கீழே விழுமுன் அவனுடைய தலையும் மேலே எழுந்தது.

"கணை ஒன்று ஏவினான்; அவன் எயிறுடை நெடுந்தலை இழந்தான்." என்றமையால் இராமபாணத்தின் வேகமும் வித்தகமும் வெளியாயின. தூடணன் இங்ஙனம் அழிந்துபடவே கரன் துடித்துக் கொதித்தான்.

## கரன் பொருதது.

தம்பி இறந்துபட்டதை அறிந்து பதைத்த அவன் நிறைந்த படைகளோடு விரைந்து வந்து சினந்து எதிர்த்தான். அவனுடைய கொதிப்பும் கடுப்பும் கொடியனவாய் நெடிது ஓங்கி நின்றன.

தம்பிதலை அற்றபடி யும்தயர தன்சேய்
அம்புபடையைத் துணிபடுத்ததும் அறிந்தான்
3036 வெம்புபடை விற்கை விசயக்கரன் வெகுண்டான்
கொம்புதலை கட்டிய குலக்கரி கடுப்பான். (1)

அந்தகனும் உட்கிட அரக்கர்கட லோடும்
சிந்துர வயப்புரவி தேர்திசை பரப்பி
3037 இந்துவை வளைக்கும்எழி லிக்குலம் எனத்தான்
வந்துவரி விற்கைமத யானையை வளைத்தான். (2)

அடங்கலில் கொடுந்தொழில் அரக்கரவ் அநந்தன்
படங்கிழி தரப்படி தனிற்பல விதப்போர்
3038 கடங்கலுழ் கடங்களிறு தேர்பரி கடாவித்
தொடங்கினர் நெடுந்தகையும் வெங்கணை துரந்தான். (3)

(கரன் வதை, 162-164)

நால்வகைச் சேனைகளுடன் கரன் கடுத்து வந்து அமர் தொடுத்திருக்கும் ஆரவார நிலையை இதில் நேரே தெரிகின்றோம். தன் தம்பிகளையும் படைகளையும் அழித்துவிட்டானே என்று இந் நம்பி மேல் வெம்பி வெகுண்டு வீர வெறி கொண்டு அவன் மூண்டிருக்கிறான்.

கொம்புதலை கட்டிய சூலக்கரி எனக் கரனைக் குறித்திருக்கும் காட்சி கருதி மகிழவுரியது. யாருக்கும் அடங்கா வலியனாய் அவன் மதம் மீறி வந்துள்ள நிலைமை தெரியவந்தது. உடல் வலியும் படை வலியும் உள்ளச் செருக்கும் ஊக்கமும் உணர்த்தப்பட்டன. மானத்தால் புழுங்கி மனம் கவன்ற அவன் சேனைத் திரளுடன் ஏறிச் சீறிச் செயிர்த்து இவ்வீரனை வளைத்தான்.

இந்துவை வளைக்கும் எழிலிக்குலம்.

இராமனை வளைத்த இராக்கத குழுவுக்கு இது உவமையாய் வந்தது. இந்து = சந்திரன். எழிலிக்குலம் = மேகக்கூட்டம்.

மேகசாலங்கள் சந்திரனை மறைத்ததுபோல் கரிய பெரிய அரக்கர் திரள்கள் இராமச் சந்திரனைச் சூழ்ந்துகொண்டன. கொடும் போர் மூண்டது. கொடிய பலவகை ஆயுதங்களும் கடிய கணைகளும் எங்கும் மழைபோல் பொங்கிப் பொழிந்தன. அவை யாதும் தன் மேல் விழாதபடி இவ்வீரன் கோதண்டம் வேலை செய்தது. எதிரிகள் வீசுகின்ற படைக்கலங்களை யெல்லாம் அழித்து ஒழித்து அயலிடம் எங்கணும் வெங்கொலைகள் விளைத்து அம்புகள் பொங்கிக் கடுத்தன.

துடித்தன கடக்கரி ; துடித்தன பரித்தேர் ;
துடித்தன முடித்தலை ; துடித்தன தொடித்தோள் ; 3039
துடித்தன மணிக்குடர் ; துடித்தன தசைத்தோல் ;
துடித்தன கழல்துணை ; துடித்தன இடத்தோள்.

தான்உருவு கொண்ட தருமம் தெரி சரந்தான்
மீன்உருவும் ; மேருவை விலங்குருவும் ; மேலாம் 3041
வான்உருவும் ; மண்உருவும் ; வாள் உருவி வந்தார்
ஊன்உருவும் என்னும் இது உணர்த்தவும் உரித்தோ?

இராமபாணங்கள் புரிந்த அற்புத ஆற்றல்களையும், அழிவின் தோற்றங்களையும் இங்கே பார்த்து வியக்கின்றோம்.

தான் உருவுகொண்ட தருமம் என இராமனைக் குறித்திருக்கும் அருமை வாசகம் அழகு மிக வுடையது. புண்ணிய மூர்த்தியின் பகழிகள் பாவ உருவங்களை அழித்து விண்ணும் மண்ணும் ஊடுருவி வெற்றி புரிந்து வருகின்றன.

கொதித்து வளைந்த சேனைகள் பகலவன்முன் பனிப்படலங்கள் போல் இவன் எதிரே விரைந்து அழிந்தன.

படைகள் இங்ஙனம் பட்டழியவே கரன் கொடிய கோபாவேசத்துடன் தேரைச் செலுத்தி வந்து இராமன் மீது பாணங்களைச் சொரிந்தான்.

அவன் புரிகின்ற போர்த்திறத்தை வியந்து இவ்வீரன் நேர் எதிர்ந்து பொருதான். அவனுடைய பாணங்கள் கடுவேகமுடையனவாய்க் கொதித்தெழுந்தன.

தீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வாய்
ஆயிரம் வடிக்கணை அரக்கர்பதி எய்தான்.

கரன் எய்த அம்புகளின் கடுமையும் கொடுமையும் இதில் காண்கின்றோம். வரபலமுடையனவாய் வந்து பாய்கின்றன.

நெருப்புகளைக் கக்கிக்கொண்டு அதிவேகமாய் எழுந்தன ஆதலால் "தீஉருவ; கால் விசைய" என்றார். கால்=காற்று. "காற்றினிலும் கடியான்; கனலினிலும் கொடியான்" எனக் கரனைக் குறித்து முன்னம் சூர்ப்பநகை சொன்னதை இங்கே அவன் செயலில் காட்டினான். இயல்பிலே கொடியவன் பகையின் மிகையினை நோக்கித் துடித்துக் கனன்று கடுத்து நிற்கின்றான்.

## வீர வில் முரிந்தது.

முதிர் கோபத்துடன் மூண்டு பொருது மீண்டுவந்த அந்தத் தீரனோடு இந்த ஆண்டகை எதிர் பொருது நின்றான். இறுதியில் பலவகைப்படைகளை ஏவி அவன் கொடிய மாயப்போர் புரிந்தான். இவ்வீரன் வெகுண்டு வெஞ்சரங்கள் தொடுத்தான். தொடுத்து வருங்கால் இடையே வில் ஒடிந்து போயது. அடுபோராற்றும் அமரிடை வரிசிலை முரிந்தது பெரிதும் பரிதாபம் ஆயது.

கோதண்டம் ஒடியவே அமரர்கள் அஞ்சி அலறினர். இராமன் யாதும் கலங்காமல் அதுபொழுது செய்த அதிசய சாகசம்

அவனது திவ்விய மகிமையை விளக்கி நின்றது. வில் இற்றதும் இவ்வெற்றி வீரன் என்ன செய்தான்?

முடிப்பென் இன்றுஒரு மொய்கணை யால்எனாத்
தொடுத்து நின்றுயர் தோளுற வாங்கினன் ; 3049
பிடித்த திண்சிலை பேரகல் வானிடை
இடிப்பின் ஓசை படக்கடிது இற்றதே. (1)

வெற்றி கூறிய வானவர் வீரன்வில்
இற்ற போது துணுக்கமுற்று ஏங்கினர் 3050
மற்றொர் வெஞ்சிலை இன்மை மனக்கொளா
அற்றதால் எம் வலி என அஞ்சினர். (2)

என்னும் மாத்திரத்து ஏந்திய கார்முகம்
சின்னம் என்றும் தனிமையும் சிந்தியான் 3051
மன்னர் மன்னவன் செம்மல் மரபினால்
பின்னுறத் தன் பெருங்கரம் நீட்டினன். (3)

கண்டு நின்று கருத்துணர்ந் தான்என
அண்டர் நாதன் தடக்கையின் அத்துணை 3052
பண்டு போர்மழு வாளியைப் பண்பினால்
கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன். (4)

கொடுத்த வில்லைஅக் கொண்டல் நிறத்தினன் 3053
எடுத்து வாங்கி வலங்கொண்டு இடக்கையில்
பிடித்த போது நெறி பிழைத் தோர்க்கெலாம்
துடித்தவால் இடக்கண்ணொடு தோளுமே. (5)

(கரன் வதை, 175-179)

இந்தப் பகுதியைக் கருத்து ஊன்றிப் படித்துப் பாருங்கள். இங்கே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சி வியப்பினை விளைத்து நிற்கின்றது. சுத்தவீரனுடைய சித்தம் எத்துணையும் யாண்டும் எவ்வழியும் கலங்காது என்பதை உய்த்துணரச் செய்துள்ளது.

பெரிய படைகளுடன் வந்துள்ள கொடிய பகைவனோடு மூண்டு உக்கிரவீரமாய்ப் பொருது நிற்கையில் வில் முரிந்து விட்டது என்றால் அது எவ்வளவு பரிதாபம்! அந்த அரிய ஆபத்தைக்கண்டு வானவரும் மறுகி அலமந்தார். இந்த மான வீரன் ஒரு சிறிதும் கவலவில்லை.

கார்முகம் சின்னம் என்றும் தனிமையும் சிந்தியான்.

வில் முரிந்ததைக் குறித்தோ, வேறு யாதொரு துணையும் இன்றித் தான் தனியாய் நிற்றலை நினைந்தோ உள்ளத்தில் எள் அளவு கவலையும் இராமன் கொள்ளவில்லை என்பதை இதனால் அறிகின்றோம். சின்னம்=சிதைவு, முறிவு.

சிந்தியான் என்றது சிந்திக்க வேண்டிய அபாய நிலையைத் தெளிவுறுத்தி நின்றது. எல்லை மீறிய அல்லலிலும் உல்லாசம் உலாவுகின்றது.

## வேறு வில் வந்தது.

எந்த வீரனும் நெஞ்சம் கலங்கி நிலை குலையும்படி நேர்ந்த ஆபத்தில் இந்த வீரன் யாதும் கலங்காமல் போர் முகத்தில் நேர் முகந்து நின்றுள்ளான். ஒடிந்த வில்லை உல்லாச விநோதமாய் அயலே எறிந்துவிட்டுத் தனது வலது கையைத் தலைக்கு மேலே பின்புறம் நீட்டினான். நீட்டவே உடனே ஒரு புதிய வில் அதிசயமாகக் கையில் வந்தது. அந்த வில்லைத் தந்தது யார்?

கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்.

பரசுராமனிடம் பண்டு பறித்த வில்லை வருணன் கையில் இராமன் அப்பொழுது தந்து வைத்தான்* ஆதலால் அதனை ஈண்டு அவன் கொண்டுவந்து கொடுத்தான். கொடுத்தவனையும் கொண்டவனையும் கருதி நோக்கும்படி சரிதம் உரிமை செய்துள்ளது. சீதையை மணந்து புது மணக்கோலத்துடன் திரு வயோத்தியை நோக்கி வருங்கால் இடையே வந்து தடையாய் மறித்துப் போராடித் தோல்வியடைந்து தன் வில்லை இழந்து வழுவோடு அம்மழு வாளி போன பொழுது அச்சிலையை இம் மான வீரன் வானவர் குழுவுள் வருணனிடம் சேமமாக வைத்திருக்கும்படி தந்தருளினான். அதனை அவன் நன்கு பாதுகாத்து வைத்திருந்தான். இராமன் வனவாசம் வந்த பொழுது அந்த வில்லை அகத்திய முனிவரிடம் தந்து இவ்வீரனுக்கு நேரே கொடுத்தருளும்படி குறிப்பித்து நின்றான். அம்மாதவர் கொடுத்ததை ஆதரவுடன் வாங்கி அயல் வந்த பின் மீண்டும் வருணனிடமே இச் சுந்தரன் தந்து வந்தான். ஆபத்து நேரும் பொழுது “இவ்வில்லை ஒல்லையில் உதவியருள்” என்று சொல்லி வந்தபடியே ஈண்டு இந்த நல்ல சமையத்தில் அவன் கொடுத்தருளினான்.

---

* இந்நூல் பக்கம் 1284, வரி 23 பார்க்க.

அடைக்கலப் பொருளாக வாங்கி வைத்திருந்ததையே மீள வும் உரியவனிடம் தருணம் அறிந்து வருண தேவன் கொடுத் தான் ஆதலால் "கொண்ட வில்லைக் கொடுத்தனன்" என அக் கிழமையும் பழமையும் தெரிய வுரைத்தார்.

அண்டர் நாதன் என்று இராமனை இங்கே குறித்தது தேவர் தேவனுயுள்ள பழைய தலைமையும் நிலைமையும் உணரவந்தது.

வானவர் தலைவன் மனித உருவில் வந்துள்ளமையால் அமரரும் தமருரிமையாய் இக்குமரன் பால் ஆர்வம் புரிந்து ஆவன செய்து வருகின்றனர். தெய்வ சகாயம் இடை யிடையே இத்திவ்விய புருடனுக்கு எய்தி வருவது மானிட நோக்கில் மகிழ்ச்சி யாகின் றது. ஞானக் காட்சியில் நல்லுரிமை தெரிகின்றது.

வருணனிடமிருந்து வாங்கிய வில்லை இவ்வீர மூர்த்தி இடது கையில் ஏந்திய பொழுது அரக்கர் குலம் முழுவதும் அழிந்து போயது என்னும் கெடுகுறி எங்கும் கிளர்ந்து எழுந்தது.

"வில்லை இடக்கையில் பிடித்தபோது நெறி பிழைத்தோர்க் கெல்லாம் இடக்கண் தோள் துடித்த" என்றது தீவினையாளர் யாவரும் அடியோடு அழிந்து தொலைய நேர்ந்தனர் என்னும் அம் முடிவினை முன்னுற முடிவாக உணர்த்தி நின்றது.

நல்வழி நீங்கி அல்வழி புகுந்து அவம்புரிந்து வரும் பொல் லாதவர் எல்லாரும் நெறி பிழைத்தோர் என்னும் குறி இழைத்து நின்றார். இங்கே குறிப்பாகச் சுட்டியது அரக்கர் குழுவையே.

நீதி நெறியாளர் இனிது வாழவும், தீது நெறியுடையவர் செத்து வீழவும் இவ்வித்தகன் வில் ஏந்தினான் என்பது உய்த் துணர வந்தது.

இப்பொழுது இங்கு வந்த வில்லே இலங்கை வேந்தனைக் கொன்று அரக்கர் குலத்தைக் கருவறுக்க அமைந்தது என்னும் உண்மையை இங்ஙனம் காட்டியருளினார்.

அயோத்தியிலிருந்து கையில் கொண்டு வந்த வில் கானோடு முடிந்தது; ஈண்டு கரத்தில் ஏந்தியது கருதிய வெற்றியைப் பரி பூரணமாக்க வந்தது. இவ் வில் திருமாலினுடையது. தனது ஓர் அமிசமான பரசுராமனிடமிருந்து அவனுக்கு உதவி செய்து

வந்தது; இப்பொழுது பரிபூரண அமிசமான இராமனிடம்வந்து அவதார வெற்றியை ஆற்ற நேர்ந்தது.

இந்த வெற்றி வில்லை இவ்வீரன் வளைத்துப் போர் தொடுக்கு முன் கரன் கடு வேகமாய்ச் சரமழை பொழிந்தான். அவ்வளவையும் விரைவில் விலக்கி இவன் ஒரு பகழி தொடுத்தான். அது கரனுடைய வலக்கையைத் துணித்து வான்வழி போயது. கை யிழந்தும் அவன் கடுத்து மூண்டு கொடிய மாயப் போர் புரிந்தான். இந் நெடியவன் மீண்டும் ஒரு கணை விடுத்தான். அவன் தலை யிழந்து முண்டமாய்த் தரையில் விழுந்தான். அஞ்சினவர் ஓடினர்; எஞ்சி நின்ற அரக்கரனைவரும் துஞ்சி மடிந்தார்.

அமரரும் முனிவரும் அகம் மகிழ்ந்து இக்குமரனைப் புகழ்ந்தார். போர்க்களத்தில் நின்று வெற்றித் திருவுடன் இவ்வீரன் மீண்டு வந்தான்.

## மனைவியும் தம்பியும் மகிழ்ந்து பணிந்தது.

தனது ஆருயிர் நாயகன் போர்மேல் போகவே உயிர்போன உடல்போல் மறுகி மயங்கி உருகி யிருந்த சீதை காதலனைக் காணவே களிபேருவகையுடன் விழிநீர் சொரிந்து எதிர் விரைந்து வந்து பாதங்களைத் தொழுதாள். தம்பியும் பணிந்தான். அன்புருவங்களான அவர் இந்நம்பியை வணங்கி இன்புடையராய் என்புருகி நின்றனர்; அவருடைய உள்ளப்பாசங்கள் வெளியே தெளிவாய் ஒளி வீசியுள்ளன.

முனிவர் வந்து முறைமுறை மொய்ப்புற
3061 இனிய சிந்தை இராமனும் ஏகினன்
அனிக வெஞ்சமத்து ஆருயிர் போகத்தான்
தனியிருந்த உடலன்ன தையல்பால். (1)

விண்ணின் நீங்கிய வெய்யவர் மேனியில்
3062 புண்ணின் நீரும் பொடிகளும் போயுக
அண்ணல் வீரனைத் தம்பியும் அன்னமும்
கண்ணின் நீரினில் பாதம் கழுவினர். (2)

மூத்தம் ஒன்றில் முடிந்தவர் மொய்புணீர்
நீத்தம் ஓடி நெடுந்திசை நேருறக்
3063 கோத்த வேலைக் குரலென-வானவர்
ஏத்த வீரன் இனிதிருந் தானரோ. (கரன்வதை 187-189)

போரை முடித்து வீரக் கோலத்துடன் இராமன் தனது தழைக்குடிலைக்கு வந்த அருமைக் காட்சியை இங்கே உரிமையுடன் உவந்து காண்கின்றோம். ஆவியைப் பிரிந்த உடல்போல் துவண்டு வழிமேல் விழி வைத்துத் தன் வரவையே எதிர்நோக்கியுள்ள தேவியிடம் இச்செயவீரன் ஏகினன் என்றது உயிர் உடலை மேவியது என இருவர் நிலையும் ஒரு முகமாய் உணர வந்தது. காதலும் வீரமும் களிநடம் புரிகின்றன.

போர்க்களத்தில் இறந்துபட்ட அரக்கருடைய இரத்தத் துளிகள் இராமன் திருமேனியில் சிதறியிருந்தன. தேகம் முழுவதும் புழுதிபடிந்திருந்தது. அந்தப் போரின் வேர்வையையும் உதிரக்கறைகளையும் தண்ணீரால் கழுவுதற்கு முன்னரே இருவர் கண்ணீரால் கழுவினர்.

அண்ணல் வீரனைத் தம்பியும் அன்னமும்
கண்ணின் நீரினில் பாதம் கழுவினர்.

சமர்க்களத்திலிருந்து திரும்பிவருகின்ற இராமனைக் கண்டதும் ஆனந்த பரவசராய் உள்ளம் கரைந்து இலக்குவனும் சீதையும் கண்ணீர் பொங்கியிருக்கின்றனர். அந்த ஆர்வக் கண்ணீரோடு அவன் அடியில் முடிபடிய இவர் வணங்கியுள்ளமையைக் கண்ணின் நீரினில் பாதம் கழுவினர் என இவ்வண்ணம் விளக்கினர். அரிய பெரிய உள்ளப் பாசங்களை உரைகளில் உணரும்போது உயிரினங்கள் தாமாகவே உருகுகின்றன.

நம்பியின் தலைமையையும், தம்பி மனைவிகளுடைய நிலைமையையும் உரிமையோடு உரையாடும் போதெல்லாம் என்பும் உருகும்படியான அன்பு நலங்களைக் கவி வெளியே காட்டி வருகிறார்.

பொங்கி வந்த சேனைகளைப் பொருது அழித்த இந்தச் சிங்க ஏறு மனைவி தம்பிகளுடன் இங்கே மகிழ்ந்திருந்தான்.

கரன் அழிந்துபடவே அங்கே சூர்ப்பநகை கதறி அழுதாள். பின்பு எழுந்து இலங்கையை நோக்கி விரைந்து போயினள்.

இவ்வளவில் கரன் வதைப்படலம் முடிகின்றது.

அடுத்து மாரீசன் வதைப் படலம் வருகின்றது.

தனக்கு நேர்ந்த கதியைத் தன் அண்ணனிடம் போய்ச் சொல்ல வேண்டும் என்று எண்ணிக் கலங்கா உள்ளத்தோடு கடுகி நடந்து சூர்ப்பநகை இலங்கையை அடைந்தாள்.

அப்பொழுது இராவணன் அரசவை நடுவே அரியணையில் அமர்ந்திருந்தான். தேவரும் வணங்க யாவரும் போற்ற மன்னர் மன்னவனாய் அவன் மன்னி வீற்றிருந்த காட்சி மகிமைகள் பல வுடையது. அந்த அதிசய மாட்சிகள் இருபத்து மூன்று பாடல்களால் விளக்கப்பட்டுள்ளன. இராவணனைக் குறித்துப் பேசும்பொழுது தனியே காணவுரியன ஆதலால் அவற்றை ஈண்டுக் காட்டாது விடுகின்றேன்.

தமது காவிய நாயகனுக்குத் தகுதியான எதிரி என்பதை நினைவில் வைத்துக்கொண்டு அவன் நிலைமையைத் தலைமையாகக் கவி பாராட்டிவரும் பான்மை மிகவும் மேன்மையானது.

இலங்கையுள் புகுந்து சூர்ப்பநகை வீதிவழியே செல்லுங்கால் அவளுடைய நிலைமையைக் கண்டு நகரமாந்தர் எல்லாரும் நெஞ்சம் திகைத்து நெடுந் திகில் கொண்டார். தங்கள் சக்கரவர்த்தியின் தங்கையை இவ்வாறு துணிந்து அங்க பங்கம் செய்ய வல்லவர் உலகில் உளரா? என்று உள்ளம் கலங்கினர். அந்தப் பொது மக்கள் கூட்டம் கூட்டமாய்த் திரண்டு பரிதாபத்துடன் அதிசயித்துப் பேசிய வார்த்தைகள் அதிசயமுடையன.

என்னையே இராவணன் தங்கை என்றபின்
அன்னையே என்றடி வணங்கல் அன்றியே
3096 உன்னவே ஒண்ணுமோ ஒருவரால்? இவள்
தன்னையே அரிந்தனள் தான் என்றார் சிலர். (1)

போரிலான் புரந்தரன் ஏவல்பூண்டனன்;
ஆருலாம் நேமியான் ஆற்றல் தோற்றுப்போய்
3097 நீரினான்; நெருப்பினான் பொருப்பினான்; இனி
யார்கொலாம் ஈது? என அறைகின்றார் சிலர். (2)

ஊர்வாய்மொழிகள் இங்ஙனம் பலவாறு பெருகிப் பரிபவம் படிந்து ஒரு வகையிலும் படியாமல் மறுகி எழுந்தன.

இந்திரன் இலங்கை அதிபதிக்கு அடங்கி ஏவல் செய்கின்றான். திருமாலும், சிவபெருமானும் அவனை யாதும் செய்ய மாட்டாமல் கடலிலும் மலையிலும் போய்த் தங்கியிருக்கின்றனர். அத்தகைய உக்கிர வீரனுடைய தங்கையை இங்ஙனம் பங்கப் படுத்தினவர் யார்? ஒரு வேளை தன் கையினாலேயே இந்தப் பழிச் செயலை நீசத்தனமாக இவளே செய்திருப்பாளோ? என இன்ன

வாறு ஊரார் பல பல பேசிப் பரிந்து சூழ அவள் அரசவை புகுந்து இராவணன் எதிரே வீழ்ந்து அலறி அழுதாள். அவன் கொதித்துத் திகைத்து “இது யார் செய்தது?” என்று ஆங்காரத்தோடு கேட்டான். மானிடர் இருவர் இவ்வூனம் செய்தார் என்றாள். “மனிதரா? உள்ளம் கலங்கி உளறுகின்றாய்; பதறாமல் நின்று உண்மையைச் சொல்!” என்றான்.

மனிதர் தான் என உறுதியாக உரைத்து அவரது உருவ நிலை பருவ அழகு முதலியவற்றை அவள் விளக்கினாள்.

மன்மதனை ஒப்பர் மணிமேனி; வடமேருத் 3118
தன்எழில் அழிப்பர் திரள்தோளின் வலி தன்னால்;
என் அதனை இப்பொழுது உரைப்பது? உலகு ஏழின்
நன்மதன் அழிப்பர் ஓர் இமைப்பின் நனிவில்லான். (1)

வந்தனை முனித்தலைவர் பாலுடையர்; வானத்து
இந்துவின் முகத்தர்; எறிநீரில் எழுநாளக் 3119
கந்த மலரைப் பொருவு கண்ணர்; கழல்கையர்;
அந்தமில் தவத்தொழிலர்; ஆரவரை ஒப்பார்? (2)

வற்கலையர்; வார்கழலர்; மார்பின் அணிநூலர்;
விற்கலையர்; வேதமுறை நாவர்; நனிமெய்யர்; 3120
உற்கு அலையர்; உன்னை ஓர் துகள் தனையும் உன்னார்;
சொற்கலை எனத் தொலைவில தூணிகள் சுமந்தார். (3)

ஆறுபுலன் அஞ்சினம் அரக்கரை எனச் சென்று
ஏறுநெறி அந்தணர் இயம்ப உலகெல்லாம் 3122
வேறும் எனும் நுங்கள் குலம் வேரொடும் அடங்கக்
கோறும் என முந்தைஒரு சூளுறவு கொண்டார். (4)

மாரர் உளரே இருவர் ஓருலகில் வாழ்வார்?
வீரருளரே அவரின் வில்லதனின் வல்லார்? 3121
ஆரொருவர் அன்னவரை ஒப்பவர்கள்? ஐயா!
ஓரொருவரே இறைவர் மூவரையும் ஒப்பார். (5)

தராவலய நேமியுழ வன்தயரதப் பேர்ப்
பராவரு நலத்துஒருவன் மைந்தர்; பழி இல்லார்; 3123
விராவரு வனத்தவன் விளம்ப உறைகின்றார்
இராமனும் இலக்குவனும் என்பர்பெயர் என்றாள். (6)

(மாரீசன் வதை, 52-57)

தன்னை மூக்கு அறுத்தவரைக் குறித்து இராவணனிடம் சூர்ப்பநகை இன்னவாறு சொல்லியிருக்கிறாள். அவளுடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்ட அழகு உருவங்களில் உணர்வும் உயிரும் பறிபோயுள்ளமை உரைகள்தோறும் உணர்ந்து வருகிறோம். வடிவம் குணம் செயல்கள் யாவும் விடாமல் தெளிவாக அண்ணனிடம் வெளியாக்கி யிருக்கிறாள். "அழகுக்கு எடுத்துக் காட்டாகப் பிரமசிருட்டியில் ஒரு மன்மதன் தான் உளன்; அதுவும் உலகவதந்தியாய்ப் புராணக் கதைகளிலேதான் கேட்டிருக்கிறேன்; மாரனிலும் பேரழகர் இருவரை நேரே கண்டேன்" எனத் தன் காட்சியை வெளிப்படுத்தினாள். மாரன்=மன்மதன். இளையவனையும் இங்கே தழுவி உரைத்திருக்கிறாள். வற்கலையர்: விற்கலையர்; உற்கலையர் என்னும் இச் சொற்கலைகளின் சுவைகளை நோக்குக. உற்கு அலையர் என்றது உனக்கு ஒரு சிறிதும் அஞ்சாதவர்; உன்னை மிக இகழ்ச்சியா எண்ணியுள்ளனர் என்றவாறு.

வீரர் உளரே அவரின் வில்லதனில் வல்லார்?

அவரைப் போல் வில்வவியில் வல்லவர் எவ்வுலகிலும் இல்லை என அவள் உறுதி செய்துள்ளமை இவ்வுரையில் வெளியாயது. பெருவெள்ளமாய்த் திரண்டு வந்த கரன் படைகளை எல்லாம் ஒரு வில்லால் அழித்து ஒழித்ததைக் கண்ணாரக் கண்டுகொண்டிருந்தாள் ஆதலால் இவ்வண்ணம் கருத்தழிந்து சொல்லினாள். போர் வீரத்தில் மட்டுமன்று; பேரழகிலும் யாரும் அவர் நேரிலர் என்றாள். தனது ஆர்வ நிலை தன்னை யறியாமல் மீறி வெளி வருகின்றது.

ஓர் ஒருவரே இறைவர் மூவரையும் ஒப்பார்.

திரிமூர்த்திகளையும் பெரிதாக எண்ணாத பெருமிதம் உடையவள் ஆதலால் அம்மூவரையும் ஒரு முகமாய் இழுத்து ஈண்டு ஒவ்வொருவருக்கும் தனித் தனியே நேராக்கினாள். அளவு கடந்த அதிசய ஆர்வத்தோடு தன்னை மறந்து பேசியிருக்கிறாள்.

இவ்வாறு பலவும் கூறி நிலைமைகளைத் துலக்கி வந்தவள் பெயரையும் இறுதியில் தெளிவாக உரைத்தாள்.

இராமனும் இலக்குவனும் என்பர் பெயர்.

இத் திருநாமங்களை எப்படியோ இடையே விவரமாகத் தெரிந்திருக்கிறாள் என்று இவ் வுரையால் தெரியவருகின்றது.

"உன்னை இப்படி அங்கபங்கம் செய்தவர் யார்?" என்று பொங்கிய சினத்தோடு இலங்கேசன் கேட்டதற்குத் தங்கை இங்ஙனம் இங்கித வசனங்கள் ஆடியுள்ளாள்.

அந்த அழகரே எனக்கு இந்த இழவைச் செய்தவர் என்று அவள் விழிநீர் சொரிந்து நின்றாள். இராவணன் பழி நாணி நொந்தான். இருவர் உளங்களும் வெளி காண வந்தன.

"தேவதேவரும் அஞ்சத்தக்க என் மரபில் அற்பமான சின்ன மனிதர் துணிந்து இந்த இன்னலைச் செய்துள்ளார்! என்றால் இதைவிட எனக்கு வேறு பழிவேண்டுமோ?" என அவன் விழி சிவந்து வெகுண்டு பலவாறு உளைந்துகொண்டான். பின்பு தங்கையை நோக்கினான். "உனக்கு நேர்ந்த இன்னலைக் கரனிடம் சொன்னாயா? சொல்லியிருந்தால் உடனே அவரை அவன் கொன்று அழித்திருப்பானே! ஏன் அங்கே அவனிடம் சொல்லாமல் இங்கே வந்தாய்?" என்று இரைந்து கேட்டான்.

இங்ஙனம் கேட்கவே தலையிலும் முகத்திலும் வயிற்றிலும் அவள் அறைந்துகொண்டு அலறி அழுது ஆனதைச் சொல்லினாள். அவள் சொல்லிய விதம் அதிவிநயமாய்ச் சுவை சுரந்துள்ளது. அயல் வருகின்றது.

"சொல் என்றன் வாயில்கேட்டார் தொடர்ந்தெழு சேனையோடும்
கல் என்ற ஒலியிற் சென்றார் கரன்முதல் காளை வீரர்
எல் ஒன்று கமலச் செங்கண் இராமன் என்று இசைத்த ஏந்தல்
வில் ஒன்றில் கடிகை மூன்றில் ஏறினர் விண்ணில் என்றாள்." 3130

சேனைகளோடு போய்க் கரன் இறந்துபட்ட செய்தியை இவ்வளவு அழகாக உரைத்திருக்கிறாள். தான் வந்து சொன்னவுடனே யாதொரு தாமதமும் செய்யாமல் அப்பொழுதே படைகள் எல்லாம் ஆர்த்து எழுந்து சென்றன என்பாள் "சொல் என்றன் வாயில் கேட்டார், கல் என்ற ஒலியிற் சென்றார்" என்றாள். கல் என்றது ஒலிக்குறிப்பு. ஆயுதங்களை ஏந்திச் சேனைகள் பொங்கிச் சென்ற போர்க் காட்சியையும் ஆரவாரத்தையும் கூட இருந்து நேரே கண்டவள் ஆதலால் அந்த படை எழுச்சியை இவ்வண்ணம் செவ்வையாக விளக்கிச் சொன்னாள்.

வெள்ளம் கரை புரண்டதுபோல் திரண்டு போன படைகள்

இராமனோடு மூண்டு பொருத போர் வகைகள் யாதொன்றும் கூறாமல் மாண்டு பட்டதையே சுருக்கமாகச் சொல்லிமுடித்தாள்.

வில் ஒன்றில் கடிகை மூன்றில் ஏறினர் விண்ணில்.

இந்தக் குறிப்பின் அழகைக் கூர்ந்து நோக்கி உள்ளம் களிக்கின்றோம். நிகழ்ச்சியைச் சொல்லும் விதத்திலேயே மகிழ்ச்சியை விளைப்பது அரிய ஒரு கலா விநோதமாம்.

சூர்ப்பநகையின் உருவில் மறைந்து நின்றுகொண்டு கவி உரையாடி வருகிற சாதுரிய சாகசங்கள் அதி மாதுரியங்களாய் உணர்வுக்கு உவகை சுரந்து வருகின்றன. அக் காமியின் வாயிலாகத் தம் காவிய நாயகனைத் தீவிய மொழிகளால் ஆவி குளிரத் துதித்துவரும் வித்தக விநயங்கள் உய்த்துணரத்தக்கன. தலைவனைப் பேச நேர்ந்தபோதெல்லாம் நிலை மறந்து பரவசம் அடைகின்றார். ஆசைமொழிகள் அழகுமொழிகளாய் வெளிவருகின்றன.

இவ்வளவு அல்லலை அடைந்தவள் எதிரியை இவ்வாறு புகழ்ந்து சொல்லுவாளா? என்று சுவை தெரியாதவர் இகழ்ந்து சொல்லும்படியாகவும் சில இடங்களில் எல்லை கடந்து பேசி விடுகின்றார்.

இதற்கெல்லாம் எல்லையாகததான், பித்தர், பத்தர், பேதையர் என்னும மூவகை நிலைகளில் ஏதாவது ஒன்றில் தன்னை வைத்துக்கொள்ளும்படி முதலில் கலையுலகை நோக்கி வழிபாடு செய்து கொண்டார். பத்திக்கள் பருகியுள்ளதையும் வெளியுரைத்தார்.

உலக மரியாதைக்காக அவ்வாறு சொல்லியிருப்பினும் நீதி நிலையிலும் நெறிமுறையிலும் கலையுணர்விலும் காவிய வகையிலும் யாண்டும் யாதும் மரபு நிலை திரியாமல் அதிசய மேதையாய் இவர் ஒளிசெய்து உலாவுகின்றார்.

எல் ஒன்று கமலச் செங்கண் இராமன்.

இராமனுடைய கண் அழகில ஈடுபட்டு அவள் உள்ளம் உருகியுள்ளமையை அண்ணன் முன்னிலையிலும் மறைக்கமுடியவில்லை மையல் மொழியிலும் மெய் வெளியாகின்றது.

வில் ஒன்றால் என்றது வேறு யாதொரு படைத் துணையும் இல்லாத அசகாய சூரன் என்பதை வெளிப்படுத்தியது.

கடிகை என்பது இருபத்து நான்கு நிமிடங்கள் கொண்ட ஒரு கால அளவு. இதனை நாழிகை என்று வழங்கி வருகின்றோம்.

கடிகை விகலை கன்னல் இருத்தை
பதமே நாழி நாழிகை ஆகும். (பிங்கலந்தை)

நாழிகையின் பரியாய நாமங்களாய் வந்துள்ள ஆறனுள் கடிகை முதலில் நிற்றலால் அது பண்டு பெரு வழக்காயிருந்துள்ளமையை அறிந்து கொள்ளலாம்.

மூண்டு வந்த படைகள் எல்லாம் மூன்று நாழிகையுள் மாண்டு போயின என்றாள். 'மூத்தம் ஒன்றில் முடிந்தது' என முன்னம் கவி உரைத்ததை ஈண்டு அரக்கி வாயிலாக விரித்து விளக்கினார். மூத்தம் = முகூர்த்தம்.

எண்ணிறந்த சேனைகள் இறந்து பட்டமை இங்ஙனம் வரைந்து காட்டப் பட்டது. படைகளோடு கரன் அழிந்ததை அறிந்ததும் இராவணன் வருந்திக் கொதித்தான். மறுகித் திகைத்தான். தங்கையை நோக்கினான்: "உன்னை அவர் இன்னவாறு செய்ய நீ அவர்க்கு என்ன குற்றம் செய்தாய்!" என்று இவ்வண்ணம் கேட்டான்.

இக் கேள்விக்கு அவள் சொன்ன பதில் அவன் வாழ்வுக்கு உலை வைத்தது: "அண்ணா! நான் யாதொரு பிழையும் செய்யவில்லை; கண்கொள்ளாத கட்டழகி ஒருத்தி அவருடன் வந்திருக்கிறாள்; அவளைக் கண்டதும் தங்களுக்கு உரிமையாக் கொண்டு வரலாம் என்னும் ஆசை பெருகி அருகு நெருங்கினேன்; காவு செய்ய வந்தேன் என்று கருதி அவர் என்னை இங்ஙனம் பங்கம் செய்து விட்டார்" என்று அவள் பாங்குடன் உரைத்தாள்.

தங்கை சொன்ன இவ்வுரைகளுள் எதையும் அவன் கவனிக்கவில்லை; அழகி என்ற அந்த ஒரு மொழிதான் அவனுடைய உள்ளத்தை ஊடுருவி உயிரைக் கலக்கி நின்றது. அவளைக் குறித்து யாவும் அறிய அவாவினான். "தங்காய்! அம் மங்கை யார்?" என்று பொங்கி வினவினான். விளைவு நிலைமை முழுவதையும் அவள் தெளிவாகச் சொல்ல நேர்ந்தாள்:

அரசவையில் நின்று அந்த இலங்கேசனிடம் சீதையைக் குறித்துச் சூர்ப்பனகை பேசியிருக்கும் திறமும் முறையும் வருண

னைகளும் அதிசயக் கலைகளாய்ப் பெருகி யிருக்கின்றன. அவளு டைய சாதுரிய வசனங்கள் மதிநலம் கனிந்து எவரும் மையல் உறும்படி மருவி மிளிர்கின்றன.

## சீதையின் உருவ வருணனை.

காமரம் முரலும் பாடல் கள்ளனக் கனிந்த இன்சொல்
3135 தேமலர் நிறைந்த கூந்தல் தேவர்க்கும் அணங்காம் என்னத்
தாமரை இருந்த தையல் சேடியாம் தரமும் அல்லள்;
யாம்உரை வழங்கும் என்பது ஏழைமைப் பாலதன்றே. (1)

மஞ்சுஒக்கும் அளகஓதி மழைஒக்கும் வடித்த கூந்தல்
பஞ்சுஒக்கும் அடிகள் செய்ய பவளத்தின் விரல்கள் ஐய!
3136 அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக் கொண்டவள் வதனம் மைதீர்
கஞ்சத்தின் அளவிற்றேனும் கடலினும் பெரிய கண்கள். (2)

ஈசனார் கண்ணின் வெந்தான் என்னுமிது இழுதைச்சொல்; இவ்
3137 வாசநாறு ஓதியாளைக் கண்டனன் வல்ல ஆற்றால்
பேசலாம் தகைமைத் தல்லாப் பெரும்பிணி பிணிப்ப நீண்ட
ஆசையால் அழிந்து தேய்ந்தான் அநங்கன் அவ் வுருவம் அம்மா!

தெவ்வுல கத்தும் காண்டி சிரத்தினில் பணத்தினோர்கள்
அவ்வுல கத்தும் காண்டி அலைகடல் உலகில் காண்டி
3138 வெவ்வுலை யுற்ற வேலை வாளினை வென்ற கண்ணாள்
இவ்வுல கத்தாள் அங்கம் யாவர்க்கும் எழுதொணாதாள். (4)

தோளையே சொல்லு கேனோ சுடர்முகத்து உலவுகின்ற
வாளையே சொல்லு கேனோ வல்லவை வழுத்து கேனோ
3139 மீளவும் திகைப்பது அல்லால் தனித்தனி விளம்பல் ஆற்றேன்;
நாளையே காண்டி யன்றே நான் உனக்கு உரைப்பது என்னோ?

வில்ஒக்கும் நுதல் என்றாலும், வேல்ஒக்கும் விழி என்றாலும்,
பல்ஒக்கும் முத்து என்றாலும், பவளத்தை இதழ் என்றாலும்,
3140 சொல்ஒக்கும் பொருள் ஒவ்வாவால்; சொல்லலாம் உவமை உண்டோ?
நெல்ஒக்கும் புல் என்றாலும் நேர் உரைத்தாக வற்றோ? (6)

இந்திரன் சசியைப் பெற்றான்; இருமூன்று வதனத் தோன்தன்
தந்தையும் உமையைப் பெற்றான்; தாமரைச் செங்கணானும்
314: செந்திரு மகளைப் பெற்றான்; சீதையைப் பெற்றாய் நீயும்
அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கில்லை உனக்கே ஐயா!

பாகத்தில் ஒருவன் வைத்தான்; பங்கயத் திருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான்; அந்தணன் நாவில் வைத்தான்; 3142
மேகத்தின் மின்னை முன்னே வென்றநுண் ணிடையை நீயும்
மாகத்தோள் வீர பெற்றால் எங்ஙனம் வைத்து வாழ்தி? (8)

பிள்ளைபோல் பேச்சி னாளைப் பெற்றபின் பிழைக்கலாற்றாய்
கொள்ளைபோ கின்ற செல்வம் அவளுக்கே கொடுத்தி ஐய 3143
வள்ளலே! உனக்கு நல்லேன்; மற்றுநின் மனையில் வாழும்
கிள்ளைபோல் மொழியார்க் கெல்லாம் கேடுசூழ் கின்றேன் அன்றே.

மீன்கொண் டூடாடும் வேலை மேகலை உலகம் ஏத்தத்
தேன்கொண் டூடாடும் கூந்தற் சிற்றிடைச் சீதை என்னும் 3145
மான்கொண் டூடாடும் நீயுன் வாள்வலி உலகம் காண
யான்கொண் டூடாடும் வண்ணம் இராமனைத் தருதி என்பால்.

தருவது விதியே என்றால் தவம் பெரிது உடைய ரேனும்
வருவது வருநாள் அன்றி வந்துகை கூட வற்றோ?
ஒருபது முகமும் கண்ணும் உருவமும் மார்பும் தோள்கள் 3146
இருபதும் படைத்த செல்வம் எய்துவ தினிநீ எந்தாய்! (11)

இன்னவள் தன்னை உன்பால் உய்ப்பல்என் றெடுக்கல் உற்ற
என்னைஅவ் இராமன் தம்பி இடைபுகுந்து இலங்கு வாளால்
முன்னைமூக் கரிந்து விட்டான் முடிந்ததென் வாழ்வும் உன்னின் 3147
சொன்னபின் உயிரை நீப்பான் துணிந்தனென் என்னச் சொன்னாள்.

(மாரீசன் வதைப் படலம், 69-80)

அழகுத் தெய்வத்தின் துதிகளாய் வந்துள்ள இக் கவிகளின் சுவைகளைக்கருத்தூன்றி நுகர்ந்து அருத்தங்களை உணரவேண்டும்.

சூர்ப்பநகையின் உரையாடல்களையும் விநய சாகசங்களையும் வஞ்சச் சூழ்ச்சிகளையும் வாத முறைகளையும் நெஞ்சத் துணிவையும் முறையே தொடர்ந்து பார்த்து வருகின்றோம். இங்கே அவளுடைய சொற்களும் உணர்ச்சிகளும் விசித்திர கதியில் விளைந்திருக்கின்றன. பொருளை யாதும் பாராமலே பாடல்களையே பல முறையும் பாடிப் பாடி மகிழும்படி இனிய ஓசை தழுவிச் சவுந்தரிய கீதமாய் இவை பொங்கி எழுந்துள்ளன. இப் பாசுரங்களில் பொதிந்திருக்கும் பொருட் பொலிவுகளும் ஒலிக் குறிப்புக்களும் அறிவுக் காட்சியில் அதிசய ஆனந்தங்களாய்ப் பெருகி மிளிர்கின்றன. பெண் அழகு எண்வழியும் கண்வழியும் எதிர் வருகின்றது.

தாமரை இருந்த தையல் சேடி ஆம் தரமும் அல்லள்.

சீதையின் மகிமையைச் சொல்லத் தொடங்கினவள் காமரம் முரலும் பாடல் என முதலில் அவளது சொல்லின் இனிமையை மெல்லச் சுட்டி விட்டு இவ்வாறு எல்லை கட்டிப் பேசியுள்ளாள்.

காமரம்=தேவ கானத்துள் ஒரு பண் விசேடம். கள் என்றது தேனை. "தாமரை மலரில் எழுந்தருளியுள்ள இலட்சுமியும் தாதியாயிருத்தற்குத் தகுதி யில்லாதவள்; அவ்வளவு அதிசய அழகினள்; திவ்விய நிலையினள்; அவளுடைய உருவ எழிலையும் பருவ நிலையையும் உரைகளால் நான் எவ்வாறு வரைந்து சொல்ல முடியும்?" எனத் தனது ஆற்றாமையை வெளியிட்டிருக்கிறாள். சொல்ல முடியாத ஒரு அற்புத சவுந்தரியை நான் இங்கே சொல்லத் தொடங்கியது பெரிய மடமை என்பாள் ஏழைமைப் பாலது என்றாள். அதிசய அழகைத் துதி செய்ய அவையடக்க மாயது.

நீயே நேரே போய்க் கண்டு களித்துக் கொண்டு வரவுரியது! அந்த அரிய இன்ப உருவை நான் உரையால் சொல்லுவது புல்லிதாம் என்பது குறிப்பு. குறிக் கோளோடு கூரிய சீரிய விரக மொழிகளை வாரி வீசி வெய்ய மையலை விளைத்து வருகின்றாள்.

மஞ்சு ஒக்கும் அளக ஓதி; மழை ஒக்கும் வடித்த கூந்தல்.

என உச்சியிலிருந்து உள்ளங்கால் வரையும் உச்சமாக வருணிக்கத் தொடங்கினாள். வார்த்தைகள் ஆர்த்தி மீதூர்ந்து வருகின்றன.

"அவள் கூந்தலை முடித்திருந்தால் கார்மேகம் போல் கனிந்து தோன்றும்; அவிழ்த்து விட்டிருந்தால் மழை பொழிதற்குக் கால் இறங்கிய நீலமேகம் போல் நிலவி மிளிரும். அவளுடைய கண்களின் அமைதியும் அழகும் எண்கள் கடந்தன. இப்படி ஒரு உருவத்தைப் பிரமன் எப்படிப்படைத்தானோ? சிவனுடைய நெற்றிக் கண்ணால் எரிக்கப்பட்டு மன்மதன் இறந்தான் என்பது மடத்தனம்; இந்தப் பேரழகியை அவன் நேரே பார்த்தான்; பேராசை கொண்டான்; அந்த ஆசை நோயால் அவன் செத்தான். ஈசன் கண்ணால் வெந்தான் என்பது பொய். தேவ மங்கையர், நாக கன்னியர், கந்தருவ சுந்தரிகள் எவரும் இவளது காலழகுக்கும் ஈடாகார். எந்த உலகத்திலும் இந்த எழில் ஒளியை நீ காண முடியாது. அண்ணா! அவளுடைய அவயவ அமைதி

களை நான் என்ன என்று சொல்லுவேன்? தோள் முகம் கண் நெற்றி காது கால் முதலிய உறுப்புக்கள் சாமுத்திரிக இலக்கணமாகிய உருவக்கலைக்கு உயிர்க்கலைகளாயுள்ளன. வில், நுதல்; வேல், விழி; பல், முத்து; பவளம், இதழ்; என இவ்வாறு சில உவமைகளைச் சொல்லியதனால் அவ்வுருவ நிலையை உணர்த்திவிட முடியாது. சொல் அளவில் சொல்லலாமேயன்றி அந்தப்பொருளின் உண்மை நிலையை யாரும் யாதும் விளக்க இயலாது. உயர்ந்த பெண்களுக்கு நூலோர் தேடிக்கண்டு பிடித்துள்ள சிறந்த உவமைகள் எல்லாம் அந்த மங்கை எதிரே இழிந்து படுகின்றன. இந்திராணியை இந்திரன் பெற்றான்; பார்வதியைச் சிவன் பெற்றான்; இலக்குமியைத் திருமால் பெற்றான்; சீதையை நீ பெற்றாய்; ஆதலால் அவர் எவரினும் நீயே உயர்ந்த பாக்கியவானாய்ச் சிறந்து நிற்கின்றாய். அந்தப் பெண் அரசியால் விண் அரசுகளும் வியந்து போற்ற நீ எண் அரசாயினாய்'' என இவ் வண்ணம் உள்ளம் குளிரப் பேசினாள்.

அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்குஇல்லைஉனக்கே.

ஆண் மகனுடைய பெருமை எல்லாம் அவனுக்கு வாய்த்த மனைவியைக் கொண்டே பெரும்பாலும் மதிக்கப்படுகின்றன. அந்த முறையில் நீ அடைய நேர்ந்த அதிசய சவுந்தரியால் உலகமெல்லாம் துதிசெய்து போற்ற உயர் நலன் கொண்டாய் என இங்ஙனம் பலன் கை வந்தது போல் மயல் ஏற்றி நின்றாள்.

நீயும் சீதையைப் பெற்றாய் என்னும் இது அவன் உள்ளத்தில் ஆசைத் தீயை மூட்டி இனிப் பெறப்போவதற்கு வழி காட்டியாய் வந்தது. தேவதேவர்களோடு ஒத்து எண்ண நிற்கும் உயர் தலைமையனான நீ உன் இயலுரிமைக்குத் தகுதியான துணைவியை அடைந்து கொள்ளவேண்டும். அதற்குரிய பருவம் வந்து வாய்த்தது எனப் பக்குவமாக விரைவு படுத்தினாள்.

தனக்குத் தோழியாய் நின்று ஊழியம் புரியவும் தகுதியற்ற இலக்குமியைத் திருமால் மனைவியாகப் பெற்று மகிமை யுற்றிருக்கின்றான்; அத்திருமகள் திசைநோக்கித் தொழும் சீதையை நீ பெற நின்றாய். மனைவிகளால் மாண்பு அடைந்தவர்களுள் உனக்கு நிகரானவர் இனி எவரும் இலர்.

தாரதாரங்களின் வாசியைச் சீர்தூக்கி நோக்கின் அந்தரவாசிகள் எவரினும் உனது மேன்மை தனி ஓங்கியுள்ளது என்பாள் "நன்மை அவர்க்கு இல்லை; உனக்கே" என்றாள். சீதையை நீ விழையின், "நன்மை அவர்கே; உனக்கு இல்லையே!" எனவும் இவ்வாக்கியம் நோக்கவுள்ளது.

தேவர் நலமுற, இராவணன் நாசம் உற இத்தீயவள் சீதை மேல் ஆசையை மூட்டுகின்றாள். விளைவுகளை மொழிகள் நினைவையும் கடந்து வினயமாக விளக்கி வருகின்றன.

"தன் மனைவியாகிய உமையைச் சிவன் பாகத்தில் வைத்தான்; திருமால் தன் மனைவியை மார்பில் வைத்தான்; சரசுவதியைப் பிரமன் நாவில் வைத்தான்; சீதையைப் பெற்றால் அண்ணா! நீ எங்கே வைத்து வாழுவாய்?" என இங்ஙனம் பேசியுள்ளாள்.

கருதிய பொருள் கைக்கு உறுதியாகக் கிடைத்துவிடும்; அந்த அருமைப் பொருளைப் பெருமையாக வைத்து வாழவேண்டிய வாழ்க்கை முறைகளை முன்னதாக வகுத்துக் கொள்ளும்படி தொகுத்துக் குறித்திருக்கிறாள்.

இடப்பாகத்திலும், மார்பிலும், நாவிலும் தம் மனைவிகளை அம்மூவரும் பேராவலோடு பேணி வைத்துள்ளனர்; அவரினும் இனியளாய இவளை நீ பெற்றால் தலையில் வைத்துத்தான் சுமப்பாய்; தரையில் நடக்கவிடமாட்டாய்! என நேர்கின்ற நிலைமையை நினைவுறுத்தினாள்.

எங்ஙனம் வைத்து வாழ்தி? என்னும் இதில் அமங்கல ஒலி தொனித்திருக்கிறது. அம்மங்கையைப் பெற்றால் நீ எங்கே வாழப்போகின்றாய்? சாகத்தான் நேரும் என்பது தொனி.

பிள்ளைபோல் பேச்சினாளைப்பெற்றபின் பிழைக்கல்ஆற்றாய்

இந்த வாக்கியத்தைக் கவனியுங்கள். சீதையை உரிமையாக அடைந்தால் அவள் மனம் அணுவும் கோணாதபடி இதமாக நடந்து வருவாய்; எவ்வகையிலும் யாதொருதவறும் புரியமாட்டாய்; அவ்வளவு காதலோடும் ஆவலோடும் அவளைப் பேணி மகிழ்ந்து பேரின்பம் நுகர்வாய் என்பதை இங்ஙனம் பேசியிருக்கிறாள்.

பேச்சினாளைப் பெற்றால் நீ பிழைக்க மாட்டாய்; செத்தே தொலைவாய் என இதில் ஒலித்துள்ளது.

என்றும் காணாத கட்டழகியை நான் உனக்குக் காட்டினேன்; இனிமேல் அவளைத் தவிர வேறு எவரையும் நீ கண் எடுத்துப் பாராய்; அதனால் உனக்கு மாத்திரம் நான் நல்லவள் ஆனேன்; மதினிமார்கள் எல்லார்க்கும் நான் பொல்லாதவளாய் நேர்ந்தேன் என்று நெஞ்சு நொந்துகொள்ளுகின்றாள்.

வள்ளலே! உனக்கு நல்லேன்; நின் மனையில் வாழும்
கிள்ளைபோல் மொழியார்க்கு எல்லாம் கேடு சூழ்கின்றேன்·

பேச்சுகளுள்ளே பிழைபாடுகள் விளையாடி வருகின்றன.

இராவணன் மனைவியாகிய மண்டோதரி முதலானவர்களுடைய தாலிகளை அறுக்கத் தொடங்கியிருக்கிறாள் ஆதலால் அந்த நீலி வாயில் இப்படி வார்த்தைகள் தாமாக வந்திருக்கின்றன.

தன் கருத்துக்களைத் திருத்தமாகச் சொல்லப் புகுந்தாள்; மொழிகள் இவ்வாறு விருத்தமாக வெளி எழுந்தன.

எங்ஙனம் வைத்து வாழ்தி! பிழைக்கல் ஆற்றாய்; கேடு சூழ்கின்றேன் என்னும் இவ் வார்த்தைகள் கெடு குறியுடையனவாய் அவள் அறியாமலே வந்துள்ளன ஆயினும் கவி அறிந்தே தந்துள்ளார் என்பதை நாம் அறிந்து கொள்ளுகின்றோம். மதி நலத்தோடு பலவும் சூழ்ந்து அதி சாதுரியமாக அவள் பேசிவரினும் விதி புகுந்து உள்ளே வேலை செய்து வருகின்றது.

தான் வெய்ய மையல் கொண்டு வெந்துயர் அடைந்துள்ளவள் ஆதலால் அண்ணனுக்கும் அதனை வேகமாக ஏற்றினாள்.

நான் கண்டு தந்த சீதையை நீ கொண்டு வந்து மகிழ்வதோடு எனக்கும் இராமனைத் தந்தருள வேண்டும் என வேண்டினாள்.

யான்கொண்டு ஆடும் வண்ணம் இராமனைத் தருதி.

இந்த வேண்டுகோளை அவள் செய்துள்ளது வியப்பாகின்றது. காம ஆசையில் கண் அழிந்துள்ளவர், கள் அருந்தினவர் போல் எள்ளல் எதையும் காணமல் உள்ளதை வெளியிட்டு விடுவர் என்பதை இவ்வுரை தெளிவாக்கி யுள்ளது.

அண்ணனிடம் தங்கை இவ் வண்ணம் பேசி யிருக்கிறாள். தான் இராமனைக்காதலித்த உண்மையை இது வரையும் மறைத்து வைத்திருந்தவள் இப்பொழுது மதி மறந்து உரைத்து விட்டாள்.

காம தாபத்தால் கலங்கி யுள்ளமையால் அவள் உள்ளத்தை மறைக்க முடியவில்லை; ஒளித்திருந்தது வெளிப்பட நேர்ந்தது.

"So full of artless jealousy is guilt,
It spills itself in fearing to be spilt." (Hamlet, 4-5)

"பரிதபித்துள்ள மனம் மறைக்க விரும்பியதைத் தானுக வெளிப்படுத்தி விடும்" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

"உன் வாள் வலி உலகம் காண" என்றது இராவணனது வீர பராக்கிரமத்தை நினைப்பூட்டி அதனால் அவனும் தானும் உயர் பயன் அடைய வேண்டும் என உணர்த்தியபடி யாயது.

இவ்வாறு பலவும் கூறிவிட்டு இறுதியில் அவன் பெற நேர்ந்துள்ள அதிசய நலங்களை வியந்து பாராட்டினுள்.

தருவது விதியே என்றால் தவம் பெரிது உடையர் ஏனும்
வருவது வருநாள் அன்றி வந்துகை கூட வற்றோ?

இது எவ்வளவு சிந்தனைகளை யுடையது! இந்த விதமான உறுதி உண்மைகளும் இவள் வாய் வழி வந்துள்ளன.

மனிதனுக்கு மதிப்பும் செல்வமும் மகிமைகளும் இன்பங்களும் உளவாவன எல்லாம் அவன் செய்துள்ள நல்வினையின் பயன் அளவே விளைவாகி வருகின்றன. அவ் வரவுகளும் கால நியமத்தின் படியே பருவமான சமையத்திலே தான் ஒருமுகமாய் உறுகின்றன.

"சிறுகா; பெருகா; முறைபிறழ்ந்து வாரா;
உறுகாலத்து ஊற்றுகா; ஆம் இடத்தே ஆகும்." (நாலடியார்)

என்றபடி ஊழ்வினையின் பயன்கள் நெறிமுறையே வந்து சேருகின்றன. அந்த நியம நிலையை அதி விநயமாக இங்கே அறிவுறுத்தி யிருக்கிறாள்.

தேவர்களை வென்று திக்கு விசயம் செய்து மூன்று உலகங்களையும் ஒருங்கே ஆளும் ஏக சக்கராதிபதியாய் வீற்றிருக்கின்ற நீ இது வரையும் பெற்றுள்ள ஐசுவரியங்கள் எல்லாம் அதிசய செல்வங்களல்ல; இனிமேல் நீ அடையப் போகின்ற அரிய பாக்கியமே பெரிய போக்கியமாய் உனது தவ மகிமையை உலகறியச் செய்து பல மேன்மைகளை நிலைபெறச் செய்யும்.

ஒருபது முகமும் கண்ணும் உருவமும் மார்பும் தோள்கள்
இருபதும் படைத்த செல்வம் எய்துவது இனி நீ எந்தாய்!

தேவரும் வியந்து போற்றும்படியான சிறந்த கீர்த்தியோடு பிறந்திருக்கின்ற நீ உன் பிறப்பிற்கு ஏற்ற அற்புத செல்வத்தை அடைய நேர்ந்துள்ளாய் ஐயனே! என்று ஆவல் மீதூர ஆசையில் இவ்வாறு ஏவி யிருக்கிறாள்

சீதையைப் பெற்ற பொழுதுதான் நீ பிறந்த பயனை உற்றாய்! என அவனுடைய உள்ளம் உருகி ஓட இவள் உரையாடியுள்ள திறம் உணருந்தோறும் வியப்பை விளைத்து வருகின்றது.

ஒவ்வொரு சொல்லும் இராவணன் உள்ளத்தில் பாய்ந்து காம இச்சையைக் கடுமையாக விளைத்து வந்தமையால் அவன் மதிமயங்கி மையல் மீதூர்ந்து கொடிய மோகியாய்க் கடிது மாறினான்.

இவள் சொல்லி முடிக்கும் முன்னமே அவன் உள்ளம் பரவசமாய்த் துடித்தது. தங்கை மூக்கு அறுபட்டு வந்ததையும், கரன் முதலிய சேனைகள் யாவும் இறந்து பட்டதையும் வேறு எல்லாவற்றையும் மறந்து விட்டான். சீதையையே நினைந்து நினைந்து நெஞ்சம் உருகினான். காம பரவசனாய் அவன் நிலை மாறியுள்ள நிலைமையைக் கவி மிகவும் அதிசய விநோதமாய்க் காட்டி யிருக்கிறார். அந்தக் காட்சியை நாம் கண் ஊன்றிக் காண வேண்டும்.

கரனையும் மறந்தான்; தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான்; உற்ற பழியையும் மறந்தான்; வெற்றி 3149
அரனையும் கொண்ட காமன் அம்பினால் முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான்; கேட்ட மங்கையை மறந்தி லாதான். (1)

சிற்றிடைச் சீதைஎன்னும் நாமமும் சிந்தை தானும்
உற்றிரண்டு ஒன்றாய் நின்றால் ஒன்று ஒழித்து ஒன்றை உன்ன 3150
மற்றொரு மனமும் உண்டோ? மறக்கலாம் வழிமற்று யாதோ?
கற்றனர் ஞானம் இன்றேல் காமத்தைக் கடக்க லாமோ? (2)

மயிலுடைச் சாய லாளை வஞ்சியா முன்னம் நீண்ட
எயிலுடை இலங்கை நாதன் இதயமாம் சிறையில் வைத்தான் 3151
அயிலுடை அரக்கன் உள்ளம அவ்வழி மெல்ல மெல்ல
வெயிலுடை நாளில் உற்ற வெண்ணெய்போல் வெதும்பிற்று அன்றே.

விதியது வலியி னானும் மேலுள விளைவி னானும்
3152 பதியுறு கேடுவந்து குறுகிய பயத்தி னானும்
கதியுறு பொறியின் வெய்ய காமநோய் கல்வி நோக்கா
மதியிலி மறையச் செய்த தீமைபோல் வளர்ந்த தன்றே. (4)

பொன்மய மான நங்கை மனம்புகப் புன்மை பூண்ட
3153 தன்மையோ? அரக்கன் தன்னை அயர்த்ததோர் தகைமையாலோ!
மன்மதன் வாளி தூவி நலிவதோர் வலத்தன் ஆனான்;
வன்மையை மாற்றும் ஆற்றல் காமத்தே வதிந்த தன்றே. (5)

(மாரீசன் வதை, 83-87)

காமத்தின் ஆற்றலையும், அதனால் உயிர் அடைகின்ற மாற்றத்தையும், மானசிகமான அரிய தத்துவங்களையும் குறித்து வந்துள்ள இப்பகுதி அறிவுக்கு இனிய சுவையாய் அதிசய நிலையில் விளைந்து வந்துள்ளது. எவரும் விழைந்து மனனம் செய்து கொள்ளும்படி கவிகள் கவின் சுரந்துள்ளன. உரைவரைய நினையாதபடி நிறை சுவையுடையனவாய் அவை நெஞ்சம் கவர்ந்து உணர்வு மணங்களைப் பரப்பி நிற்கின்றன.

சீதையின் உருவ அழகைச் சூர்ப்பநகை வாயால் கேட்டதும் இராவணன் உள்ளம் உருகி உயிர் இரிந்துள்ள நிலைமையை ஈண்டு நேரே கண்டு நெஞ்சம் வியக்கின்றோம். காம ஆசை மண்டியபொழுது அறிவு அழிந்து எவனும் அலமருவன் என்பதை உரைகளில் வரைந்து காட்டியிருக்கும் காட்சி நினைந்து சிந்திக்கத்தக்கது.

“அரனையும் வெற்றிகொண்ட காமன்” என மன்மதனை இன்னவாறு வியந்து குறித்தது, கடவுளையே அந்தப் பாடுபடுத்தினவன் மற்றவரை என்னபாடு படுத்துவான்! என இரங்கிக்கூறியபடியாம்.

சிவனுடைய நெற்றிக்கண்ணால் எரிந்துபட்ட காமன் அவனை வெற்றிகொண்டான் என்றது விருத்தம் அன்றோ? எனின், தான் செத்து விழுந்தாலும் அவனது அரிய யோகத்தைக் கலைத்து அவனைப் பெரிய போகத்தில் புகுத்திவிட்டான் ஆதலால் அக் காரியசித்தி காமனுக்கு ஒரு வீரிய வெற்றியாயது என்க.

சிவயோகம் விட்டுச் சிவைபோகி யாகி
அவனும் சிவனும் அடங்கினன்—எவனேபின்
காமன் எதிர்வரின் கண்மூடித் தன்னுடைய
நேமநிலே நிற்பான் நிலேத்து.

சிவை=பார்வதி. நேமம்=நியமம், தவயோகம்.

உயிர்கள் போகங்களை நுகர்ந்து உலகம் இயங்கி வருவதற்கு மூலகாரணமாகிய பரமனும் போகியாயிருக்கவேண்டும் என்று கருதி அவனது யோகத்தைக் கலேக்கக் காமன் சென்றதும், கருமம் நிகழ்ந்ததும், காரியம் விளேந்ததும் பெரிய சரிதமாம்.

ஆண்கள் பெண்கள்பால் நேயம் புரிந்து பெரும்போகிகளாய் விருத்தியடைந்து வர இறைவன் இன்ப நிலேயமான சத்தியைத் தோய்ந்து பெண்மை பாதியன் எனப் பெருகியுள்ள உண்மை கருதியுணர வுரியது.

"போகமாய் விரிந்தும் போகியாய்ப் பரந்தும்
புலன்களின் வழி மனம் செலுத்தா
யோகியாய் இருந்தும் யோகிகள் முதலா
உரைப்பரும் பலபொருள் ஆயும்
ஏகமாய் நின்ற தத்துவ மறைக்கும்
எட்டுதற்கு அரியதன் வடிவில்
பாகமாய் விளங்கும் பைந்தொடி யுடனே
பரிவுடன் சின்மொழி பகர்வான்."

(பாரதம், அருச்சுனன் தவநிலே, 78)

பரமனது நிலேமை தலேமைகளேக் குறித்து வந்திருக்கும் இதனேக் கூர்ந்து நோக்கிக் கருத்துக்களே ஓர்ந்து சிந்திக்கவேண்டும். இத்தகைய அரனேயும் மையல் உறுத்தித் தையல்பாகனுக்கிய காமன் அரக்கர் வேந்தனேக் கடுமோகி ஆக்கிக் கதிகலங்கச் செய்தான் என அவனது இயற்கை ஆற்றலே விளக்கியருளினர்.

இராவணனுடைய உள்ளம் உணர்வுகள் எல்லாம் சீதையின் மயமாகவே மாறி மறுகின. சீதை என்னும் நாமமும் சிந்தையும் ஒன்ருய் நின்றது என்றதனல் அவனது நிலேமையை நன்ருகத் தெரிகின்ருேம். வேறு ஒன்றையும் எண்ணமுடியாதபடி அவன் நெஞ்சம் சீதையின் வண்ணமாகவே வதிந்து நின்றது. கருத்தெல்லாம் பெண்ணுசையாகவே பெருகி எழுந்தன. காம நசையால் கதிகலங்கி மதிமயங்கி அதிமோகியாய் மறுகி அலமந்தான்.

சிறந்த போர்வீரன்; உயர்ந்த அறிவாளி, வேதம் முதலிய கலைகளை எல்லாம் ஓதி உணர்ந்துள்ளவன். அவன் இவ்வாறு காம மோகியாய் இழிந்து உழந்தானே! என எவரும் வியந்து சிந்திக்க நேரும் அந்தச் சிந்தனைகளை எதிர் நோக்கி இறுதி அடியில் உறுதிமொழி வந்தது.

கற்றனர் ஞானம் இன்றேல் காமத்தைக் கடக்கலாமோ?

இந்த ஒருவரியில் அரிய பல பொருள்கள் அடங்கி இருக்கின்றன. அறிவு, ஞானம், காமம் இம் மூன்றும் ஈண்டு ஆராய்ச்சிக்கு வந்துள்ளன.

அறிவு எது? ஞானம் யாது? காமம் என்ன?

இவற்றிற்கு உரை வரையின் விரிய நேரும்; கருதிஉணருக.

இங்கே காமம் என்றது பெண்கள்மேல் நிகழும் ஆசையை. இந்த ஆசை மயக்கம் ஈசனையும் விடாது என்பதை முன்னம் அறிந்தோம். அதனைத் தத்துவ ஞானி எளிதே கடந்துவிடுவான் என்பதை ஈண்டுத் தெளிவாக உணர்ந்துகொள்கின்றோம்; கொள்ளவே ஞானத்தின் நிலைமையும் மகிமையும் நேர் தெரிகின்றோம்.

கல்வி அறிவு மனிதனுக்கு நல்ல உறுதித்துணை; அதுவும் காமத்தை வெல்லமுடியாமல் கதியடங்கி விடுகின்றது. காமம் கடந்தேன் என்று வெறும் சொல்லால் வெளி வீசலாமே யன்றி அது உள்ளத்தை ஊடுருவி எவரையும் வென்று வருகின்றது.

வள்ளமா முலைமினார் வாள்விழிப் பார்வையைத்
தள்ளினார் போல்நெடும் சபையில்வந்து ஏறியே
கள்ளமோடு உரைசெய்வார் கல்வியூடலது தம்
உள்ளமூடு அவரைவிட்டு ஒழிவுளார் யாவரே? (1)

மஞ்சுநேர் யானைதேர் வாசிகா லாள் இனம்
பஞ்சுபோல் மாளஓர் படுகனற் பொறி எனத்
தஞ்சம்வே றின்றியே தாவுபோர் வீரரும்
அஞ்சு பூ ஆகும்என் அம்பினால் மாய்வரே. (2)

(மெய்ஞ்ஞானவிளக்கம்)

சிறந்த கல்வி அறிவாளரும், உயர்ந்தபோர் வீரரும் என் அம்பின் எதிரே யாதும் ஆற்றாமல் எளிதே இழிந்துபடுவர் எனக் காமன் இங்ஙனம் களித்துப் பேசி யிருக்கிறான்.

ஞானம் ஒன்றே காமம் கடக்க வல்லது என உறுதி செய்
ர்ளமையால் இன்றேல், ஆமோ? என எதிர்வினவி நின்றார்.
மிவினும் ஞானத்திற்கு உள்ள மகிமையை இவ்வாறு வெளி
ட்டருளினர்.

"Knowledge comes but wisdom lingers" "அறிவு எளி
ல் வரும்; ஞானம் பெறுதல் அரிது" என மேல் நாட்டுப்
பரியாரும் கூரியுள்ளமையால் ஞானத்தின் அருமை தெளிவாம்.

சிறந்த கல்வி யறிவாளனுயிருந்தும் நல்ல ஞானம் இல்லா
மயால் இங்ஙனம் பொல்லாத காமியாய் இழிந்து இராவணன்
ல்லல் அடைய நேர்ந்தான் எனக் கவி உள்ளம் இரங்கியிருக்
றார். அவனது காம ஆசை கடுவேக மாயது.

சீதையை நேரே போய் வஞ்சித்துக் கவர்ந்து வருமுன்னரே
ன் நெஞ்சத்தில் நிலையாகக் குடி வைத்துக் கொண்டான் என்
ார் இதயமாம் சிறையில் வைத்தான் என்றார்.

அவன் உள்ளம் முழுவதும் சீதை மயமாய்க் கொள்ளைபோ
ள்ளமையை இங்ஙனம் தெள்ளத் தெளிய விளக்கினர்.

பெண் எல்லாம் நீரே ஆக்கிப் பேர் எல்லாம் உமதே ஆக்கி எனப்
ின்னர் அவன் சீதையிடம் நேரே சொல்லி உருகி அழுவதற்கு
ரிமையான பருவ வித்துக்கள் இங்கே பதிக்கப்பட்டு உள்ளன.

அளவிடலரிய அதிசய காமியாய் அவன் மதியழிந்து மறுகி
முல்வதை உரைகளால் கவி உணர்த்திவரும் திறம் உவகையும்
ியப்பும் விளைத்து வருகின்றது.

விதியின் வலியினுலும், கெடுகாலம் மூண்டமையாலும் கொ
டிய காம நோயால் உள்ளம் உடைந்து உழலலானன். "மதியிலி
மறையச் செய்த தீமை போல் காமநோய் வளர்ந்தது" என
வுக்நோயின் வளர்ச்சியை இவ்வாறு விளக்கியிருக்கிறார். தன்
உள்ளத்தில் மறைவாக எண்ணிய தீமை உலகம் அறியப் பரவி
பதற்கு இவ்வுவமை வந்தது.

"Foul deeds will rise, though all the earth o'erwhelm
them, to men's eyes." (Hamlet 1-2)

"எவ்வளவு அடக்கி வைத்தாலும் தீமைகள் உலகம் காண
வெளிவந்து விடும்" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

காம தாபத்தால் இவ்வாறு நெஞ்சம் பரிதபித்த அவன் அரியணையை விட்டு விரைவில் எழுந்துபோய் ஒரு கனக மாளிகையை அடைந்து தனியே இருந்தான். சீதையை நினைந்து நினைந்து உருகி அவன் அடைந்த துயரங்கள் உரைகளால் வரைந்து காட்ட முடியாதன. ஆசை நோயால் அலமந்தவன் அரண்மனையை அகன்று அயலே இனிய பூஞ்சோலை நடுவே விழுமிய மணிமாடத்தில் தங்கினான். தேவ மாதர் முதலிய ஏவலாளர் எவ்வளவு உபசாரங்களைச் செய்தாலும் வெவ்விய விடாய்நோய் விடாது தபித்தது. வசந்தம் முதலிய பருவ காலங்களைத் தனது அதிகார ஆணையால் மாற்றிப் பார்த்தான். அம் மாறுதலாலும் தனக்கு ஆறுதல் அமையவில்லை. நோயே மீறுதலாயது.

"காலத்தால் வருவது ஒன்றோ காமத்தால் கனலும் வெந்தீச்
சீலத்தால் அவிவது அன்றிச் செய்யத்தான் ஆவதுண்டோ?"

அவனது பரிதாப நிலைமைகளை முன்னிட்டு இவ்வாறு அரிய கருத்துக்கள் பல வெளி வந்துள்ளன. திங்களை வெறுத்தான்; தென்றலைச் சீறினான். இங்ஙனம் படாத பாடுகள் பட்டு வந்தவன் ஒரு நாள் மாலையில் "தங்கையை அழைத்து வா" என்று அயல் நின்ற மங்கையரை நோக்கிக் கூவினான். சீதையையே இடையறாது நினைந்து கொண்டிருந்தமையால் மானச கற்பனையாய் ஓர் அதிசயமான அழகிய உருவம் கண் எதிரே தோன்றியது. அது தானா சீதை என்று தெரிந்து கொள்ளவே சூர்ப்பநகையை அழைத்தான். அவள் வந்து சேர்ந்தாள். "இதோ திவ்விய எழில் ஒளியாய் என் முன் தோன்றி நிற்கின்றாளே இவள் தானா சீதை?" என அவளிடம் கேட்டான். அதற்கு அவள் சொன்ன பதில் என்ன? அந்த அதிசய விடை அயல் வருவது.

"செந்தாமரைக் கண்ணொடும் செங்கனி வாயினோடும்
சந்தார் தடந்தோளொடும் தாழ்தடக் கைகளோடும்
3215 அந்தார் அகலத்தொடும் அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவன் ஆகும் அவ்வல்வில் இராமன் என்றாள்."

அண்ணன் கேட்ட கேள்விக்குத் தங்கை இவ்வண்ணம் பதில் உரைத்தாள். சீதைமேல் இவன் ஆசை கொண்டதுபோல் இராமன் மீது காதல் மண்டி ஓயாமல் அந்தச் சுந்தரனைக் கருதி வந்தாள் ஆதலால் தன் காட்சியில் உள்ளதை இவ்வாறு தன்னை மறந்து

அவள் சொல்லி நின்றாள். இவ்வுரையைக் கேட்டதும் இராவணன் திகைத்தான். "நான் கண்டது பெண் உருவம்; நீ என்னமோ எங்கும் காணாத ஒரு ஆண் உருவத்தைச் சொல்லுகின்றாயே! என்னே இது?" என்று இவன் கடுத்துக் கேட்டான். "அண்ணா! நீங்கள் கண்டது மையல் வடிவம்; நான் சொல்லிய உருவ அழகையே கருதியிருந்தமையால் அது உரு வெளித் தோற்றமாய் இவ்வாறு தோன்றியிருக்கிறது" எனத் தோற்றத்தின் மூல காரணத்தைக் குறித்துரைத்தகள். "அவ்வாறு ஆயின் உனக்கு எவ்வாறு அந்த ஆண் உருவம் தோன்றியது?" என இவ்வாறு இவன் எதிர் கேட்டான். இப்பொழுதுதான் தனது பிழை பாட்டை அவள் உணர்ந்து திடுக்கிட்டாள். மதி மறந்து பேசிய அதனை அதி சாதுரியமாக உடனே மாற்றி அவள் விரைந்து பதில் மொழிந்தது வியந்து நோக்கத் தக்கது.

"எந்நாள் அவன் என்னை இத் தீர்வரும் இன்னல் செய்தான்
அந்நாள் முதல் யானும் அயர்த்திலனுகும் என்றாள்."

இந்தப்பதிலைக் கொஞ்சம் கவனித்து நோக்குங்கள். அவளது வஞ்ச அறிவு வேலை செய்து வருவதை நெஞ்சில் நினைந்து சிந்தியுங்கள்.

"நான் காதல் மண்டியுள்ளமையால் சீதையை உருவெளியில் கண்டது சரி; உன் முன் இராமன் தோன்றியதற்குக் காரணம் என்ன?" என்று இராவணன் வினவியதற்குச் சூர்ப்பநகை இங்ஙனம் விரகுடன் விடையளித்துள்ளாள்.

"அண்ணா! உங்கள் காதல் காரணமாக் அம் மாய உருவம் காண நேர்ந்தது; என் நோதல் காரணமாக இது என் முன் தோன்றியது. ஒரு பொருளைக் காதலித்தவர் அதனை மறவாமல் நினைந்து வருதல்போல் வெறுத்தவர் நினைவிலும் அது நிலைத்து வரும். இராமன் என்னை மூக்கை அறுத்தது முதல் பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்று அவன்மேல் கறுவு கொண்டிருக்கிறேன். கனவிலும் நனவிலும் அந்நினைவாகவே இருத்தலால் அவன் உருவம் என் எதிரே தோன்ற நேர்ந்தது. உங்களுடையது ஆசையான மித்துரு நிலையில் வந்தது; என்னுடையது சத்துரு நிலையில் அமைந்தது" எனச் சதுருடன் உரைத்தாள்.

இந்த வித்தகமான யுத்திக்கு அனுகூலமாய் நின்று இவனை ஏமாறச்செய்து அவளுக்கு உதவிபுரிந்தது இத் தீர்வு அரும் இன்னல் என்னும் இவ்வாக்கியமே. இதில் வந்துள்ள சுட்டு இரு பொருள் குறித்தது. அங்கபங்கப்படுத்தி என்னைத் துன்புறுத்திய முதல் அவனை அயர்த்திலேன் என வெளியே தோன்றியது; என் உள்ளத்தையும் உயிரையும் கொள்ளை கொண்டு காம தாபத்தை விளைத்து என்றும் தீராத இந்த இன்னலை எந்நாள் அவன் செய்தானோ அந்நாள் முதல் அவனை நான் மறந்திலேன் என உள்ளே ஒரு பொருள் கள்ளமாய் உறைய இவ்வாறு பேசினாள்.

இக் கரவுரையைக் கேட்டதும் சரிதான் என்று இசைந்து மயலோடு இப்பேயன் அயலே போய் அலமந்து கிடந்தான்.

இரவும் பகலும் யாதொன்றையும் கருதாமல் சீதையே நினைவாய் நோதலுழந்து சாதல் நிலையில் தவித்தலமந்தான்.

யாமமும் துயிலாமல் காம தாபத்தால் கடுந்துயர் அடைந்து கிடந்த இவன் முடிவில் மந்திரிகளுடன் தந்திரமாக ஆலோசித்து மாரீசனாலேதான் காரியம் முடியும் என்று துணிந்து யாதொரு துணையுமின்றி அதிசயமான ஒரு வான வூர்தியில் ஏறி ஆகாய மார்க்கமாய் அவனது தவ வனத்தைத் தனியே அடைந்தான்.

## மாரீசன் நிலை.

இவன் தாடகையின் புதல்வன். சுபாகுவின் தமையன். தாய் இறந்துபட்ட பின் கோசிக முனிவரது யாகத்தை அழிக்க வந்து தம்பி முதலிய அரக்கர்களை இழந்து தப்பிப் பிழைத்தவன். இராமபாணத்தின் ஆற்றலையும் வேகத்தையும் நேரே கண்டவன் ஆதலால் அந்த வீரவிலலியை நினைந்த போதெல்லாம் அச்சமும் திகிலும் அடைந்து நின்றான். மாய வஞ்சனைகளில் இவன் மிகவும் வல்லவன் இந்திரசாலம் என்னும் அரிய மந்திர வித்தையால் வானவரையும் இவன் மருட்டிவந்தான். மாரீசம் என்னும் சொல்லுக்கு மாயம் என்று பெயர். இவனுடைய செயல் இயல்புகளால் அச்சொல் அவ்வாறு உருவாகி வந்தது. “என்னடா மாரீசம் பண்ணுகிறாய்?” என்னும் உலகவழக்கால் இவன் நிலைமை தெளிவாம். மனித சுபாவங்களை நுணுகி உணர்ந்தவன்.

கலைகள் பலவும் கற்றவன் ஆதலால் இறுதியில் உலக நிலையை வெறுத்துத் தனியே ஒரு வனத்தில் தவம் செய்து கொண்டிருந்தான்.

இந்த மாயா வல்லவனாலேயே தன் காரியம் முடியும் என்று கருதி இராவணன் இவனை நாடி வந்தான். அந்த இலங்கேசனைக் கண்டதும் மிகுந்த பயபத்தியுடையனாய் வணங்கி உபசரித்து வந்த கருத்தை நுணங்கி வினவினான்.

சந்த மலர்த்தண் கற்பக நீழல் தலைவற்கும்
அந்தகனுக்கும் அஞ்ச அடுக்கும் அரசாள்வாய்! 3238
இந்த வனத்து என் இன்னல் இருக்கைக்கு எளியோரின்
வந்த கருத்து என்? சொல்லுதி என்றான் மருள்கின்றான்.

இராவணனுடைய தலைமையும், நிலைமையும், அவன் ஈண்டு வந்துள்ள எளிமையும் இதனால் தெளிவாகத் தெரிகின்றோம். காமம் நெஞ்சு புகுந்தால் அது எவ்வளவு பெரிய மனிதனையும் பஞ்சையாக்கிப் படாதபாடு படுத்தி எங்கும் போக விடுகின்றது.

தேவரும் அஞ்சி ஏவல் செய்யத்தக்க அரிய பெரிய சக்கரவர்த்தி தன்னை நாடி வந்தது என்ன காரியமோ? என்று மாரீசன் உள்ளம் கலங்கித் திகைத்துள்ளமையை மருள்கின்றான் என ஒரு சொல்லால் விளக்கி யருளினார்.

வந்தவன் நிலைமை இருந்தவனுக்கு இத்தவாறு சிந்தனையை விளைத்தது. இயல்பாகவே பொல்லாத செயல்களையுடையனாயினும் வேள்வியில் இராமன் வில்லால் அடிபட்டதிலிருந்து எல்லாத் தீமைகளையும் மறந்து நல்ல நீர்மையுடன் தவயோகங்களில் தனது வாழ்வைச்செலுத்தித் தனியே தங்கி வந்தான் ஆதலால் அவகேடுகளுக்கு அஞ்சி நின்றான். புதிய மாறுதலுடன் இங்ஙனம் அதிசய தவசியாயுள்ள இவன் அரக்கர் அதிபதியைக் காணவே அலமரலடைந்து நிலைமையை விசாரித்தான்.

அவன் உற்றதை எல்லாம் ஒளியாமல் உரைத்தான்.

தன் உள்ளத்தைக் கொள்ளைகொண்டுள்ள சீதையைக் கள்ளமாய்க் கவர்ந்து வருவதற்குத் தனக்கு உறுதுணையாய் உடனிருந்து உதவி செய்யவேண்டும் என்று இதங்கள் பல எதிர்மொழிந்து நிகழ்ந்ததை விளக்கி அவன் உரிமையுடன் வேண்டினான்.

அந்தச் சொல்லைக் கேட்டதும் இவன் உள்ளம் கலங்கினான். ஒருவாறு தேறினான். உறுதி பல கூறினான்.

மன்னா! நீநின் வாழ்வை முடித்தாய் மதியற்றாய்!
உன்னான் அன்றுஈது ஊழ்வினை என்றே உணர்கின்றேன்;
3244 இன்னா நெஞ்சன் ஏனுமுரைப்பல் இதம்என்னாச்
சொன்னான் அன்றே அன்னவ னுக்குத்துணிவெல்லாம்.(1)

அற்ற கரத்தோடு உன்தலை நீயே அனல்முன்றில்
பற்றினை உய்த்தாய் பற்பல காலம் பசிகூர
3245 உற்றுயிர் உள்ளே தேய உலந்தாய் உமையன்றோ
பெற்றனை செல்வம் பின்அது இழந்தால் பெறலாமோ?

திறத்திறனாலோ செய்தவம் முற்றித் திருவுற்றாய்
மறத்திறனாலோ சொல்லுதி சொல்லாய் மறைவல்லாய்!
3246 அறத்திறனாலே எய்தினை அன்றோ அது நீயும்
புறத்திறனாலே பின்னும் இழக்கப் புகுவாயோ? (3)

நாரம் கொண்டார் நாடுகவர்ந்தார் நடை அல்லா
வாரம் கொண்டார் மற்றொரு வர்க்காய் மனைவாழும்
3247 தாரம் கொண்டார் என்றிவர் தம்மைத் தருமம்தான்
ஈரும் கண்டாய் கண்டகர் உய்ந்தார் எவரையா? (4)

அந்தரம் உற்றான் அகலிகை பொற்பால் அழிவுற்றான்
இந்திரன் ஒப்பார் எத்தனை யோர்தாம் இழிபுற்றார்
3248 செந்திரு ஒப்பார் எத்தனை பேர்நின் திருவுண்பார்
மந்திரம் அற்றார் உற்றது உரைத்தாய் மதியற்றாய்! (5)

செய்தாய் ஏனும் தீவினை யோடும் பழிஅல்லால்
எய்தாது எய்தாது; எய்தின் இராமன் உலகீன்றான்
3249 வைதால் அன்ன வாளிகள் கொண்டு வழியோடும்
கொய்தான் அன்றே கொற்றம் முடித்துன் குழுவெல்லாம்.

என்றால் என்னே எண்ணலையேநீ கரன்என்பான்
நின்தானைக்கு மேலுளன் என்னும் நிலை அம்மா
3250 தன்தானைக்குற் றாரொடும் மாளத் தனுஒன்றில்
கொன்றான் முற்றும் கொல்ல மனத்தில் குறிக்கொண்டான்.

வெய்யோர் யாரே வீரவி ராதன் துணைவெய்யோர்?
ஐயோ போனான் அம்பொடும் உம்பர்க் கவனன்றோ
3251 உய்வார் யாரே நம்மின் எனக்கொண் டுணர்தோறும்
நையா நின்றேன் நீயிது உரைத்து நலிவாயோ? (8)

மாண்டார் மாண்டார்; நீயினி மாள்வார் தொழில்செய்ய
வேண்டா; வேண்டா; செய்கெனின், உய்வான் விதியுண்டோ ?
3252 ஆண்டார் ஆண்டார் எத்தனை என்கோ அறநோனார்
ஈண்டார் ஈண்டார் நின்றவர் எல்லாம் இலரன்றோ. (9)

எம்பிக் கும்என் அன்னை தனக்கும் இறுதிக்கோர்
அம்புய்க் கும்போர் வில்லி தனக்கும் அயல்நிற்கும்
3253 தம்பிக் கும்நம் ஆண்மை தவிர்ந்தே சயநிற்கும்
நம்பிக் கும்என் நெஞ்சவன் என்றே கவல்கின்றேன். (10)

நின்றும் சென்றும் வாழ்வன யாவும் நிலையாவால்
பொன்றும் என்றும் மெய்ம்மை உணர்ந்தாம் புலையாடற்கு
3254 ஒன்றும் உன்னை என்உரை கொள்ளாய் உயர்செல்வத்து
என்றும் என்றும் வைகுதி ஐயா! இனிஎன்றான். (11)

(மாரீசன் வதை, 177-187)

மாரீசன் வாசகமாய் வந்துள்ள இந்தப் பாசுரங்கள் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்க வுரியன. வஞ்சமும் சூதும் பயின்று வந்த இவன் தன் நெஞ்சு நிலை மாறி இங்ஙனம் அரிய இனிய நீதி போதனைகளைச் செய்ய நேர்ந்தது பெரிய அதிசயமாய் மானச தத்துவங்களை உய்த்துணரச் செய்கின்றது.

சானகியை வஞ்சித்து எடுத்துவரத் தனக்குத் துணைபுரியும் படி உதவிவேண்டி வந்த இலங்கை வேந்தனுக்கு மாரீசன் இங்ஙனம் ஞான உபதேசம் செய்தான்.

பதினாயிரம் ஆண்டுகள் அரிய தவம் செய்து மூவுலக ஆட்சியைப் பெற்றுத் தேவரும் ஏவல் புரிய யாவரும் புகழ மேவரும் கீர்த்தியோடு வாழ்கின்றான் ஆதலால் அந்த வாழ்வின் மூலத்தை எடுத்து காட்டி அது தாழ்வுறாதபடி ஒழுகிவர உறுதிநலம் கூறினான்.

“அற்ற கரத்தோடு உன் தலை நீயே அனல் உய்த்தாய்” என்றது அவனது அகோர தவத்தைக் குறித்தது. ஆயிர வருடங்கள் கடுந்தவம் செய்து இறுதியில் தனது ஒரு தலையை அறுத்து யாகத்தீயில் இட்டான்; அவ்வாறே ஒன்பது தலைகளையும் அறுத்து முடித்து முடிவில் பத்தாவது தலையை அறுக்கத் தொடங்கியபோது பிரமன் எதிர்வந்து காட்சி கொடுத்து அவன் கருதிய எல்லா நலங்களையும் உரிமையுடன் உதவியருளினான். அங்ஙனம் அரும்பாடுபட்டு அரிதாகப் பெற்றுள்ளமையால் அப்பேறுகளின் வரவு நிலைகளை நினைவுறுத்தினான்.

அறத்திறனாலே எய்தினை என்றது, புண்ணியத்தினாலேயே அடைந்திருக்கின்ற திவ்விய செல்வங்களைப் பாவத்தினால் தொலைக்கத் துணிந்துள்ளாய்! என அவன் விழைவினால் விளையும் இழவு நிலையை விளக்கியருளினான்.

பிறர் மனைவியரை விரும்புதல் பெரும்பாவம்; அப் பாவிகளைத் தருமம் பிளந்து எறியும் என உளம் தெளியக்கூறினான்.

“மற்று ஒருவர்க்கு ஆய் மனை வாழும் தாரம் கொண்டாரைத் தருமம் ஈரும் கண்டாய்!” என்றது ஈண்டு நேரே ஓர்வுரியது. பிறன் ஒருவனுக்கு உரியளாய் இல்லறம் புரிந்து ஒழுகும் குடிப் பெண்ணைக் கொள்ள விழைவது கொடிய பாதகம் என்று இங்ஙனம் குறித்துச் சுட்டி அவன் கருத்தைத் திட்டினான்.

கண்டகர் உய்ந்தார் எவர்?

இது எவ்வளவு துணிவில் எழுந்துள்ளது! பிறர்க்குத் துயர் புரியும் தீவினையாளர் ஒரு காலமும் சுகம் அடையார். அவர்க்கு உய்தி இல்லை. இவ்வுண்மையை நீ உணரவேண்டும் என உணர்த்தினான். கண்டகர்=பாவகாரியங்களைச் செய்பவர்.

ஐயா! என்றது உரிமை தழுவி வந்தது.

மருமகன் முறையினன் ஆயினும் பெரிய சக்கரவர்த்தி ஆதலால் அச்சமும் பணிவுமுடையனாய் மரியாதை செலுத்தி உறுதி நலங்களை அறிவுறுத்தி வருகிறான்.

“அகலிகையை விரும்பிய இந்திரன் என்ன கதி அடைந்தான்? சந்திரன் முதலாயினோரும் பிறர்மனை விழைந்தமையால் தாழ்ந்துபட்டுள்ளனர். அல்லலும் அவமானமும் எல்லையின்றி விளையும் ஈனமானதை ஒல்லையில் மறந்துவிடுவதே எவர்க்கும் நல்லது செல்வம் கல்வி குலம் அதிகாரம் முதலியவற்றால் எவ்வளவு உயர்ந்தவராயினும் பிறன் இல்லவிழைவின் அவ்வளவும் அடியோடிழந்து அவர் இழிந்துபடுவர்; இலட்சுமியைப்போல் பேரழகுடைய மனைவிமார் உனக்கு எத்தனை பேர் இருக்கிறார்கள்! அத்தனை உத்தமிகளையும் விட்டு அயலான் மனைவியை அவாவநேர்ந்தாயே இது எவ்வளவு மபலான செயல்? உணர்வுடையவன் நினைவனா? உள்ளச் செருக்கால் துணிந்து நீ சீதையை விரும்பினும் உன் காரியம் யாதும் பலியாது. இராமன் மகா வீரன். நீ நெறி கடந்து புகுந்

தால் உன் தலைகளை அறுத்துத் தரையில் உருட்டி உன் குலத்தையும் அடியோடு அழித்து விடுவான். கரன் எவ்வளவு படைகளையுடையவன்! அவ்வளவையும் கொண்டு போய் அவன் மாண்டு தொலைந்தான். ஒரு வில்லால் பலகோடி அரக்கர்கள் பாழாயினர். இன்னும் பாழ்படுத்த அது எதிர்நோக்கி நிற்கின்றது. அவ்வெற்றி வீரன் தென் திசை நோக்கி எழுந்த போதே அரக்கர் குலத்திற்கு அழிவும் எழுந்தது. ஐயோ! விராதன் எவ்வளவு பெரிய வீரன்? ஒரு கணையால் ஒழிந்தானே! நம் மரபுக்குப் பெருகி வருகின்ற அழிவு நிலையை நாளும் நாளும் நினைந்து என் உள்ளம் உலைகின்றது; நீ யாதொன்றும் உணராமல் மேலும் வந்து தொல்லை செய்கின்றாய்! செத்து ஒழிந்தவர் போகட்டும்; நீயாவது இனிமேல் உய்த்துணர்ந்து பிழை; என்னுடைய தம்பியையும், தாயையும் கொன்ற அந்த அம்புகளை நினைக்கும் போதெல்லாம் என் நெஞ்சம் கலங்குகின்றது; நெடுந்திகில் உண்டாகின்றது. சூரைக் காற்றில் பட்ட சிறு துரும்புபோல் என்னை வாரிக் கொண்டுபோய்க் கடலில் வீசிய அவ் வீரக் கணையின் வேகக் கடுமையை நான் என் என்று சொல்லுவேன்? ஊழித் தீயில் தப்பிப் பிழைத்த பூளைப் பூவைப் போல் நான் ஒதுங்கி யிருக்கின்றேன். உலக வாழ்வு நிலை இல்லாதது; எவ்வளவு கோடி மன்னர்கள் வந்து இந்த மண்ணை ஆண்டு மாண்டு போயுள்ளார்! இன்று வரையும் நின்று வாழ்ந்தவர் ஒருவரும் இல்லையே! நிலையில்லாத இவ்வுலகில் நிலையானதைச் செய்து கொண்டவனே தலையானவனாய் நிலவி நிற்கின்றான்; பொறி புலன்களில் வறிதே அறிவழிந்து போகாமல் நெறி முறைகளில் நின்று உயிர்க்கு உறுதி செய்ய வேண்டும். பொறி இன்பங்களில் வெறி மண்டி விழுபவன் விடம் உண்டவனாய் விளிந்து படுகின்றான். தேக போகங்கள் ஊனமானவை; அந்த ஈனங்களைத் துறந்து ஞான சீலங்களுடன் நண்ணி நிற்பவனே தன் ஆன்மாவுக்கு இதத்தைச் செய்தவன் ஆகின்றான். அல்லாதவர் எல்லாரும் தம்மையே கொல்லுகின்றார். வெளியே வாழ்ந்து வருவதாக நினைந்து உள்ளே தாழ்ந்து போகின்றார். இன் உயிரினும் இனியது யாது? அதனைப் புனிதமாகப் போற்றி வருவதே இனிய கடமையாம்; தீமையை ஒழித்து நன்மையைக் கடைப்பிடித்து நீதி நெறியில் நிலைத்து என்றும் மேலான அரச திருவில் யாண்டும் குன்றாமல் நீ இருந்தருள். அதுவே உனக்கு நன்மையாம்; நம் குலத்திற்

கும் மேன்மையாம். உன் நலத்தை நாடிக்கொள்." என மாரீசன் இங்ஙனம் இராவணனுக்கு இதத்தைப் போதித்தான்.

இவனுடைய உரிமையான போதனைகள் உணர்வு நலம் சுரந்துள்ளன. வயது முதிர்ந்தவன் ஆதலால் உலக அனுபவங்கள் பலவும் தெரிந்திருக்கின்றான்; வார்த்தைகள் எல்லாம் அனுபவத்தைத் தழுவியே வெளி வந்திருக்கின்றன

மன்னு! நீ நின் வாழ்வை முடித்தாய்! மதி அற்றாய்!

தொடங்கும் போதே இங்ஙனம் மனம் உடைந்து துணிந்து பேசியிருக்கிறான். உரைகளில் உள்ள தொனிகள் இவனுடைய உள்ளத்தை நன்கு காட்டுகின்றன. சீதையைக் கவர்வதைக் குறித்து அவன் உரைத்தது இவனைத் திடுக்கிடச் செய்துள்ளது. "எவ்வளவு பெரிய பாதகத்தை எண்ணி வந்துள்ளான்!" என்று உள்ளம் பதைத்துள்ளமையால் ஊக்கி மொழிந்தான். யாவரும் அஞ்சி நடுங்குகின்ற இராவணனை நோக்கி மதி அற்றாய்! என்றது இவனது நெஞ்சத் துணிவையும் நிலையும் நேரே வெளிப்படுத்தி நின்றது. உற உரிமையையும் உணர்த்தியது. தான் மாமன் முறையில் மருவி இருத்தலால் யாரும் எதையும் பேச அஞ்சுகின்ற சக்கரவர்த்தி எதிரே இவ்வாறு பேச நேர்ந்தான். மன்னு! நின் வாழ்வை நீ முடித்தாய்! என்றது அவன் முடிவுக்கு முடிவுரையாய் ஈண்டு மூண்டு வந்தது.

"அரசே! நீ கருதி வந்துள்ளது உன் உயிருக்கும் குடிக்கும் குலத்திற்கும் முடிவான நாச முடையது ஆதலால் அதனை அடியோடு ஒழிய விடுக" என நிலைமையைத் தெளிவு படுத்தினான்.

உண்மையை உறுதியாக உணர்ந்தவன் ஆதலின் உறுதியை வலியுறுத்தினான். அவனது காம மயக்கத்தையும், கருத்தையும் நினைந்து மனம் மிக மறுகினான்.

உன்னேன் அன்று; ஈது ஊழ்வினை என்றே உணர்கின்றேன்.

இது எவ்வளவு மனம் உடைந்த வார்த்தை! வேதம் முதலிய கலைகளை எல்லாம் நன்கு தெளிந்த மகா மேதையான நீ இந்த இளிவான இச்சையில் இழிந்து வந்தது பழைய தீவினை என்றே எண்ணுகின்றேன் என்று இரங்கி யிருக்கிறான். விதி மூண்டமையால் மதி மாண்டது. கதி மாள நேர்ந்தது.

ஈது என்றது சீதையை எடுத்து வரத்துணிந்த எண்ணத்தை. கொடிய நாசகரமான நீச நினைவு ஆதலால் அதனை வாய் திறந்து சொல்லக் கூசி நஞ்சைக் காட்டுவது போல் இங்ஙனம் அஞ்சிச் சுட்டினான். அண்மைச் சுட்டு எதிரே அவன் நெஞ்சில் உள்ள உண்மையை உணர்த்தியது.

இத் தீதை விட்டொழி; இல்லையேல் ஈது உன் குலத்தைச் சுட்டெரித்துச் சுடுகாடு ஆக்கி விடும் எனப் படுகேட்டை உள்ளம் உணர்ந்து கொள்ளும்படி பரிந்து உணர்த்தினான்.

"மாண்டார் மாண்டார்; நீ இனி மாள்வார் தொழில் செய்ய வேண்டா; வேண்டா." என இங்ஙனம் வேண்டியிருக்கிறான்.

அடுக்கு உருக்கத்தையும் மறுக்கத்தையும் காட்டியது.

பெருந்திரு அருந்திறல் பேராண்மை போர் வீரம் முதலிய உயர் நலங்களையடைந்து மாட்சிமை யுற்றிருந்தவரும் மாண்பில்லாத சில செயல்களைப் புரிந்தமையால் அடியோடு இழிந்து குடி மாண்டு போயினர்.

பிறர் மனை விழைந்தும், அறநெறி மறந்தும், அவநிலை நுழைந்து அவனியில் இழிந்து அழிந்து ஒழிந்தவர் பலர்; அந்த அழிவார் புரிந்த இழிவான பழி வழியில் நீ நுழையலாகாது. உலகம் எல்லாம் புகழ உயர் நிலையில் நீ நிலைத்து நிற்க வேண்டும்.

அரசபதவி அரியபுண்ணியப்பேற்றால் அமைந்தது; அதனைக் கண்ணியமாகப் போற்றி வர வேண்டும். தெய்வீக நிலையமான அதனை எய்தியுள்ளவன் எவ் வழியும் செவ்வியனாய் ஒழுகின் திவ்விய மகிமைகளை அடைகின்றான். களிப்பும் செருக்கும் உடையனாயின் அவன் இழிக்கப் பட்டுப் பழிப் புற்று ஒழிகின்றான்.

அறம் நோனார் ஈண்டார் என்றது தருமத்தைத் தழுவி நில்லாதவர் விருத்தியடைய மாட்டார்; விரைந்து ஒழிந்து போவார் என்றவாறு. நோனல் = பொறுத்தல், தாங்கிநிற்றல்.

ஆண்டார் ஆண்டார் எத்தனை என்கோ!

ஒருவர் பின் ஒருவராய் அரசராய் வந்து இந்த உலகை ஆண்டு இறந்து போனவர் எண்ணிறந்தவர் என்றபடி.

நீயும் அப்படியே போகத்தான் போகின்றாய்; இந்த அரச வாழ்வு சதம் இல்லை; இருக்கும் போதே என்றும் நிலையாய் நிற்கும்படியான புகழைத் தேடிக் கொள்; பழியை நாடிப் பாழ்படாதே என நல்ல வழியை நயந்து உணர்த்தினன்.

வாழ்க்கையின் அநித்திய நிலையை உணர்ந்தால் சித்தத்தின் செருக்கு ஒழிந்து உத்தம நெறியில் ஒழுகுவன் என்பது கருதி இங்ஙனம் உணர்வுறுதி கூற நேர்ந்தான். அவன் பெரிய சக்கரவர்த்தி ஆதலால் படி ஆண்ட முடிமன்னர் பலர் மடிந்து போனதை அவனுக்கு உரிமையாக ஈண்டு எடுத்துக் காட்டினன்.

"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவில் ஒரு
பிடிசாம்ப ராய்வெந்து மண் ஆவதும் கண்டு பின்னும்இந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்ப தல்லால் பொன்னின் அம்பலவர்
அடிசார்ந்து நாம்உய்ய வேண்டும் என்றேஅறி வாரிலையே!"

முடிமன்னரும் பிடி சாம்பலாய் மடிந்து போவதைக் கண்டும் தமக்கு உறுதி காணுமல் வாழ் நாளை மக்கள் வீண் கழிக்கின்றனரே எனப் பட்டினத்தார் இங்ஙனம் பரிந்து இரங்கிஇருக்கிறார்.

"Imperious Caesar, dead and turn'd to clay,"
Might stop a hole to keep the wind away."

(Hamlet, 5-1)

"முடிமன்னனை சீசரும் மாண்டு மண்ணாய்ப் போயினன்" என ஷேக்ஸ்பியரும் நிலையாமையை இங்ஙனம் குறித்துக் காட்டி நிலைபேற்றை உணர்த்தியிருக்கிறார்.

வாழ்க்கைச் செருக்கும் மனக்களிப்பும் சாவை நினைக்கின் சிறிது இருந்தும் ஆதலால் உறுதி போதிக்கின்றவர் அவ்வுண்மையை முன்னுற உணர்த்துகின்றனர்.

ஞான போதனை செய்ய நேர்ந்த வள்ளுவப் பெருந்தகை துறவு மெய்யுணர்வுகளுக்கு முன்னதாக நிலையாமையைத் தலைமையாக நினைவுறுத்தியுள்ளதும் ஈண்டு நினைக்கத்தக்கது.

நின்றும் சென்றும் வாழ்வன யாவும் நிலையா.

உயிர்இல்லன; உள்ளன என உலகிலுள்ள எல்லாப்பொருள்களும் இருவகையுள் அடங்கும். அவை நிலைதிணை இயங்குதிணை என வழங்கப்படும் ஆதலால் நின்றும் சென்றும் வாழ்வன என்றார்.

காணப் படுகின்ற சராசரங்கள் யாவும் காணமல் ஒழிந்து போம் என்றது கண் எதிரே உள்ளதை நினைந்து கனியாதே என்பதாம்.

இராமனது போர் வீரத்தை நேரில் பார்த்தவன் ஆதலின் நெஞ்சம் கலங்கி அஞ்சியிருக்கிறன்.

"போர் வில்லிக்கும் தம்பிக்கும் சயம் நிற்கும்" என்றது இராமனுக்கும் இலக்குவனுக்கும் சய லட்சுமியான வெற்றித் திரு யாண்டும் உற்ற துணையாய் உரிமை பூண்டுள்ளமையை உணர்த்தி நின்றது. அந்த வெற்றி வீரரோடு வீணே பகையை விளைத்துக் கொள்ளாதே என்பது கருத்து.

என் நெஞ்சம் கம்பிக்கும் எனத் தன்நிலைமையை மறையாமல் கூறினன். இராமனை நினைந்து இவன் குலை நடுங்கியுள்ளமை இவ்வுரையால் வெளியாயது.

பலவகையான நீதி நிலைகளையும் உலக வாழ்வையும் தரும நெறியையும் உரிமையுடன் மாரீசன் இவ்வாறு உரைத்தும் இராவணன் யாதும் உணர்ந்து கொள்ளாமல் இகழ்ந்து எள்ளினன்.

## இலங்கை வேந்தன் சினந்து கூறியது.

"ஈசன் எழுந்தருளியுள்ள கைலைமலையை அள்ளி எடுத்தேன்; அமரர் அடிதொழ அகில உலகங்களையும் ஆளுகின்றேன்; எனது தலைமையையும் நிலைமையையும் ஒரு சிறிதும் உணராமல் மனிதனை வியந்து புகழ்கின்றுய். குலத்திற்கு நேர்ந்ததைக் கூர்ந்து சிந்திக்கவில்லை. என் தங்கையை மூக்கு அறுத்து விட்டவனை நீ புகழ்ந்து கூறுவது என்னை நேரே இகழ்ந்தபடியாம். எனது அருந்திறல் ஆண்மையையும் போர் வீரத்தையும் மறந்து போய் மதியழிந்துள்ளாய் என்று தெரிகின்றது. நீ பழைய நிலையில் இல்லை; புதியவனாய் மாறிப் பெரிய வேதாந்தம் பேசுகின்றுய். எனக்கு அறிவு சொல்லவும் நீ துணிந்து விட்டாய். உறவுரிமையுடன் முதியவனாயும் இருத்தலால் அறிவிழந்து பேசிய உனது பிழையை நான் பொறுத்துக் கொண்டேன். என் கருத்தின்படி செய்கின்றுயா? இல்லையா?" என்று இங்ஙனம் உருத்துக் கேட்டான்.

## மாரீசன் மறுபடியும் மதியுரைத்தது.

அரிய பல உறுதி நலங்களை உரிமையுடன் இனிது கூறியும் தசமுகன் இசையாமல் இகழ்ந்து சொல்லவே இவன் உள்ளம்

கலங்கினான். மீண்டும் ஊக்கி உரைத்தான். நீதி முறைகளையும் தரும நிலைகளையும் கூறுவதனால் தீதுடைய அவனுக்கு யாதும் பயன் இல்லை என்று தெரிந்து கொண்டு எதிரியின் வலி முதலியவற்றையே துணிந்து சொல்ல நேர்ந்தன்.

யாதும் அறியாய்; உரை கொளாய்; இகல் இராமன்
கோதை புனையாமுன் உயிர் கொள்ளைபடும் அன்றே;
3259 பேதை மதியால் இஃது ஓர் பெண் உருவம் என்றாய்
சீதை உருவோ நிருதர் தீவினையது அன்றோ? (1)

உஞ்சுபிழை யாய்உறவி னோடும் என உன்னை
நெஞ்சு பறை போதுமது நீ நினைய கில்லாய்!
3260 அஞ்சும் எனது ஆருயிர் அறிந்து அருகுநின்றார்
நஞ்சு நுகர் வாரை இது நன்று எனலும் நன்றோ? (2)

ஈசன்முதல் மற்றும்இமை யோருலகும் மற்றைத்
தேசமுதல் முற்றும் ஓர் இமைப்பின் உயிர்தின்ப
3261 கோசிகன் அமைத்த கடவுட்படை கொதிப்போடு
ஆசில கணிப்பில இராமன் அருள் நிற்ப. (3)

ஆயிரம் அடற்கையுடை யானை மழு வாளால்
ஏயெனும் இமைப்பின் உயிர் செற்றஎதிர் இல்லோன்
295 மேயவிறல் முற்றுவரி வெஞ்சிலையி னோடும்
தாயகன் வலித்தகைமை யாமுறு தகைத்தோ? (4)

வேதனைசெய் காமவிடம் மேலிட மெலிந்தாய்
3262 தீதுரைசெய் தாய்இனைய செய்கை சிதைவன்றோ
மாதுலனுமாய் மரபின் முந்தையுற வந்தேன்
ஈதுரை செய்தேன் அதனை எந்தை தவிர்கென்றான். (5)

மாரீசனுடைய சிந்தை நிலைகளை உரைகளிலிருந்து நன்கு தெரிகின்றோம். அரசன் வெகுண்டு நின்றதைக் கண்டும் அதனை யாதும் பொருட்படுத்தாமல் பின்னரும் இன்னவாறு பேசியுள்ளான்.

யாதும் அறியாய்! உரைகொளாய்!

நிலைமைகளை ஒரு சிறிதும் நீ உணரவில்லை; நான் உரைத்தாலும் கேட்கமாட்டேன் என்கின்றாயே! என மனம் நொந்து பேசியபடியிது. தனக்கும் புத்தியில்லை; மூத்தோர் வார்த்தையும் ஏறவில்லை என்றது அவனுக்கு நேரவிருக்கும் தீமையின் நிலைமையை உணர்த்தித் தீவினையாளரது இயல்பினை விளக்கியது.

இராமன் கோதை புனையாமுன் உயிர் கொள்ளைபடும்.

தான் கொள்ளை செய்யக் கருதி வந்துள்ள இடத்தின் நிலைமையை இங்ஙனம் அவன் உள்ளம் கொள்ள உரைத்தான்.

இராமன் யுத்த சன்னத்தனாய் வில் ஏந்தி வெளிவரும் முன்னரே எதிரிகள் எல்லாரும் ஒருங்கே இறந்து ஒழிவர் என்பான், கோதை புனையா முன் உயிர் கோள்ளைபடும் என்றான். இந்த வாசகத்தின் அமைதியைக் கொஞ்சம் அமைதியுடன் நோக்குக. கோதை என்பது கைவிரலில் அணியும் தோல் உறை.

நாணில் அம்புகளைக் கோத்து எய்தற்கு இதமாக வில்வீரர் கையில் பூணுவது ஆதலால் இது கோதை என வந்தது.

"கோதை முன் கைத்தோல் கட்டி" என்பது நிகண்டு.
கோதையை விரலால் தாங்கி நாணினைத் தாக்கினன்."
(வருணனை வழிவேண்டுபடலம், 16)

நற்புறக் கோதை தன் நளினச் செங்கையில்
நிற்புறச் சுற்றிய காட்சி நேமிசால்
கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம்
பொற்புறத் தழுவிய தன்மை போன்றவால்.
(முதற்போர், 112)

இராமன் கோதை புனைந்துள்ள காட்சியை இவை காட்டியுள்ளன. போரில் நேருமுன்னமே நேரலர் நாசம் அடைவார் என்றது இவ்வீர வில்லியின் அதிசய வெற்றியை விளக்கிநின்றது.

இத்தகைய அற்புத வீரனுடைய அருமை மனைவியைக் கவர எண்ணினையே! உனகதி என்னும்? அதனைக் கொஞ்சம் எண்ணிப்பார்! என நேர்வதை நெஞ்சம் தெளிய வுரைத்தான்.

எதிரியின் வலிமையை இவ்வாறு குறித்துப் பின்பு அவன் கருதிய பொருளின் நிலைமையை உணர்த்தினான்.

ஒரு பெண் என்று எண்ணி நீ பிழையாகக் காதலிக்கிறாய்! அது மிகவும் பேதைமையாம்.

சீதை உருவோ அது நிருதர் தீவினை.

பேரழகி என்று பெரு மையல் கொண்டு வந்துள்ள அவனுக்கு உறுதியான உண்மையை இவ்வாறு நேரே கூறினான்.

மாரீசனுடைய தீர்க்க தரிசனத்தையும் தீர்ப்பையும் நோக்கி நாம் வியப்புறுகின்றோம்.

தெய்வத் திருவின் அவதாரம், நல்ல புண்ணிய உருவம், என எல்லாரும் எண்ணிப் போற்றுகின்ற சீதையை இங்கே நிருதர் தீவினை என்று குறித்திருப்பது வருவதை ஓர்ந்துகொள்ள வந்தது. வந்துள்ள அவதார மருமம் சிந்தை தெரிய நேர்ந்தது.

இவளுடைய வடிவழகு அரக்கர் குலம் அடியோடு அழிய அமைந்துள்ளமையால் உருவோ! எனப் பரிதாபமாய் மறுகிக் குறித்தான். சீதை பிறந்தாள இலங்கை அழிந்தது என்னும் பழமொழியின் பொருள் விழி தெரிய நின்றது.

இக் குலமகளை விரும்பினல் உன் குலம் நாசம் அடையும் என முடிவினை முடிவாக உரைத்தான்.

காதலித்து வந்துள்ள பொருளில் அவனுக்கு அச்சமும் வெறுப்பும் உண்டாகும்படி இவ்வாறு குறிப்போடு கூறினன்.

உனது மயலையும் செயலையும் நினைந்து நான் அஞ்சுகின்றேன். கொடிய நஞ்சை இனிய அமுதம் என்று தவருக எண்ணி வாரிக் குடிக்கச் சென்றவனைப்போல் நீ இங்கே வந்திருக்கின்ருய். உன் நிலைமை என் நெஞ்சை வருத்துகின்றது.

மதிகேடான செயல் என்று மறுகித் துடிக்கின்ற என்னை அந்த அழிவு கேட்டுக்கு உதவிசெய்ய வேண்டுகின்ருய்! நாசம் என்று நன்கு தெரிந்த நீசத்திற்கு நான் எப்படி இசைவேன்?

நஞ்சு நுகர்வாரை இது நன்று எனலும் நன்ருே?

தன்னை உதவி புரிய வேண்டிய இராவணனை நோக்கி மாரீசன் இவ்வாறு வினவியிருக்கிருன். உருவக வசனங்கள் நுணுகி உணர வுரியன. உண்டவுடனே கொல்லுகின்ற நஞ்சைக்குருடன் ஒருவன் அறியாமையால் குடிக்க நேர்ந்தான்; அப்பொழுது அருகே நின்ற ஓர் அருளாளன், “அப்பா! அது நஞ்சு; அதனைக் குடியாதே!” என்று தடுத்து நிறுத்தியதைப் போல் நான் இங்கே உனக்கு எடுத்து உணர்த்துகின்றேன்; உண்மையை உணராமல் நீ கடுத்து நிற்கின்ருய்.

நஞ்சைக் குடிக்கலாமா? என்ருல் குடி என்று சொல்லிக் கொல்லத் துணிகின்ற பொல்லாத் துணைவன் நான் அல்லன்; அதற்கு மகோதரன் முதலாயினுரைப் பார்த்துக் கொள் என்னும் குறிப்புகள் இதில் தொனித்திருக்கின்றன.

மகா பதி விரதையான சீதையை நீ மருவ விழைவது தீய நஞ்சைப் பருக விரைவது போலாம். உயிருக்கு நாசம் என்று நீ உணராமல் ஆசைமண்டி அலமருதல் நீசமே யாகும். நிலைமை தெரியாமல் புலையில் இழிவது என் நெஞ்சை வருத்துகின்றது.

நீ உயர்ந்த வரபலம் உடையவன் என்றும், சிறந்த வீரன் எனவும் செருக்கி நிற்கின்றாய்! அந்தச் சீதை நாயகனுடைய அற்புத ஆற்றல் அளவிடலரியது. தெய்வப் படைக் கலன்கள் யாவும் அவனது ஏவலைச் செய்ய ஆவலித்து நிற்கின்றன. வீர தேவதையும் அவ் வீர வில்லியை விழைந்து போற்றுகின்றது. வார்த்தைகளால் அவன் வீரத்தை வரைந்து கூற முடியாது.

கார்த்த வீரியனை நீ நேரே நன்கு பார்த்திருக்கின்றாய்; அவனோடு அமராடித் தோல்வியடைந்தாய்; உன்னை எளிதாக வென்று போன அவனைப் பரசுராமன் தனியே சென்று கொன்று தொலைத்தான். அத்தகைய பேராற்றலுடைய பெரியவன் கொடுங்கோபத்துடன் கொதித்து மூண்டு போராட நேர்ந்த போது இராமன் இளமுறுவலுடன் அவனுடைய வில்லைப்பிடுங்கிக்கொண்டு அருள் புரிந்து அவனை வெளியே விட்டான். தலை தப்பியது என்று அம் மழுவாளி தாவிப் போனான். இளம் பருவத்தில் விளையாட்டைப் போல் உல்லாசமாய்ச் செய்த வேலை அது.

அந்த வெற்றி வீரனுடைய நிலைமையை உய்த்துணர வேண்டும்; எவரும் வியக்கத்தக்க அதிசய நிலையினன். அவனோடு பகை கொள்ளுவது எமனோடு எதிர் செல்வது போலாம்.

நான் உனக்கு மாமன் முறையினன்; நீயும் உன் குடியும் என்றும் சுகமா யிருக்க வேண்டும் என்னும் ஆசையினாலேயே இவ்வாறு பாசமுடன் கூறுகின்றேன். கருதிய அத் தீமையை அறவே மறந்துவிடுக; எனது உரையை உறுதியாக நம்புக. உனது நன்மையையே நாடியுள்ளேன். புன்மை வழியில் புகாதே; புகின் பொல்லாக் கேடுகள் எல்லாம் புகுந்து பொன்றி மடிய நேரும்.

இங்ஙனம் இவன் கூறி முடிக்கவே அரக்கர் பதி சீறி எழுந்தான். "நான் சொல்லியது எதுவாயினும் அதனை உடனே செய்ய வேண்டியதே உனது கடமை; மாறு வேறு கூறுவது வீண்; நாடி வந்த என் நிலைமையை உணராமல் பேடித் தனமாய் ஏதேதோ

பிதற்றுகின்றாய்; மேலும் மறுத்தால் என் உடை வாளால் உன் தலையைத் துணித்து எறிந்து நான் கருதியுள்ளதை நானே நேரில் போய் முடித்துக் கொள்ளுவேன்'' என்று கடுத்து நின்றான்.

மாரீசன் அஞ்சி அடங்கினான்; நெஞ்சம் கொதித்து ஆற்றாமையால் பின்னும் அவனை எதிர்நோக்கி இன்னலுடன் பேசினான்.

உன்வயின் உறுதி நோக்கி உண்மையின் உணர்த்தினேன்; மற்று
3268 என்வயின் உறுதி நோக்கி அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்;
நன்மையும் தீமை அன்றோ நாசம் வந்து உற்ற போது
புன்மையின் உற்ற நீராய்! செய்வது புகறி என்றான்.

மனம் கசந்து வயிறு எறிந்து வந்துள்ள வார்த்தைகள் இவை.

இராம பாணத்தால் அடிபட்டுள்ளமையால் அவனை அஞ்சிப் பேசுகின்றாய் என அரக்கர்பதி இகழ்ந்து பழித்தமையால் அதனை இவன் மறுத்துக் குறித்தான். உரைத்தேன் என்னாமல் உணர்த்தினேன் என்றது உணர்வு நலங்களை உறுதியாக அறிவுறுத்தியுள்ளமை அறிய வந்தது.

உனக்கு நன்மையை நாடி உண்மையைச் சொன்னேன்; எனக்கு நேரும் இடையூறுகளை நினைந்து நான் யாதும் அஞ்சவில்லை என்பான் ''அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்'' என்றான். என் நெஞ்சு நிலையை உணராமல் வீணே நீ பழிபடப் பேசி அழிதுயர் புரிகின்றாய் என உளம் உடைந்து கூறியுள்ளான்.

''பல அனுபவங்களிலிருந்து நிலைமைகளைத் தெளிந்து உறுதி நலங்களை உனக்கு உரிமையுடன் உரைத்தேன்; அதனை நீ ஒரு சிறிதும் உணராமல் சினந்து சிறி நினைந்ததையே செய்ய நிமிர்ந்து நிற்கின்றாய். நல்லதைச் சொல்லியது பொல்லாதது ஆயது'' என்க.

நாசம் வந்து உற்றபோது நன்மையும் தீமை அன்றோ?

மாரீசனுடைய உள்ளக் கொதிப்பு இதில் வெளிப்பட்டுள்ளது.

''நீ என்ன செய்வாய்! அழிவுகாலம் நேர்ந்துள்ளது; நல்லது மனதில் ஏறவில்லை'' என மனம் வெறுத்துக் கூறியிருக்கிறான்.

விநாச காலே விபரீத புத்தி என்னும் பழமொழி இதில் வெளியாகி யுள்ளது. அறிவு கேடு அழிவு கேடாகின்றது.

இங்ஙனம் மனம் நொந்த இவன் அவனைநோக்கி "இப்பொழுது உனக்கு நான் என்ன உதவி செய்யவேண்டும்?" என்று வினவினன். இச் சொல்லைக் கேட்டதும் அவன் உள்ளம் உவந்து கொண்டு, "சீதையைக் கவர்ந்து வர அமைந்ததைச் செய்" என்றான்.

சூழ்ச்சி செய்தது.

"கள்ளத்தனமாய்ச் சென்று ஒரு பெண்ணை வஞ்சித்துக் கொள்வது நன்று அன்று; சுத்த வீரனான உனக்கு அது பெரிய இழுக்காம்; நீயே நேரில் போய் இராமனைப் பொருது தொலைத்து அவன் மனைவியை எடுத்து வருவதே மதிப்பாம்; அந்த வீரமாட்சியைவிடுத்து வேறு வழியில் பேடியர் போல் நீ போகலாகாது. அச்சமுள்ள கொச்சை மக்கள் புரிவதை உச்ச வீரனான நீ செய்யலாகாது. வெள்ளியங்கிரியை யாரும் காண அள்ளி எடுத்த நீ ஒரு மெல்லிய மங்கையைக் கள்ளமாய்க் கொள்ள விழைவது எள்ளலேயாம். அல்லலைச் செய்யினும் ஆண்மை குன்றலாகாது; எதைப் பழுது படுத்தினும் வீரத்தைப் பழுது படுத்தலாகாது. தீரமாக நேரே சென்று வீர வேட்டையாடி விழைந்த மங்கையை வெற்றிப் பரிசாகக் கவர்ந்து வருக; வேறு துணை வேண்டற்க" என இவ்வாறு விநயமாக மாரீசன் கூறினன்.

"புறத்தினி உரைப்பது என்னே புரவலன் தேவிதன்னைத்
திறத்துழி யன்றி வஞ்சித்து எய்துதல் சிறுமைத் தாகும்;
அறத்துளது ஒக்குமன்றே அமர்த்தலை வென்று கொண்டுன்
மறத்துறை வளர்த்தி மன்ன என்ன மாரீசன் சொன்னான்."

நேரில் சென்று வீரத் திறலால் சீதையை வவ்வி வருவதே ஆண்மையாம்; அது நீதியும் தருமமுமாய் நிலவி நிற்கும் என இவன் ஓதியுள்ள சாதுரியத்தை இதில் உற்று நோக்குகின்றோம்.

புரவலன் என இராமனை இங்கே குறித்தது சக்கரவர்த்தித் திருமகன் என்னும் பொருள் பொதிந்து வந்தது. புரத்தலில் வல்லவன் புரவலன். உலகத்தைப் பாதுகாக்கும் ஆண்மையாளன் தனது உரிமை மனைவியைக் காவாமல் கைவிடான்.

இங்ஙனம் அரிய வீரனுடைய பாதுகாவலில் உள்ள இனிய தேவியை அவன் கண் எதிரே துணிந்து கவர்ந்து வருதலே உனக்குப் பெரிய வீரமாம். கரந்து நின்று கள்ளம் புரிதல் இழிந்த ஈனத்

தனமாய் எள்ளப்படும்; அந்த ஈனமான இழி வழியை மான வீரனை நீ மறந்தும் கொள்ளக் கூடாது.

அமர்த்தலை வென்று கொண்டு உன் மறத்துறை வளர்த்தி.

போர் புரிந்து நேரே வென்று உன் வீர மேன்மையை விளக்கியருள். சிறந்த பொருள்கள் எல்லாம் உயர்ந்த வீரனுக்கே உரியன; காதலித்த பொருளை அமர் ஆற்றிக் கவர்ந்தால் அந்தப் பராக்கிரமச் செயலை உலகம் உவந்து கொண்டாடும். உன்னுடைய வீரப் பிரதாபத்திற்கு ஒளி செய்த படியாம். அவ் வழியே செல் என இவ்வாறு அவனுக்கு ஒரு வழி கூறினன்.

தன் வழிக்கு வாராமல் தன்னை விட்டு அவன் விரைந்து போகவேண்டி, அறத்து உளது; ஒக்கும் என அத்திறத்தை வியந்து மறத்தைப் புகழ்ந்து மனம் பதியச் சொல்லினன்.

பிறனுடைய மனைவியைக் கவர்ந்து கொள்ளுதல் பெரிய பாவமேயாயினும் அது வீரத்தால் கொள்ளப்படின் உரிய தருமமாய்ப் பெருமை யுறுகின்றது. மற நிலை இன்பம் என நீதி நூல்களும் அதனைப் புகழ்ந்து கூறியுள்ளன என்பான் "அறத்து உளது" என்றான்.

ஒக்கும் என்றது உன்போன்ற சுத்த வீரனுக்கு அதுவே ஒத்ததாம்; உத்தம நிலையமான அதனை இழந்து விட்டு உனக்கு எவ்வழியும் யாதும் ஒவ்வாத வேறு இழிந்த வழியில் இறங்காதே என்பதாம். காதல் மணத்தினும் அரசர்க்கு வீர மணம் சிறந்தது என்னும் வரிசை தெரிய வரைந்து குறித்தான்.

நளன் தமயந்தியைக் காதலித்து உரிமையுடன் மணந்து கொண்ட பொழுது அங்கே குழுமி யிருந்த அரசர்களை நோக்கி மறத்துறை மணத்தைக் குறித்துக் காட்டி நளனைப் போரில் வென்றவன் எவனோ அவனுக்கே தமயந்தி உரியவள் என இந்திரன் கலகம் மூட்டி விட்டான். அவன் கூறியபடியை அடியில் காண்க.

கண்டவர் மனமும் கண்ணும் கவர்ந்திட வனப்பு வாய்ந்த
ஒண்டொடி மாலை வேய்ந்தோற்கு உரியள் என்று எண்ண வேண்டா;
திண்டிறல் நிடதர் கோமான் செருவினில் இரியல் போக
மண்டமர் கடந்த ஒள்வேல் மன்னவற்கு உரியள் என்றான்.

(நைடதம், போர்புரி படலம் 5)

அறநெறியில் மணந்த நளனை வென்ற வீரனுக்கே அம் மங்கை உரியள் என மறநெறி மண முறையை அமரர் கோன் இங்ஙனம் புகலவே அரசரனைவரும் போருக்கு எழுந்தனர். அவ ரெல்லாரையும் ஒருங்கே வென்று அவன் வீர மணத்தனாய் விளங்கி நின்றான். நிடதர் கோமான்=நளன்.

மறையவர் கோலத்தில் மறைந்து வந்த விசயன் துரோப தையைச் சுயம்வரத்தில் மணந்து கொண்டான். கொள்ளவே, "வீரம் உடையவனுக்கே இந்த அரச மங்கை உரியவள்; இந்தப் பார்ப்பானை விடாதீர்கள்" என்று துரியோதனன் அந்த அரச சபையி லிருந்தவரைத் தூண்டி விட்டான்.

பார்ப்பான் வந்து ஒருகோடி அரசைச் சேரப்
    பரிவித்துப் பாஞ்சாலன் பயந்த தெய்வச்
சீர்ப்பாவை தனைவலியால் கொண்டு போகச்
    செயலின்றி இருந்தீர் என் செய்தீர்! என்று
வேர்ப்பாடு நுதல் சிவந்த விழிய னாகி
    விழியிலான் மகன்கழற வெகுண்டு மேன்மேல்
ஆர்ப்பாகக் கொதித்து எழுந்தது உகாந்த காலத்து
    ஆர்க்குமக ராலயம்போல் அரசர் ஈட்டம்.

(பாரதம், திரௌபதி மாலையிட்ட சருக்கம் 59)

இவ்வாறு எழுந்த அரசர் திரளை வென்று பாஞ்சாலியைக் கைக்கொண்டு வீர மணமுடையனாய் விசயன் வெற்றியோடு சென்றான். மகராலயம்=கடல்.

காமத் துறையில் வீரத்துறை அரசர்க்கு உரிமையாய் இங் ஙனம் ஊடுருவியிருத்தலால் அந்த வாசியை எடுத்துக் கூறி அரக் கர் பதியை மாரீசன் சாதுரியமாய் வழி யனுப்ப முயன்றான்.

இதனைக் கேட்டதும் அம் மன்னவன் என்ன சொன்னான்?

"சின்ன மனிதனான அந்த இராமனை வெல்வது எனக்கு ஒரு பொருளா! நான் நேரில் சென்றால் விரைந்து அவனைக் கொன்று விடுவேன்; அவன் இறந்து பட்டால் நான் காதலித் துள்ள அக் கட்டழகி ஆவி பதைத்து அலமந்து துடிப்பள்; அந் தப் பரிதாபத்தை விளைக்கலாகாது; அங்ஙனம் செய்யின் நான் கருதியது விருதாவாய் முடியும். சேர்ந்துள்ள ஈயை விலக்கி

இனிய செந்தேனை எடுப்பது போல் நாயகனைத் தூர அகற்றி அந்த நங்கையைக் கைக்கொள்ள வேண்டும்; இந்த நியாயத்தை நீ உணர்ந்து கொண்டு அதற்கு உரிய உபாயத்தைச் செய்க; வேறு மாயமொழிகளாடி என்னை மயக்காதே; என் நிலைமையை நன்கு உணர்வாய்; உன்னை நாடி வந்துள்ளேன் ; என்னுடைய உள்ளத் துடிப்புகளை ஊன்றி உணர்ந்து யாதும் தாமதியாமல் ஆன உதவியை உடனே புரிக'' என இங்ஙனம் விரைவு படுத்தினான்.

இவ் வுரைகளைக் கேட்டதும் மாரீசன் உள்ளம் கலங்கினான். உணர்வு சோர்ந்தான். செய்த சூழ்ச்சி பலிக்க வில்லையே! என்று சிந்தை கவன்றான். அவன் நினைந்து நொந்த நிலைமையைப்புனைந்து வந்த கவி அடியில் வருவது.

தேவியைத் தீண்டா முன்னம் இவன்தலை சரத்தில் சிந்திப்
போம்வகை புணர்ப்பன் என்று புந்தியால் புகல்கின்றேற்கு
3274 ஆம்வகை ஆயிற்றில்லை; யார்விதி விளைவை ஓர்வார்?
ஏவது செய்வது அல்லால் இலலைவேறு ஒன்றுஎன்று உன்னு; (1)

என்னமா மாயம் யான்மற்று இயற்றுவது? இயம்பு கென்றான்;
பொன்னின்மான் ஆகிப் புக்குப்பொன்னைமால் புணர்த்துகென்ன
3275 அன்னது செய்வேன் என்னு மாரீசன் அமைந்து போனான்;
மின்னும்வேல் அரக்கர் கோனும் வேறொரு நெறியிற் போனான்.

''நீயே நேரில் போய்ச் சீதையைக் கவர்ந்து வருவது நல்லது; அதுவே வீர முறையாம்'' என முன்னம மாரீசன் சொன்னது என்ன கருத்தோடு என்பது இங்கே நன்கு தெளிவாயது.

தான் சூழ்ச்சியாகக் கருதி மொழிந்தது தன் அளவில் மறைந்து போகாமல் அதனை உலகம் அறிய அவன் வாயினாலேயே கவி வெளிப் படுத்தி யிருக்கும் வித்தகம் விநயமிக வுடையது.

சீதையை அணுகு முன்னரே இராம பாணத்தால் இராவணன் தலைகள் தரையில் உருண்டு விழும்; சனியன் தொலைந்தது என அவன் கருதியுள்ளமை ''தேவியைத் தீண்டா முன்னம் இவன் தலை சரத்தில் சிந்திப்போம்'' என்றமையால் வெளியாயது.

இராமனது பேராற்றலையும் போர் வீரத்தையும் திவ்விய மகிமையையும் இவன் செவ்வையாகத் தெளிந்துள்ளமையை இதனால் அறிந்து கொள்ளுகின்றோம். அனுபவ உணர்வால் துணிவு வலியாயது. தனக்கு அபாயம் நீங்க இந்த உபாயம் சூழ்ந்தான்.

சூழ்ச்சி உள்ளம் யாரிடமும் அஞ்சாமல் தன் தொழிலைச் செய்யும் என்னும் இயற்கை நிலையும் ஈண்டு வெளிப்பட்டது.

இங்ஙனம் சூழ்ந்து சொல்லியும் அச் சூழ்ச்சி பலிக்காது போனமையால் இவன் சோர்ந்து மறுகினான். "ஆம்வகை ஆயிற்று இல்லை" என்றது ஆகும் என்று தான் எதிர்பார்த்தது ஆகாமல் போனமையை நினைந்து.

விதி விளைவை ஓர்வார் யார்?

ஊழ் வினையே உருத்து வந்து வேலை செய்கின்றது என உள்ளம் குலைந்து சொல்லி இங்ஙனம் தளர்ந்து நொந்திருக்கின்றான்.

விதி நிலையை யாராலும் அறிய முடியாது; அதன் வலியை எவரும் மீறி யாதும் செய்ய இயலாது என்று மறுகித் தேறியிருத்தலால் ஓர்வார் யார்? என ஆறுதலாக எண்ணினான்.

யாருடைய விதி விளைவு ஈண்டு நீண்டு போராட மூண்டது? பொதுவாகக் குறித்திருத்தலால் எல்லாருக்கும் பிடித்தது.

இராவணன் குடியோடு அழிய, மாரீசன் சாக, சீதை கணவனைப் பிரிந்து சிறையிலிருந்து வருந்த, இராமன் மனைவியை இழந்து துயரம் அடைய, அரக்கர் குலம் மடிய ஆக இவ்வாறு பல கேடுகள் விளைய விதி விளைவு இங்கே துதி கொண்டு நின்றது. இந்த விதி மாரீசனை முந்துறப் பிடர் பிடித்து உந்தியது.

## மாரீசன் மான் ஆய் வந்தது.

விதியை நொந்து மதியழிந்து மறுகி உளைந்து இறுதியில் எழுந்த இவன் இராவணன் ஏவியபடியே பொன் மயமான அழகிய ஒரு மான் வடிவம் கொண்டு பஞ்சவடியை நோக்கி வந்தான்.

வரும் போதே நெஞ்சம் நிலை குலைந்து அஞ்சி அலமந்தான்.

வெஞ்சுற்றம் நினைந்துகும்; வீரரை வேறு
அஞ்சுற்று மறுக்குறும்; ஆழ்குழி நீர் 3277
நஞ்சுற்றுறு மீனின் நடுக்குறுமால்
நெஞ்சுற்றதொர் பெற்றி நினைப்பரிதால். (1)

அக்காலமும் வேள்வியின் அன்று இவனோடு
எக்காலும் நலிந்துமஓர் ஈறு பெறான்; 3278
முக்காலின் முடிந்திடு வான் முயல்வான்
புக்கான் அவ் இராகவன் வைகுபுனம். (2)

தன்மானம் இலாத தயங்கொளி சால்
மின்வானமும் மண்ணும் விளங்குவதோர்
3279 பொன்மான் உருவங்கொடு போயினனல்
நன்மான் அனையாள் தனை நாடுறுவான் (3)

கலைமான் முதலாயின கண்ட எலாம்
அலை மானுறும் ஆசையின் வந்தனவால்
3280 நிலையாமன வஞ்சனை நேயம் இலா
விலைமாதர்கண் யாரும் விழுந்தெனவே. (4)

(மாரீசன் வதைப்படலம், 211-214)

மாரீசன் மாயமானய் உருவங்கொண்டு கருமம் புரிய வரும் பொழுது அவன் உள்ளம் பட்டபாடுகள் உரைகளில் துள்ளி மிளிர்கின்றன. இதயத் துடிப்புகளால் அவனுடைய இயல்புகள் தெரிகின்றன.

தான் செய்யச் செல்கின்ற வெய்ய காரியத்தின் விளைவை எண்ணுகின்றான்; விளிவை உணர்ந்து உளைகின்றான்; உறவினங்களை நினைந்து உருகுகின்றான்; பரிபவம் உறுகின்றான்; தாம் வாழ்கின்ற நீரில் நஞ்சு கலக்கப்படின் அங்கே உள்ள மீன்கள் எவ்வாறு துடித்துத் துன்புறுமோ அவ்வாறே அவன் நெஞ்சு கலங்கி நிலை குலைந்து நெடுந்துயர் அடைகின்றான்.

நெஞ்சு உற்ற பெற்றி நினைப்பு அரிது என்றதனல் அதனை உரைப்பது எவ்வாற்றானும் முடியாது என்பது உணரலாகும்.

தான் அழிந்து படுவது உறுதி என்று தெளிவாகத் தெரிந்து கொண்டதனல் சாவை நோக்கிப் போகின்றவன் போல் அவனுடைய உள்ளம் வேக நேர்ந்தது.

## முன்பு நிகழ்ந்தது.

தாயை இழந்து, தம்பியை இழந்து வேள்வியில் தப்பிப் பிழைத்தவன்; இராமபாணத்தை அஞ்சி நடுங்கினவன்; மீண்டும் ஒரு முறை நெஞ்சம் துணிந்து இரண்டு மாய அரக்கருடன் தண்டக வனத்துக்கு வந்தான்; இராமனைக் கண்டான்; வஞ்சம் தீர்க்க நினைந்தான். இதுபொழுது தவ வேடம் கொண்டு சாதுவாயுள்ளமையால் முன்பு வேள்வியில் செய்தது போல் யாதும் செய்யான் என்று துணிந்து கூரிய கொம்புகளையுடைய சீரிய ஒரு

மான் வடிவங்கொண்டான்; பராமுகமாயிருப்பதைப் பார்த்து வயிற்றில் பாய்ந்து கொம்பால் கிழித்துப் போய் விடலாம் எனக் கருதி அருகு நெருங்கினன். இராமன் உல்லாசமாய் ஓர் அம்பு தொடுத்தான்; உடன் வந்த இருவரும் செத்து விழுந்தனர். மாரீசன் மாத்திரம் அதி வேகமாய்த் தப்பி ஓடித் தலை மறைந்தான். அது முதல் அவ நிலையை மறந்து இதுவரை தவ நிலையில் இருந்தான். இப்பொழுது அரக்கர் பதியின் பொருட்டு வெறுப்புடன் வெளிவர நேர்ந்தான்.

இருமுறை பிழைத்துப் போனவன் இன்று செத்துப் போக வருகின்றான்; இந்த இறுதி நிலையை அறுதியாக உறுதி செய்தமையால், முக்காலின் முடிந்திடுவான் இராகவன் வைகுபுனம் புக்கான் என்றார். இரண்டு தடவை தப்பி உய்ந்தான்; மூன்றாவது தடவை முடிவாக முடிய வந்தான் என முடிவை முன்னுற வுணர்த்தினர்.

வஞ்சம் புரிய வந்த அவன் கொண்ட மான் வடிவம் யாரும் என்றும் கண்டறியாத அதிசய அழகுடையதாய் விதியும் வியந்து நோக்க நின்றது. அதனை இடையே கண்ட மிருகங்கள் எல்லாம் பேராவலோடு திரண்டு சூழ்ந்தன.

நிலையா மன வஞ்சனை நேயம் இலா
விலைமாதர்கண் யாரும் விழுந்தெனவே.

கலைமான் முதலியன யாவும் அம் மாய மானை நோக்கி ஆசை மீதூர்ந்து தொடர்ந்தமைக்கு இவ் வுவமை வந்தது.

வேசியரது மேனி மினுக்கில் மயங்கி ஆசை மயக்கில் ஆழ்பவர் அல்லல் பல அடைவர்; அவ்வாறே அப் பொன் மானை விரும்பினவர் இன்னல் பல எய்துவர் என்னும் உண்மையை உவமானம் உய்த்துணரச் செய்தது.

தம் தேக போகத்தைப் பொருள் கொடுப்பவர் எவர்க்கும் வரையாது விற்பவர் என்பது விலை மாதர் என்னும் பேரால் விளங்கி நின்றது. புலை புரிய வரும் கலைமானைக் காண வந்தது.

நிலையாமனம், வஞ்சனை, நேயம் இன்மை என்னும் இவை விலைமாதருடைய இயல்புகள் என்றமையால் அவரது புலையாடலும், புன்மையும், பொல்லாமையும் புலன் கொள்ளலாகும்.

எல்லாரையும் மயக்கி மையலுறுத்தும் அவரது வல்லமையை யாரும் என்னும் சொல்லால் துலக்கினர். எத்தகைய வீரரும், வித்தக மேதைகளும் பித்தேறி விழும் பிழை தெளிய வந்தது.

கரிய நீலஒண் கட்பொது மாதரைக் கண்ணுற்று
அரிய மாதவ வேடம்விட் டணைந்தவர் அநேகர்;
உரிய மாநிதி அனைத்தும் ஈந்து இரப்பதற்கு உன்னிப்
பரியு மாதவ வேடமுற்று அகன்றவர் பலரே.

(சோளத்திப் புராணம்)

சிறந்த தவசிகளும், உயர்ந்த செல்வரும் விலைமாதர் வசமாய் விழுந்து தம் நிலை திரிந்து போனமையை இதனால் உணர்ந்து கொள்ளுகின்றோம். தவ வேடம் பறித்தும், அவ் வேடம் கொடுத்தும் ஆடவரை அலைய விடும் நிலையை இங்ஙனம் அழகாக விளக்கியுள்ளார். பொருள் கவர்ந்து மருள் புரியும் புலைநிலை புலனாயது.

விலை மாதரைக் குறித்து இந் நாட்டுக் கவிகள் பாடியுள்ள பாடல்கள் ஒரு தொகை நூலாய் வரும்படி அவ்வளவு பெரிதாய் விரிந்திருக்கின்றன. அவரது இயல்புகளையும் செயல்களையும் நம் கவி பலவகை நிலைகளிலும் சுவையாக விளக்கி வருகிறார்.

அவருடைய உள்ளம் தெரியாமல் உருவ அழகில் மயங்கி உணர்விழந்து போனவர் பலவும் இழந்து படுதுயர் அடைவது போல், அம் மாயமானை விழைந்து தூய குலமக்கள் தீய துன்பங்கள் அடைய நேர்ந்துள்ளமையை முன்னதாக ஓர்ந்து கொள்ள இன்னவாறு நன்னயமுடன் உரைத்தார்.

சீதை மானைக் கண்டது.

வஞ்சமான அம் மான் நெஞ்சம் துணிந்து பஞ்சவடி தீரத்துள் புகுந்தது. அப் பொழுது சீதை தனியே ஒரு இனிய பூஞ் சோலையில் மலர்ந்த பூக்களைப் பறித்துக்கொண்டிருந்தாள். அந்தப் பூம் பொழில் அருகே வந்து மருண்ட பார்வையோடு அது வெருண்டு நின்றது. அதனைக் கண்டதும் வியந்து நோக்கினாள். மலர் கொய்வதை மறந்து விட்டு அம் மானின் உருவ நிலையையும், எழில் அமைதியையும் விழி இமையாமல் உவந்து பார்த்து, உடனே தன் நாயகனிடம் வந்து தான் கண்ட அதிசய மானின் அழகு நிலையைப் புகழ்ந்து கூறி அதனைப் பிடித்துக்கொடுக்கும்படி வேண்டினாள். சாலகி விழைந்து வேண்டியது வினைவிளைவாயது.

ஆணிப் பொனின் ஆகியது; ஆய் கதிரால்
சேணிற் சுடர்கின்றது; திண் செவி கால் 3285
மாணிக்க மயத்து ஒரு மான் உளதால்
காணத்தகும் என்றனள் கைதொழுவாள்.

இங்ஙனம் சொல்லவே இராமன் விரைந்து எழுந்தான். தம்பி இலக்குவன் தடுத்தான். அடுத்து இது உரைத்தான.

“உடல் பொன் நிறம் ஆனது; கால்களும் செவிகளும் வாலும் மாணிக்க மணி போல்வன; எழில் ஒளி விழி கவர்ந்துள்ளது என்றதனால் ஏதோ அது ஒரு வஞ்சமுடையது என்று என் நெஞ்சம் கருதுகின்றது; அதனைக் காணுமல் இருப்பது நல்லது” என இளையவன் அண்ணனிடம் இங்ஙனம் நயந்து சொல்லினான்.

இராமன் அதனை மறுத்துத் தன் கருத்தை உரைத்தான்.

நில்லா உலகின் நிலை நேர்மையினால்
வல்லாரும் உணர்ந்திலர்; மன்னுயிர்தாம் 3289
பல்லாயிர கோடி பரந்துளவால;
இல்லாதன இல்லை இளங்குமரா! (1)

என்என்று நினைத்தது இழைத்துள நம்
கன்னங்களின் வேறுள காணுதுமால்; 3290
பொன்னின் ஒளி மேனி பொருந்திய ஏழ்
அன்னங்கள் பிறந்தது அறிந்திலையோ? (2)

“இந் நிலவுலகில் அளவிடலரிய சீவகோடிகள் பரவி உள்ளன. பிரம சிருட்டிகளின் அற்புத நிலைகளை யாரும் யாதும் வரம்புகண்டிலர்; எவராலும் எல்லை காண முடியாத பிராணி வருக்கங்களுள் எவ்வளவோ விசித்திர உருவங்கள் தோன்றி நிற்கின்றன. பொன் மேனியுடையனவாய் ஏழு அன்னங்கள் முன்னம் பிறந்துள்ளன என்பதை நூல்களில் நீ அறிந்தது இல்லையா? அவ்வாறே இம்மானும் பொன் மயமாகத் தோன்றி யிருக்கலாம். உலகத் தோற்றத்தில் அதிசய உருவங்கள் எத்தனையோ மறைந்திருக்கின்றன. காணுததைப் புதுமையாகக் கண்ட பொழுது மனிதர் அதனை அதிசயமாக வியந்து சொல்லுகின்றனர். சிலநாள் பழகிவிடின் இயல்பாக எண்ணி விடுகின்றனர். எண்ணங்கள் நிலைகளைப் பொறுத்துள்ளன. காண நேர்ந்தன கருத வருகின்றன. வஞ்சமுடையது என்று நெஞ்சம் துணிந்து எதையும் நாம் இகழ்ந்து விடலாகாது” என இராமன் இங்ஙனம் தம்பியிடம் கூறினான்.

நம் கன்னங்களின் வேறுள காணுதும் என்றது நம்முடைய காதுகளில் எவ்வளவோ வேறுபாடான பொருள்களையும் மாறுபாடான உருவங்களையும் கேட்டு வருகின்றோம்; இன்னமும் எவ்வளவோ கேட்க நேரும் என்றவாறு. கன்னம்=செவி.

பொன்னின் ஒளி மேனி பொருந்திய ஏழ்
அன்னங்கள் பிறந்தது அறிந்திலையோ?

என்றது முன்னம் நிகழ்ந்த புராண சரிதத்தைக் குறித்து வந்தது.

பதுமம், அரவிந்தாக்கம், சீரம், சுலோசனம், குருபிந்து, சுபிந்து, ஏமம் என்னும் நாமங்களுடையனவாய் ஏழு அன்னங்கள் மானச மடுவில் பொன்னிறமாய்த் தோன்றியிருந்தன. அன்னவை இன்னவாறு இங்கே குறிக்க நேர்ந்தன.

நளனுக்குத் தூதாய் நின்று தமயந்தியை மணம் புரிவித்த அன்னமும் பொன்னிறமுடையது; பேசும் ஆற்றல் வாய்ந்தது. "இந் நிறம் உனக்கு எவ்வாறு அமைந்தது?" என்று அக் குலமகள் வினவிய பொழுது அது சொன்ன பதில் அயல் வருவது.

மலர்மேல் அயன் மானத வாவியினுள்
பொலன் மெல்லிதழ் பூத்த செழுங்கமலம்
நலனார் வளையம் பலநாளும் அயின்று
உலவா தொளிர் பொன்னிறம் உற்றனமால்.

(நைடதம்)

இன்ன வண்ணமான தெய்வீகப் பிறவிகளுள் இம் மானும் ஒன்றாக இருக்கலாம் என்று கருதி இராமன் இலக்குவனுக்கு ஆறுதல் கூறினான். நம்பி தம்பியோடு இங்ஙனம் உரையாடுங்கால் நங்கை விரைந்தாள். "நீவிர் இருவீரும் இவ்வாறு வாதாடிக் கொண்டிருந்தால் அது ஓடிப் போய் விடுமே!" என்று சீதை துடித்தாள். நாயகன் மானைப் பார்க்க விரைந்தான். தம்பியும் உள்ளம் வருந்தி உடன் தொடர்ந்தான்.

அனையவள் கருத்தை உன்னா அஞ்சனக் குன்றம் அன்னான்
3292 புனையிழை காட்ட தென்று போயினான்; பொருத சிந்தைக்
கனைகழல் தம்பி பின்பு சென்றனன்; கடக்க ஒண்ணா
வினைஎன வந்து நின்ற மான்எதிர் விழித்த தன்றே. (1)

நோக்கிய மானை நோக்கி நுதியிழை மதியின் ஒன்றும்
தூக்கிலன்; நன்று இது என்றான்; அதன் பொருள் சொல்லலாகும்
சேக்கையின் அரவு நீங்கிப் பிறந்தது தேவர் செய்த 3293
பாக்கியம் உடைமை அன்றோ அன்னது பழுது போமோ? (2)

என்ஒக்கும் என்ன லாகும் இளையவ இதனை நோக்காய்
தன்ஒக்கும் உவமை அல்லால் தனைஒக்கும் உவமை உண்டோ? 3294
பல்நக்க தரளம் ஒக்கும்; பசும் புல்மேல் படரும் மென்னா
மின்ஒக்கும்; செம்பொன் மேனி; வெள்ளியின் விளங்கும் புள்ளி.

வரிசிலை மறைவ லோனே! மானிதன் வடிவை உற்ற
அரிவையர் மைந்தர் யாரே ஆதரம் கூர்கி லாதார்; 3295
உருகிய மனத்த வாகி ஊர்வன பறப்ப யாவும்
விரிசுடர் விளக்கம் கண்ட விட்டில்போல் வீழ்வ காணாய்! (4)

(மாரீசன் வதைப் படலம், 226-229)

இராமன் மானைப் பார்த்ததும், வியந்து மகிழ்ந்ததும், விழைந்து கொண்டதும், அதனைக்குறித்துத் தம்பியிடம் புகழ்ந்து சொன்னதும் இங்கே பொருள் பொதிந்து பொலிந்து நிற்கின்றன.

மூவரும் ஒருமுகமாய் மாயமானைக் காணவே அது இவரை இனிது எதிர்நோக்கிக் கனிவுடன் நின்றது. யார் தன்னைப் பார்க்க வேண்டும் என்று ஆர்த்தியோடு வந்ததோ அவரை முதலில் பார்க்கச் செய்து, அவர் மூலமாத் தன் காட்சியைப் பெருக்கிக் காரிய சித்தியை விளைத்துக் கொண்டது. ஆதலால் மிக்க விழிப்புடன் நின்று அது களிப்போடு பார்த்தது. அங்ஙனம் பார்த்த மானைக் கவி நம் பார்வைக்குக் கொண்டு வருகிறார்.

கடக்க ஒண்ணா வினைஎன வந்து நின்ற மான் எதிர் விழித்தது.

மேல் விளைய நேர்ந்துள்ள துன்ப நிலைகளை நன்கு உணர்ந்து கொள்ளும்படி இந்த வாக்கியம் இங்ஙனம் ஊக்கி வந்தது.

ஊழ்வினையை யாராலும் கடக்க முடியாது; அதன் பயனை எவரும் அனுபவித்தே தீர வேண்டும் என்பது நியமம் ஆதலால் அந் நிலையில் வந்துள்ள மானுக்கு அது உவமையாயது.

தனது அருமை மனைவியைப் பிரிந்து இராமன் வருந்தவும், அந்த உரிமை நாயகனை அகன்று சீதை அல்லல் அடையவும் பொல்லாத விதி இதுபொழுது ஈண்டு மூண்டு உள்ளமையைச் சொல்லாமல் சொல்லினர். வந்துள்ளது சிந்தை தெளிய வந்தது.

கடக்க ஒண்ணுமை மானையும் அடக்கி நின்றது.

இந்த இனிய துணைகளைப் பிரித்துக் கொடிய துன்பங்களைச் செய்ய வந்துள்ள மாரீசனும் இங்கே சாக நேர்ந்திருத்தலால், கடக்க ஒண்ணு வினை வயத்தனுய் அவனும் கட்டுண்டு நிற்கின்றான். வினை புகுந்து வேலை செய்யும் வித்தக நிலை வியப்பு மிக வுடையது. நினைவையும் கடந்து நெடிது நீண்டுள்ளது.

## இராமன் வியந்து நின்றது.

தீவினை கண் விழித்துப் பார்ப்பது போல் தம்மை எதிர் நோக்கி விழித்த அந்த மானை இராமன் மிகவும் ஆர்வத்தோடு உவந்து பார்த்தான். அதன் வஞ்சனையை யாதும் நெஞ்சம் தெரிந்திலன். பொல்லாத அதனை நல்லது என்று எண்ணி வியந்து புகழ்ந்து கொண்டு மகிழ்ந்து நின்றான்.

"நோக்கிய மானை நோக்கி நுதி இழை மதியின் ஒன்றும் தூக்கிலன்" என்றது சீர்தூக்கி ஆராய வேண்டிய இந்தஇடத்தில் யாதும் ஆராயாமல் ஆர்வ மீதூர்ந்து அயர்ந்து நின்றமைக்கு இரங்கியது. தூக்குதல்=உண்மை நிலையை ஊன்றி நோக்குதல்.

பொருளைத் துலாக் கோலால் தூக்கி நிறை அளவு நோக்கல் போல் எதையும் குறையற நோக்கி யாண்டும் உண்மை காணும் உத்தம உணர்வினன் ஈண்டுத் தன்மை திரிந்து தளர்ந்து நின்றான்.

நுதி இழை மதி என்றது இராமனது அதி மேதையை உணர்த்தி நின்றது. நுதியும் இழையும் மதிக்கு அடைகள் ஆயின.

கூரிய நுண்மையும், ஆராயும் ஒண்மையும் சீரிய நிலையில் வாய்ந்துள்ள பேரறிவு யாதும் ஓராமல் அமர்ந்து நின்றது.

இயற்கையான மதி நுட்பத்தோடு கலைகள் பலவும் பயின்று எவரும் நிகரில்லாத தலைமை அறிவாளியாய்த் தழைத்து ஒளிர்கின்ற இக் குலமகன் அப் புலை மிருகத்தின் வஞ்ச நிலைமையை உணராமல் நெஞ்சு உவந்து நின்றது ஊழ்வினையின் விளைவேயாம்.

பேதைப் படுக்கும் இழவூழ் என்ற பொய்யா மொழியின்படி அதி மேதையான இவன் விதிவசமாய் இங்கே மதிமயங்கினுன்.

தீய மாய மானைத் தூயது என நம்பியதோடு மீளாமல் மேலும் அதன் மேல் நேயம் மீதூர்ந்து உள்ளம் உவந்து நின்றான்.

மனைவி தூண்டிக் காட்டினாள்; வினையும் மூண்டு நீட்டியது; ஆகவே நினைவு ஆண்டு நிலைதடுமாற நேர்ந்தது.

தத்துவ ஞானிகளும் வியந்து போற்றத் தக்க வித்தகமேதை இங்கே மெய்ம்மறந்து போனது வியப்பாகின்றது.

இங்ஙனம் மதி மயங்கியது விதி வலியால் என வெளியே தெரியினும், கவி அதன் மூலகாரணத்தை ஞாலம் அறிய விளக்கி யிருக்கும் திறம் சாலவும் வியந்து நோக்கத்தக்கது.

சேக்கையின் அரவு நீங்கிப் பிறந்தது தேவர் செய்த
பாக்கியம் உடைமை அன்றோ? அன்னது பழுது போமோ?

இந்த வாக்கியத்தைக் கருத்தூன்றி நோக்குங்கள்.

நாக சயனத்தில் யோக நித்திரை செய்யும் அந்த உயர் தலைமையை விட்டு இங்கே ஓர் அரச குமாரனாய்த் திருமால் அவதரித்து வந்தது தேவர் செய்த மாதவமேயாம்; விண்ணவர் விழைந்து புரிந்துள்ள அந்த அரிய புண்ணியம் யாதும் பழுது படாமல் பலனுக்கு வந்துள்ளது என ஈண்டு நேர்ந்துள்ள நிலைமைக்கு உரிமையாக இதனை நினைவுறுத்தியிருப்பது உணர்வுநலம் சுரந்து உவகை நிலையமாய் இனிமை மிகுந்துள்ளது.

வஞ்சமானை நல்லது என்று நெஞ்சம் துணிந்து இராமன் மதி மயங்கி நின்றது தேவர் செய்த பாக்கியம் என வந்தது.

மதி மயங்காமல் உண்மையை உணர்ந்திருந்தால் அம் மாய மானின் பின் இத் தூயவன் போகான்; சீதை பிரிந்திராள்; அரக்கர் குலம் அழிந்திராது; அமரர் இடர்கள் ஒழிந்திரா.

நிதி நிறை மதியில் யாதும் தூக்கி நோக்காமல் பேதுற்று நின்றதனாலேதான் தேவர் தீது தீர்ந்து சுகமாக வாழ நேர்ந்தார் ஆதலால் இது அவரது பாக்கியம் எனக் குறிக்க நேர்ந்தது.

விதி மயக்கியது; அதனால் மதி மயங்கியது; அம் மயக்கம் அதிசயமான அரிய பெரிய விளைவுக்கு மூல வித்து ஆயது என உணர்த்தியருளினார். விளைவதை விளக்கிய அழகை நோக்குக.

சிறந்த மதிமான்; மனைவி பேச்சைக் கேட்டு மதி மோசம் போனான் எனச் சாதாரணமாகச் சொல்லவேண்டிய இந்த இடத்

தில் நம் கவி சொல்லி யிருக்கும் அழகையும் ஆழத்தையும் சுவையையும் உவந்து நோக்கி உள்ளம் களிக்கின்றோம். உணர்வு நலங்கள் உவகை பொலிந்து உறுதி சுரந்து ஒளி மிகுந்து வருகின்றன.

மானை இங்ஙனம் நோக்கி மகிழ்ந்தவன் தம்பியிடம் அதன் அழகை வியந்து புகழ்ந்தான். அதனுடைய உருவ அமைதி பேரதிசயமா யிருந்தமையால் ஆராமையோடு பேசினான்.

"இளையவ இதனை நோக்காய்!" என்றது தான் கண்ட இன்பக் காட்சியைத் தன் தம்பியும் கண்டு இன்புற வேண்டும் என்னும் அன்புரிமையை வெளிப்படுத்தி யுள்ளது. இந் நோக்கில் ஈடுபடாமல் அக் கோக்குமரன் வேறு போக்கில் மாறுபட்டு நின்றுள்ளதும் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வந்தது.

அதனுடைய முகம் கண் செவி வால் கொம்பு முதலியன விசித்திரமாய் விளங்கியுள்ளமையை வியந்தான். பசுமை செம்மை வெண்மை கருமை முதலிய பல வகை வண்ணங்களையும் மருவியுள்ளமையால் நவமணிகளையும் உவமை கூறினான்.

"பசும் புல் மேல் படரும் நா மின் ஒக்கும்" என்றதனால் அங்கே படர்ந்திருந்த பசிய புல்லை மேய்வது போல் நாவை நீட்டி அக் கள்ள மான் பாசாங்கு செய்துள்ளமை தெரிய வந்தது.

இந்திர வில்லைப் போல் பலவகை ஒளிகளும் வெளிவீச அதிசாதுரியமாய் அமைதியோடு நின்ற அதன் சவுந்தரியம் கண்டவர் எவரையும் தன் வசப்படுத்திக் கொண்டது.

உருகிய மனத்த வாகி ஊர்வன பறப்ப யாவும்
விரிசுடர் விளக்கம் கண்ட விட்டில் போல் வீழ்வ.

பறவை முதலிய பிராணிகளும் அதன் அழகில் மயங்கி ஆவலோடு சூழ்ந்து மொய்த்தன என்றால் அம் மாயத் தோற்றம் எவ்வளவு மகிமையுடையது! என்பது எளிது தெளிவாம்.

அரிவையர் மைந்தர் யாரே ஆதரம் கூர்கிலர் தார்?

தன் தம்பியிடம் இந் நம்பி கூறிய இந்த ஆசை வாசகம் கொஞ்சம் யோசனையோடு சிந்தனை செய்து வந்துள்ளது.

இந்த அழகிய மானைக் கண்டவர் எவர் தாம் ஆசை கொள்ளாமல் அகன்று போவார்? பெண்கள் ஆண்கள் எவரும் இதனை ஒரு கண் கொள்ளாக் காட்சியாய்க் கண்டு மகிழ்வர் என்று கருதி மொழிந்தான். இவ் வுரையால் உள்ளத்தைக் காண நேர்கின்றோம்.

தன்மனைவியும், தானும் அம்மானை விழைந்து கண்டு வியந்து கொள்வது தவறு அன்று என்பதை இளையவன் இசைந்து கொள்ளும்படி மூத்தவன் இங்ஙனம் உவந்து பேசியுள்ளான்.

தாம் இருவர் செய்வதும் பிழை என இளவல் உளம் மறுகியுள்ளமையை உய்த்துணர்ந்து இவ்வாறு உரைக்க நேர்ந்தது.

அரிவையர் என மைந்தரினும் மாதரை மூந்துறக் குறித்தது மானை முதலில் பார்த்து அதனிடம் இழுத்துக் கொண்டு வந்தவள் சீதையே ஆதலால் அம் மாதரசி மேல் ஏதம் கூருதவாறு ஆதரவமைந்து நின்றது.

தான் செய்யும் காரியம் எதுவாயினும் அதற்குச் சில துணைகளைச் சேர்த்துக் கொண்டு அதனை நல்லது என்று சொல்ல முயல்வது மனிதனது இயல்பு என்பதும் இதனிடையே வெளியாகியுள்ளது. மானிட சுபாவங்கள் அதி விநோதமானவை.

உரைகளிலும் உவமைகளிலும் மதிநலம் சுரந்திருப்பினும் விதி விளைவும் உள்ளே வினையமாய் நுழைந்து நிற்கின்றது.

விளக்கைக் கண்டு வீழும் விட்டில் பூச்சிகள் போல் அம்மானைக் கண்டன யாவும் அதனை விழைந்து சூழ்ந்தன என்னும் இதில் விளைவையும் உணர்ந்து கொள்ளும்படி உரைகள் ஒளி செய்துள்ளன. உவமானம் உறுதியான பொருள் நிலையை ஊன்றி நோக்கச் செய்கின்றது.

விளக்கின் ஒளியை இனிது என்று பாய்ந்து வீழ்ந்த விட்டில் பட்டு மாய்வது போல் அம் மானை நல்லது என்று நம்பி நயந்தவர் கெட்டு வீழுவர் என்னும் உண்மை உய்த்துணர வந்தது.

பெரியவர் வாயின் இன்னுரை பின்னே வருவதைத் தன்னையறியாமலே முன்னுற நன்னயமாக உணர்த்தி விடுகின்றது.

மானின் அழகை இங்ஙனம் இராமன் வியந்து கூறவே இலக்குவன் மனம் வருந்தியிருந்தாலும் யாதும் மறுத்துக் கூருமல் பொறுத்து நின்ருன். இறுதியில் தன் கருத்தைக் குறிப்பாக உரைத்தான்.

## இலக்குவன் விலக்கியது.

அது வஞ்ச மான் என்று தன் நெஞ்சில் எப்படியோ உறுதியாக இளவல் தெரிந்து கொண்டான். கொண்டாலும் அண்ணன்

புகழ்ந்து பேசுவதால் அதனை இகழ்ந்து யாதும் எதிர் பேசாமல் கேட்டு நின்றான். முதிர்ந்த பாசம் உடையவன் ஆதலால் மூனுவதை நோக்கி மறுகி மீளவும் நளினமாக மொழியலானான். "அது பொன் மயமானது; அதிசய அழகுடையது; அதனைக் கண் குளிரப் பார்த்தாயிற்று; இனிமேல் ஈண்டு நிற்பது ஏன்? மீண்டு போவோம்; வாருங்கள்" என்று இளையவன் பணிவுடன் வேண்டினான். அந்த மாய மானிடம் விழைவு நீளாமல் விரைந்து மீளும்படி பரிவு மீதூர்ந்து உறுதி கூறி உரிமை புரிந்தான்.

அதி வினயமாகத் தம்பி இங்ஙனம் கூறவே சானகி நாயகனை நயந்து நோக்கி "நாதா! அம்மானை எனக்குப் பிடித்துக்கொடுங்கள்; வனவாச காலத்தில் அதனோடு உல்லாசமாக விளையாடிப்பொழுது போக்கலாம்; திரும்பி ஊருக்குப் போகும் பொதும் உடன் கொண்டு போய் அங்கே தங்கைமாரிடம் காட்டி மகிழலாம்; அதிசயமான இதனைக் கண்டால் எல்லாரும் உவந்து கொள்ளுவார்; விரைந்து பற்றித் தாருங்கள்" என்று கொஞ்சிய மொழியில் கெஞ்சி மொழிந்தாள்.

"இதோ பிடித்துத் தருகின்றேன்" என்று இராமன் எடுத்து அடி வைத்தான்; அடுத்து நின்ற தம்பி கடுத்துத் தடுத்து, "ஐயனே! அது வெய்யது; அதன் மேல் ஆசைகொண்டு போவது அவமாம்" எனப் பாசம் கொண்டு பரிந்து மொழிந்தான்.

அண்ணன் இளையவனை அமைதியோடு நோக்கி, "தம்பி! ஏன் இவ்வாறு ஐயப்படுகின்றாய்? உன் அண்ணி ஆவலோடு விரும்புகின்றாள்; இனிய பொழுது போக்குக்கு இதமாயிருக்கும்; இந்த அழகிய மானைப் பிடித்துக் கொடுப்பது நல்லது; இதனால் என்ன பிழை நேரும் என்று நீ இன்னல் உறுகின்றாய்?" என இன்னவாறு இனிது வினவினான்.

வினவவே தனது மனதில் கருதியுள்ளதை ஒளியாமல் வெளியே அவன் தெளிவாக உரைத்தான்.

வெய்யவல் அரக்கர் வஞ்சம் விரும்பினார் வினையில் செய்த
கைதவ மான்என்று அண்ணல் காணுதி! கடையின் என்றான்.

இலக்குவனுடைய உள்ளத் தெளிவையும் உறுதி நிலையையும் உணர்வு நலனையும் இவ் வுரையில் இனிது காண்கின்றோம்.

"கொடிய அரக்கர் செய்து விடுத்த சூழ்ச்சி இது; உலக சிருட்டியில் உள்ள இயல்பான மான் அன்று; தீய வஞ்சமுடைய மாய மான். இதனை விரும்பவே கூடாது" என்று துணிந்து மறுத்து வணங்கி நின்றான். கைதவம் = வஞ்சனை, சூது, கபடம்.

தம்பி இவ்வாறு தடைசெய்தும் அண்ணன் அமர்ந்து நிற்க வில்லை; அதற்கு ஆனபதிலை விரைந்து சொன்னான்; அத் தூயவன் நேயமுடன் வாய் திறந்து சொன்னது என்ன?

மாயமேல் மடிவாம் அன்றே வாளியின் மடிந்த போது 3299
காய்சினத் தவரைக் கொன்று கடன்கழித் தோமும் ஆதும்;
தூயதேல் பற்றிக் கோடும்; சொல்லிய இரண்டின் ஒன்றும்
தீயதே? உரைத்தி என்றான் தேவரை இடுக்கண் தீர்ப்பான்.

தனக்கு இதம் உரைத்த இளையவனை நோக்கி மூத்தவன் இங்ஙனம் எதிர் மொழி தந்து எழுவதை விழைந்தான்.

"தம்பி! நீ சொல்லியபடி இது மாயமானாயிருந்தால் ஒரே அம்பால் கொன்றுதொலைப்பேன்; அங்ஙனம் அழித்து ஒழித்தால் அரக்கரை வேரறுப்பதாக முனிவரிடம் முன்னம் கூறிய கடனில் ஒரு சிறிது கழித்தவராவோம்; மாயமின்றித் தூயதாயின் பிடித்துக் கொண்டு வருகின்றேன்; இருவகையிலும் நமக்கு நலமே உள்ளது; இதில் ஏன் நீ கவலையுறுகின்றாய்?" என்று உறுதி யுரையாடினான்.

தேவரை இடுக்கண் தீர்ப்பான் என இராமனுக்கு இப்படி ஒரு பெயரை இங்கே கொடுத்திருக்கிறார்.

அமரருடைய இடுக்கண் தீர்க்க வந்தவன் ஆதலால் அதன் பொருட்டுத் தனக்கு நேரவுள்ள இடுக்கணைத் தானாகவே உவந்து மேற்கொள்ள நேர்ந்தான்.

உலகம் நலமுற உதித்தவன் ஆதலின் தன்னலங் கருதாமல் தன்னையும் மறந்து தியாகத் தீயில் தாவத் துணிந்தான்.

தம்பி தடைக்கு இங்ஙனம் விடை கூறி விரையவே, மீண்டும் அவன் இந்த ஆண்டகையை இடைமறித்து இட நிலைகளின் வலிகளை எடுத்துச் சொன்னான். பின்னவன் சொன்னது என்ன?

பின் நின்றார் இனையர் என்றும் உணர்கிலம்; பிடித்த மாயம்
3300 என் என்றும் தெளிதல் தேற்றாம்; யாவது ஈது என்றும ஓராம்;
முன்னின்றார் முறையில் நின்றார் முனிந்துள வேட்டம் முற்றல்
பொன்னின்ற வயிரத் தோளாய்! புகழுடைத்தாமன்றுஎன்றான்.

அண்ணன் எதிரே நின்று தம்பி மறுகி வாதாடி வருகின்ற உரைகளையும் முறைகளையும் நாம் ஊன்றிஉணர்ந்து வருகின்றோம். உணர்வும் அன்பும் உருக்கமும் மறுக்கமும் பிணைந்து பிணங்கிப் பெருகி வருகின்றன.

ஒரு மதி மந்திரியினுடைய ஆலோசனை முறைகள் உரைகளில் ஒளி வீசி யுள்ளன. "விசித்திரமாய் வந்து நிற்கின்ற இந்த மானில் ஏதோ ஒரு சூது இருக்கின்றது; இது தானாக வரவில்லை; பிறருடைய ஏவலால் எய்தியுள்ளது; இதனை முன்னே ஏவிவிட்டு பின்னே ஆயத்தமாய் நிறபவர் என்ன செய்ய வேண்டும் என்று எண்ணியுள்ளனரோ? அவர் எவ்வளவு பேரோ? யாதும் தெரிய வில்லை; தீதான மாயச் சூதில் ஏதும் ஆராயாமல் துணிந்து இறங்குவது தகாது; வேட்டை விருப்பம் அரசர்க்கு இயல்பு ஆயினும் இது பொழுது நமக்கு அது வேண்டா; அயலிடம்; கொடியவர் பலர் கூடியுலாவும் நிலையினை யுடையது; எல்லா நிலைமைகளையும் நன்கு உணர்ந்து யாண்டும் செல்லாமல் ஈண்டே நின்றருள வேண்டும்; இதுவே நல்லது; சின்னவன் சொல்வதைத் திருவுளம் கொள வேண்டும்" என உழுவலன்புடன் தொழுது வேண்டினான்.

இந்த வேண்டுகோளையும் அந்த ஆண்டகை மறுத்தான்.

பகையுடை அரக்கர் என்றும், பலர் என்றும் பயிலு மாயம்
மிகையுடைத் தென்றும் பூண்ட விரதத்தை விடுதும் என்றல்
3301 நகையுடைத் தாகும் அன்றே ஆதலின் நன்றீது என்னாத்
தகையுடைத் தமபிக்கு அந்நாட் சதுமுகன் தாதை சொன்னான்.

நமக்கு இடையூறு செய்யவே யாரோ இந்த மானை ஏவியுள்ளனர் எனத் தம்பி சொன்னதிற்குத் தமையன் இங்ஙனம் பதில் உரைத்திருக்கிறான். ஈது கன்று என்றது மானைப் பிடிக்கப் போகும் அப் போக்கினைக் குறித்து நின்றது. அப் போக்கில் தனது விரத பூர்த்தியாகும் என்று ஊக்கியிருக்கிறான்.

இந்த வுரையில் இவனுடைய உள்ளக் கிடக்கையும் ஊக்கப் பாடும் உறுதி நிலையும் வீர வெறியும் தலைதூக்கி நிற்கின்றன.

கொடியவர் செய்த சூழ்ச்சியா யிருக்கலாம் என்று கேட்ட வுடனே அவரைப் பொடி செய்து அடியோடு தொலைக்கின்றேன் என்று இக் குலவீரன் கொதித்துக் கூறினன்.

அசகாய சூரன் ஆதலால் எதிரிகளின் அளவையும் வலியை யும் நிலையையும் யாதும் மதியாமல் அடலாண்மை மீறினன்.

பகையுடை அரக்கர் என்று தம்பி வாயினல் யாதும் சொல்ல வில்லை; அக் குலத்தவரை இந் நம்பி வெறுத்துள்ளமையால் அவரே பகைவர் என வகை செய்து கொண்டான்.

"பகையாளிகள் கொடிய அரக்கர்; படை வலி யுடையவர்; திரளான கூட்டத்தவர் என்று அவரது ஈட்டத்தையும் ஏற்றத் தையும் கருதி மயங்கி நமது உறுதியைக் கைவிடலாமா? அத் தீயவர் வந்து வாய்த்த இடமெல்லாம் கொன்று தீர்ப்பதே நம் குல தருமமாம். என் குறிக்கோளை நீ மறுக்காதே; நான் இம் மானின் மேல் செல்லுகின்றேன்; வருபவர் வரட்டும்; நேர்பவர் எவராயினும் அவரை நான் நேரே பார்க்கின்றேன்" என்று இவ் வீரமகன் வீறுடன் மூண்டான்.

தன் தம்பிக்கு இந்த வார்த்தைகளைச் சொன்ன அண்ணனது உண்மை நிலையை நாம் எண்ணி உணரும்படி சதுமுகன் தாதை என்றார். சதுமுகன் = நான்கு முகங்களையுடைய பிரமா.

எல்லாவற்றையும் படைத்து உலகத்துக் கெல்லாம் தாதை என நிற்பவனுக்கும் தாதையானவன் இவ்வாறு ஓதலானன்.

இவனது ஆதி நிலையும், அவதார வகையும், செயல் இயல் களும், உரை ஒழுக்கங்களும் உணர் வுறுதிகளும் சுவை சுரந்து யாண்டும் உயர் நலங்களை விளைத்து வருகின்றன.

எது வரினும், எவர் நேரினும் மானை நான் கொண்டு வரு வேன் என்று இம் மான வீரன் கூறவே, இளையவன் மாறுவேறு கூருமல் "நானே போகின்றேன்" என்று நயந்து வேண்டினன். அப்பின்னவன் மறுகி மறுகித் தடுத்து உருகி உரையாடி வருவது உள்ளப் பரிவையும் உணர்வு நிலையையும் உணர்த்தி வருகின்றது.

அடுத்தவும் எண்ணிச் செய்தல் அண்ணலே அமைதி அன்றே
விடுத்து இதன்பின் நின்றார்கள் பலர் உளர் எனினும் வில்லால் 3302
தொடுத்தவெம் பகழி தாவித் தொடர்ந்தனென் விரைந்துசென்று
படுக்குவென்; அதுவன்றாயின் பற்றினென் கொணர்வென் என்றான்.

அண்ணனை அயலே விட மனம் இல்லாமல் தானே போகத் துணிந்து இலக்குவன் பேசியுள்ள இதில் அவனது உள்ளமும் உறுதியும் உரிமையும் உலகு அறிய வெளியாயுள்ளன.

செய்யத் துணிந்த காரியம் தீயது; மாயச் சூது உடையது; போகவே கூடாது என்று ஆனவரையும் தடுத்துப் பார்த்தான்; தமையன் அமையாமல் மூண்டு நிற்கும் நிலையை அறிந்ததும் தான் போய் அம் மானைப் பிடித்து வருவதாகத் துணிந்து சொன்னான்.

அதனை வஞ்சமாக ஏவி விட்டு அயலே சூழ்ச்சி செய்து நிற்பவர் எத்துணையோராயினும் அத்தனை பேரையும் தொலைத்து வெற்றி புரிந்து வேட்டைப் பொருளோடு விரைந்து வருவேன் என்றது அவனது வீர பராக்கிரமத்தை விளக்கி நின்றது.

எவ் வகையிலும் அண்ணனை வெளியே விடக் கூடாது என்னும் குறிக்கோளோடுதான் இவ்வண்ணம் கூர்ந்து கூறினான்.

அந்த அன்புருவம் இங்ஙனம் பரிந்து பேசுங்கால் சீதை இடையே விரைந்து பேசி அயலே சினந்து போயது பெருந் துயரமாயது.

ஆயிடை அன்னம் அன்னாள் அமுது உகுத்தனைய செய்ய
3303 வாயிடை மழலை இன்சொற் கிளியினிற் குழறி மாழ்கி
நாயக நீயே பற்றி நல்கலை போலும் என்னாச்
சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சிதறிப் போனாள்.

காவிய ஓவியமாய்க் கனிந்துள்ள இக்காட்சியில் பெண்ணின் இயல்பைக் கண் எதிரே காண்கின்றோம்.

“பிராண நாதா! நீங்களே போய்ப் பிடித்துக் கொடுக்க மாட்டீர்கள் போலும்?” என்று கண்ணீர் சிந்திப் பர்ண சாலையை நோக்கிச் சானகி விரைந்து போயிருக்கிறாள்.

எதற்காக இந்த அழுகை? தனக்கு வேண்டியது மான்; அதனை யார் பிடித்துக் கொடுத்தால் என்ன? தன் நாயகன் கையினாலேயே நேரே போய்க் கொண்டு வர வேண்டும் என்று பிடிவாதம் கொண்டது ஏன்? இந்தச் சாதனையால் விளையவுள்ள வேதனை எவ்வளவு! தன் பதியே போக வேண்டும் என்று வேண்டியது விதியின் சோதனையாய் நீண்டு ஈண்டு மூண்டு நிற்கின்றது.

"அது மாயமான்; அதில் மனதைச் செலுத்தாதீர்கள்; திரும்பிக் குடிசைக்குப் போவோம்" என்று இலக்குவன் அண்ணனிடம் அழுத்திச் சொன்னமையால், அவன் போனால் அதனை வெளியே விரட்டி விட்டு வெறுங்கையோடு வருவன் என்னும் ஒரு சந்தேகம் சீதைக்கு உண்டாயிருக்கும் என்று தெரிகின்றது.

அதனாலேதான் நாயகனை போக வேண்டும் என்று போராட நேர்ந்தாள். தன் கருத்தைச் சொல் அளவில் சொல்லி நில்லாமல் கண்ணீர் விட்டுச் சென்றது பெண்ணீர்மையின் உண்ணீர்மையை விளக்கி நின்றது.

குவளை மலர் போன்ற அழகிய கண்களிலிருந்து நீர்த்துளிகள் முத்துக்களைப் போல் சிதறி விழுந்தன. ஆதலால் குவளை முத்தம் என்றார். அழுகைக் கண்ணீரைக் குறித்துச் சொல்லும் அழகு மொழியைக் கண்டு உளம் மிக மகிழ்கின்றோம்.

அமுது உகுத்து அனைய மழலை இன்சொல் என்றது அதி மாதுரியமான அந்த இனிய வசனங்களின் அமைதி தெரிய வந்தது.

சீதை இங்ஙனம் சினந்து போகவே இராமன் மனம்துடித்து மானின்மேல் விரைந்து போக நேர்ந்தான்.

"தம்பி! சனகியைக் காத்து நில்" என்று சொல்லிக் கொண்டே வில்லுடன் துரிதமாய்ப் போயினான்.

முன்னவன் அங்ஙனம் போகும்போது பின்னவன் பெரிதும் பரிதபித்தான். மறுகி நின்று இறுதியில் அவன் உறுதியாகச் சொன்ன மொழிகள் உள்ளத்தை உருக்குகின்றன.

முன்னமும் மகவாய் வந்த மூவரின் ஒருவன் போனான்
அன்ன மாரீசன் என்றே அயிர்த்தனென்; இதனை ஐய! 3305
இன்னமும் காண்டி வாழி! ஏகென இருகை கூப்பிப்
பொன்அனாள் புக்கசாலை காத்தனன் புறத்து நின்றே.

இலக்குவனுடைய மனப்பண்பையும் மதிநலத்தையும் அடக்கத்தையும் அமைதியையும் இங்கே வியந்து நோக்கி உவந்து நிற்கின்றோம். அன்புரிமை அருந்திறலோடு கலந்து மிளிர்கின்றது.

மானின் மேல் செல்லல் ஆகாது என்று பல காரணங்களை எடுத்துக் கூறி அண்ணனை இடைமறித்து வந்தான். இவன் நில்லாமல் துணிந்து போகவே, தனது மனதில் உறுதியுடன் கருதி

யதைத் தெளிவாக வாய்விட்டு அவன் வெளியே சொன்னான். மகம்=யாகம். அன்ன என்னும் சுட்டு முன்னம் தப்பிப்பிழைத்து விரைந்து தாவிப் போன அந்தச் சின்னம் தெரிய வந்தது.

"முன்னம் முனிவர் வேள்விவாய் வந்து தப்பிப் போன அந்த மாரீசனே இந்த மாயமானாய் வந்திருக்கின்றான் என்று எண்ணுகின்றேன்; இவ் வுண்மையை நீங்கள் பின்னே காண்பீர்கள்; நான் என்ன செய்வேன்? விதி மூண்டு வேலை செய்கின்றது; சுகமே போய் வாருங்கள்" என்று இரண்டு கைகளையும் கூப்பித் தொழுது உழுவலன்புடன் தம்பி உளைந்து நின்றான். அவனது நிலைமையையும் நீர்மையையும் நினைந்து இரங்குகின்றோம்.

வாழி என்றது தமையன் தனியே போகின்றானே! இடையே யாதொரு தீதும் நேராமல் இருக்க வேண்டுமே! எனத் தெய்வ சிந்தனையோடு நெஞ்சம் உருகி வாழ்த்திய படியாய் வந்தது. தீரம் நிறைந்த உறுதி யாளனாயினும் துணைவன் மேல் உள்ள பாசத்தால் மனம் ஊசலாடி மறுகி உலைகின்றான்.

இன்னமும் காண்டி என்றது இப்பொழுது நான் சொன்னதைப் பின்னே கண்ணாரக் கண்டு நேரே நன்கு தெளிவீர்கள் எனத் தனது உறுதியை அறுதியாக வலியுறுத்தினான்.

இவ்வாறு கூறிவிட்டுப் பன்னகசாலை அயலே வந்து வில்லும் கையுமாக அச் செல்லமகன் சீதையைக் காத்து நின்றான். புறத்து நின்றே காத்தனன் என்றது அவனது உள்ளத் தூய்மையையும் உயர் சீலத்தையும் மரபு மரியாதையையும் உணர்த்தி நின்றது.

மானை உடனே பிடித்துத் தரவில்லை என்று சீதை சிணுங்கி அழுது போனதும், அதனைப் பொறுக்க மாட்டாமல் இராமன் மான்மேல் விரைந்து சென்றதும், இலக்குவன் பரிந்து நின்றதும் சிறந்த விசித்திரக் காட்சிகளாய் ஈண்டு விளங்கியுள்ளன.

தாங்கள் விரும்பியதை எப்படியும் பெற வேண்டும் என்று பெண்கள் செய்யும் பிடிவாதமும், அவரது ஆவலைப் பூர்த்தி செய்து அவரை மகிழ்விக்க ஆண்கள் படும் பாடும் சிருட்டியின் அமைப்புகளாய்ச் செறிந்து மருட்சி நிலையில் மலிந்திருக்கின்றன.

இனிய நகை, வினய நடை, சரச மொழிகளை விட விரசி அழுகையே மங்கையரது காரியசித்திக்குப் பெரிதும் உதவி புரிகின்றது. தாம் கருதிய போதெல்லாம் பெண்களுடைய கண்களிலிருந்து நீர் எளிதே பெருகி வருவது அவரது நீர்மையைத் துலக்கி நிலைமையை விளக்கி வருகின்றது.

அரிவையர் அழுவதிலும் சிரிப்பதிலும் அதிசய ஆற்றல் அமைந்திருப்பதை ஆடவருடைய பாடும் பணிவும் காட்டி வருகின்றன. மாய மயக்கங்கள் உலக இயக்களாயுள்ளன.

தன் காதலி விரும்பிய பொருளைக் கணவன் விழைந்து தர விழைவன் என்பதை இராமன் இங்கே உலகறிய விளக்கிக் கலைமானின் பின் போய்க் கரும வினையைத் தொடர்ந்தான்.

## இராமன் மானைப் பிடிக்கப் போனது.

தனது அருமை மனைவி பிரியமாய்க் கேட்டதை உரிமையோடு கொண்டு தர வேண்டும் என்று கருதி தம்பி உரைத்த உணர்வுறுதிகளையும் கேளாமல் அந்த அழகிய மான் அருகே இராமன் சென்றான். அது உல்லாசமாய்த் துள்ளிக் குதித்து மெல்ல அகன்றது. இவ் வில் வீரன் தொடர்ந்தான். அப் பொல்லாத மான் புரிந்து போன சாகசங்களும், இந்த வீரன் அதனை விடாது பின் தொடர்ந்த வித்தக வேகமும் விநோதக் காட்சிகளாய் விளைந்தன.

மந்திரத்து இளையோன் சொன்ன வாய்மொழி மனத்துக் கொள்ளான்
சந்திரற்கு உவமை சான்ற வதனத்தாள் சலத்தை நோக்கிச்
சிந்துரப் பவளச் செவ்வாய் முறுவலன் சிகரச் செவ்விச் 3306
சுந்தரத் தோளினான் அம் மானினைத் தொடரல் உற்றான். (1)

மிதித்தது மெல்ல மெல்ல; வெறித்தது; வெருவி மீதில்
குதித்தது செவியை நீட்டிக் குரபதம் உரத்தைக் கூட்டி; 3307
உதித்தெழும் ஊதை உள்ளம் என்றிவை உருவச் செல்லும்
கதிக்கொரு கல்வி வேறே காட்டியது ஒத்த தன்றே. (2)

நீட்டினான் உலகமூன்றும் நின்றெடுத்து அளந்த பாதம்
மீட்டுநாம் உரைத்தற் கம்மா வேறுமோர் அண்டம் உண்டோ 3308
ஓட்டினான் தொடர்ந்த தன்னை ஒழிவற நிறைந்த தன்மை
காட்டினான் அன்றி அன்று அக் கடுமையார் கணிக்கற் பாலார்?

குன்றிடை இவரும்; மேகக் குழுவிடைக் குதிக்கும்; கூடச்
3309 சென்றிடின் அகலும்; தாழின் நீண்டலாம் தகைமைத் தாகும்;
நின்றதே போல நீங்கும்; நிதிவழி நேயம் நீட்டும்
மன்றலங் கோதை மாதர் மனம் எனப் போயிற்று அம்மா! (4)

காயம்வேறு ஆகிச் செய்யும் கருமம்வேறு ஆகிற்று அன்றே
3310 ஏயுமே என்னின் முன்னம் எண்ணமே இளவற்கு உண்டே
ஆயுமே லுறுதல் செல்லாம் அரக்கரா னவர்கள் செய்த
மாயமே ஆயதே நான் வருந்தியது என்றான் வள்ளல். (5)

(மாரீசன் வதைப் படலம், 240-244)

தன் எதிரே வந்து நின்ற மானை இராமன் பிடிக்கச் சென்றதும், அது துள்ளிக் குதித்து மெள்ள மெள்ள அடி வைத்துக் கொஞ்சி நடந்து வஞ்சித்து இழுத்துப் போனதும், வெகு தூரமாக இவன் விரைந்து தொடர்ந்ததும், அது வேகமாய்நீண்டதும், இவன் வேகித்து மூண்டதும், முடிவில் மாய வஞ்சம் என்று கண்டு இத் தூயவன் நெஞ்சம் கடுத்ததும், நினைந்து நொந்ததும் இங்கே நோக்கி நிற்கின்றோம். கருத்தூன்றிக் காணும் அளவே நிகழ்ச்சியின் காட்சிகள் நேரே தெளிவாகின்றன.

நடந்த கதையை இயற்கை நலம் கனியக் கவி வரைந்து காட்டும் நயம் வியந்து நோக்கத் தக்கது.

"மந்திரத்து இளையோன்" என்றது இது மாயமான்; இதனை நம்பலாகாது எனச் சிறந்த ஆலோசனை கூறிய அந்த மதியூகத்தை நினைந்து. அரசனுக்கு அருகு நின்று அறிவுநலம் கூறும் மதி மந்திரி போல் இராமனுக்கு இலக்குவன் அமைந்திருந்தமை அறிவிக்கப் பட்டது. உணர்வுரையும் உதவாது போயது.

தம்பியின் வாய்மொழியை நம்பி நில்லாமல் மனைவியின் மனக் கவலையை நினைத்து வினைமேல் மூண்டு போனான் ஆதலால் "வதனத்தாள் சலத்தை நோக்கி மானினைத் தொடரல் உற்றான்" என்றார். கொண்டவள்பால் இவன் கொண்டுள்ள ஆசையும் பாசமும் அறிய வந்தன.

தன் அருமைக் காதலியின் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டே இவ் வீரன் இங்ஙனம் பேர நேர்ந்தான். இப் பெயர்ச்சி பல பெயர்ச்சிகளுக்கு ஏதுவாயது.

அம் மான் குதித்துப் போன இயற்கைக்காட்சியைச் சொல் ஓவியம் வியக்கத் தக்க நிலையில் விளக்கிக் காட்டுகின்றது.

தன் காலின் குளம்பு மார்பில் வந்து பொருந்தும்படி அதி வேகமாய் அது தாவிக் குதித்து வாவிப் போனமையால் "குர பதம் உரத்தைக் கூட்டிக் குதித்தது" என்றார். குரம்=குளம்பு. குரபதம்=குளம்பையுடையகால்; விலங்கின் அடியைவிளக்கியது.

ஊதை, உள்ளம் உருவச் செல்லும் என்றது வாயு வேகத் தினும் மனோ வேகத்தினும் அதி வேகமாய்ச் சென்றமை தெரிய வந்தது. ஊதை=காற்று.

கடு வேகத்திற்கு எடுத்துக் காட்டாக நூல்களில் குறிக்கப் பட்ட அவ் வேகங்களும் அதிசயித்து நோக்கும்படி புதிய ஓர் அற்புத வேகத்தை விளக்கிக்காட்டி அம் மாய மான் தாவிப் போயது. ஓட்டம் நாட்டமும் கடந்து நவமாய் நீண்டது.

அதனைப் பிடிக்கச் சென்றவன் எத்தகைய பெரியவன்?

நின்ற இடத்தில் நின்றே மூன்று உலகங்களையும் தன் ஓர் அடியால் அளந்தவன்; இப்பொழுது ஈர் அடிகளையும் கூட்டிக் கதி வேகம் காட்டி ஓடினன் என்றால் அந்த வேகத்தை எந்த விவேகத்தால் யார் அளந்து சொல்ல வல்லார்?

மாயனை இராமனையும் தன் மாயத்தால் மயக்கி அத் தீய மான் கடுவேகமாய் நெடுந்தூரம் கொண்டு போயது.

"குன்றிடை இவரும்; மேகக் குழுவிடைக் குதிக்கும்;" என்றதனால் மண்ணிலும் விண்ணிலும் எண்ணியபடியெல்லாம் எளிதே தாவி அக் கள்ளமான் துள்ளிப் போயுள்ளமை உள்ளம் காணலாகும் அது புரிந்து போன வஞ்சனைகள் கொஞ்சம் அல்ல.

இவன் சிறிது தாழ்ந்து நின்றால், அது கைக்கு எட்டியது போல் அணுகி நிற்கும். இவன் கால் பெயர்ந்தால், அது மேல் பெயர்ந்து ஓடும். அதன் மாய லீலைகள் ஆய அரியன

நின்றதே போல நீங்கும்; நெறிவழி நேயம் நீட்டும்
மன்றலங் கோதை மாதர் மனம் எனப் போயிற்று அம்மா!

அம் மானின் போக்கைச் சொல்லி வந்தவர் இறுதியில் இவ் வாறு ஓர் உவமானத்தையும் காட்டி உணர்த்தினர்.

பொருள் அளவுக்குத் தக்கபடி தம் நேசத்தைப் போலியாக நீட்டிக் காட்டும் விலைமாதர் மனம்போல் அக் கலைமான் போயது என்றது ஒரு நிலையில் நில்லாமல் ஒருவிச் சென்ற அதன் பொல்லாப் புலை நிலைமை தெரிய வந்தது.

அங்ஙனம் கொடிய வனத்தில் நெடிய தூரம் கழிந்து போகவே இராமன் சிறிது சலித்துத் திகைத்தான்.

காயம் வேறுகிச் செய்யும் கருமம் வேறு ஆயிற்று அன்றே! என்று இத் தூயவன் நின்று திகைத்து நிலைமையை நினைந்தான். சிந்தனைகள் பல உந்தி எழுந்தன.

“வடிவத்தைப் பார்த்தால் அழகும் அமைதியும் இனிமையும் பொழிகின்றன; செயலைப் பார்த்தால் கொடுமையும் கடுமையும் வஞ்சமும் நெடி தோங்கி நிற்கின்றன. என்னே இது! உன்னி உணராமல் உற்றது பிழை. இளவல் சொன்னவை யாவும் உண்மையே” என உளம் மிக உளைந்தான்.

இது அரக்கர் செய்த சூழ்ச்சியே; இந்த மாய வஞ்சத்தை அறிந்து கொள்ளாமல் வீணே வருந்த நேர்ந்ததே என்று இரங்கியிருக்கிறான்.

மாயமே ஆயதே நான் வருந்தியது என்றான் வள்ளல். இராமனது மனக்கவலையும் மறுக்கமும் இதில் வெளியாகியுள்ளன.

வேறு பெயர் கூறாது ஈண்டு வள்ளல் என்றது உள்ளி உணர வந்தது. இனிய உயிர் என மருவியுள்ள தனது உரிமை மனைவியைப்பிரிந்து தானும் கொடிய துயரங்களை அனுபவிக்கத் துணிந்து உலகம் நலம் உற உதவ நேர்ந்துள்ளமையால் வள்ளல் என உள்ளம் வியந்து வாழ்த்தினர்.

உண்மையான வண்மையாளன் ஆதலால்தான் எண்ணமேலே ஈகைத் தன்மை வாகைத் திண்மையோடு இசைந்து வருகின்றது.

## மானை எய்தது.

வஞ்சமான் என்று நெஞ்சம் துணிந்து இந்த அஞ்சன வண்ணன் திகைத்து நோக்கவே, அக் குறிப்பை உணர்ந்து மாரீசன் குலை நடுங்கினன். இனிமேல் எதிர் நின்றால் கொன்று விடுவான் என அஞ்சினன். இதுவரையும் துள்ளி ஓடிக் கள்ளம் புரிந்து

வந்தவன் இப்பொழுது அதிவேகமாய் வானில் தாவி மறைய நேர்ந்தான். உயர எழும்பவே இராமன் விரைந்து பகழி தொடுத்தான். அந்தரத்தே மறைந்து போகுமுன் இச் சுந்தரன் விடுத்த கணை உடலை ஊடுருவிப் பறந்து போயது.

அம்பு பட்டவுடனே அவன் அலறி வீழ்ந்தான். எடுத்து வந்த மாய உருவம்மாறி இயற்கை வடிவில் துடித்து உருண்டான். தரையில் விழுந்த அவனை இராமன் விரைவில் போய்ப் பார்த்தான். உண்மை தெரிந்தான். உள்ளம் வியந்தான்; உறுவதை உணர்ந்தான்; விரைந்து மீண்டான்.

நெட்டிலைச் சரம் வஞ்சனை நெஞ்சுறப் 3313
பட்டது; அப்பொழுதே பகு வாயினால்
அட்ட திக்கினும் அப்புறமும் புக
விட்ட மைத்தொரு குன்றென வீழ்ந்தனன். (1)

வெய்யவன் தன் உருவொடு வீழ்தலும்
செய்யது அன்றெனச் செப்பிய தம்பியை 3314
ஐயன் வல்லன்; என் ஆர் உயிர் வல்லனால்;
உய்ய வந்தவன் வல்லன் என்று உன்னினான். (2)

ஆசை நீளத் தரற்றினன் வீழ்ந்த அந்
நீசன் மேனியை நின்றுடன் நோக்கினான் 3315
மாசில் மாதவன் வேள்வியின் மந்த மா
ரீசனே இவன் என்பதும் தேறினான். (3)

உழைத்த வாளி உரம்புகப் புல்லியோன்
இழைத்த மாயையின் என்குரலால் இசைத்து 3316
அழைத்த துண்டது கேட்டயர் வெய்து மால்
மழைக்கண் ஏழை என்று உள்ளம் வருந்தினான். (4)

மாற்றம் இன்னது மாயமா ரீசன்என்று
ஏற்றம் முன்னுணர்ந்தான் எனின் என்னுடை 3317
ஆற்றல் தேரும் அறிவினன் ஆதலால்
தேற்றுமால் இளையோன் எனத் தேறினான். (5)

மாள்வ தேபொரு ளாகவந்தான் அலன்;
சூழ்வ தோர்பொருள் உண்டு இவன் சொல்லினால் 3318
மூள்வது ஏதம் அது முடியா முனம்
மீள்வதே நலன் என்றவன் மீண்டனன். (6)

(மாரீசன் வதைப் படலம், 247-252)

மானின் மீது இராமன் அம்பு தொடுத்ததும், அது மாய்ந்து பட்டதும், கள்ள உருவம் நீங்கி உள்ள வடிவமாய் உருண்டு கிடந்ததும், இவ் வீரன் அதனை அணுகிப் பார்த்ததும், மாரீசன் என்று தெளிந்து மனம் வியந்ததும், தம்பி சொன்ன உண்மையை உணர்ந்து அவனது மதியூகத்தை உவந்து புகழ்ந்ததும், அரக்கன் வீழும் பொழுது தன் குரலால் ஓலமிட்டு விழுந்ததால் அதில் ஏதோ சூதுள்ளது எனத் துணிந்ததும்; அதைக் கேட்டுச் சீதை துடிப்பாளே! என்று துயரடைந்ததும், அறிவுடைத் தம்பி அயல் இருத்தலால் சானகியைத் தேற்றி அருளுவான் என ஆற்றி நின்றதும், ஆயினும் விரைந்து போக வேண்டும் என்று திரும்பி ஓடி வந்ததும் ஆகிய காட்சிகளை ஈண்டுக் கண்டு நிற்கின்றோம்.

இராமபாணம் மாரீசனுடைய மார்பை ஊடுருவிப்போயிருத்தலால் "சரம் வஞ்சனை நெஞ்சுறப்பட்டது" என்றார். தன் நாயகனுக்கு வஞ்சனை சூழ்ந்து வந்த அந்த நெஞ்சைப்பிளந்து எறிந்தது என்றது சரத்தின் வெஞ்சினத்தையும் வேகத்தையும் விளக்கி நின்றது. மந்திரக் கணைகள் சிந்தனைக்கு அமைந்தன.

இராமனுக்குத் துரோகம் எண்ணுவாரது உள்ளத்தையும் உயிரையும் அள்ளிக் குடிக்க அவாவி அவன் பகழிகள் துள்ளித் துடித்து நிற்கும் என்பது தெரிய வந்தது. சரம் = அம்பு.

அம்புபட்டமான் மனிதக்குரலோடு அலறி வீழும்பொழுதே தன் தம்பியை வியந்து இந் நம்பி உருகினன்.

"இதில் வஞ்சனையுள்ளது; இது மாயமான்; மாரீசனே இவ்வாறு வந்திருக்கிறான்; எவ்வாற்றானும இதனை விரும்பக்கூடாது" என முன்னம் இளையவன் சொன்ன உறுதி மொழிகளை நினைந்து நினைந்து உள்ளம் கரைந்தான். "பிள்ளை எவ்வளவு எடுத்துச் சொன்னான்; எத்தனை தெளிவு! எத்துணை மறுகினன்! அத்தனையும் கேளாது வந்தேனே!" என்று சித்தம் நொந்தான்.

ஐயன் வல்லன்; என் ஆருயிர் வல்லன்; உய்ய வந்தவன் வல்லன் எனச் சொல்லியுள்ள இதில் இராமனது உள்ளக் கனிவும் உவப்பும் வியப்பும் உணரலாகும்.

"என் ஆர் உயிர்; நான் உய்ய வந்தவன்" என்று தன் தம்பியை நினைந்து மகிழ்ந்துள்ள நம் நம்பியின் இந்த ஆர்வ மொழிகள்

ஆழ் பொருளுடையன. உணர்ச்சி நிலைகள் முழுவதையும் உரைகளில் எளிதே வெளியிட இயலா. இராமன் நிலையில்நின்று நாமும் சிந்தனை செய்து உருகி உணர வேண்டுமேயன்றிச் சிறிது எழுதி வறிதே சீரழிக்கலாகாது.

திசைகள் செவிடு படும்படி அலறி வீழ்ந்த உருவத்தை நோக்கி வேள்வியில் வந்துபோன அவனை இவன் என்று அறிந்து வியந்தான். மாய நேர்ந்த மாயத்தை ஆய நேர்ந்தான்.

தருமசீலனை இராமனுக்குத் துரோகமாய் நீசச் செயலைச் செய்துள்ளமையால் நீசன் என மாரீசன் ஈண்டு நிட்டூரமாய்த் திட்டப் பட்டான். நல்ல தவ நிலையில் இருந்தவன் பொல்லாதவனால் புலைப்பட நேர்ந்தான்.

மாண்டு கிடந்த அவனது வடிவை நோக்கிய ஆண்டகை அவன் மாய்ந்து வீழும் பொழுது ஓலமிட்டதை நினைந்து சிந்தித்தான். "என் குரலால் இசைத்து அழைத்தது உண்டு" என்றதனால் இராமன் குரலோசையால் அம்மாயா வல்லவன் கூவி விழுந்துள்ளமை அறிய வந்தது. அதே சத்தத்தில் அச்சு வார்த்தது போல் அலறியிருக்கிறான்.

அம்பு பாய்ந்து அவன் கீழே விழும்பொழுது ஆ! சீதா! லட்சுமணா! என்று இராமன் வாயால் சொல்லியது போலவே அபாயக் குரலிட்டு வீழ்ந்தான்.

இந்த வஞ்ச ஓசை சீதை காதில் விழுந்தால் என் சொல் என்றே நம்பி உள்ளம் கலங்கி அழுவாளே! என இவ்வள்ளல் கவன்றான். கவலைகள் பரிவுடன் கதித்து எழுந்தன.

"மழைக் கண் ஏழை அயர்வு எய்தும்" எனத் தனது மனைவியை நினைந்து மனம் வருந்தியுள்ளமை நினைவு கூரவுரியது.

மானை விரைந்து பிடித்துத் தரவில்லையே என்று கண்ணீர் சிந்தி அழுது போன அந்த முகம் இவன் கண் எதிரே கனிந்து தோன்றியுள்ளமையால் மழைக் கண் என உரைக்க நேர்ந்தான்.

ஏழை என்றது சூது வாதுகள் யாதும் தெரியாத பேதை என ஆதரவு மீதூர்ந்து வேதனை தோய்ந்து வந்தது.

மேதையான தன்னையும் வசப்படுத்திப் பேதை வழியில் செலுத்திய பிழை வெளிப்பட்டது. மடம் என்பது பெண்மைக் குணத்துள் ஒன்று ஆதலால் அவ் வுண்மையும் ஒலித்தது.

தன் நாயகி வருந்துவாள் என்று இந் நாயகன் வருந்தினன். உடனே திருந்தினன். "தம்பி அருகு இருக்கிறான்; பின வருவதை முன் அறிந்து சொன்ன மதிமான; என் நிலைமையை நன்கு தெரிந்தவன் ஆதலால் தன் அண்ணிக்கு உண்மையை உணர்த்தி ஆற்றி யருளுவான்" என்று உள்ளம் தேறினன்.

"என்னுடை ஆற்றல் தேரும் அறிவினன் ஆதலால் இளையோன் தேற்றும்" என இவன் தேறியிருககிறான்.

தம்பியின் ஆதரவை நினைந்து இந் நம்பி மிகுந்த ஆறுதல் அடைந்தான் ஆயினும் நிகழ்ந்த சூது வினையை உணர்ந்து மறுகி யாதும் தாமதியாமல் உடனே மீள நேர்ந்தான்.

மாள்வதே பொருளாக வந்தான் அலன்.

மாரீசன் வந்து மாண்டதைக் குறித்து இங்ஙனம் சிந்தித்திருக்கிறான். "அவன் மாயமாகி ஈண்டு மூண்டது ஏதோ ஒரு தீய காரியத்தைக் கருதியேயாம். தப்பாமல் செத்துப் போவோம் என்று தெரிந்திருந்தும் துணிந்து வந்திருக்கிறான்.

பொல்லாத சூழ்ச்சியோடுதான் இப் புலையாட்டத்தை நடத்தி யுள்ளான். உலக வஞ்சனை தெரியாத புனித உயிர்கள் இருக்கும் அந்த இடத்தில் என்ன கேடுகள் நடக்குமோ யாதும் தெரிய வில்லை. இனி அரை நிமிடமும் ஈண்டு நிற்கலாகாது" என்று மீண்டு பன்னசாலையை நோக்கி இந்த ஆண்டகை அதிவேகமாய் விரைந்து வந்தான். சுத்த வீரன் உள்ளம் தத்தளித்துத் துடித்திருக்கிறான்.

எவ்வளவு அல்லல்களும் கவலைகளும் மூண்டு உள்ளன!

அதி மேதை; விதிவசமாய் வெந்துயர் அடைய நேர்ந்தான். வயதிலும் அநுபவத்திலும் சிறியவனான தம்பிக்குத் தெரிந்த உண்மை இந் நம்பிக்குத் தெரியாது போயது வியப்பாகின்றது.

கலைகள் பலவும் கற்றுத் தலைமையான அறிவாளியாயிருந்தாலும் ஊழ்வினை புகுந்தால் எல்லாவற்றையும் மறைத்து அது

மூண்டு முன்னிற்கும் என்று பொதுமறை புகன்ற மதிமறை உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

திண்டோள் இராமனுமேன் தேராமல் மான்பின்போய்க்
கொண்டான் துயரம் குமரேசா!—தண்டாமல்
நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும். (திருக்குறட்குமரேசவெண்பா. 373)

என ஊழின் வலிக்கு இவ் வீரமகன் செயல் நேரிய சான்றாய் நிலவியுள்ளது. மனைவி பேச்சைக்கேட்டு இவன் மான்பின்போனது வினையின் விளைவே என நூலோர் பலரும் விளக்கி யுள்ளனர்.

மைவாள் இலங்குகண் மங்கைநல் லாய்தஞ்சை வாணன்வெற்பில்
இவ்வாளி மொய்ம்பர்இன் று எய்தமெய்ம் மானிள மாந்தளிரின்
செவ்வாளி யுங்கொண்டு சேட்சென்ற தாலன்று சீதைகோன்கன்
கைவாளி யுங்கொண்டு போனமெய்ம் மானினும் கள்ளத்ததே.
(தஞ்சைவாணன் கோவை)

களவு நிலையில் தன்னைக் கலந்து சென்ற தலைவியை மீண்டும் தலைவன் காணவிழைந்தான். அவள் தோழியருடன் கூடியுள்ள பொழிலுள் வந்தான். தான் வேறு காரியமாக அங்கு வந்தது போல் சேடிக்குத் தெரியும்படி "என் வேட்டையில் தப்பிவந்த மான் ஒன்று இங்கு வந்ததா?" என்று விந்தையுடன் வினவினான். அந்தக் குறிப்பை உணர்ந்துகொண்ட தோழி தலைவியைப் பார்த்துப் புன்னகை செய்து உரைத்தபடியிது. "அன்று இராமனை வஞ்சித்துப் போன மாயமானைக்காட்டிலும் இவர் சொல்லுகிற மான் பொல்லாத கள்ளமான்" என நகைச்சுவை பொலிய இங்ஙனம் உரைத்திருக்கிறாள். உரைக் குறிப்பின் நயம் உணர்க.

சீதையை வஞ்சிக்க வந்த மாயமானின் செய்தி இலக்கியங்களில் பல வகையாகப் படிக்கப்படுகின்றது.

தேன்பிடிக்கும் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்—தான்பிடிக்கப்
பொற்புள்ளைப் பற்றித்தா என்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயாள் தொழுது. (நளவெண்பா)

தன் முன் தோன்றிய மாயப் பறவையைப் பிடித்துத் தரும்படி தமயந்தி தன் கணவனாகிய நளனை வேண்டியது, சீதை இராமனை மான் பிடிக்கத் தூண்டியதுபோலாயது என இங்ஙனம் உவமை கூறப்பட்டுள்ளது.

அழகிய பறவைகளிடத்தும், பழகிய மிருகங்களிடத்தும் பெண்களுக்கு இயல்பாகவே பிரியம் உண்டாகின்றது; அவர் விரும்பி வேண்டியதை அவருடைய உரிமைக் கொழுநர் விரைந்து தர விழைந்து வருவது இயற்கை நியமமாயுள்ளது.

காதலிகளிடம் அமைந்துள்ள அதிசய வசியம் காதலரை யாதும் மீறாதபடி ஆட்டிவைக்கின்றது.

மகா வீரனான இராமனும் வினைவயத்தனாய்த் தன் மெய்யுணர்வு மயங்கினமையால் பொய்ம்மானின்பின் போக நேர்ந்தான்.

மாதண்டை வந்துநின்ற மாரீசனை மறந்து
கோதண்ட வீரன் குடிபோனான்—தீதண்டா
மேதையே ஆனாலும் வெய்ய வினைவிளையின்
பேதையே யாவன் பிறழ்ந்து,

என்றபடி விதிவலி வியந்து பேச வந்தது. அவதார மூர்த்தியான இராமனும் மதி மயங்கினமையால் விதியின் வன்மை இங்கே நன்கு விளங்கி நின்றது.

வினைவயத்தனாய்த் தோன்றாமல் தானாகவே அவதரித்துள்ள அதிபதியை விதி மயக்குமோ? எனின், அவன் எந்த நோக்கத்தோடு வந்துள்ளானோ அந்த நோக்கத்தை விதி மூண்டு முடித்து வருகின்றது என்க.

அரக்கர் வருக்கத்தை அழிக்க வந்துள்ளமையால் அந்த அழிவு வேலை வழி தெரியாமல் ஒழுகி வருகின்றது.

அதிமாயாவியான மாரீசன் ஈங்கு எதிர் ஏறி இறந்ததே விதியின் அதிசய விநோதம் என்பதை அறிந்து கொள்ளலாம்.

தீய பழக்கங்களை ஒழித்துத் தனி ஒதுங்கி அமைதியாயிருந்தவன் அரக்கர் தலைவன் தூண்ட அநியாயமாய் வந்து அழிந்துபட்டது பழவினைப் பயனேயாம்.

மாரீசன் சாகும்போது பேசாமல் செத்திருந்தால் யாதொரு பிழையும் நேர்ந்திராது. இராமன் அபாய நிலையில் கூவியதுபோல் அவன் உபாயமாய் ஓலம் இட்டு வீழ்ந்ததுதான் பல கேடுகளுக்கும் நிலையான ஏதுவாயது.

விதிமூண்டு நீண்டுவரும் வித்தக நிலை வியந்து நோக்கத்தக்கது. மேல் விளைந்த விளைவுகளை இனி விழைந்து காண்போம்.

## சீதை வருந்தித் துடித்தது.

மானைத் தொடர்ந்து போன தன் நாயகன் நீண்டநேரம் வாராமையால் சானகி நெஞ்சம் கவன்று நெறியையே நோக்கிப் பொறிகலங்கி யிருந்தாள். இராமன் சென்ற திசையிலேயே கண்ணும் எண்ணமும் கடுகி ஓட ஆவலித்து அலமந்திருந்தவள். காதில் ஓர் அபாய ஒலிவந்து விழுந்தது. ஆ! என்று அலறித் தன் பெயரையும், தம்பியையும கூவி அழைத்து இராமன் ஆவி துடித்து வீழ்ந்ததுபோல் மேவி எழுந்த அந்த ஓசையைக் கேட்டதும் இடி விழுந்த நாகம் போன்று சீதை படி விழுந்து பதைத்தாள். அடி தளர்ந்து எழுந்தாள். முடிவு நேர்ந்ததென்று நெடிது கலங்கித் தன்னையே நொந்து தவித்துத் துடித்தாள்.

பிடித்து நல்கு இவ் உழை எனப் பேதையேன் 3321
முடித்தனென் முதல்வாழ்வென மொய்குழல்
கொடிப்படிந்த தெனநெடுங் கோளரா
இடிக்கு உடைந்த தெனப்புரண்டு ஏங்கினாள். (க)

குற்றம் வீந்த குணத்தின்எம் கோமகன்
மற்றை வாளரக்கன்புரி மாயையால்
இற்று வீழ்ந்தனன் என்னவும் என் அயல் 3322
நிற்றியோ இளையோய்ஒரு நீ என்றாள். (2)

சீதை உள்ளம் கலங்கி,உயிர் துடித்து, உணர்வழிந்து துயர் மிகுந்து துவண்டு இலக்குவனை நோக்கி இங்ஙனம் உரைத்திருக்கிறாள். அவளது பரிதாப நிலை படுதுயரமாய்ப் படர்ந்து வருகின்றது.

மாயமான் கூவிய மாய ஒலியைத் தன் நாயகனுடையதே என்று நம்பி அப்பேதை பேதுற்றுப் பெருந்துன்பமாய்ப் பரிந்து பதைத்தாள். “மானைப் பிடித்துத் தா என்று என் கோனைப் பிடர் பிடித்துத் தள்ளிக் கொடிய பாவி நான் என் வாழ்வை முடித்தேனே!” என்று மறுகித் துடித்து உருகி யுளைந்தாள்.

கணவன் உயிர்க் கேடு அடைந்ததாக உணரவே உள்ளம் கொதித்தது; உணர் குலைந்தது; உயிர் அலமந்தது.

பேதையேன் எனத் தன்னைக் குறித்துச் சீதை இவ்வாறு திட்டி யிருக்கிறாள். தனது அறியாமையினால் செய்துகொண்ட

அவகேடு என்று அவலம் மிகவுடையளாய்க் கவலையடைந்து கலங்கினுள். விரும்பித் தூண்டியது பெரும் பித்தாய் மூண்டது.

## பெண்மையின் எண்மை.

மாயமானின் பின் தன் நாயகனை ஏவியது கொடிய மடமை என அவளது வாழ்நாள் முழுவதும் நினைந்து நினைந்து நெஞ்சம் நொந்திருக்கிறுள். தாம் கண்ணில் கண்டதை வாங்கித் தர வேண்டும் என்று பெற்றோரிடம் பிடிவாதமாய் அழும் சிறுபிள்ளைகளைப் போல், தாம் எண்ணிய எதையும் முடித்துக் கொடுக்க வேண்டும் எனக் கணவரிடம் மன்றுடுதல் பெண்டிர் இயல்பாய் மண்டியுள்ளமையால் சபலசித்தர் என அவர் இகழ்வினையுற்றனர். முன் எண்ணிப் பாராமல் முனைந்துசெய்து பின்னை நினைந்து வருந்துவது பெண் நீர்மையாய்ப் பெருகி நிற்றலால் பெண்புத்தி பின்புத்தி என்னும் பழமொழியும் வந்தது.

" நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறிவு என்பது பெரும் பேதைமைத்தே."

சிறந்த கலையறிவுடையராயினும் மகளிர் நிலையறிவு மாறுது என்பதை இதனுல் அறிந்து கொள்கின்றோம்.

சஞ்சல நெஞ்சம் மங்கையரிடம் தஞ்சமாயமைந்துள்ளமையின் அவருடைய சொல்லைக் கேட்டு எதையும் விரைந்து செய்து விடலாகாது. செய்யின் அல்லலும் அவமானமும் அடைய நேரும்.

பெண்மொழி கேளார் என்றும் பெரியவர் எனக்கொண்டிந்த
மண்மொழி வார்த்தை பொய்யோ? வருத்தம்நீர் உற்ற எலலாம
எண்மிக எண்ணின் முன்னம் என்பொருட்டு அன்ருே? என்று
கண்மலர் அருவி சோரக் கனற்பிறந் தாளும் சொன்னுள்.

(பாரதம், பழம் பொருந்து சருக்கம், 12)

இது துரோபதை சொன்னது. வனவாச காலத்தில் குளிர் பொழில் ஒன்றில் இனிய ஒரு நெல்லிக்கனியைக் கண்டாள். அது தெய்விகமானது. நீண்டகாலம் பசியை நீக்கவல்லது. ஆண்டுக்கு ஒரு முறை வந்து ஒரு யோக முனிவர் உண்ண உரியது. பருவம் உற்றிருந்த அதனைக் கண்டவுடனே தனக்குக் கொய்து கொடுக்கவேண்டும் என விசயனை வேண்டினுள். அவ்வில்வீரன்

உடனே எய்து வீழ்த்திக் கையில் தந்தான். அயல் இருந்த வன வாசிகள் அதன் இயல்பினை உரைத்தார். முனிவர் சபித்து விடுவர்; அச்சாபத்தால் நாசம் நேருமே! என்று தருமர் வருந்தினர். அனைவரும் மறுகிக் கண்ணனைச் சிந்தித்தார். அப்பொழுது பாஞ்சாலி பரிந்து கூறியபடி இப்பாட்டு வந்துள்ளது.

தன் சொல்லைக் கேட்டதனால் கணவர்க்கு அல்லல் நேர்ந்தது என்று வருந்திப் பெண்மை இயல்பை இகழ்ந்து அப்புண்ணிய வதி இவ்வாறு நடுவு நிலைமையுடன் கண்ணியமாகப் பேசலானாள். பெரியவர் என்றும் பெண்மொழி கேளார் என்றது கேட்பதால் விளையும் சிறுமையையும் பிழைபாடுகளையும் எதிர்நோக்கி வந்தது.

மானைப் பிடிக்கச் சொன்னது மடமை என இகழ்ந்து பேதையேன் எனச் சீதை தன்னை நொந்து கொண்டாள்.

பெண்மொழி கேட்பது பிழை எனப் பாஞ்சாலி தனது விழைவால் நேர்ந்த அனுபவத்தைச் சுட்டிக் காட்டினாள்.

முன்னும் பின்னும் எண்ணி அறியாத சபலமுடைய அபலைகள் உரைவழி ஒழுகின் கவலைகள் விளைந்து விடுகின்றன.

தன்வழி ஒழுகும் இல்லாள் வழி இழிந்து தான் ஒழுகுதல் தகாது என இல்வாழ்வானுக்கு நீதி போதிக்கும் பொருட்டுப் பெண் வழிச்சேறல் எனனும் ஓர் அதிகாரத்தைத் திருக்குறளில் தேவர் வகுத்து வைத்துள்ளார்.

இந்த அதிகாரத்தால் பெண்மையை இகழ்ந்திருப்பதாக உண்மையை ஊன்றி உணராமல் பெண்பாலார்க்குப் பெருமை தேடுபவர் போல் சிலர் புண்பாடுடன் புலையாட நேர்கின்றனர்.

பெண்மைப் பேறே பெரும் பேறு எனப் பெண்களை வள்ளுவப் பெருந்தகை மதித்துப் புகழ்ந்துள்ளதுபோல் வேறு யாரும் கூறவில்லை. பான்மை குன்றாமல் இருபாலும் மேன்மையுறும்படி போதித்திருக்கும் அவரது நேர்மை நீர்மைகளைத் திருவியறியின் சீர்மை தெளிவாம்.

சீதை தமயந்தி துரோபதை எவ்வளவு பெரிய பதிவிரதைகள்! எத்தகைய உத்தமிகள்! தமது சித்த நிலைமைகளை நடுவு நிலைமையுடன் உலகம் அறிய வெளிப்படுத்திப் பெண்மையின்

நீர்மையை உண்மையாக அப்பெண்ணரசிகள் உணர்த்தியுள்ளனர். அவருடைய புனித மொழிகள் மனித சமுதாயத்திற்கு மதி ஒளிகளாய் மருவி விதி முறை துலக்கியுள்ளன.

தனது பிடிவாதமான மடமையால் பெருங்கேடு மூண்டதே என்று பேதுற்று நொந்துபதைத்த சீதை இலக்குவனைநோக்கி "ஐயோ! இன்னும் இங்கேயே நிற்கின்றாயே! குணக்கடலான என் குல நாயகன் கொலையுண்டு வீழ்ந்த அபாய ஒலி உன் காதில் விழவில்லையா? அதனைக் கேட்டும் உள்ளம் துடித்து ஓடிப்போய்ப் பாராமல் இப்படி நிற்கிறாயே!" என்று பொறி கலங்கிப் புலம்பி வறிதே மறுகித் தவித்தாள்.

குற்றம் வீந்த குணத்தின் எம் கோமகன்.

எனத் தனது நாயகனுடைய குணகணங்களையும் தலைமை நிலைமையையும் நினைந்து நெஞ்சம் உருகி யிருக்கிறாள். உரிமைப் பொருளினுடைய அருமைகள் உணர்ச்சியில் ஓங்கி எழுந்துள்ளன.

இற்று வீழ்ந்தனன் என்னவும் என் அயல்
நிற்றியோ இளையோய்! ஒரு நீ?

அரக்கர் செய்த மாயச் சூழ்ச்சியால் தன் கணவன் மாண்டு போனான் என்றே அக்குலமகள் குலைநடுங்கியுள்ளமை இவ்வுரையால் உணர்கின்றோம். இராமனது தொனிபோலவே அவ் ஓலம் ஒலித்து நின்றமையால் இந்த அல்லலையும் அலமாலையும அது விளைத்து விட்டது. "என் அயல் நிற்றியோ இளையோய்!" என்றது உன் அண்ணனை விரைந்துபோய்ப் பாராமல் இவ்வண்ணம் பெண் அயல் நிற்பது பிழை அல்லவா? என உள்ளம் உளைந்து உயிர் துடித்து உணர்வு கடுத்து வந்தது.

ஒரு நீ என்றது வேறு துணை யாரும் இல்லாமல் உன்னையே துணையாக நம்பி வந்துள்ள அந்த நம்பிக்குத் தம்பியான நீ இவ்வாறு நம்பிக்கைத் துரோகமாய்த் தாழ்ந்து நிற்பது கொடிய கொடுமையே எனக் கடிது குறிப்பித்துக் கடிந்து கூறிய படியாம்.

## இலக்குவன் உறுதிகூறித் தேற்றியது.

அவல நிலையில் அலமந்து சானகி இங்ஙனம் பதைப்பதைக் கண்டு இலக்குவன் பரிதபித்தான். பேதை மதியளாய்ப் பேதுற்றுச் சீதை மோதல் உழத்தலை நினைந்து நினைந்து நொந்தான். வீர

மூர்த்தியாகிய இராமனது அற்புத மகிமையை யாதும் உணராமல் பெண்புத்தியால் அண்ணி புண்பாடு உறுகின்றாளே! என்று இரங்கி வருந்தினவன் அண்ணனுடைய அதிசய ஆற்றலையும், ஆகியுள்ள மாயவஞ்சத்தையும், நெஞ்சம் தெளிந்து நிலை கொள் ளும்படி உறுதி பலசூழ்ந்து வாக்கி உரைத்தான். இவ்வீர மகனுடைய உரைகள் உணர்ச்சிபொங்கி உண்மை நிலைகளை விளக்கித் தீரம் ததும்பி ஆர்வமுடன் எழுந்துள்ளன.

எண்மையார் உலகினில் இராமற்கு ஏற்றம்ஓர்
திண்மையார் உளர்எனல் செப்பற் பாலதோ? 3323
பெண்மையால் உரைசெயப் பெறுதி ரால் என
உண்மையான் அனையவட்கு உணரக் கூறினான். (1)

ஏழுமே கடலுலகு ஏழும் ஏழுமே
சூழும்ஏழ் மலையாவை தொடர்ந்த சூழல்வாய்
வாழும் ஏழையர் சிறு வலிக்கு வாளமர் 3324
தாழுமே இராகவன் தனிமை தையலீர்! (2)

பார்எனக் கனல்எனப் புனல்எனப் பகாப்
பேர்எனத் திசைஎன முனியின் பேருமால்; 3325
கார்எனக் கரியஅக் கமலக் கண்ணனை
யார்எனக் கருதிஇவ் இடரின் ஆழ்கின்றீர்! (3)

இடைந்துபோய் நிசிசரற்கு இராமன் எவ்வம்வந்து
அடைந்தபோது அழைக்குமே? அழைக்குமாமெனின், 3326
மிடைந்தபேர் அண்டங்கள் மேல கீழன
உடைந்துபோம்; அயன்முதல் உயிரும் தீயுமால். (4)

காவலன் ஈண்டுநீர் கருதிற்று எய்துமேல்,
மூவகை உலகமும் முடியும்; மூந்துள 3328
தேவரும் முனிவரும முதல செவ்வியோர்
ஏவரும வீந்துளார்; அறமும் எஞ்சுமால். (5)

பரக்களன் பகர்வது? பகழி பண்ணவன்
துரக்க அங்குஅதுபடத் தொலைந்து சோர்கின்ற
அரக்கன்அவ் வுரைஎடுத்து அரற்றினான்; அதற்கு 3329
இரக்கமுற்று இரங்கலிர் இருத்திர்! ஈண்டென்றான். (6)

(சடாயு உயிர்நீத்த படலம், 5-10)

இலக்குவனுடைய உண்மை யுணர்வும் உள்ளத் தெளிவும் உறுதி நிலையும் இவ்வுரைகளில் ஒளிவீசி யுள்ளன. அண்ணனுடைய ஆற்றலை உணராமல் பெண் மதியால் பிதற்றுகின்றாரே

என்று மதினியின் மனக்கவலையை வெறுத்துக் கடுத்திருத்தலால் அவனது சிறந்த இயல்பினையும் உயர்ந்த வீர நிலைகளையும் உண்மைத்தன்மைகளையும் தெளிவுற வலியுறுத்தி மெலிவு தீரக் கூறினன்.

''எளிய இந்த உலகில் இராமனுக்கு எதிரான வலியுடையார் எவரும் இலர்; ஏழு உலகங்களிலும் கடல் மலை முதலிய நிலைகளிலும் வாழுகின்ற தேவர் கந்தருவர் இயக்கர் அசுரர் அரக்கர் முதலிய எந்த வருக்கத்திலும் எத்துணைச் சூரரும் இந்த வில் வீரன் எதிரே புல்லாய் இழிந்து புறமே ஒழிவர். நிலம் நீர் தீ காற்று ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களும் இவன் முன் அஞ்சி ஒடுங்கும். கொடிய இராட்சதர்கள் கூட்டமாய்த் திரண்டு கொதித்து வளைந்தாலும் நெருப்பில் வீழ்ந்த சருகுகள் போல் நீருய் அழிவர். இந்த அற்புத வீரனுடைய நிலைமையை நன்கு உணராமையால் துன்பம் உறுகின்றீர்! நீங்கள் கருதியபடி ஏதேனும் இராமனுக்குத் தீது நேர்ந்திருந்தால் அண்ட கோளங்கள் யாவும் இதற்கு முன் உடைந்து போயிருக்கும்; தேவர் முனிவர் முதலிய யாவரும் அடியோடு அழிந்து போயிருப்பர்; தருமதேவதையும் தொலைந்து ஒழிந்திருக்கும்; எனது அருமை நாயகன் பெருமையைக் குறித்து மேலும் மேலும் விரித்து விரித்துச் சொல்லுவானேன்? நேர்ந்துள்ள நிலைமையைக் குறிப்பாகக் கூர்ந்து சொல்லுகின்றேன்: இங்கே வந்தது உண்மையாகவே மாயமான். அந்த வஞ்சமானைக் குறித்து நான் எவ்வளவோ கெஞ்சிச் சொல்லியும் நீங்கள் கொஞ்சமும் கேட்கவில்லை. மாரீசன் என்னும் தீய அரக்கனே மாயமானுய் வந்தவன். அத் தீயவனை நம் தூயவன் தொடர்ந்து போயிருக்கிறுன்; நெடுந்தூரம் போனபின் உண்மை தெரிந்துள்ளது. உடனே பகழி தொடுத்துள்ளான்; அந்த அம்பால் அடிபட்டு உயிர் பதைத்துக் கீழே வீழ்ந்தான்; அங்ஙனம் விழும்பொழுது அப் பாவி இப்படிக் கூவியிருக்கிறுன்; இது உண்மை; இதனை நம்புங்கள்; சிந்தை தெளிந்து கொஞ்சம் பொறுத்திருங்கள்; ஐயன் விரைந்து வந்து விடுவார்; சிறிது நேரத்துள் விழி களிப்பக் காணலாம்'' என இலக்குவன் இங்ஙனம் உணர்ச்சி தெளிய உரிமை பொழிய உறுதியுடன் உரைத்தான்.

இந்தக் குலமகனுடைய உள நிலையும் உரை நயமும் மதியூகமும் அதிசய முடையனவாய் உவகைகள் விளைத்து வருகின்றன.

"பெண்மையால் உரை செயப் பெறுதிர்!" என்றது இராமனுடைய ஆண்மைத் திறத்தை யாதும் அறியாமல் பேதைமையான பெண்மை இயல்பால் பிழைபடப் பேசினீர்! அவ்வாறு பேசலாகாது என இடித்துக் கூறியபடியாய் இவ் வாசகம் வந்துள்ளமையை நுனித்துநோக்கி நுவல்வோன் திறனை உணர்ந்துகொள்க.

இராமன் சிறிது முனியின் பார் முதலிய பூதங்கள் ஐந்தும் நிலை குலைந்து போம் என்றதனால் அவனது நிலைமை தெரியலாம். பகாப் பேர் என்றது காற்றை. எப்பொழுதும் யாண்டும் சலித்துக் கொண்டே இருப்பது என்னும் காரணம் மருவி இப் பேர் எழுந்தது. வீரன் நிலைமையை வீறுடன் விளக்கினான்.

காரெனக் கரியஅக் கமலக் கண்ணனை
யாரெனக் கருதிஇவ் இடரின் ஆழ்கின்றீர்!

இக் கேள்வியின் வேகத்தையும் ஆழத்தையும் ஆழ்ந்து நோக்குக. "அந்தச் செந்தாமரைக் கண்ணனை உங்கள் சொந்த நாயகன் என்று இந்த அளவில் மட்டும் சிந்தனை செய்து வந்திருக்கிறீர்கள் என்று தெரிகின்றது. அவன் அகில உலகங்களுக்கும் நாயகன். எல்லாவற்றையும் படைக்கவும், துடைக்கவும், அடக்கி ஆளவும் வல்லவன். அவன் சினந்தால் பஞ்ச பூதங்களும் அஞ்சி நடுங்கும்; அத்தகைய அவனை அப் பூத அணுக்களாய்த் தோன்றியுள்ள சீவ கோடிகள் என்ன செய்ய முடியும்? ஏதோ அவனுக்கு இடையூறு நேர்ந்திருப்பதாக எண்ணித் துடிப்பது பெண்மை மதியான பேதைமையே யாம். அவனுக்கு யாதொரு தீதும் யாராலும் செய்ய இயலாது; வீணே நீங்கள் வருந்தாமல் ஆறி இருங்கள்" என்னும் குறிப்போடு இதனைக் கூறி யிருக்கிறான்.

தன் அண்ணனை வென்று பிறர் அவனுக்கு இடர் செய்திருப்பார் என்னும் அந்தப் புன்மைச் சொல்லை இலக்குவனால் சகிக்க முடியவில்லை. அசகாய சூரனை அவனது தகுதியை உணராமல் உளறும் மடமொழி என்றே அதனை இவன் வெறுத்திருக்கிறான்.

எவ்வம் வந்து அடைந்தபோது இராமன் அழைக்குமே?

எதிரிகள் சூழ்ந்து கொண்டு அமர் புரிந்து பேரிடர் இழைத்தாலும், ஆருயிர்க்குக் கேடு விளைத்தாலும் தனக்குத் துணையாக வந்தருளும்படி யாரையும் எவ்வழியும் யாதும் அவன் வாய்திறந்து

அழைக்கவே மாட்டான் என அவனது வீரப் பான்மையையும், மேன்மையையும் விளக்கிக் கூறினன். எவ்வம் = துன்பம்.

அழைக்குமே? என்றது எதிர் மறையாய் இகழ்ச்சிக் குறிப்பில் வந்தது. ஆபத்து நேர்ந்த போது பிறர் சகாயத்தை நாடிக் கூவுவது பேடித் தனமே யாம்; உத்தமமான சுத்த வீரனிடம் அதனைக் காண முடியாது; சாக நேர்ந்தாலும் ஆனவரையும் அமராடித் தனியே மாண்டு போவனேயன்றி மானமழிய வாய்திறந்து எவரையும் வேண்டி அழையான் என்றமையால் ஆண்டகைமையின் அமைதி அறிய வந்தது.

சிறந்த குல வீரன் ஆதலால் உயர்ந்த போர் வீரனுடைய உள்ளப் பான்மையை இலக்குவன் இவ்வாறு விளக்கி யருளினன்.

அபாயம் அடைந்து இராமன் அழைத்திருப்பான் ஆயின் மேல் கீழ் உள்ள எல்லா அண்டங்களும் உடைந்து மடிந்திருக்கும்; பிரமா முதலிய சீவ கோடிகள் அனைத்தும் செத்திருக்கும் என்றதனல் எல்லா உலகங்களுக்கும் எவ் வுயிர்க்கும் அவன் உயிராய் உறைந்துள்ளமை உணர்த்திய வாறும்.

நீர் கருதிற்று என்றது “எம் கோமகன் இற்று வீழ்ந்தனன்” எனச் சீதை சொன்ன பரிதாப வார்த்தையை.

அந்தத் தீய மொழியைத் தன் வாய் திறந்து சொல்லக் கூசி நீர் கருதியது என்றான். நான் கனவிலும் கருதாததை நீர் அறியாமையால் கருதி அவலம் அடைகின்றீரே! என்று கவலை அடைந்து கூறினன். அண்ணியின் மனநிலையை எண்ணி இரங்கினன்.

நீர் எண்ணியபடி அப் புண்ணிய மூர்த்திக்கு ஏதேனும் எய்தி யிருப்பின், மூவகை உலகங்களும் முடிந்து, தேவர் முதல் யாவரும் செத்துத் தொலைந்திருப்பர்; அவ்வாறு ஆகாமையால் அவனுக்கு யாதொரு தீதும் நேரவில்லை என்பதை உறுதியாகத் தெளிந்து கொள்ளுங்கள் என்று தேற்றி யருளினன்.

தன் அண்ணனுக்கு அழிவு நேரின் விண்ணும் மண்ணும் அடியோடு அழிந்து போயிருக்கும்; அங்ஙனம் போகாமல் இவ் வண்ணம் நிலைத்திருப்பதே அவன் நிலையா யிருக்கின்றான் என்பதற்கு நேரான சான்றாகும் என இக் குலமகன் இவ்வாறு உறுதியாகக் கூறியிருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. இங்ஙனம் தேற்

றியும் சீதை ஆற்றாமல் அலமந்தாள். அவளது பேதைமையை நினைந்து இவன் பெரிதும் இரங்கி மறுகி நின்று மீண்டும் தெளிவு கூறி மனம் கவலாது இருக்கும்படி மன்றாடி வேண்டினான்.

"அந்த வீர தேவதையின் அருந்திறலாண்மையை நீங்கள் ஒரு சிறிதும் உணர்ந்து கொள்ள வில்லை; அவன் உள்ளம் சிறிது கனன்றால் உலகங்கள் எல்லாம் கலங்கும்; அவ் வள்ளலின் பெருமையை நான் உங்களிடம் புகழ்ந்து பேசுவது மிகை; மானாய் வந்த மாய அரக்கனே இவ்வாறு வஞ்சமாய்க் கூவி மாண்டுள்ளான்; ஆண்டவன் விரைவில் வந்தருளுவார்; சிறிது நேரம் அமைதியாய் ஆறியிருங்கள்" என்று ஆற்றித் தேற்றினான்.

"அரக்கன் அவ் உரை எடுத்து அரற்றினான்; அதற்கு
இரக்கம் உற்று இரங்கலிர் இருத்திர் ஈண்டு"

என இங்ஙனம் உரைத்து வேண்டினான். அவ்வுரை என்றது இராமன் கூவியது போன்ற அம் மாய வார்த்தையை. அம்பு பட்டு உயிர் துடித்து விழுங்கால் மாரீசனே அவ்வாறு அபாயக் குரல் இட்டுள்ளான் என இளையவன் தெளிவாகத் தெரிந்து கொண்டான். அத் தெளிவு சீதைக்கு இல்லாது போயதே பல துயரங்களுக்கும் ஏதுவாய் மூண்டது.

மானைக் கண்டு மயங்கிய பொழுது இராமனுக்குப் புத்தி சொன்னான்; அது செத்து வீழ்ந்ததைக் கேட்டுச் சித்தம் கலங்கி மறுகி அலமருகின்ற சீதைக்கு இங்கே இவ்வாறு உறுதி நலம் கூறினான். நம்பிக்கும் நங்கைக்கும் அயல் நின்று இத் தம்பி பட்டு வருகின்ற பாடுகளும் பாச நேசங்களும் நம் நெஞ்சங்களை உருக்கி வருகின்றன. உற்ற துணை உரிமையில் உழல்கின்றது

இவனது இயலும் செயலும் வியனிலையில் விளங்கி நிற்கின்றன. அதி மதியூகமாய் உண்மைகளைத் தெளிந்து கொள்ளுகின்றான். தெளிந்ததை உணர்வு நலம் கமழ, உரிமை திகழ உறுதியாய் உரைக்கின்றான். உரைக்கும் பொழுது அடக்கமும் பணிவும் மரியாதையும் பிரியமும் மருவி மிளிர்கின்றன. வாத முறைகள் நீதி நெறிகளை நிலை தெரியச் செய்து போதனைகள் புரிகின்றன.

## சீதை வேதனை செய்தது.

அறிவும் அன்பும் உரிமையும் கனிந்து இவ்வாறு இவன் உணர்வு கூறியும் சீதை உள்ளம் தேருமல் உயிர் கலங்கினுள். பரிதாப நிலையில் பதைத்துப் பழிமொழிகள் பகர்ந்து அழிதுய ருடன் இறந்து போவதாக விரைந்து நின்றுள்.

3331 ஒருபகல் பழகினுர் உயிரை ஈவரால்
பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும்நீ
வெருவலை நின்றனை வேறென் யானினி
எரியிடை வீழ்ந்துயிர் இறப்பென் ஈண்டெனு; (1)

3332 தாமரை வனத்திடைத் தாவும் அன்னம்போல்
தூமவெங் காட்டெரி தொடர்கின்றுள் தனைச்
சேமவிற் குமரனும் விலக்கிச் சீறடிப்
பூமுகம் நெடுநிலம் புல்லிச் சொல்லுமால்; (2)

3333 துஞ்சுவது என்னைநீர் சொற்ற சொல்லையான்
அஞ்சுவென் மறுக்கிலென் அவலம் தீர்ந்தினி
இஞ்சிரும் அடியனேன் ஏகு கின்றனென்
வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ? (3)

3334 போகின்றேன் அடியனேன் பொருந்தி வந்துகேடு
ஆகின்றது அரசன்றன் ஆணைநீர் மறுத்து
ஏகு என்றிர்! இருக்கின்றிர் தமியிர் என்றுபின்
வேகின்ற சிந்தையான் விடைகொண்டு ஏகினுன். (4)

சானகி மறுகி முறுகி இறுதியில் மூண்டதும், இலக்குவன் பரிதபித்து அந்த இடத்தை விட்டுப் போக நேர்ந்ததும் சோகம் மிகுந்த துயரக் காட்சிகளாய் ஈண்டு நீண்டுள்ளன.

எண்ணங்களும் சொற்களும் செயல்களும் வண்ண வடிவங் களாய்க் கண் எதிரே தோன்றிக் கனிவுகள் விளைக்கின்றன.

"இராமனேடு ஒரு நாள் பழகினவரும் அவனுக்கு ஏதேனும் இடையூறு தோன்றினல் உடனே தம் உயிரையும் கொடுத்து அதனை நீக்கி அவனைக் காக்கத் துணிவரே; நீ உடன் பிறந்தவனு யிருந்தும் ஒரு கவலையும் இன்றி இடம் பெயராமல் நிற்கின்றுயே! இது என்ன நிலை? ஐயோ இனி நான் உயிர் வாழ்ந்திரேன்; இந்தக் காட்டுத் தீயில் வீழ்ந்து மாண்டு மடிவேன்" என வெகுண்டு பேசி

அயலே சீதை விரைந்து போகவே இலக்குவன் பரிந்து துடித்து எதிர் ஓடி இடை மறித்து அவளது அடியில் விழுந்து தொழுது விழி நீர் ததும்ப நின்று மறுகி வேண்டினன். "அம்மா! நீங்கள் சாவேன் என்று போவது பாவம்; அவ்வாறு யாதும் கருத லாகாது; அடியேன் இதோ போகின்றேன்; பன்ன சாலையில் இருந்தருளுங்கள்; தீவினை மூண்டு வேலை செய்கின்றது; யாரை நோவது? கொடிய கேடு நேர்கின்றதே! என்று என் நெஞ்சம் வருந்துகின்றது; உங்கள் நிலைமையை நினைந்து அஞ்சுகின்றேன்; என் செய்வேன்? இங்கே காத்து நில் என்று என் ஆண்டவன் இட்ட கட்டளையைக் கடந்து போகும்படி நீங்கள் உத்தரவு இடுகின்றீர்கள்; நான் எதைச் செய்வேன்? நின்றால் நிலை கேடு; போனால் பெருங்கேடு; ஆனால் வீணே அலமந்து நோவதால் யாது பயன்? விதியின் விளைவால் மதி அழிகின்றது; ஒரு துணையும் இல்லாமல் கொடிய கானகத்தில் தனியே விட்டுப் போகின்றேன் தாயே!" என்று நோகின்ற சிந்தையனாய் ஏக நேர்ந்தான்.

காட்டுத்தீயில் சீதை பாயத் துணிந்துபோனது செந்தா மரைக் காட்டில் அன்னம் தாவ நேர்ந்ததுபோல் இருந்தது என் னும் உவமவாசகம் உருவக்காட்சிகளை உணர்த்தி நிற்கின்றது.

நாயகனைப் பிரிந்து வாழ்வதினும் சாவது இனிது என அக் குலமகள் துணிந்த ஆவலும் அவலமும் அறியவந்தன.

கணவனுக்கு அபாயம் நேர்ந்து விட்டது என உறுதியாகக் கருதிவிட்டமையால் உள்ளம் துடித்து உயிர்விடத் துணிந்தாள்.

அண்ணலது அபயக்குரலைக் கேட்டும், தான் பதைத்துத் துடிப்பதைப் பார்த்தும் பரிந்து ஓடிப் பார்க்காமல் அயலே இயல் பாக நிற்கின்ற இலக்குவன் நிலைமையைக் காணவே சீதைக்குக் கொதிப்பும் கோபமும் அதிகம் ஆயின. விரைந்து போய்க் காணவிடின் இறந்துபடுவேன் என வெறுத்துப் பேசினாள்.

## வால்மீகியின் சீதை.

இந்த இடத்தில் சீதை பேசிய பேச்சுகள் இளிவும் கொடுமை யும் உடையனவாய் ஆதி காவியத்தில் காணப் படுகின்றன. "இலட்சுமணா! உன் அண்ணனுடைய அபாயக் குரலைக்கேட்டும் நீ அங்கே போய்ப் பாராமல் இங்கேயே நிற்கின்றாய்; உன் நிலை

சரியாய் இல்லை; உள்ளன்பு கொஞ்சமாவது இருந்தால் நெஞ்சம் துடியாமல் நீ இப்படி நிற்பாயா? நல்ல பாசமுடையவன்போல் உடன் தொடர்ந்து வந்ததுஎல்லாம் கள்ளம் என்றே தெரிகின் றன; பரதன் அரசைக் கவர்ந்து கொண்டதுபோல் நீயும் என்னைக் கவர்ந்து கொள்ளவே காவாய் வந்திருக்கின்றாய்; இராமன் இறந்து போனால் அவன் மனைவியான என்னை நீ கைக்கொண்டு வாழலாம் என்று கருதியுள்ளாய் போலும்; அந்த வீரநாதனைத் தவிர வேறு எவனையும் நான் கண் எடுத்தும் பாரேன்; நீ கெட்ட எண்ணத் தோடே நின்றாலும் உன் எண்ணம் யாதும் பலியாது; என்னைத் தொட விழைந்து நீ கிட்ட நெருங்கினால் இந்தக் கோதாவரி நதி யிலேனும், தீயிலேனும் விழுந்து நான் செத்தே போவேன்; அந்த உத்தமனைப்பிரிந்து ஒருகணமும் நான் உயிர் வைத்திரேன்'' என இவ்வாறு இழிவான கொடிய பழி வார்த்தைகளைச் சானகி கூறி யிருப்பதாக வால்மீகி முனிவர் கூறியிருக்கிறார்.

மூல நூலில் உள்ள அந்த இழிமொழிகள் இங்கே யாதும் காணோம். அதி விநயமான உரைகளே மருகி வந்துள்ளன.

பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும், நீ
வெருவலை; நின்றனை; வேறு என்?

என இந்த அளவே சீதையின் வாய்மொழி ஈண்டு வந்துள் ளது. பரிவும் பண்பும் மருவி அதி நாகரீகமாய் வந்திருக்கின்ற இப் பேச்சுக்கும், அப் பிழை மொழிகளுக்கும் எவ்வளவு வேற் றுமை யுள்ளது? அம் மொழி வழியே சீதையை நோக்கின், இளி வாக எண்ணி இகழ நேர்கின்றோம்; இவ்வுரை வழியே சீதையைக் காணின், கழிபே ரிரக்கம் கொண்டு வழிபாடு புரிகின்றோம். முனி வரது பழமையைக் களைந்து புதுமை புதுக்கிப் புனித நிலையில் மனித வுலகத்தைக் கவி மாண்புறுத்தி யருள் புரிந் திருக்கின்றார்.

பெருந்தன்மையான உயர்ந்த குடியில் பிறந்த குலமகள் நிலைமையைப் புனைந்து போற்றி உலகம் உவந்து கொள்ளும்படி கம்பர் யாண்டும் வரைந்து காட்டி வருகின்றார். பெண்மையை ஒண்மை செய்து நன்மைகள் காண நவில்கின்றார். மானச உண் மைகளை எங்கும் மதிநலம் கனிய அதி நயமா விளக்குகின்றார்.

நாயகனுக்குக் கேடு நேர்ந்ததை அறிந்தும் கூடப் பிறந்தவன் ஓடிப் போய்ப் பார்க்க வில்லையே! என்று நாயகி கோபம் கொள்

வது இயல்பு; அங்ஙனம் உயிர் கலங்கிய உள்ளக் கொதிப்பிலும் நல்ல குல மகள் வாயிலிருந்து எள்ளலான இழி மொழிகள் வெளி வரா என்பதை நம் கவி இங்கே தெளிவுறுத்தி யிருக்கிறார்· பிரியை என்னும் பேருக்கு ஏற்ப அப்பேதை மறுகி உருகு கின்றாள்; இம் மேதை பரிவாய் உறுதி கூறுகின்றான்; கூறியும் தேறாமல் ஆராமையால் அலமந்து சீறுகின்றாள்.

நீ வெருவலை! நின்றனை! வேறு என்?

இலக்குவனை நோக்கிச் சீதை உரைத்த இவ் வுரைகள் மேற் குறித்த கொடுமொழிகளுக்கு எதிர் நிலையில் நிற்கின்றன. விநய மும் நாகரிகமும் வித்தகமும் உய்த்துணரத் தக்கன.

இங்ஙனம் வருந்தி மொழிந்து இறந்து படுவதாகச் சானகி விரைந்து போகவே இளையவன் பரிந்து நொந்து எதிரே போய்க் காலில் விழுந்து தொழுது தரையை நோக்கித்தவித்துப் பேசினன்.

"தாயே என் பிழையைப் பொறுத்துக் கொள்ளுங்கள்; நான் போய் வருகின்றேன்" என்று வாய் மறுகி மொழிந்தான்.

நீர் சொற்ற சொல்லை யான் அஞ்சுவென் என்றதனால் சீதை சொல்லிய சொற்கள் இலக்குவனுக்கு உள்ளத் துடிப்பை விளைத்து உயிர் மறுகச் செய்துள்ளமை உணரலாகும்.

"உன் அண்ணியைக் காத்து நில்" என்று இராமன் இட்ட கட்டளையை மீறிப் போக மனம் இல்லையாயினும் தேவி சாவேன் என்று சாதனை செய்து வேதனை புரிவதை நினைந்து நோதல் உழந்து போதல் துணிந்துள்ளான்.

வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ?

என நெஞ்சு நொந்திருத்தலால் கொடிய தீவினையே மூண்டு வேலை செய்கின்றது; நெடிய கேடு ஒன்று கடிது வருகின்றது என அவன் துடிதுடித்திருக்கும் துயரநிலை அறியவந்தது.

"போகின்றேன் அடியனேன்; பொருந்தி வந்து கேடு ஆகின் றது" எனப் பின்னே விளைய நேர்ந்துள்ள துன்பத் தொடர்பை முன்னதாக இவன் வாய்மொழி இன்னவாறு முடிவுசெய்யலாயது.

மாயமானைக் கண்டதிலிருந்து இவனுடைய நெஞ்சத்தில் பெருங் குழப்பங்கள் நிறைந்திருக்கின்றன. ஏதோ ஓர் அவகேடு தொடர்ந்து வருகின்றது என்று துளங்கி நிற்கின்றான். அதற்கு

ஏற்றபடி காரியங்கள் நடந்துவரவே உள்ளம் நொந்து இவ்வாறு சொல்ல நேர்ந்தான்.

*அரசன் தன் ஆணை நீர் மறுத்து ஏகு என்றிர்!*

இராமன் சொல்லிய உத்தரவைக் கடந்துசெல்லும்படி நேர்ந்ததே என்று இளையவன் இவ்வாறு உள்ளம் துடித்திருக்கிறான். அவன் மானைப் பிடிக்கப் போனபொழுது "கான்இயல் மயில் அன்னாளைக் காத்தனை இருத்தி" எனத் தம்பியை நிறுத்திப்போனான் ஆதலால் அந்நிலையைக் கடந்து செல்ல நெஞ்சம் கலங்குகின்றான்.

அண்ணன் சொல்லியது என்னாமல் அரசன் ஆணை என்றது அவன் வரிசை உணர வந்தது. உடன் பிறந்தவன் என்னும் உரிமையினால் மறந்தும் எளிமையோடு பழகாமல் யாண்டும் மன்னர் பிரான் ஆகவே அவனை மதித்து இவன் வழிபாடு செய்து வருகிறான். ஒழுகி வரும் முறை விழுமிய நிலையது.

அரச ஆக்கினையை மீறுவது பெரிய குற்றம்; அந்தக்கொடிய பிழையைச் செய்யும்படி அடியேனைப் பிடர்பிடித்துத் தள்ளுகின் றீர்களே! என்று உணர்வு கலங்கி உயிர் மறுகி யுள்ளான்.

இராமன் ஆணையை மீறிப் போம்படி தூண்டினவர் கோரமான தண்டனையை அடைவர் என்பது குறிப்பு.

தான் போய்விட்டால் யாதொரு பாதுகாவலும் இன்றிச் சீதை தனியாய் இருப்பாளே என்று உள்ளம் பதைத்து உணர்வு திகைத்து உயிர் துடித்திருக்கின்றான்.

அப் பதை பதைப்பின் நிலைமையை வேகின்ற சிந்தையான் என அதிசயமாக விளக்கி யிருக்கிறார். இந்த வாக்கியத்தின் கனத்தையும், உருக்கத்தையும் கருத்தூன்றி நோக்கவேண்டும்.

அண்ணியைத் தன்னந்தனியே விட்டுப் போவதில் இலக்குவன் பரிதபித்திருக்கும் பரிபவங்கள் உரையிடலரியனவாயினும் ஓரே மொழியால் உலகம் காண வெளிசெய்திருக்கிறார்.

## இளையவன் உளைந்துபோனது.

கலக்கம் மிகுந்த இலக்குவன் முடிவில் அகன்றுபோக நேர்ந்தான். நின்றால் மாண்டுமடிவேன் என்று சானகி மூண்டு போனமையால் இந்த ஆண்டகை அந்த இடத்தைவிட்டு நீங்கினான்.

நீங்க நேர்ந்தாலும் அக்குலமகளைத் தனியேவிட்டுச்செல்ல மனம் இல்லாமல் அல்லல் உழந்து அலமந்து அலைந்தான். சிறிதுதூரம் செல்லுவன்; மறுபடியும் திரும்பி மரங்களின் மறைவில் ஒளிந்து நின்று ஏதேனும் இடையூறு நேருமோ என்று விழியூன்றி நோக்குவன். பின்னும் அகல்வன்; மீளவும் பரிந்து பார்ப்பன்; மீண்டும் அடி பெயர்ந்து கடிது நின்று நெடிது அயருவன். இக் குலமகன் அன்று மறுகித் துடித்த மறுக்கங்கள் உருக்கம் மிக வுடையன.

இருப்பனேல் எரியிடை இறப்பரால் இவர்;
பொருப்பனே யானிடம் போவனே எனின் 3335
அருப்பமில் கேடுவந்து அடையும்; ஆருயிர்
விருப்பனேற்கு என் செயல்? என்று விம்மினான். (1)

அறந்தனால் அழிவில தாகின் ஆக்கலாம்
இறந்துபா டிவர்க்குறும் இதனின் இவ்வழி 3336
துறந்துபோம் இதனையே துணிவென்; தொல்வினைப்
பிறந்துபோந் திதுபடும் பேதையேன் என; (2)

போவது.புரிவல்யான் புகுந்தது உண்டெனில்
காவல்செய் எருவையின் தலைவன் கண்ணுறும் 3337
ஆவது காக்கும்என்று அறிவித்து அவ்வழித்
தேவர்செய் தவத்தினால் செம்மல் ஏகினான். (3)

இலக்குவன் மறுகி மயங்கி உருகி உளைந்து பருவரலோடு போயிருக்கும் பரிதாபங்களை இங்கே பார்த்து நொந்து பரிந்து நிற்கின்றோம். எண்ணிச் சென்ற எண்ணங்களை உரைகள் இவ் வண்ணம் காட்டியுள்ளன.

இறந்துபோவேன் என்று சீதை விரைந்து போகாமல் இருந்தால் இவன் துறந்துபோயிரான். ஆனவரையும் ஆறுதல்செய்து பார்த்தும் முடியாமையால் முடிவில் இம் முடிவினை மேற்கொண்டான். தான் போக நேர்ந்தாலும் உள்ளம் வேகநேர்ந்துள்ளது.

போவனே எனின் அருப்பம்இல் கேடுவந்து அடையும்.

என இவன் முடிவு செய்திருக்கிறான். அருப்பம் = அற்பம், சிறுமை. கொடிய ஒரு பெரிய கேடு கடிது புகும் என இவன் நெடிது கவன்றுள்ளது நேர்ந்துள்ள குறியீடுகளை ஓர்ந்து என்க. நேரிய தூய சிந்தையில் நேர்வன எவ்வாறேனு வெளியாகி விடுகின்றன. வீரியன் ஆயினும் ஆராமையால் அலமந்திருக்கிறான்,

ஆர் உயிர் விருப்பனேற்கு என் செயல்?

என்னும் இதில் இவனது வெறுப்பும்கடுப்பும் விளங்கிநிற்கின்றன.

அண்ணன் நில் என்று சொல்லி ஆணையிட்டுச் சென்ருன்; அண்ணி போ என்கின்ருள். போதல் இல்லையேல் சாதல் உண்டு என்று வேதனை செய்கின்ருள்; இருதலைக் கொள்ளியின் உள்ளே அகப்பட்ட எறும்பு போல இந்தப் பொல்லாத அல்லலை அடைவதை விட இறந்துபோவது நல்லது; அங்ஙனம் செத்துத் தொலையாமல் உயிர்மேல் ஆசை கொண்டு உழல்கின்றேனே என்று உள்ளம் அழல்கின்ருன் ஆதலால் உயிர் விருப்பனேன் எனத் தன் இருப்பை வெறுத்துத் தன் உள்ளேயே கறுத்து நின்ருன்.

உள்ளம் கன்றி இங்ஙனம் உளைந்து நின்றவன் சிறிது நிலை தெளிந்தான். தருமம் தலைகாக்கும் என்று நம்பினன். பெற்ற பிள்ளைகளை உற்ற தந்தை பாதுகாப்பதுபோல் சடாயு பார்த்து வருதலால் ஏதேனும் இடையூறு நேர்ந்தாலும் அவர் இடை புகுந்து காத்தருளுவார் என்று கருதித் துணிந்தான். எருவையின் தலைவன் என்றது சடாயுவை. எருவை = கழுகு.

விதியை நொந்தும், தருமத்தை நினைந்தும், சடாயுவை எண்ணியும், ஆவது ஆகும் என்ற வினைமுடிவை உணர்ந்தும் முடிவாக இவன் போவது புரிந்தான். மறுபடியும் ஒரு முறை சானகி இருக்கும் இடத்தைத் திரும்பி நோக்கினன். மறுகி நின்ருன். இறுதியில் உறுதியாய் விரைந்து போயினன்.

தேவர் செய் தவத்தினல் செம்மல் நீங்கினன்.

பஞ்சவடியிலிருந்து நெஞ்சம் துணிந்து இலக்குவன் அயல் அகன்று போனதைக் குறித்துக் கவி இங்ஙனம் இயல் தெரிய உரைத்திருக்கிருர். சானகியைத் தனியே விட்டு இளையவன் நீங்கியது தேவர்செய்த மாதவமாய் ஓங்கி நின்றது என்றது மேல் விளையவுள்ளதை ஓர்ந்து கொள்ள வந்தது.

இவன் போகாமல் நின்ருல் இராவணன் வந்து சீதையைக் கவர்ந்துகொண்டு போக முடியாது; அது முடியாதாயின் அரக்கர் குலம் முடியாது; அமரர் துயரும் விடியாது; ஆதலால் இந்த வீரன் நீங்கியது தேவர் செய்த தவம் என நேர்ந்தது.

## இராவணன் வந்தது.

இலக்குவன் இங்ஙனம் போகவே இராவணன் அங்கே வந்தான். இவனது நீக்கத்தை நெடிது எதிர்பார்த்து நின்ற அவன் நிலைமை தெரிந்து கடிது புகுந்தான். அரிய மாதவமுடைய பெரிய சந்நியாசி போல் வேடம் பூண்டு மிகவும் முதிர்ந்த வயதினனாய்க் கையில் தண்டு ஊன்றிக் கால் தளர்ந்து நடுங்கக் கள்ளமாய் நடந்து மெள்ள வந்து நுழைந்தான்.

வஞ்ச வேடனாய் நெஞ்சம் துணிந்து அவன் வந்து புகுந்த நிலைமையைக் கவி நன்கு வரைந்து காட்டியிருக்கிறார்.

இளையவன் ஏகலும் இறவு பார்க்கின்ற
வளையயிற்று இராவணன் வஞ்சம் முற்றுவான் 3338
முளைவரித் தண்டொரு மூன்றும் முப்பகைத்
தளையரி தவத்தவர் வடிவும் தாங்கினான். (1)

ஊணிலன் ஆமென உலர்ந்த மேனியன்;
சேணெறி வந்ததோர் வருத்தச் செய்கையன்; 3339
பாணியின் நடத்திடை படிக்கின்றானென
வீணையின் இசைபட வேதம் பாடுவான். (2)

பூப்பொதி அவிழ்ந்தன குடையன்; பூதலம் 3340
தீப்பொதிந் தாமென மிதிக்கும் செய்கையன்;
காப்பரு நடுக்குறுங் காலன் கையினன்;
மூப்பெனும் பருவமும் முனிய முற்றினான். (3)

தாமரைக் கண்ணொடுநீர் தவத்தின் மாலையன்; 3341
ஆமையின் இருக்கையன்; வளைந்த ஆக்கையன்;
நாமநூல் மார்பினன்; நணுகினானரோ
தூமனத்து அருந்ததி இருந்த சூழல்வாய், (4)

தோமறு சாலையின் வாயில் துன்னினான்;
நாமுதல் குழறிட நடுங்கு சொல்லினான்;
யாவிர் இவ் இருக்கையுள் இருந்துளிர்? என்றான்; 3342
தேவரும் மருள்கொளத் தெரிந்த மேனியான். (5)

(சடாயு உயிர்நீத்த படலம் 20—24)

இராவண சந்நியாசியின் உருவக் கோலங்களையும் பருவ நிலைகளையும் மருவிவந்த செயல் இயல்களையும் இங்கே நேரே காண்கின்றோம். இலக்குவன் எப்பொழுது நீங்குவான் என்று கடுத்த

குறிக்கோளுடன் இவன் துடித்து நின்ற நிலை இறவு பார்க்கின்ற என்ற நிகழ்கால வினையினால் அறிய வந்தது. இறவு — எல்லை, சமையம். அமையம் நோக்கி அதிசய நிலையில் தோன்றினான்.

மாயமானை ஏவிவிட்டுத் தான்கருதிய தீயகாரியத்தை முடித்தற்கு ஆவலோடு அயல்வந்து கரந்து ஆவதை நோக்கி அவாவி நின்றான். இராமன் மான்பின் போகவே பாதிவேலை முடிந்த தென்று உள்ளம் களித்தான். பின்பு இலக்குவன் நீங்கிப் போதலை நெடிது விழைந்து ஊன்றிய விழியினனாய் ஊக்கி நின்றவன் அவன் நீக்கம்நேரவே பேருவகையுடன் விரைந்துபுகுந்தான்.

அவகேடு செய்யவந்தவன் தவவேடம் கொண்டான். தன் உள்ளக் கள்ளத்தை மறைத்தற்கு நல்ல தவக்கோலங்கள் அவனுக்கு நன்கு உதவிபுரிந்தன. தாபதர்க்கு உரிய புனித நிலைகள் யாவும் இனிது அமைந்தன. உருவம் செயல் பருவம் பண்பு முதலிய உபகரணங்கள் எல்லாம் வகையாக வாய்ந்தன.

பால சந்நியாசி எனின் சானகி ஒரு வேளை நாணி ஒதுங்குவாள் என்று கருதிப் பழுத்த பழமான கிழவுருவில் விழுத்தவனாயினான். பருவ முதிர்வு அரிய தவ உருவுக்கு உரியதாயது.

பட்டினியிருந்து நெடிய உபவாசத்தால் உடம்பை வாட்டிக் கொள்ளுதல் கடிய தவ விரதங்களுள் தலைமை ஆனது ஆதலால் அந் நிலைமையைத் தன் வடிவில் காட்டிக் கொண்டான்.

பூதலம் தீப்பொதிந்தாம் என மிதிக்கும் செய்கையன். என்றது அவன் நடந்து வந்த விதம் தெரிய நின்றது. நெருப்புத் துண்டங்கள் சிதறிக் கிடக்கின்ற நிலத்தில் நடத்தல் போல் இடையிட்டு நோக்கிக் குந்தி நடந்து குறுநடை கொண்டு வந்திருக்கிறான். எறும்பு புழு முதலிய சிறிய பிராணிகள் காலில் மிதிபட்டு இறந்துபோகாதபடி அருள் நீர்மையுடன் இங்ஙனம் நடந்து செல்வது அருந்தவர் இயல்பு ஆதலால் அந்தப் பெருந்தவ நிலைமையைப் பேணி இயங்கினான். எடுத்த கோலத்திற்குத் தக்கபடி இனிது நடிக்க நேர்ந்தான்.

அகத்தில் நல்ல நடை யில்லாதிருந்தும் புறத்தில் இங்ஙனம் கள்ள நடை கொண்டு மெள்ள வந்தான். தன் வஞ்ச நிலை வெளிப்படாதபடி காரிய சாதனையில் விழிப்போடு புகுந்தான்.

முதிர்ந்த கிழ வடிவம் கொண்டு வந்தானே! அவன் எய்தி அடைந்த வயதின் அளவு எவ்வளவு இருக்கும்? என்பதா? தொண்ணூறு? நூறு? என்று யாரும் அறிய விரும்புவர். அதற்குப் பதில் உரைப்பது போல் கவி குறித்திருப்பது அதி விநயமாய்ச் சுவை சுரந்துள்ளது. கருத்தை விளக்குவதில் விசித்திர வேலைகள் விளைந்து வருகின்றன.

மூப்பு எனும் பருவமும் முனிய முற்றினன்.

வந்தவனது வயது முதிர்ச்சியை இந்த விதமா விளக்கியிருக்கிறார். பெற்ற தாயும் வெறுக்கும் பிள்ளை என்பது போல் அக் கிழத்தின் இருப்பு இங்கே குறிக்க வந்தது. மூப்பும் முனிய என்றதனால் அம் முதிர்வின் துனி தெரிந்தது. உம்மை இழிவு சிறப்பு. இறந்தது தழுவிய எச்சவும்மையாக் கொண்டால் "இந்தக் கிழம் இறந்து தொலையாமல் இன்னும் இருந்து கழிகின்றதே" என்று புறத்தே உலகத்தவர் இகழ்ந்து முனிய, அகத்தே மூப்பும் முனிந்தது என யாப்புறவு செய்து கொள்க.

மரணம் பழுத்துள்ள அந்தக் கிழத்தைத் தாங்கி நிற்பதில் மூப்புக்கும் அவமானமாயிருந்தது. கொம்பில் பழுத்த கனி உதிராது நின்றது போல் வம்பு பழுத்த கிழம் ஒழியாமல் ஒன்றியது முதுமைக்குப் பெரும்பாரமாயது.

வாலிபரைப் போல் கிழவர்கள் ஒழுக்கம் வழுவித் துடுக்காய் இழுக்கம் புரியார்; அறிவும் அமைதியும் தோய்ந்து மறுமை நோக்குடன் புனித நிலையில் இனிதமர்ந்திருப்பர் என்னும் மதிப்பும் மரியாதையும் மருவியுள்ளனர். அந்தப் பழம் பெருமையைக் கெடுத்தொழிக்க இந்தப் புதுக் கிழவன் புகுந்துள்ளமையால் இவன் முதுமை இங்ஙனம் இழிக்கப்பட்டது.

பழங்கிழவர்கள் ஆயினும் அவரை யோக்கியர் என்று நம்பி இளங்குமரிகள் இடம் கொடுக்கக் கூடாது என்னும் வெய்ய பழியை இவன் விளைக்க வந்திருக்கிறான். விழைவு மீதூர்ந்த இவனால் விளைந்திருக்கும் இளி வரவுகளும் விளிவு நிலைகளும் பல.

தன் உருவில் மறைந்து கொண்டு ஓர் உத்தம பத்தினியைச் சதி செய்ய மூண்டிருத்தலால் இந்தக் கிழத்தை மூப்பு எனும் பருவமும் முனிய நீண்டது. முனியாததும் முனிய அநியாயமானது.

சத்திய சீலனை இராமனுக்குத் துரோகம் செய்ய நேர்ந்துள்ளமையால் இம் முதுமை இழிந்து வெறுக்கப் பட்டது. அந்தத் தரும மூர்த்திக்கு மாறுபட்டன மதிப்பிழந்து போகின்றன. சடப் பொருள்களும் அவன்பால் அன்பு புரிந்து ஆர்வம் கூர்கின்றன. அவனுக்கு இடர் இழைப்பவர் அழிவையும் பழியையும் உடனே அடைய நேர்கின்றனர். என்றும் உரிமையுடைய மூப்புப் பருவமே முனிந்தது என்றதனால் இம் முது கிழத்தின் பழி பாதகங்கள் விழி தெரிய வந்தன.

அவகேடுகள் செய்வதற்குத் தவ வேடத்தில் மறைந்து வந்தான் ஆதலால் கபட வேடதாரிகளைக் குறித்துச் சொல்லும் பொழுது இராவண சந்நியாசம் என இவனைக்குறிப்பாக எடுத்துக் காட்டுவது உலகவழக்கம் ஆயது. தன் தீய எண்ணத்தை முடிக்கத் தூய வண்ணத்தை அடுத்தான். தெய்வ அருள் உடையது என வையம் மதித்து வணங்குவது ஆதலால் அத் தவ வடிவில் யாரும் ஐயப் படாவகை இவ் வெய்யவன் புகுந்தான்.

எந்த மன்னனையும் மணந்து கொள்வதில்லை என்று சுரமஞ்சரி என்னும் அழகி விரதம் கொண்டிருந்தாள். அவளைச் சீவகன் காதலித்தான். ஆடவர் யாரும் அணுகலாகாது எனக் கடுங் காவலோடிருந்த அவளது மாளிகையுள் முதிய வேதியனாய் வடிவம் கொண்டு அம் மன்னன் புகுந்தான். அந்தக் கிழக் கோலத்தை அயலே காண்க.

"அணங்கர வுரித்ததோல் அனைய மேனியன்;
வணங்குநோன் சிலையென வளைந்த யாக்கையன்;
பிணங்குநூல் மார்பினன்; பெரிதோர் புத்தகம்
உணர்ந்து மூப்பு எழுதினது ஒப்பத் தோன்றினன். (1)

வெண்ணரை உடம்பினன்; விதிர்த்த புள்ளியன்;
நுண்ணவிர் அறுவையன்; நொசிந்த நோக்கினன்;
கண்ணவிர் குடையினன்; கைத்தண்டு ஊன்றினன்;
பெண்ணலங் காதலிற் பேயும் ஆயினன். (2)

யாப்புடை யாழ்ப்பிடாறு என்னும் தோட்டியால்
தூப்புடை யவன்நலம் தொடக்கும் பாகனாய்
மூப்பு எனும் முகபடாம் புதைந்து முற்றிழை
காப்புடை வளநகர் காளை எய்தினன்." (3)

(சீவக சிந்தாமணி, சுரமஞ்சரியாரிலம்பகம், 15-17

முன் வந்த முதுமை வருணனையோடு இதனை இணைத்து நோக்குக. இந்தக் கவிகளின் சந்தமும் சாயலும் அதில் நன்கு தோய்ந்திருக்கின்றன. பொருள் அமைதிகளை நுனித்து நோக்கி இரு பகுதிகளையும் ஒரு முகமாய்ப் படித்துப் பார்க்க வேண்டும்.

மூப்பு எனும் முகபடாம் புதைந்து என்னும் இது, "மூப்பு எனும் பருவமும் முனிய மூற்றினன்" என்றதற்கு மூல வித்தாயிருப்பினும் அதன் கற்பனைக் காட்சியும், கருத்தும் அற்புத நிலையில் உயர்ந்திருக்கின்றன.

முருகமூர்த்தி வள்ளிநாச்சியாரை விழைந்து கிழவுருக் கொண்டு வந்ததையும் தணிகைப்புராணத்தார் இக்கவிகளை அடியொற்றி வருணித்திருக்கிறார்.

" அராவுரி எனத்திரையும் ஆக்கைசிலை நேர;
விராவுமயிர் வெள்ளொளி விரிப்பஇமை நால;
உராவிய விழித்துணை ஒசிந்தரிது நோக்கத்
தராதலம் அழுத்தியியல் தண்டுகரம் மன்ன; (1)

கைத்தசை கவுட்டசை கழற்றசைகள் தூங்க
மெத்திய சழங்கலுடை வீழ்ந்துநடை தட்பத்
தத்தடி இடுங்கழல் தளர்ந்துதடு மாற
ஒத்தகர ஞேடுதலை யுங்குலை குலைப்ப; (2)

மேதினி அளப்பவரின் மென்மெல நடந்தங்கு
ஊதைநனி நாசியின் உயிர்த்திடை இடைக்கண்
ஊத உகுவான் என உலைந்துநிலை கொண்டே
ஆதவன் மறைத்தகுடை யோடெதிர் அடுத்தான்." (3)

(தணிகைப்புராணம்; களவுப்படலம்,)

இந்தப் பாடல்களையும் படித்துப் பார்க்க. மொழிகளை முடைந்தாலும் கவிகளின் சுவைகள் கவிஞரின் நிலைகளைப் பொறுத்தே உவகைபுரிந்து வருகின்றன. எண்ணங்களை விளக்குவதில் இனிமை சுரந்து வருவது விழுமிய கலையின் அதிசய நிலையாம். அது ஒரு தெய்வக் கொடையாய்ச் செவ்வி சிறந்து நம் கவியிடம் திவ்விய மகிமை வாய்ந்துள்ளது. அந்த நளினமும் நயமும் சுவையும் நாகரீகமும் சாகசமும் தனி ஒளியுடையன.

தருண மங்கையரை விரும்பிய குமரர் அவரிடம் கிழவடிவம் கொண்டு புகுவது ஓர் உல்லாச முறை என்று தெரிய வருகின்றது.

இங்கே எடுத்துக்காட்டிய இந்த இரண்டனோடு முன்னது மிகவும் மாறுபாடுடையது. இவை நெறி முறையான உரிமையில் விநோதமாய் நிகழ்ந்தன. அது பழியான தீமையில் இழிவாக நேர்ந்தது. கொடிய அவம்புரிய இனிய தவம் போர்த்து வந்தான்.

தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. (குறள் 274)

புதரில் ஒளிந்து நின்று வேட்டுவன் பறவையைப் பிடிப்பதுபோல் தவவேடத்தில் மறைந்துகொண்டு தீயசெயலைப் பொல்லாதவர் செய்யத்துணிவர் என்னும் பொய்யா மொழிக்கு இவ்வெய்யவன் ஓர் செய்ய இலக்காய் வையம் காண நின்றான்.

## சீதையைக் கண்டது.

இங்ஙனம் கள்ளவேடனாய் வந்தவன் பன்னசாலையை மெல்ல அணுகினான். அணுகவே தனியே பரிதாப நிலையில் இருந்த சீதை யாரோ பெரியமுனிவர் வருகிறார் என்று எழுந்து இருகையும் குவித்து வருகையை வியந்து தூரவரும்போதே தொழுது நின்றாள். மாதவ வடிவம் மாதரசியின் ஆதரவு கொண்டது.

ஞானசீலனான சனகனுடைய அருமைத்திருமகள்; சாதுக்களையும் சந்நியாசிகளையும் அடிக்கடிகண்டு இளமையிலிருந்தே வணங்கி மரியாதை செய்து பழகி வந்தவள் ஆதலால் அப்பழியாளனையும் முதியமாதவர் என்றே முழுதும் நம்பி விழுமிய பத்தியுடன் உவந்து வணங்கிக் குடிசையின் வாயிலருகே அமர்ந்து நின்றாள்.

இக் குலமகளைக் கண்டதும் அவன் உள்ளம் உருகினான்; உயிர் மறுகினான்; ஆசைக் கடலில் ஆழ்ந்து மூழ்கி அலமந்து நின்றான். இந்தப் பெண் அரசியை நேரே அவன் கண்குளிரக்கண்ட பொழுது கடுங் காதலுடையனாய்க் கருதிமகிழ்ந்தன அளவிடலரியன. சில உரைகளில் வருகின்றன. அயல்வரும் கவிகளைக் கருத்தூன்றிக் காண்க.

வெற்பிடை மதம்என வெயர்க்கும் மேனியன்;
அற்பின்நற் றிரைபுரள் ஆசை வேலையன்;
3344 பொற்பினுக்கு அணியினைப்; புகழின் சேக்கையைக்;
கற்பினுக்கு அரசியைக் கண்ணின் நோக்கினான். (1)

## 7. இராமன்



தூங்கலின் உருவினைச் சொல்லின் உம்பரும்
ஓங்கிய அழகினாள் உருவம் காண்டலும் 3345
ஏங்கினன்; மனநிலை யாதென்று உன்னுவாம்
வீங்கின மெலிந்தன வீரத் தோள்களே; (2)

புனமயில் சாயலின் எழிலின் பூநறைச்
சுனைமடுத்து உண்டிசை முரலும் தும்பியின் 3346
இனம்எனக் களித்துளது என்பது என்? அவன்
மனம்எனக் களித்தது கண்ணின் மாலையே. (3)

சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்ந்துஇவண்
மேயவள் மணிநிற மேனி காணுதற்கு 3347
ஏயுமே இருபதிங் கிமைப்பில் நாட்டங்கள்
ஆயிரம் இல்லைஎன்று அல்லல் எய்தினான். (4)

அரைகடை இட்டமுக் கோடி ஆயுவும்
புரைதபு தவத்தின்யான் படைத்த போதுமே 3348
நிரைவளை முன்கைஇந் நின்ற நங்கையின்
கரையறு நன்னலக் கடற்கு என்று உன்னினான். (5)

தேவரும் அவுணரும் தேவி மாரொடும்
கூவல்செய் தொழிலினர் குடிமை செய்திட 3349
மூவுலகமும் இவர் முறையின் ஆள யான்
ஏவல்செய்து உய்குவென் இனிஎன்று உன்னினான். (6)

உளைவுறு துயர்முகத்து ஒளியிதாம் எனின்
முளைஎயிறு இலங்கிடு முறுவல் என்படும்! 3350
தளையவிழ் குழலிவட் கண்டு தந்தஎன்
இளையவட்கு அளிப்பென் என்அரசு என்றெண்ணினான்.

ஆண்டையான் அனையன உன்னி ஆசைமேல்
மூண்டெழு சிந்தனை முறையி லோன்தனைக் 3351
காண்டலும் கண்ணின்நீர் துடைத்த கற்பினாள்
ஈண்டெழுந் தருளுமென்று இனைய கூறினாள். (8)

ஏத்தினள் எய்தலும் இருத்திர் ஈண்டென
வேத்திரத்து ஆசனம் விதியின் நல்கினாள்
மாத்திரி தண்டயல் வைத்த வஞ்சனும் 3352
பூத்தொடர் சாலையின் இருந்த போழ்தினே. (9)

நடுங்கின மலைகளும் மரனும்; நாஅவிந்து
அடங்கின பறவையும்; விலங்கும் அஞ்சின;
3353 படங்குறைந்து ஒதுங்கின பாம்பும்; பாதகக்
கடுந்தொழில் அரக்கனைக் காணும் கண்ணினே. (10)

(சடாயு உயிர்நீத்த படலம் 26—35)

இந்தக் கவிப்படங்களில் வரைந்துள்ள காட்சிகளைக் கருத்தூன்றிக் காணவேண்டும். தவ உருவில் மறைந்துவந்த இராவணன் சீதையைக் கண்டதும், அதிசய பரவசனாய் ஆவல்மீக் கொண்டு பலபல எண்ணி நிலைகுலைந்து நின்றதும், நெருங்கி வந்து விரகுடன் அமர்ந்ததும், யாவும் பயந்து நடுங்கிப் பதறி அயர்ந்ததும் இங்கே நாம் வியந்து கண்டு உளைந்து நிற்கின்றோம்.

வேந்தர் வேந்தனான ஒருவன் கற்பு நலம்கனிந்த ஓர் அற்புத அழகிபால் அதிமோகியாய் மதியழிந்து உழந்து விதிநிலை மறந்து பழிவழியில் புகுந்து பாவம் செய்ய வந்திருக்கின்றான். அவனது வரவு நிலையையும், வஞ்சக்கரவையும், நெஞ்சத் தீமையையும், எவரும் காணக் கவி இனிது விளக்கி இயல்பு துலக்கிவரும் நிலை உயர் சுவை சுரந்து உவகை ஊற்றாய் ஓங்கி வருகின்றது.

சூர்ப்பநகை வாயிலாய்க்கேட்டதிலிருந்து கொடிய காமியாய் நெடு மோகம் கொண்டுள்ள அவன் இந்த எழில் உருவத்தை விழி எதிர் காணவே அழலிடை மெழுகாய் உள்ளமும் உயிரும் உருகி மறுகினான். காமக் காட்சி கடுங்களிப்பாயது.

பார்த்தவுடனே உள்ளம் களித்து உடல் வெயர்த்து பெருங் காதல் மண்டி பேராவல் கொண்டு பேதுற்று மயங்கியிருக்கிறான். "மதம் என வெயர்க்கும் மேனியின்" என்றது காம தாபத்தின் விதம் தெரியவந்தது. வெற்பு=மலை. அவன் நிலை அறிய வுற்றது.

அற்பின் நல்திரை புரள் ஆசை வேலையன்.

என்றது அவனது காமஆசையைக் காட்டிநின்றது. அற்பு= அன்பு. திரை=அலை. வேலை=கடல். இந்தப் பெண்ணரசி மேல் அன்பும் ஆவலும் அளவிறந்து பெருகின; அந்த ஆசைக் கடலில் ஆழ்ந்து அலமந்தான். அன்பு ஆகிய அலைகளை வீசிக் கொந்தளித்து ஆசைக் கடல் பொங்கி எழுந்தது என்றது எல்லை காண முடியாத அவனது உள்ளக் காதலின் எல்லை தெரியவந்தது.

கரை கடந்த காமக் கடலனாய்க் களிமீதூர்ந்து வழிமேல் ஓர்ந்து விழி தொடர்ந்து பழி படர்ந்து நின்றான். அந் நிலையில் அவன் அங்கே கண்டபொருளை இங்கே நாம் காண வருகின்றோம்.

பொற்பினுக்கு அணியினைப் புகழின் சேக்கையைக்
கற்பினுக்கு அரசியைக் கண்ணின் நோக்கினான்.

முன்னம் காதால் மட்டும் கேட்டிருந்த அழகியை இப்பொழுது நேரே கண்களால் நன்கு கண்டுகொண்டான் ஆதலால் அக்காட்சி நிலைதெரியக் "கண்ணின் நோக்கினான்" என்றார்.

இதுவரை கருத்தில் நோக்கி யிருந்ததை இங்கே கண்ணில் நோக்கினான். முடவன் கொம்புத்தேனைக் கண்டு களித்தாலும், அதனை அவன் உண்டு சுகிக்க முடியாது; அதுபோல் அத் தூர்த்தன் ஆர்த்திமீதூர்ந்து பார்த்து மகிழ்ந்தாலும் வேறு யாதும் அணுக இயலாது என்பது நுணுகி உணர வந்தது. அவன் பார்த்த பொருளின் அற்புத நிலைமையை விற்பன நலங் கனிய விளக்கி விளைவினைத் துலக்கி யிருக்கிறார்.

பொற்பினுக்கு அணி; புகழின் சேக்கை; கற்பினுக்கு அரசி. என்னும் இந் நன்னய மொழிகள் ஈண்டு உன்னி உணரவுரியன.

சீதையை இங்ஙனம் மூன்று பெயரால் குறித்தது அவளது சிறந்த அழகும், உயர்ந்த குணமும், உத்தம நிலையும் உய்த்துணர.

திருவின் முகத்துத் திரு என இவளது உருவ நலனும் பருவ எழிலும் பாராட்டப்பட்டுள்ளன. உலகில் தோன்றிய அழகிகள் எவரும் வியந்து நோக்கி மகிழ்ந்து புகழும்படி அதிசய அழகியாய்த் துதிகொண்டு உள்ளமையால் "பொற்பினுக்கு அணி" என்றார். புகழின் சேக்கை என்றது அரிய கீர்த்திகளுக்கெல்லாம் இனிய நிலையமாய்த் தனி அமைந்து இருக்கும் தகைமை கருதி. சேக்கை = தங்கும் இடம்.

தான் பிறந்த குடிக்கும் புகுந்த குலத்திற்கும் யாதொரு வசையும் நேராமல் யாண்டும் இசையைமேய வளர்த்து என்றும் பெரும் புகழ்ச் செல்வியாய் இப் பெண்ணரசி விண்ணரசிகளும் தொழ விளங்கியிருக்கிறாள். அழகு இவளைத் தவஞ்செய்து பெற்றதுபோல் புகழும் உற்றிருக்கிறது. சேக்கை நிலை நோக்கத்தக்கது.

கொடிய பல சோதனைகளிலும் யாதும் நிலைகுலையாமல் தன் கற்பை அற்புத நிலையில் பாதுகாத்து எத்திசையும் இசை பெற்றுள்ள உத்தமத் தலைவி ஆதலால் கற்பினுக்கு அரசி என இறுதியில் மேல்வரும் உறுதி தெரியவைத்தார்.

பதிவிரதைகள் எல்லாரும் நாளும் கருதித்துதிக்கும் கற்புத் தெய்வத்தின் கதிநிலை தெரியாமல் இலங்கை அதிபதி மதியழிந்து வந்திருக்கின்றான். பழியான வழியில் விழிகண் குருடனாய் அழிவுற இறங்குகிறான் என்பது தெளிவுற இம்மொழிகளை வழங்கினார். உடையவன் அன்றி வேறு எவராலும் அயல் அணுக இயலாத தெய்வீகமான ஓர்வயிரச்செப்புள் இருக்கும் மாணிக்கமணி போல் சானகி மருவியுள்ளாள். அந்த அதிசய மணியைக் களவு செய்ய அவாவி மதிகேடன் வந்துள்ளான்.

குடிப்பிறப்பு கற்பு என்னும் அரிய பெரிய வலிய அரண்களுடைய அற்புதமான ஓர் வித்தகக் கோட்டைக்குள் வீற்றிருக்கும் சக்கரவர்த்தினி என இராமபத்தினியை இங்கே போற்றியிருக்கிறார். பெண்மைத் தெய்வத்தின் உண்மை உணர வந்தது.

இத்தகைய உத்தமியை வஞ்சித்தற்கு எத்துணைக் கொடியனும் துணியான்; யாரும் யாதும் அருகணுக முடியாத அரிய திருவை அவாவி ஆசைமீதூர்ந்து அறிவுபாழ்பாய் நாசம் எய்துமாறு மாய வேடங்கொண்டு அத்தீயவன் இங்கே வந்து புகுந்திருக்கிறான்.

## காட்சியில் விளைந்த களிப்புகள்.

இத்தூயவளைப் பார்த்தபொழுது அவன் ஆர்த்திமீதூர்ந்து அவசமாய் நின்றான். அளவிறந்த உவகையனாய்ப் பலபல நினைந்தான். “திருமகளே பருவ அழகுடன் இவ்வுருவில் வந்திருக்கிறாள்; இந்த எழில் மேனியை முழுதும் காண எனது இருபது கண்கள் போதா; இமையாத ஆயிரம் விழிகளிருந்தாலும் அமையா; நான் பெற்றுள்ள மூன்றரைக்கோடி ஆயுளும் இவளது இன்பக் கடலுள் மூழ்கித்திளைத்தற்குக் காணாதே! தேவர் முதல் யாவரும் ஏவல்செய்ய மேவிய எனது பேரரசை ஆளும்படி இவளுக்கு மணிமுடி சூட்டிவைத்து இவளது ஊழியனாய் அமர்ந்து நான் வாழநேரின் அதுவே எனக்குப் பேரானந்தமாம்; நாயக

னைப்பிரிந்து சோகம் நிரம்பியுள்ள இந்தச் சமையத்திலேயே இவள் முகத்தில் இவ்வளவு எழில் குடிகொண்டிருக்கின்றதே! சுகமான உல்லாச நிலையில் எப்படி இருக்கும்! இந்த அற்புத அழகியை எனக்குக் காட்டி தந்த என் தங்கைக்கு எனது அரசு முழுவதை யும் பரிசாகக் கொடுத்துவிட்டு இவளுடன் இனிய போகங்களை நுகர்ந்து நான் தனி ஒதுங்கி வாழுவேன்'' என இன்னவாறு எத்தனையோ பல அப் பித்தன் எண்ணி ஏங்கி ஏமுற்றுநின்றான்.

சீதையின் உருவ அழகைக் காணவே பெரிய மோகியாய் அவன் உருகி நின்ற நிலையைச் சொல் ஓவியம் சுவையாகத் துலக்கி யுள்ளது. காமக் களிப்பும் கவற்சியும் கலந்து எழுந்தன.

ஏங்கினன் மனநிலை யாதுஎன்று உன்னுவாம்?
வீங்கின; மெலிந்தன; வீரத் தோள்களே.

இந்த குறிப்பைக் கூர்ந்து நோக்குங்கள். "ஓங்கிய அழகி னுள் உருவம் காண்டலும் ஏங்கினன்'' என்பதுவரையும் இயல் பாகச் சொல்லி வந்த கவி பின்பு "மனநிலையாது என்று உன்னு வாம?'' என ஏங்கி வியந்து இறுதி அடியை இங்ஙனம் நளினமாக நவின்றிருக்கிறார். வீங்கலும் மெலிவும் விளைந்தன ஏன்?

சீதையைக் கண்டவுடனே என்றும் காணாத அதிசயமான ஒரு பெரிய பேரானந்தம் உள்ளத்தே பொங்கி எழுந்தது ஆதலின் அந்தப் பூரிப்பினால் வீரத்தோள்கள் வீங்கின என்றார்.

இந்த அற்புத சவுந்தரியை எப்பொழுது அடைந்து மகிழ் வோம் என்னும் ஏக்கத்தினால் உடனே மறுகி வாடி உருகி வருந் தினான் ஆதலால் மெலிந்தன என அப் பருவரலின் நிலையை மொழிந்தருளினார்.

தேகத்தில் தோன்றிய மெய்ப்பாடுகளால் அவன் உள்ளம் பட்ட பாடுகளைத் திறந்து காட்டி உலகத்தை இங்ஙனம் காணச் செய்திருக்கிறார். இப்படி வருகின்ற காட்சிகளில் கலாவினோத மாகிய கவியின் மாட்சிகளைக்கண்டு வியந்து கருதிமகிழ்கின்றோம்,

தேனை உண்டு களிக்கும் வண்டுகள்போல் சானகியின் மேனி எழிலைக் கண்டுகளித்து விழிகள் இமையாமல் அவன் வியந்து நின் றான் ஆதலால் மனம் எனக் களித்தன கண்ணின் மாலையே என்றார். கண்ட காட்சியில் உள்ளம் பரவசமாய் உயிர் உவந் துள்ளமை உணர வந்தது.

"இவளைக் கண்டு தந்த என் இளையவட்கு என் அரசு அளிப்பன்" என்று அவன் களித்து எண்ணியிருக்கிறான். கண்டு தந்தமைக்கே இப் பரிசாயின் கொண்டு தந்தால் எப்பரிசாம்? காணப்பட்ட பொருள்மேல் அவன் கொண்டுள்ள மோகத்தை வாய்மொழிகள் பலவகையிலும் வெளிப்படுத்தி வருகின்றன.

தேவரும் குடிகளாயுள்ள நெடிய தன் முடி அரசைச் சீதைக்கே உரிமையாக்கித் தான் அவளுக்கு அடிமையாய் அமர்ந்து வாழவேண்டும் என்று முதலில் கருதினன்; பின்பு தன் தங்கைக்கே நன்றியறிவுடன் அதனைத்தந்துவிட்டுத் தாம் இருவரும் இனித்த போகநலங்களில் திளைத்துத் தனித்திருக்கவேண்டும் என்று துணிந்தான். அரச போகங்கள் முதலிய எல்லாவற்றையும் துறந்து தனியே சீதையோடு இனிது வாழ்வதையே பேரின்ப நிலையமாக அப்பேயன் இச்சித்திருக்கிறான்.

இங்ஙனம் எண்ணுதன எல்லாம் எண்ணி எண்ணி மகிழ்ந்து உள்ளம் களித்துக் குடிசை அருகுவரவே இக் குலமகள் தொழுது உபசரித்து ஓர் ஆசனம் விரித்து அதில் இருக்கச் செய்தாள்.

## சீதை நெஞ்சமும் இராவணன் வஞ்சமும்.

பெரிய ஞான முனிவரர் அதிதியாய் வந்துள்ளார் என்று கருதிச் சானகி மிகுந்த பயபத்தியுடன் வணங்கி மரியாதை புரிந்தாள். அந்த வஞ்சன் நெஞ்சம் களித்து அரிய தவசி போலவே இனிது நடித்து வாசுதேவா! என்று இனிய குரலால் கனிவாகச் சொல்லிக் கையில் கொண்டுவந்திருந்த யோகதண்டம் கமண்டலம் முதலியவற்றை அயலே வைத்துப் பன்னசாலை முன்முகப்பில் நன்னயமாக ஆசனத்தில் அமர்ந்தான்.

## காண்டலும் கண்ணின்நீர் துடைத்த கற்பினள்.

என்றமையால் அம்மாயச் சந்நியாசி வரும்பொழுது சீதை அழுது கொண்டிருந்தாள் என்று தெரிகின்றது. மானின் பின் போன தன் நாயகனுக்கு அபாயம் நேர்ந்துள்ளது என்று கருதி நெஞ்சம் துடித்து நிலைகுலைந்துள்ளமையால் ஓயாமல் அழுது அவலமாய் அல்லலுழந்திருந்தாள். விழி நீர் சொரிய வழிமேல் மனமாய் மறுகியிருக்குங்கால் பழிகாரன் வந்தான். தவசிபோல் வந்த அவனைக் காணவே கண்ணீரைத் துடைத்துக் கைகுவித்து

நின்ருள். உற்ற பெரியவரை உபசரிக்க வேண்டித் தன் உள்ளக் கவலையை உடனே மறைத்துக் கொண்டாள். தனது துயரத்தை வெளிக்காட்டாமல் அதிதியை ஆதரிக்க முகம்மலர்ந்து நேர்ந் துள்ளமையால் இக்குலமகளது நிலைமையை ஓர்ந்து கொள்ளுகின் ரேும். யாண்டும் தலைமைப் பண்புகளே உலாவி ஒளிர்கின்றன.

பிறந்த குடிப்பழக்கத்திஞல் சாதுக்கள்பால் மரியாதையும் பிரியமும் இப்பெண்ணரசியிடம் இயல்பாகவே பெருகியிருந்தன. அந்த நல்ல உள்ளப்பண்பாடு கள்ளமாய் வந்த அப்பொல்லாத வனுக்கு இதமான வசதியாய் இனிது வாய்ந்தது.

அவ்வாய்ப்பின் வழி எளிது புகுந்து கழிபேருவகையனுய் அமர்ந்து கருமசாதனையில் கண்ணூன்றி அதிவேகமாய் மரும முடன் அவன் வேலை செய்ய மூண்டான். கொடிய வஞ்ச நினை வுடன் அஞ்சாமல் வந்து அங்கே அவன் அமர்ந்திருந்தபொழுது பஞ்ச பூதங்களும் பரிதபித்து நின்றன.

நெடுந்திகில் உடையனவாயப் பறவைகள் முதலிய யாவும் நடுங்கின என்றதஞல் கபடவேடதாரியாய் வந்திருக்கின்ற அவ னது அடுந்திறலும் கொடுந்தொழிலும் செய்ய மூண்டுள்ள வெய்ய பழி நிலையும் விளங்கி நின்றன.

உயிர் உணர்ச்சியில்லாத மலைகளும், ஓரறிவுடைய மரங்களும் நடுங்கின என்றது அதிசய சம்பவங்களாய் வியந்து கொள்ள வந் தது. அரிய இனிய பொருள் கொடிய துயரம் மருவுகிறது என மேல் விளையவுள்ள பரிதாப விளைவினை எதிரறிய முதிர் வேதனை களாய் அதிர் நிலைகள் எழுந்தன.

வேறு துணையின்றித் தனியே மறுகியுள்ள நல்ல குலமகளுக் குப் பொல்லாத கொடியவன் அல்லல் இழைக்க வந்திருத்தலால் உலகப் பொருள்கள் எல்லாம் கலங்கி இரங்கின.

கொடிய வனவிலங்குகளும் கடிய நஞ்சுடைய பாம்புகளும் அஞ்சின என்றது தேவிக்கு நேர்கின்ற துன்பநிலையையும் அத் தீயவனது வன்கண்மையையும் நெஞ்சறியச் செய்தன.

அவனது ஆணையும் தீரமும் வானையும் மண்ணையும் வளைந்து கொண்டிருந்தலால் யாரும் யாதும் மாறு செய்ய இயலாமல் மறுகி நொந்து பரிவுடன் நின்றன. நல்ல உயிர்க்கு அல்லல்

நேரும்பொழுது எல்லா உயிர்களும் இரங்கி மறுகுகின்றன. அந்த இயற்கை உண்மை இங்கே வெளிப்பட்டுள்ளது. ஒருவன் புனிதம் உடையனுயின் அவனிடம் மனித சமூகமேயன்றிப் பிற பிராணிகளும் இனியனவாய் உரிமை பாராட்டுகின்றன.

பாதகக் கடுந்தொழில் அரக்கன் என இராவணனை இவ்வாறு கொதித்துக் குறித்தது இரக்கம் இன்றி அவன் செய்ய வந்திருக்கின்ற படுபாதகத்தை நினைந்து. அவகேடான கொடியவன் இனிய தவவேடம் தாங்கி வந்தது மிகவும் கொடியதாயது.

"A bad man is worst when he pretends to be a saint." (Bacon) "கெட்ட மனிதன் நல்ல தவசிபோல் நடிக்கநேரின் அந்தீயவன் மிகவும் அஞ்சத்தக்கவன்" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

இராமனை அயலே பிரிந்துபோம்படி புரிந்து வந்துள்ள அவனது வஞ்சச் சூழ்ச்சி பல பழிகளுக்கும் பாவங்களுக்கும் ஏதுவாதலோடு அரக்கர்குலம் முழுவதும் அழிய மூண்டுள்ளமையால் பாதகக் கடுந்தொழில் என அது பழிக்கப்பட்டது. ஆதிமுதல் புரிந்து வந்திருக்கும் பாதகங்கள் எல்லாம் பழுத்து இத்தீதில் செழித்து தீப்பயனை விளைக்க நேர்ந்திருக்கின்றது.

இங்ஙனம் கொடிய பாதகனாய் வந்துள்ள அவனை நெடிய தவசி என்று நம்பி இருக்கை ஈந்து சீதை உருக்கமுடன் உபசரித்தாள். அவ்வுபசாரங்களை உவந்து அவளது உருவ எழிலை விழிகள் களிப்பப் பருகி உணர்வும் உயிரும் பரவசமாயினான்.

## வஞ்ச முனிவன் வாய்திறந்தது.

அங்ஙனம் ஆனந்தபூரிதனாய் இருந்த அவன் தன் கள்ளம் தெரியாவகை காத்துகொண்டு தான் கருதிவந்த பொருளின் உள்ளம் தெரிய உரையாட நேர்ந்தான். தகுந்த யோசனையுடன் மிகுந்த சாதுரியமாய் அவன் பேசிய பேச்சுக்களையும், விநய சாகசங்களையும் விழைந்து காண வருகின்றோம்.

இருந்தவன் யாவதிவ் இருக்கை? இங்குறை
3354 அருந்தவன் யாவன்? நீர் யாரை? என்றலும்
விருந்தினர் இவ்வழி விரகி லாரெனப்
பெருந்தடங் கண்ணவள் பேசல் மேயினாள்.

மாதவன் போல் வந்து மருவி அமர்ந்தவன் சீதையை நோக்கி முதலில் இவ்வாறு பேசியிருக்கிறான். தான் பேசுதற்கு உரிய பொருளை இதமாக வரைந்துகொண்டு இவ்விதம் தொடங்கியுள்ளான். பெரிய மகான் பேசுகின்ற முறையில் வாசகங்கள் வந்தன.

இருந்தவன் என்றது வினையால் அணைந்த பெயர். இரு என்னும் வினை முதலடியாப் பிறந்தது. பெரிய தவசியாய் வந்திருத்தலால் பண்புப் பெயராகவும் இது பார்க்க வந்தது. பொல்லாத செயலைச் செய்ய நல்லவன்போல் மறைந்து வந்துள்ளமையால் வினையும் பண்பும் விரவிய பெயர் அவனுக்கு உரிமையாய் அமைந்தது. ஆசனத்தில் அமர்ந்து இருந்தவன் அவகேடு செய்ய வந்தவன் என்பது பேரிலேயே தெரியவந்தது. இரும்=பெரிய.

சானகியின் திருவாயிலிருந்து வருகின்ற இனிய மொழிகளைக் கேட்கவும், உள்ளத்தைக் காணவும் விழைந்த கள்ளன் காவுடன் வினவினான். அவன் கேட்ட கேள்விகள் மூன்று.

இவ் இருக்கை யாவது?
இங்கு உறை அருந்தவன் யாவன்?
நீர் யார்?

முதல் கேள்வி விளக்கமாயில்லை; மறுக்கம் மருவி யுள்ளது.

முனிவர் வாசமாய் இனிது அமைந்துள்ள இந்த ஆச்சிரமம் யாருடையது? எப்பொழுது அமைந்தது? எவ்வாறு சமைந்தது? எனப் பன்னசாலையைக் குறித்து முன்னதாக வினவினான்.

அதன்பின் அந்த இருக்கைக்கு உரியவனைக் கேட்டான். அரிய பெரிய ஒரு தவசியே இதில் வாசம் செய்ய உரியவன்என்று தான் கருதியுள்ளதுபோல் காட்ட வேண்டி அருந்தவன் என்றான்.

எல்லா விவரங்களும் நன்கு தெரிந்திருந்தும் யாதும் தெரியாதவன்போல் பாசாங்கு செய்து வஞ்சனையுடன் வம்பு அளந்து பேசி நங்கையின் வாயுரையை விழைந்து பாயிரம் பாடியுள்ளான்.

அருந்தவன் யாவன்? என இராமனை ஒருமையில் சுட்டி மரியாதையின்றி வினவினான். நீர் யார்? என்று சீதையைப் பன்மையில் குறித்து மரியாதையும் மதிப்பும் வைத்துக் கேட்டிருக்கிறான். யாரைஎன ஐ சேர்த்தது மேலும் சீரை விளக்கியது. அக்கள்ளனுடைய உள்ளத்திலுள்ள பிரியம் உரையில் வெளிவரலாயது.

அகத்தின் உணர்ச்சிகள் புறத்தில் எப்படியும் புலப்பட்டு விடுகின்றன. வஞ்சித்து நின்றாலும் நெஞ்சின் நிலை நேரே தெரிகின்றது.

பெரிய முனிவர் போல் வந்துள்ளமைக்கு ஏற்ப "நீ யாவள்?" என்று கேட்பதே முறை. அம்முறை கடந்து உரை எழுந்துள்ளது. மாதவன் என மருவி யிருப்பினும் மாதரசிமேல் ஆதரவு பெருகி நிற்பதைக் கவி சாதுரியமாய் வெளிப்படுத்தி யிருக்கிறார்.

யாவது? யாவன்? என முதலில் வினவிய இரண்டும் மூன்றாவது கேள்விக்கு அங்கங்களாய் வந்தன. "அம்மா! நீங்கள் யார்?" என்று நேரே கேட்பின் வேறுபாடாய் விரசம்படும் என்று கருதி அதனை மறைத்தற்கு முன்னுற இரண்டை ஒப்புக்கு வினவிக் கொண்டான். வஞ்ச நெஞ்சம் வகையாய் வேலைசெய்து வருகின்றது. இருப்பும் உரையும் குறிப்பில் ஊர்ந்தன.

இருந்தவன், அருந்தவன் யாவன்? என்று கேட்டது எவ்வளவு வஞ்சம்! என்றும் பிரியாமல் அருகிலிருந்தவனைத் தீய மானின் பின்னே பிரிந்து போகும்படி செய்து விட்டுத் தூயமானின் முன் வந்து இருந்து கொண்டு மாயங்கள் புரிகின்றான். மையல் களிப்புடன் வாய்மொழிகளை விழைந்து மனம் விரைந்து நிற்கின்றான்.

அக் கள்ள வேடன் இவ்வாறு கேட்கவே உள்ளம் தெரியாமல் வெள்ளை நோக்குடன் சீதை பதில் உரைக்க நேர்ந்தாள்.

"விருந்தினர்; இவ்வழி விரகு இலார்" என்றது வந்தவரைக் குறித்துச் சீதை செய்து கொண்ட சிந்தனை. விரகு=பழக்கம், அறிவு. இந்த இடத்துக்குப் புதியவர்; இதற்கு முன்னே இங்கே வந்திருக்கமாட்டார்; இப் பக்கங்களிலுள்ள நிலைமைகள் யாதும் தெரியாதவர்; ஆதலால் இவ்வாறு கேட்கின்றார் என்று நம்பி நங்கை விவரம் சொல்லத் துணிந்தாள்.

சீதையை இங்கே பெருந்தடங்கண்ணவள் என்றது எண்ணியுணர வந்தது. தனக்குக் கேடு சூழ்ந்து தன் எதிரே வந்துள்ள கள்ளனைக் கண்டு கொள்ள வில்லையே! அருமையான அழகிய பெரிய கண்கள் ஒளி நிரம்பி இருந்தும் விழி அழகி என்னும் பெயரளவில் நின்றனேயன்றிக் கண்ணின் செயல் இயலை அடையாது போயினவே! என்று உள்ளம் இரங்கிக் கூறிய படியிது.

வஞ்சச் சூதுகள் யாதும் அறியாத புனித நெஞ்சம் உடையவள் ஆதலால் அவளுடைய கண்கள், உலகம் புரியும் கலக வேலையும் கபட மோசமும் கள்ளமும் கரவும் காணாது நின்றன.

பரிசுத்தமான இப் பேதைக்குப் படுகேடு செய்ய வந்தவன் குடியோடு கெடுவான் என்பது முடிவாகி நின்றது.

அவ் வஞ்சன் வினவியதற்கு இக் குலமகள் நெஞ்சறிய நேர் மொழிந்தாள். சொல்லிய முறை சுவை சுரந்து வந்தது.

தயரதன் தொல்குலத் தலைவன் தம்பியோடு 3355
உயர்குலத்து அன்னைசொல் உச்சி ஏந்தினன்
அயர்விலது இவ்வழி உறையும்; அன்னவன்
பெயரினைத் தெரிகுதிர் பெருமையீர் என்றாள்.

"தசரத சக்கரவர்த்தியினுடைய அருமைத் தலைமகன்; தாய் பணியைத் தலை ஏந்தித் தம்பியுடன் இங்கே வந்து தங்கியிருக்கிறார்; அவருடைய பெயரினை நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள்" என்று இவ்வாறு செவ்வாய் மலர்ந்து செப்பியருளினாள்.

அருந்தவன் யாவன்? என இருந்தவன் கேட்டதற்கு நின்றவள் பதில் இந் நிலையில் வந்தது. ஈங்கு வந்துள்ள ஆள் சக்கரவர்த்தித் திருமகன் என்பதைப் பக்குவமாக்காட்டினாள். உலகை ஆளும் தலைமை அதிபதி தவசி ஆன அவசிய நிலைமையை அடுத்துக் குறித்தாள்.

"இவன் தவம் செயத் தவம் செய்த தவம் என்?" என அதிசய நிலையில் நவம் செய்து வந்துள்ளவனை அவம் செய்ய வந்தவனிடம் அறிவிக்க நேர்ந்தது. தருமம் துறவாக் கருமத் துறவி என்னும் மருமம் இதன்கண் மருவியுள்ளது.

உயர்குலத்து அன்னை எனக் கைகேசியை இங்கே மனம் குளிர்ந்து பேசியிருக்கிறாள். அரசைக் கவர்ந்து கொண்டு தனது அருமை நாயகனைக் காட்டுக்கு ஓட்டிக் கடுந் துயர் விளைத்துள்ள கொடியவளை இப்படி உவந்து கூறியது வியந்து சிந்திக்கத்தக்கது. ஒரு சிறு பிழை செய்தாலும் அவரைப் பெரிதும் வெறுத்து இழிவாகப் பேசுவது மனித இயற்கை. இந்த இயல்பில் ஆண்களினும் பெண்கள் மிகவும் மேலோங்கியுள்ளனர் அணு அளவு வசை கூறினும் கூறினவரை ஆயுள் வரையும சீறிச் செயிர்த்து அவமதித்து

நிற்பர். இத் தகைய உலக நிலையில் இத் தலைவியின் மன நிலை இங்கே நமக்கு அதிசயமாய் ஆனந்தம் தருகின்றது.

இழி குலச் செய்கை செய்தவள் என்று பழியாமல் உயர் குலத்து அன்னை எனத் தன் மாமியை மனமாரப் புகழ்ந்தது இவளது குல நலத்தையும் குடிப் பிறப்பையும் மனப் பண்பையும் பெருந் தன்மையையும் உலகறிய உணர்த்தி நிற்கின்றது.

சொல்லால் உள்ளம் தெரிகின்றது; உள்ளத்தால் உயிர் நலனையும், உயர் நிலையையும் உணர்ந்து கொள்ளுகின்றோம்.

## நாயகன் நாமம் நவிலாமை.

இங்ஙனம் பெருந் தகவுடன் பேசி வந்தவள் தன் கொழுநன் பெயரைச் சொல்லக் கூசினமையால் "அன்னவன் பெயரினைத் தெரிகுதிர்!" என்று மெல்லப் பூசினாள். தனது கணவன் பெயரை மனைவி சொல்வது மரியாதை ஆகாது என இந் நாட்டவர் பண்டு தொட்டே பழகி வந்துள்ளமையை ஈண்டு இது காட்டி நிற்கின்றது. தேச ஆசாரங்கள் செயல் இயல்களில் தெரிய வருகின்றன.

"திருந்தும் ஆயுள் சிதையும்என்று எண்ணித்தம
பொருந்து காதலர் நாமம் புகன்றிடார்." (காசி காண்டம்)

நாயகன் பெயரை நாயகி சொன்னால் ஆயுள் குறையும் என நூல் விதியும் இங்ஙனம் வந்துள்ளது. தன்பதியின் பெயரை எவ் வழியும் சொல்லாமல இவ் விதி முறையைத் தழுவி ஒழுகும் சதிகள் எங்கணும் உள்ளனர்.

இந்த வழக்கத்தை இத்தேசத்து மங்கையர் மிக்க எச்சரிக் கையுடன் இன்றும் நன்கு பேணி வருகின்றனர்.

சீநிவாசன் என்னும் பெயரினையுடைய ஒருவன் மனைவி ஒரு நாள் சீனி வாங்கக் கடைக்குச் சென்றாள். அந்தப் பேரை நேரே கூற மாட்டாமல் இனிப்புக் கொடு என்றாள். கடைக்காரன் "இனிப்பு என்றால் என்ன அம்மா! சர்க்கரையா?" என்றான். இல்லை; வேறே ஒன்று என இவள் மேலே சொன்னாள். அவன் கருப்புக்கட்டியா? என்று கடுத்துக் கேட்டான். அதுவும் இல்லை என்றாள். அதன் பின சீனி என்று தெரிந்து அதனைத் தந்து விட்டு, "உங்கள் வீட்டுக்காரர் பெயர் சீனிவாசமோ?" என

அவன் சிரித்துக் கொண்டான். காதலனது நாமம் நவிலா வழக்கம் காதலிகளிடம் எவ்வளவு தூரம் இடம் பெற்றுள்ளது! என்பது இந்த நிகழ்ச்சியால் இனிது தெளிவாகின்றது.

கொழுநன் பெயரைக் குலமகளிர் கூறார் என்னும் மரபு முறையைக் கவி இங்கே மருமமாக நவின்றிருக்கிறார்.

தாம் பிறந்த நாட்டுப் பழக்கங்களும் வழக்கங்களும் வான் முறைகளும் இவர் வாக்கில் சிறந்து வருகின்றன. அவ் வரவுகள் கால தேசங்களின் கோலங்களை விளக்கிக் குண நலங்களைத் துலக்கி நிற்கின்றன.

முதிய வயதுடையனாய்ப் பெரிய தவ வேடத்தைத் தாங்கி வந்திருத்தலால் பெருமையீர்! என அருமை கருதி உரைத்தாள். புறக் கோலத்தில் மதிப்பு மிகுந்தமையால் அகத் தீமையை அறிய முடியவில்லை.

உலக நிலையிலும், ஞான நிலையிலும் பெரியராய் இருப்பவர் எவரும் தன் நாதனை நன்கு தெரிந்திருப்பார் எனச் சானகி துணிந்திருப்பதை இவ் வாயுரையால் நாம் உணர்ந்து கொள்கின்றோம். அவனது பெயரினை அறியாதார் பெருமையுடையராய் இருக்க முடியாது என்னும் தொனி இதில் துனித்து அறிய வுள்ளது. உலகப் பிரசித்தனான அந்த உத்தமன் பெயரை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள் என இங்ஙனம் மருங்குடன் மொழிந்து நின்றாள்.

இவ் வுரையைக் கேட்டதும் அவன் சொன்ன பதில் என்ன?

கேட்டனென் கண்டிலென்; கெழுவு கங்கைநீர்
நாட்டிடை ஒருமுறை நணணினேன; மலர் 3356
வாட்டஙகணணினீர் யாவன் மாமகள்
காட்டிடை அருமபகல் கழிககின றீர் என்றான்.

தன் நாயகன வரலாற்றைக் கூறி அவரது பெயரைத் தெரிந்திருப்பீர்! எனச சானகி சொல்லவே அவன் இவ்வாறு நளினமாகப் பேசலானான். நீர் சொன்ன அவனைப் பற்றிக் கேட்டிருக்கிறேன்; நேரே கண்டது இல்லை; ஒரு முறை கங்கை நீர் ஆட வந்தேன்; அப்பொழுது அந்தப் பக்கங்களில் சுற்றி யிருக்கிறேன்; கோசல நாட்டைப் பார்த்துள்ளேன்; அவ்வளவே; என்று சொல்லி முடித்து விடடுத தன் காரியததில கருததுடன இறங்கினான்.

நீங்கள் யாருடைய அருமைத் திருமகளார்? இந்தக் கொடிய காட்டில் வந்து வீணே காலம் கழிக்கின்றீர்களே! என்று பரிவுடையவன்போல் விரகுடன் கேட்டான்.

மலர் வாள் தடம் கண்ணின் நீர் என்றதனால் பிராட்டியின் கண் அழகில் அவன் உள்ளம் பறி போய் உருகி உழந்துள்ளமை அறிய வந்தது. மூன்று அடைமொழிகள் விழிகளின் ஆன்ற அமைதி தோன்ற நின்றன.

புறத்தே ஞான யோகி போல் கோலம் கொண்டாலும் அகத்தே காம போகியாய்க் கதித்து நிற்றலால் சிருங்கார வசனங்கள் மருங்கோடி வந்தன.

அகன்று பரந்து செவ்வரி படர்ந்து கருமை ஒளி கனிந்து வெண்மை ஒளி தவழ்ந்து வியத்தகு நிலையில் விழிகள் மலர்ந்திருத்தலால் அந்த எழில் நிலையில் மனம் அழிந்து மால் கொண்டு மயங்கி மறுகி மையல் களிப்போடு உயங்கி யிருக்கிறான்.

காட்டு இடை அரும்பகல் கழிக்கின்றீர்!

எனக் கழி விரக்க முடையவன் போல் பரிதபித்துக் கூறியது அவன் கருதி வந்துள்ள கருத்தை ஒரு சிறிது வெளியே காட்டி நின்றது. உரை வழியே உருகி ஓட்டுகின்றான்.

அதிசய சவுந்தரியாய் உள்ள தாங்கள் உயர்ந்த அரண்மனையில் அமர்ந்து தோழியர் பலர் ஊழியம் புரிய அரிய இனிய சிறந்த போக போக்கியங்களை அனுபவிக்க உரிய இந்தப் பருவத்தில் பாழான காட்டில் வந்து வீணே காலம் கழிக்கின்றீர்களே! இது என்ன அநியாயம்! அன்னே! என ஏங்கியிருக்கிறான்.

உங்களுடைய விழுமிய இனிய எழில் எங்கே! இந்தப் பழியான கொடிய காடு எங்கே! மாடு ஆடு புலி காடிகள் மருவி வாழ வேண்டிய இடத்தில் ஈடும் எடுப்பும் யாண்டும் இல்லாத பேழகி வாழ்வது பெரும் பரிதாபமேயாம் என உரிமையுடையவனாய் உருகித் தன் உள்ளத்தைக் காட்டி யுள்ளமை உணர வந்தது.

இப்படி அன்பும் ஆர்வமும் கனிந்த வார்த்தைகளை ஆர்த்தியுடன் கூறிய அத் தூர்த்தன் பின்பு இவள் பிறந்த குடியை உரிமையோடு அறிய விரும்பியவன் போல் பேசலாயினான்.

நீர் யாவண மாமகள்?

இங்கும் சீதையை மாத்திரம் பன்மையில் உயர்த்திக் கூறித் தந்தையை ஒருமையில் இளித்துக் குறித்திருக்கிறான். உலகில் எத்தகைய அரசரையும் எவரையும் ஒரு பொருளாக மதியாத சித்த சுபாவம் உடையவன் இவ் வுத்தமியிடம் மட்டும் பித்தேறி உழல்கின்றான் என்பது உய்த்துணர வந்துள்ளது.

மாமகள் என்றது உருவ எழிலோடு அடைந்துள்ள அருமை பெருமைகளை மதித்து, பெரிய ஒரு அரச குமாரியாகவே இருக்க வேண்டும் என உயர்ந்த மரியாதையுடன் தான் கருதியுள்ளதாகக் காட்டிப் பேசினான்.

இவ்வாறு அவ்வஞ்சன் கூறிய குறிப்பு மொழிகளைக் கேட்டும் இத் தூயவள் யாதொரு மாறுபாடும் கருத விலலை. தீமை யாதும் பழகி அறியாத புனித நெஞ்சம் ஆதலின் புல்லன் புன்மை புலனாக வில்லை. நல்ல தவசி என்றே உள்ளம் கருதித் தன் குல முறையைத் தெளிவாகச் சொல்லலாயினாள்.

அனகமா நெறிபடர் அடிகள் நும்மலால் 3357
நினைவதோர் தெய்வம் வேறு இலாத நெஞ்சினான்
சனகன் மாமகள்; பெயர் சனகி; காகுத்தன்
மனைவியான் என்றனள் மறுவில் கற்பினாள். (1)

அவ்வழி அனையன உரைத்த ஆயிழை
வெவ்வழி வருந்தினிர் விளைந்த மூப்பினிர் 3358
இவ்வழி இருவினை கடக்க எண்ணினிர்
எவ்வழி நின்றும் இங்கு எய்தினீர்? என்றாள். (2)

நீர் யாவன் மாமகள்? என்று அவன் கேட்ட கேள்விக்குப் பதில் உரைத்து விட்டு "அடிகள் எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று சானகி இவ்வாறு அவனை வினவியிருக்கிறாள்.

தன் தந்தையைக் குறித்து இக் குலமகள் இங்கே கூறியிருப்பது நினைவில் வைக்க வுரியது. புண்ணிய சீலர்களான உங்களைப் போன்ற பெரியவர்களைத் தவிர வேறு தெய்வம் இல்லை என்று யாண்டும் கருதி ஒழுகும் ஞான சீலன் எனச் சனகனை ஈண்டு மனம் உவந்து குறித்திருக்கிறாள்.

அனகமா நெறி என்றது முத்தி நெறியாகிய மோட்ச மார்க்கத்தை. அகம்=பாவம், குற்றம். பாவம் இல்லாத புனித நிலை

அனகம் என வந்தது. அடிகள் என்றது பெரிய தவசிகளைக் கூறும் மரியாதை வார்த்தை.

உலக ஆசையைத் துறந்து எப்பொழுதும் ஈசனையே தியானித்திருக்கும் ஞான சீலர்களைத் தெய்வம் எனப் போற்றிச் சனக மன்னன் ஆதரித்து வந்துள்ளமை இங்கே அறிய வந்தது. அந்தத் தந்தை வாசனை இந்த மகளிடமும் எய்தி யிருந்தமையால் வந்த நீசனையும் ஈசன் எனத் தொழுது ஏத்தி நின்றாள்.

காம மோகியாய்ப் பாப நெறி படரும் கொடியவன் அனக மா நெறி படர் அடிகள் எனப் புனிதவாயால் போற்ற நேர்ந்தான். அவன் கொண்ட வேடம் கண்டவர்களை இங்ஙனம் கை குவித்துத் துதிக்கச் செய்தது.

காகுத்தன்.

என் தந்தை சனகன்; என் பெயர் சனகி என்றவள் தன் நாயகன் பெயரை நேரே சொல்ல முடியாமையால் வேறொரு வழியாய்ச் சொல்லி முடித்தாள். எல்லாரும் சொல்லி மகிழும் இராம நாமத்தைச் சீதை வாய்திறந்து சொல்ல இசைந்திலது ஆயினும் அந்த நாம உருவங்கள் அவள் உள்ளத்தில் உறைந்துள்ளன.

ககுத்தன் என்னும் அரசன் இராமனது குலமரபில் பல தலைமுறைகளுக்கு முன் தலை சிறந்திருந்தான். அவன் உயர்ந்த நீதிமான். சிறந்த போர்வீரன். அசுரரை வென்று அமரரை ஆதரித்தவன். தானவரோடு அவன் மூண்டு பொருது வரும்பொழுது இந்திரன் உவந்து ஒரு முறை அவனைத் தோளில் தாங்கி நின்றான் ஆதலால் இந்திர வாகனன் என்னும் இசை மிகப் பெற்று அந்தர வாசிகளும் துதிக்க அரசு புரிந்து வந்தான். அந்தக் ககுத்த வேந்தன் வழிமுறையில் வந்துள்ளமையால் இராமன் காகுத்தன் என நின்றான். குல மரபின் தலைமை காண வந்தது.

நீதியும் தருமம் வீரமும் நிறைந்த சிறந்த அரசர் குலத்தில் பிறந்தவன் எனத் தனது நாயகனது குல பாரம்பரையை உவந்து நிலைமை தெரிய நேரே உரைத்தாள்.

இன்னவாறு அன்னவனிடம் சொன்னவள் யார்? என்பதைக் கவி நன்னயமாக நமக்குச் சொல்லிக் காட்டுகிறார்.

மறுவில் கற்பினள் என அறிவில் விளக்கினர்.

யாதொரு மறுவும் இல்லாத அரிய பதிவிரதை என இங்ஙனம் உருகி உரைத்தது, அவளது தூய்மையையும் வாய்மையையும் கருதி. மறு=குற்றம். மாசற்ற கற்பினளிடம் நீசம் புரிய வந்துள்ளவன் நாசம் அடைவான் என்பது சிந்தை செய்ய வந்தது.

தூமனத்து அருந்ததி; கற்பினுக்கு அரசி; மறுவில் கற்பினள்; என இந்தப் பகுதியில் இங்ஙனம் புனித நாமங்களால் சானகியை இனிது குறித்திருக்கிறார். மலரில் மணம் போல் பிறவியிலேயே உரிமையுடன் அமைந்துள்ள புனிதக் கற்புடையாளைப் பொல்லாப் புல்லன் புலையாக நச்சி அடியோடு தொலைய வந்துள்ளான் என அவன் நிலை காண நின்றது.

அதி பரிசுத்தையான உத்தம பத்தினி எனத் தமது கதா நாயகியைக் கவி உள்ளம் உவந்து துதித்து வருகிறார்.

இப் பத்தினி இங்ஙனம் தன் வரலாறுகளைத் தெரியப் படுத்தி அவனது வரலாறுகளை அறிய வினவினள்.

"அரிய மாதவமுடைய தாங்கள் இந்த மூதிய பருவத்தில் இங்கே கருணையுடன் வந்தது நாங்கள் செய்த புண்ணியமே; வெகு தூரம் நடந்து வந்திருப்பதாகத் தெரிகிறது; தள்ளாத வயதில் வழி நடையானது உங்களுக்கு மிகவும் களைப்பை விளைத்திருக்கிறது; அடிகள் எங்கிருந்து வருகிறீர்கள்?" என இங்ஙனம் அன்புடன் விசாரித்தாள்.

இவ்வழி இருவினை கடக்க எண்ணினிர்!
எவ்வழி நின்றும் இங்கு எய்தினீர்?

எனத் தன் செவ்வாய் திறந்து சீதை இவ்வாறு கேட்டாள்.

நல்வினை தீவினை என்னும் இருவினைகளையும் கடந்து காமம் வெகுளி மயக்கம் என்னும் முப்பகைகளையும் வென்று முத்தி நிலையைக் கருதி நிற்பது தத்துவ ஞானிகளுடைய இயல்பு ஆதலால் அந் நிலைமையை நினைந்து "இருவினை கடக்க எண்ணினிர்" என்றாள்.

"தாவரும் இருவினை செற்றுத் தள்ளரும், மூவகைப் பகை அரண் கடந்து முத்தியில், போவது புரிபவர்" என ஞான யோகிகளைக் குறித்து முன்னம்* கூறியுள்ளதும் ஈண்டு எண்ணத்தக்கது.

---

* இந் நூல் பக்கம் 844, 21 வது வரி பார்க்க.

அவன் இருவினை கடப்பதற்குப் பதிலாக அங்கிருந்து இருவரை வெளியே கடத்தி ஒரு கொடிய பழி வினை செய்ய வந்திருக்கிறான். இழி நிலையாளனை உயர் நிலையாளனா அயர்வுற நேர்ந்தது.

நல்ல விழிகள் இருந்தும் அவனது உண்மை நிலையைத் தெரிந்து கொள்ளாமல் வழி முதலியவற்றை உரிமையோடு உசாவினாள்.

எவ்வழி நின்றும் இங்கு எய்தினீர்?

என இச் செவ்விய நெஞ்சினள் இவ்வளவு வினவ, அவ் வெவ்விய வஞ்சன் எவ்வளவு சொல்லினான்! அதி சூழ்ச்சியுடன் அவன் கூறிய தந்திரமான சாதுரிய வசனங்களை இங்கே நாம் சிந்தை கூர்ந்து காண வருகின்றோம்.

இந்திரற்கு இந்திரன்; எழுத லாகலாச்
சுந்தரன்; நான்முகன் மரபில் தோன்றினான்;
3359 அந்தரத் தோடும்எவ் வுலகும் ஆள்கின்றான்;
மந்திரத்து அருமறை வைகும் நாவினான். (1)

ஈசன் ஆண்டிருந்தபேர் இலங்கு மால்வரை
ஊசிவே ரொடும் பறித்து எடுக்கும் ஊற்றத்தான்;
3360 ஆசைகள் சுமந்தபே ரளவில் யானைகள்
பூசல்செய் மருப்பினைப் பொடிசெய் தோளினான். (2)

நிற்பவர் கடைத்தலை நிறைந்து தேவரே;
சொற்பகு மற்றவன் பெருமை சொல்லுங்கால்;
3361 கற்பகம் முதலிய நிதியம் கையன
பொற்பக மானநீர் இலங்கைப் பொன்னகர். (3)

மேனகை திலோத்தமை முதல ஏழையர்
வானகம் துறந்து வந்து அவன்றன் மாட்சியால்
297 ஊனமில் அடைப்பை காலவருடல் ஒண் செருப்பு
ஆனவை முதல்தொழில் அவரது ஆகுமே. (4)

சந்திரன் இரவி என்பவர்கள் தாம் அவன்
சிந்தனை வழி நிலை திரிவர்; தேசுடை
298 இந்திரன் முதலிய அமரர் ஈண்டவன்
கந்தடு கோயிலின் காவ லாளரே. (5)

பொன்னக ரத்தினும், பொலங்கொள் நாகர்தம்
3362 தொன்னக ரத்தினும், தொடர்ந்த மாநிலத்து
எந்நக ரத்தினும், இனிய ஈண்டவன்
நன்னக ரத்தன நவையி லாதன. (6)

தாளுடை மலருளான் தந்த அந்தமில்
நாளுடை வாழ்க்கையன்; நாரி பாகத்தன்; 3363
வாளுடைத் தடக்கையன்; வாரி வைத்த வெங்
கோளுடைச் சிறையினன்; குணங்கள் மேன்மையான்.

வெம்மைதீர் ஒழுக்கினன்; விரிந்த கேள்வியன்;
செம்மையோன்; மன்மதன் திகைக்கும் செவ்வியன்; 3364
எம்மையோர் அனைவரும் இறைவர் என்றெணும்
மும்மையோர் பெருமையும முற்றும் பெற்றியான். (8)

அனைத்துல கினும்அழ கமைந்த நங்கையர்
எனைப்பலர் அவன்றனது அருளின் இச்சையோர் 3365
நினைத்தவர் உருகவும் உதவ நேர்கிலன்
மனக்கினி யாள்ஒரு மாதர் நாடுவான். (9)

ஆண்டையான் அரசுவீற் றிருந்த அந்நகர்
வேண்டியான் சிலபகல் உறைய வேண்டினேன் 3366
நீண்டனென் இருந்தவற் பிரிந்த நெஞ்சினேன்
மீண்டனென் என்றனன் வினையம் உன்னுவான். (10)

(சடாயு உயிர் நீத்த படலம், 41-50)

இராவண சந்நியாசி இப்படிப் பேசியிருக்கிறான். இந்தப் பாசுரங்களைக் கவனத்துடன் கருத்தூன்றிப் படிப்பவர் எவரும் உவப்பும் நகைப்பும் வியப்பும் விம்மிதமும் அடைந்து, இயற்கை விநோதங்களையும் உணர்ச்சி நிலைகளையும் உணர்ந்து களிப்பர்.

அவனுடைய வஞ்சச் சூழ்ச்சியும் நெஞ்சின் ஆழமும் நிலை காண முடியாதன. உள்ளத்தே கொடிய சதி கொந்தளித்துக் கொண்டிருக்கின்றது; புறத்தே அமைதியான தவ வேடம் அதனை மறைத்து நிற்கின்றது.

"Smooth runs the water where the brook is deep,
And in his simple show he harbours treason."

(King Henry-6, 3.1)

"ஆழமான நதியில் நீர் ஓட்டம் மேலே அமைதியாய்ச் செல்லுதல போல் தனது கொடிய துரோக சிந்தையை அவன் இனிய தோற்றத்தால் மறைத்திருக்கிறான்" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது. /அபாய முடையவர் உபாயம் முடைகின்றனர்.

வஞ்சக்கொடியர் நெஞ்சக்கரவு நிலைகாணல் அரிது; அவரை நம்பினல் குடிகேடு செய்துவிடுவர் எனக் குடிலரைக் குறித்து எவரும் எங்கும் குலைநடுங்கியுள்ளனர்.

உள்ளே கடும்போகங்களைக் காதலித்து வெளியே கள்ளத் துறவியாய் வந்துள்ள அவன் இங்கே பேசியுள்ள சாதுரிய வசனங்கள் அவனது பெருமித நிலையையும் வினைய சாகசங்களையும் விளக்கி நிற்கின்றன.

"நீங்கள் இப்பொழுது எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று சீதை கேட்டதற்கு இயல்பாக என்ன பதில் சொல்லவேண்டும்? அவன் ஈண்டு என்ன சொல்லியிருக்கிருன்? இன்னவாறு நிலைமைகளையும் நினைவுகளையும் உன்னி உணரின் அவனுடைய உரைகளின் ஆழங்களையும் நீளங்களையும் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

அந்தக்கரண விருத்திகள் அதிசய நிலைகளையுடையன; எந்த மதியாலும் எவரும் எலலை காணமுடியாதன.

"தேவராசனை இந்திரனும் தொழுதுவணங்கும் தலைமை அதிபதி; ஓவியத்திலும் எழுதமுடியாத அதிசய அழகன்; பிரமாவின வழிமரபில் வந்தவன்; வேதங்கள் முழுவதும் நன்கு பயின்றவன்; இசையில் வல்லவன்; அரிய கலைகள் பலவும் வழுவறத் தெளிந்தவன்; சிறந்த போர்வீரன்; ஈசன் எழுந்தருளியிருந்த வெள்ளிமலையை அடியோடு அள்ளி எடுத்தவன்; அவனது அரண்மனை வாசலில் தேவர்களே காவலாளிகளாய் நின்று ஏவல் புரிகின்றனர்; கற்பகம் சுரபி சிந்தாமணி சங்கநிதி பதுமநிதி முதலிய தெய்வத் திரவியங்கள் எல்லாம் அவன் கைவசமாயுள்ளன; அரம்பை மேனகை திலோத்தமை ஊர்வசி முதலிய தேவமங்கையர் ஆவலுடன் சூழ்ந்து அவனுக்குக் கால்பிடித்தல் அடைப்பை தாங்கல் செருப்புத் தூக்கல முதலிய சிறு வேலைகளை உரிமை மிகுந்து பெருமையோடு செய்கின்றனர். அந்தர அமரர் கந்தருவர் யாவரும் கைகட்டி நிற்கின்றனர்; சூரியனும் சந்திரனும் அவன் கருதியவாறே வெருவி ஒழுகுகின்றனர். எவ்வுலகங்களிலும் காணமுடியாத அற்புத அழகுடைய பொருள்கள் எல்லாம் அவன் இராசதானியில் நிறைந்திருக்கின்றன. அருந்திறலும் பெருந்திருவும் தனி உரிமையாகப் பெற்று அகிலவுலகங்களையும்

இனிது ஆளுகின்றான்; தேவ தேவர்களாகிய மூவரும் வியந்து புகழ்கின்ற சிறந்த மேன்மையுடையவன்; அவனை மணந்து கொள்ள விழைந்து எவ்வளவோ அழகிகள் வலிந்துவந்தும் அவன் எவரையும் மதியாமல் தன் தகுதிக்கு இசைந்த தருண மங்கையையே மூவுலகங்களிலும் கருதி ஆராய்ந்து உறுதி நாடியிருக்கிறான்; அத்தகைய அதி உத்தம சுந்தரனான இராவணேசுரன் என்னைச் சிலநாள் அங்கே இருக்கும்படி வேண்டினான்; அந்த மன்னர்பிரானுடைய வேண்டுகோளுக்கு இணங்கி இலங்கையில் சிறிதுகாலம் இருந்தேன்; மீண்டு வடதிசை யாத்திரையாய் ஈண்டு வந்தேன்; இடையே இன்று உங்களை இங்கே காணும்படி திருவருள் கூட்டிவைத்துள்ளது'' என்று இங்ஙனம் பொருள்மொழிகளை அதிசாதுரியமாய்க் கூறி முடித்தான்.

களினமான இந்தக் கபட மொழிகளுள் பொதிந்திருக்கின்ற கள்ள எண்ணங்கள் எவ்வளவு காரியங்களை எதிர்பார்த்து நிற்கின்றன? என்பதை நம் உள்ளங்கள் ஊன்றி உணர்ந்துகொள்கின்றன.

இந்திரற்கு இந்திரன்; எழுத லாகலாச் சுந்தரன் என்று தொடங்கி ஆழ்ந்த நோக்குடன் அவன் சூழ்ந்து பேசியிருக்கும் நிலைகள் துருவி நோக்க உரியன. கவிகளைக் கருதிக் காணின் கருத்துக்கள் முழுவதும் தெளிவாகின்றன.

இம்மண்ணுலகமேயன்றி விண்ணுலகமும் வியந்துபோற்றும் வியனிலை தெரிய இந்திரனுக்கு இந்திரன் என்றான்.

அரிய திருவும் பெரிய மாட்சியும் திவ்விய நிலைமையும் கருதி இவ்வாறு அவனை புகழ்ந்து கூறியிருப்பினும், ஓர் செவ்விய உண்மையும் இவ்வுரையுள் உணர்ந்துகொள்ள வந்தது. என்னே வரவு? எனின், பின்னே காண்க.

கோதமன்பன்னி ஆகிய அகலிகையைக் காதலித்துக் கள்ள மாய்ப்புகுந்து அமரர்கோன் அவக்கேடு செய்தான்; இராமபத்தினியாகிய சீதையை விழைந்து இவ்வஞ்சன் அஞ்சாமல் புகுந்திருக்கிறான் ஆதலால் தையல்மோகியாய் மையல் மிகுந்த அவனினும் இவ்வெய்யவன் பெரியவன் என்பதை விழிதெரியச் செய்தான்.

கள்ளன் கருதிச் சொல்லாவிடினும் தன் உள்ளத்தில் உள்ளதை அவன் வாயுரை ஒலித்து உணர்த்திவிடுகின்றது.

எழுதலாகலாச் சுந்தரன் என்றது சித்திரத்திலும் எழுதி அமைக்கமுடியாத அத்தனை பேரழகு என எழில் நிலையை வாய் குளிர வருணித்துக் கொண்டான். சர்வாங்க சுந்தரியான சவுந்தர இலட்சுமியிடம் தன் சுந்தரத்தைக் குறித்து மறைமுகமாக அப் பேடன் இவ்வாறு விதந்து கூறியது இவள் சிந்தை உவந்து மதித்துக் கொள்ள வேண்டுமே என்னும் அவாவினாலேயாம்.

நான்முகன் மரபில் தோன்றினன் என்றது குடிப் பிறப்பின் சிறப்புணர. "அந்தரத்தோடும் எவ் வுலகும் ஆள்கின்றான்" என்றது அகில உலகங்களையும் ஏக போகமாக ஆண்டு வருகிற ஆட்சியின் மாட்சி தெரிய.

உயர்ந்த குடிப் பிறப்பு, சிறந்த அழகு, நிறைந்த செல்வம், நிகரிலா ஆட்சி, அரிய கல்வி, பெரிய வீரம், நெடிய புகழ் முதலிய உயர் நலங்கள் யாவும் ஒருங்கே குடி கொண்டுள்ள நிலைமைகளை உவந்து உரைத்தான்.

"ஈசன் இருந்த மால்வரையை ஊசி வேரொடும் பறித்து எடுத்தான்" என்றது அவனது அதிசய ஆற்றலை அதிசயமாக வெளிப் படுத்தியது. ஊசி வேர் என்ற உரை நயம் உயர் சுவையுடையது.

இவ்வாறு பெருமித நிலைகளை எல்லாம் பேசிய பின்பு சீலம் முதலிய செவ்விய குண நலங்களை விரித்தான்.

வெம்மைதீர் ஒழுக்கினன்; விரிந்த கேள்வியன்;
செம்மையோன; மன்மதன் திகைக்கும் செவ்வியன்.

இந்தப் பதங்கள் அமைந்துள்ள விதங்கள் விழைந்து உணர்ந்து வியந்து மகிழச் செய்கின்றன. விழுமிய குணங்களை விளக்க அழகிய மொழிகள் வெளி வருகின்றன.

தீது யாதும் இல்லாத நல்ல சீலம் உள்ளவன்; பெரியோர்களுடைய அரிய பல கேள்விகளை யுடையவன்; மனம் மொழி மெய்களில் யாதொரு கோட்டமும் யாண்டும் காணாத செவ்விய நேர்மையாளன்; மன்மதனும் வியந்து நோக்கி மயங்கித் திகைக்கும் படியான வடிவழகன் என வனைந்து புனைந்து கூறியுள்ளான்.

"எழுதலாகலாச் சுந்தரன்" என முன்னம் கூறினன்; இங்கே மன்மதன் திகைக்கும் செவ்வியன் என்றான்.

அழகையே அதிகமாக விழைந்து சொல்லி வருகிருன். உள்ளம் களித்து ஆவலோடு வந்த வரவின்படி வாய்மொழிகள் முந்தி வருகின்றன. மையல் நெஞ்சு தையல் நெஞ்சை வசப் படுத்தத் தாவி உழல்கின்றது.

மும்மையோர் பெருமையும் முற்றும் பெற்றியான்.

என்றது எம் போன்ற தவசிகள் அனைவரும் கடவுளர் எனக் கருதி வணங்கும் சிவன் முதலிய மூத்தேவரையும் ஒத்த பெருமையுடையவன் என்றவாறு. முற்றும் என்ற சொற் குறிப்பு மூவா முதல்வராகிய அம் மூவரது பெருமையும் முற்றி முடியும்படி அவன் பெருமை வெற்றி மிகுந்துள்ளது என்பதையும் உய்த்துணர நின்றது. இத் தகைய அரிய பெரிய மகிமைகளையுடையவன் என்று பெருமை தோன்றப் பேசி வந்தவன் இறுதியில் குறிப்போடு கூறியது உறுதியை உணர்த்தியது.

பல உலகங்களிலும் தலை சிறந்துள்ள அழகிய மங்கையர் பலர் அவனை மணந்து கொள்ள விழைந்து ஆவலோடு காதலித்துள்ளனர்; அவன் யாரையும் விரும்பாமல் தன் மேன்மைக்குத் தகுதியான ஒரு பருவ மங்கையைக் கருதி இருக்கிருன் என்று கருத்துடன் முடித்துள்ளான்.

## புகழ்ச்சி மொழிகள்

தவ உருவில் மறைந்திருந்து கொண்டு தன்னையே மறை முகமாக வியந்து புகழ்ந்து அவன் பேசியிருப்பது, நகை விருந்தாயிருப்பினும் மிகவும் சுவை சுரந்துள்ளது. அரிய சில மானச உண்மைகளும் வெளியறிய வந்தன.

துதி மொழிகளில் மனித உலகம் அதி மோகமாய் மயங்கிக் கிடக்கின்றது. தேக புத்தி ஏக முத்தியாய் மோகமுற்றுள்ளது.

உயிர்களின் இயல்புகள் மயல்கள் நிறைந்தன.

தன்னைப் பிறர் மதித்துப் பெருமை பாராட்ட வேண்டும் என்னும் ஆவலில் மனிதன் யாண்டும் எல்லை கடந்து நிற்கின்ருன்.

அந் நிலை எங்கும் பொங்கிப் பரந்திருத்தலால் இச்சகங்களும், வீணை புகழ்ச்சி மொழிகளும் உச்ச நிலைகளில் யாண்டும் கொச்சையாய் ஓங்கி வளர்ந்திருக்கின்றன. முகத் துதி செய்வதையே ஒரு கலையாகப் பயின்று பலர் பயன் பெற நேர்கின்றனர்.

உலக ஆடம்பரங்களை விரும்பித் தம் நிலைமையைத் தலைமையாகக் காட்ட அவாவிக் கடுகி உழல்பவரை இச்சகம் பேசுபவர் எளிதில் வசப் படுத்திக் கொள்ளுகின்றனர்.

"Adulation ever follows the ambitious; for such alone receive most pleasure from flattery." (Goldsmith)

"முகமனான புகழ்ச்சி மொழிகள் உயர் நலப் பிரியர்களையே என்றும் பரவசப் படுத்தி வருகின்றன" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

இல்லாத புகழ்மொழிகளைக் கள்ளமாக ஏற்றிச் சொன்னாலும் உள்ளம் நாணாமல் உவந்து கொள்ளுகின்றனர்.

உலோபியை, வள்ளல்; பேடியை, வீரன்; குரூபியை, அழகன்; எனின் அவர் உளம்மகிழ்ந்து கொள்வது வளமையாயுள்ளது.

உயர்வில் என்றும் உயிர்களுக்கு இயல்பாகவே பிரியம் ஆதலால் இங்ஙனம் மயலில் மயங்கி வீழ்கின்றன. அகத்தில் தகுதியில்லாத பொழுது முகத்துதி முழுதும் பழுதாகின்றது.

இச்சகம் பேசுபவரும், அதனை மிகவும் இச்சித்து நிற்பவரும் கொச்சை மாக்கள் ஆகின்றனர்.

"Flattery is telling the other man precisely what he thinks about himself" "பிறரை முகத் துதியாய்ப் புகழ்ந்து பேசுகின்றவன் தன்னை இன்னான் என்று வெளியே தெளிவாகக் காட்டிக் கொள்கின்றான்" என்னும் இது இங்கே நுணுகி நோக்கி இனிது சிந்திக்கவுரியது.

காலஞ்சென்ற நம் ஐந்தாம் ஜார்ஜு மன்னர் ஆறு நீதி வாக்கியங்களை நாளும் ஒருமுறை நியமமாக நினைப்பது வழக்கம். அவற்றுள் ஒன்று அடியில் வருவது: "Teach me neither to proffer nor receive cheap praise." "இச்சகம் கேளாமலும் பேசாமலும் இருக்கும்படி எனக்கு அருள் புரிக" என இறைவனை நோக்கி இங்ஙனம் வேண்டியிருக்கிறார்.

இச்சகவார்த்தைகளைப்பேசுவது பிச்சைஎடுப்பதினும் பிழைபாடுடையது என ஔவையார் வைதிருக்கிறார்.

தசமுகன் இங்கே பேசியது இச்சகம் அன்று ஆயினும் அளவு கடந்த புகழ்மொழிகளாய் இகழ்விளைந்து நின்றது. பிறர் இழிந்து

நின்று வீணே புகழ்ந்து பேசுவது இச்சகம். தன்னைத் தானே ஒருவன் வியந்து சொல்வது தற்புகழ்ச்சி. இரண்டும் இளிவுடையன ஆயினும் பின்னது பேரிழிவாய்ப் பெருநகைக்கு ஏதுவாயுள்ளது. நகையின் மிகுதியால் அதனை நாணாது பேசினான்.

கள்ளத்தவசியாய் வந்தவன் சீதையிடம் இங்ஙனம் பேசி அவளுடைய உள்ளம் தெரிய விழைந்து உரைகளை நயந்து உவந்திருந்தான். ஆசையால் அகம் ஊச லாடியது.

அடிகள் எங்கிருந்து எழுந்தருளியது? என இங்ஙனம் சானகி வினவியதற்கு அஞ்ஞான முனி யானவன் இவ்வாறு கூறினான்.

இனிய திருவாயிலிருந்து வெளி வந்த அந்த மதுர மொழியை நினைந்து மகிழ்ந்து தன் மகிமைகளை எல்லாம் வினய விநோதமாக வனைந்து வேணவாவோடு வெறி நிலையில் கூறினான்.

யாரும் அதிசய ஆச்சரியங்கள் அடைந்து மதி மயங்கும்படி அதி நயமுடன் விசித்திர சாதுரியமாய்ப் பேசிய அவ் வுரைகளைக் கேட்டதும் சீதை சொன்ன பதில் என்ன?

வேதமும் வேதியர் அருளும் வெஃகலாச்
சேதனை மன்னுயிர் தின்னும் தீவினைப் 3367
பாதக அரக்கர்தம் பதியின் வைகுதற்கு
ஏது என்? உடலமும் மிகைஎன்று எண்ணுவீர்! (1)

வனத்திடை மாதவர் மருங்கு வைகலிர்
புனத்திரு நாட்டிடைப் புனிதர் ஊர்புக 3368
நினைத்திலிர்! அறநெறி நினைக்கி லாதவர்
இனத்திடை வைகினிர் என்செய்தீர்? என்றாள். (2)

அந்த மாயத்தவசி மேலே கூறிய பேச்சுகளை எல்லாம் அமைதியாய்க் கேட்டிருந்த சீதை இறுதியில் இவ்வாறு அவனை நோக்கி வினவியிருக்கிறாள். அடுக்கித் தொடுத்து வானம் அளாவ அவன் கட்டிய மாயக் கோட்டை தீ எதிர்ப்பட்ட செத்தைகள் போல் உருவற முற்றும் ஒழிந்து போயது.

இந்திரனிலும் சிறந்தவன், மன்மதனிலும் அழகன், அகில வுலகங்களையும் ஆள்கின்றான், பெரிய போர் வீரன், மும் மூர்த்திகளையும் ஒத்தவன் என இன்னவாறு எவ்வளவோ மகிமைகளைத் திவ்வியமாக விரித்துப் பேசியிருக்கிறான்; அவற்றுள் யாதொன்

றும் சீதை காதில் ஏற வில்லை; "அந்த இலங்கை மன்னன் வேண்டு கோளுக்கு இசைந்து சிறிது காலம் அங்கே தங்கி இருந்தேன்" என்ற இந்த ஒரு வார்த்தையை மட்டும் பிடித்துக் கொண்டு அவனை இடித்துப் பேசலானாள்.

இலங்காதி பதியான அந்தச் சக்கரவர்த்தியை வியந்து புகழ்ந்து மகிழ்ந்து கொள்வாள் என நினைந்து கூறினான்; அதற்கு நேரே மாறான பலன் விரைந்து எழுந்தது.

கண்ணியமாக எண்ணி அருளுவாள் என்று தான் கருதி முயன்ற எண்ணத்தில் மண் விழுந்தது. நல்ல சூழ்ச்சியோடு நாடிப் பேசினான்; அது பொல்லாத கேடாய்ப் புரையோடி நின்றது.

விதி முறை மறந்து அதி பாதகங்களைச் செய்கின்ற பாவிகள் என அரக்கர் வருக்கத்தைச் சீதை வெறுத்திருக்கிறாள்.

மன் உயிர் தின்னும் தீவினை என்றதனால் அவரது கொலை பாதகங்களையும் புலை நிலைகளையும் நினைந்து வருந்தியுள்ளமை அறிந்து கொள்ளலாம். உள்ளத்தில் இருந்தது உரையில் வந்தது.

தன் உயிர் என மன்னுயிர்களைப் பேணித் தண்ணளி புரிந்து வரும் புண்ணியவதி ஆதலால் இரக்கம் அற்ற வருக்கத்தை இளிவாக அருவருத்து வெறுக்க நேர்ந்தாள்.

எவ் வழியும் கொடிய செயல்களையுடைய தீயவர்களிடம் தூய்மையான இனிய மாதவர் எவ்வாறு சேர்ந்திருந்தார்? என இவ்வாறு சிந்தனை செய்து திகைத்தாள். அதனைத் தீர விசாரிக்கத் துணிந்தாள்; நேரே கேட்டாள்.

"பாதக அரக்கர்தம் பதியின் வைகுதற்கு
ஏது என்? உடலமும் மிகை என்று எண்ணுவீர்!"

அந்தக் கள்ளத் தவசியை நோக்கி இந்தக் கற்பரசி கேட்டுள்ள இக் கேள்வி, நம் உள்ளங்களை உற்று நோக்கச் செய்கின்றது.

தேவரும் ஏவல் செய்யும் திருவும் எழிலும் முதலிய விழுமிய நிலைகளை விழைந்து கூறியது, "யார் அந்த அரச குமாரன்?" என வியந்து கேட்பள் என்று நினைந்தேயாம். அவன் உறுதியாய் எதிர்பார்த்தபடி அவற்றுள் எதையும் ஒரு சிறிதும் இக் குலமகள் கவனிக்கவில்லை. வஞ்ச வேடன் வைத்த குறிகள் நெஞ்சின் அருகும் அணுகாமல் நெடுந்தூரம் விலகி மடிந்து போயின.

இந்த உத்தமியின் புனித உள்ளமும் இனிய இயல்பும் கம்பீர நிலைமையும் தரும சீலங்களும் இங்கே வெளியாகி யுள்ளன.

அரிய பெரிய செல்வ நலங்களை யுடைய அரச திருவினன்; உருவில் உயர்வினன் என ஒருவனை இங்ஙனம் சிறப்பாக வியந்து கூறின், எவ்வளவு பண்பாடுகள் எய்தியிருந்தாலும் பெண்கள் அந்த அதிசய அழகனைக் குறித்து யார் அவர்? என இவ்வளவேனும் உடனே வினவ நேர்வர்.

ஈண்டு அந்த வாசனையே யாதும் காணோம்; தூய்மையும் பெருமிதமும் துறைகள் தோறும் பெருகி இறைமை நிறைந்து நிற்கின்றன. குண சீலங்களே எவ்வழியும் நினைவில் எழுகின்றன.

நல்ல மாதவர் பொல்லாத பாதகரிடம் போய் ஆதரவுடன் இருந்தது அதிசய மாயது. ஏன் அப்படி இருந்தீர்? என்று இப்படிக் கேட்டதோடு அமையாமல் உண்மையான துறவியின் இலக்கணத்தையும் எண்மையாக உணர்த்தி யருளினாள்.

உடலமும் மிகை என்று எண்ணுவீர்! என்றது உயர் தவசியின் இயல்பையும் கடமையையும் கருதி வந்தது.

உலகத்தை அறவே துறந்து பரத்தையே நோக்கி நிற்பவன் துறவி என்னும் சிறப்பை அடைகின்றான். பிறவி நீங்கிப் பேரின்பத்தை அடைய அவாவியுள்ளவனுக்கு அடைந்துள்ள தேகமும் தடையா யிருத்தலால் உடலை ஒரு சிறைக் கூடமாகவே கருதி ஒருமுகமாய் அவன் வெறுத்து நிற்கின்றான்.

தன் உயிர்க்கு இடமாயுள்ள உடலையே பகை ஆகவும், மிகை ஆகவும், பாரமாகவும் கருதியுள்ள துறவி உலகில் வேறு எந்தப் பொருளை விரும்புவன்? யாருடைய உதவியை நாடுவன்? யாதொரு சார்பையும் எவ் வகையிலும் சேராமல் திவ்விய தவ நிலையில் செவ்வியுற்றிருக்க வேண்டிய நீர் வெவ்விய தீயவர் கூட்டத்தில் சேர்ந்திருந்தது மிகவும் தீமையாம் என இடித்து அறிவுறுத்த மேற்குறித்த வாக்கியத்தை எடுத்துக் காட்டினாள்.

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை. (குறள், 345)

என்னும் பொது மறையை அடியொற்றி இது வந்துள்ளது.

ஞான சீலனை சனகன் மகள் ஆதலால் ஞானிகளின் இயல்பை நன்கு தெரிந்திருக்கின்றாள். மெய்ஞ் ஞானிகளுடைய மேலான நிலைமையைப் பொய்ஞ்ஞானியாய்ப் புலையாடி வந்து நிலை நாடியுள்ளவனிடம் போதிக்க நேர்ந்தாள்.

"அரிய தவ சீலத்தை மேற்கொண்டு பெரிய முனிவராயுள்ள தாங்கள் தங்கியிருந்த இடத்தைக் கேட்கவே எனக்கு வெறுப்பும் வியப்பும் உண்டாகின்றன. புனித ஒழுக்கமுடையவர் பொல்லாத இழுக்கரிடை வழக்கியும் இருக்க ஒல்லார்; நீர் நேர்ந்திருந்ததை நினைந்து என் நெஞ்சம் வருந்துகின்றது. சேராத இடம் சேரின் யாராயினும் சீர் அழிந்து படுவர்." என ஓரறிவு மொழிந்தாள்.

அறநெறி நினைக்கிலாதவர் இனத்திடை வைகினிர்!

என இங்ஙனம் இடித்துக் கூறியிருக்கிறாள்.

"தரும சிந்தனையே இல்லாத பாவிகள் கூட்டத்தில் நீங்கள் கூடியிருந்தது கேட்டுக்கே இடமாம். மனத்தின் நிலைமை என்றும் இனத்தின் நிலைமையையே பொறுத்திருக்கின்றது. வனத்தில் வாழ்வது; தனித்து இருப்பது; நல்ல சாதுக்களோடு அமர்ந்து தத்துவ விசாரம் புரிவது; இத்தகைய உத்தம நிலைகளை எல்லாம் விட்டுச் சித்தம் கொடியரான தீயரிடம் போயிருந்தது தீமையே யாம்." என இவ்வாறு சீதை கூறவே, அவன் அதி சாதுரியமாக மாறு கூற நேர்ந்தான்.

மாயத் தவசி:- அம்மா! நீர் உண்மையை உணராமல் பேசுகின்றீர்; ஆராய்ந்து பாராமல் யாரையும் எதையும் இளிவாக இகழ்ந்து பேசலாகாது. அரக்கர் மிகவும் நல்லவர்; அஞ்சா நெஞ்சினர். நய வஞ்சகரான அமரர்கள் அரக்கரைப் பொல்லாதவர் என்று சூழ்ச்சியோடு பழித்து வருவது வழக்கம். அப் பழி மொழிகளைக் கேட்டு உங்கள் உள்ளம் மாறு பட்டிருப்பதாகத் தெரிகிறது. தேவரினும் அவர் நல்லவர்.

சீதை:- நஞ்சை அமுதம் என்பதுபோல் அடிகள் சொல்லுவது அதிசயமாயுள்ளது. குணங்களைக் கொண்டே பொருள்கள் மதிக்கப் படுகின்றன. எவ் வழியும் யாண்டும் தீவினைகளையே புரியும் பாவிகளைப் புண்

ணிய சீலரான நீங்கள் புகழ்ந்து பேசுவது ஈண்டு எனக்கு வியப்பா யிருக்கின்றது.

மாயத் தவசி:- நான் நீண்ட காலமாக அவர்களோடு பழகி யிருக்கிறேன். அரக்கரை இரக்கம் இல்லாதவர் என்று சொல்பவரே இரக்கம் அற்றவர். நல்லவர்க்கு நல்லவர்; தீயவர்க்குத் தீயவர்; பழகினவர்க்குத் தம் உயிரையும் கொடுப்பர்; பழுது செய்ய நேர்ந்தால் அவரது உயிரினை எடுப்பர். நேர்மையும் வீரமும் மானமும் உண்மையும் திண்மையும் வண்மையும் அவர்களிடம் நிறைந்திருத்தல் போல் வேறு எவரிடமும் நான் கண்டதில்லை.

சீதை:- அடிகளுடையது மாயக் காட்சியாய் உள்ளதே!

மாயத் தவசி:- உள்ளதையே உண்மையாகச் சொல்லுகின்றேன். நான் நேரில் கண்ட அனுபவங்களைத் தவிர வேறு கூறவில்லை. என் போன்ற தவசிகளிடம் அவர் காட்டிவரும் அன்பும் ஆதரவுகளும் அளவிடலரியன. நல்லவரைக் கெட்டவர் என்றும், கெட்டவரை நல்லவர் என்றும், சூரரைத் துட்டர் என்றும், கோழைகளை வீரர் என்றும், சோம்பேறிகளைச் சாதுக்கள் என்றும் பேதை உலகம் பேசிவரினும் மேதை உலகம் உண்மையை உணர்ந்து கொள்ளும். அக் கொள்கையை நீர் அமைதியாய் ஆய்ந்து தெரிந்து கொள்ள வேண்டும்.

சீதை:- உலகம் பேதைமை உடையதாயினும் உண்மையே அதன் தலைமேல் ஒளி செய்து உலாவுகின்றது. இறைவன் எங்கும் நிறைந்திருத்தலால் அவன் முன்னிலையில் பொய் மங்கி மடிகின்றது. மெய் நின்று ஒளிர்கின்றது. சத்தியமானது தான் சன சமுதாயத்தில் நித்தியமாய் நிலைத்து விளங்கும்.

மாயத் தவசி:- அரக்கர் நல்லவர் என்பது சத்தியம்; ஆதலினாலே தான் சந்நியாசியான நானும் அம் மரபினரைப் புகழ்ந்து பேச உள்ளம் உவந்து நேர்ந்தேன்.

சீதை:- வேம்பைக் கரும்பு என்று வேதா சொன்னாலும் அஃது இனித்து விடாது; தீயவர்களோடு சேர்ந்து பழகினதனால் உங்கள் அறிவு பாழாய் இங்ஙனம் விபரீதம் அடைந்திருக்கிறீர்கள்.

மாயத் தவசி:- இயற்கையினால் அன்றிச் செயற்கையினால் யாரும் கெடுவதில்லை. வேம்பின் இலையில் பொதிந்து பழுக்க வைத்தாலும் மாங்கனி மதுரம் கெடாது.

சீதை:- மாம்பழம் தனியே தன் இனத்தோடு சேர்ந்திருந்தால் சுவையும் உருவமும் இனிதாயிருக்கும். அக்கனியை உப்புப் பானையில் வைத்து விட்டால் இனிமை கெட்டு, உருவம் மாறி, ஊறுகாய் என்ற பேரும் ஏறும். அதுபோல், மனிதனும் சேராத இடத்தில் சேர்ந்தால் சீரழிந்து பேரிழந்து சிறுமை அடைய நேர்கின்றான். சாது சங்கத்தில் சேர்ந்து இருந்தால் உங்களுக்கு இந்தத் தீது வந்திராது; தீயினம் தீயினும் தீயது. இனிமேலாவது நீங்கள் ஒதுங்கி வாழ்வது நல்லது.

மாயத் தவசி:- அரக்கருடைய தலைமை நிலைமைகளை நீர் ஒரு சிறிதும் தெரிந்து கொள்ள வில்லை; உலகம் முழுவதும் அவர் ஆணை வழி நடக்கின்றது. அமரரும் அஞ்சி நடுங்கி அடங்கி ஒடுங்கி அவர்க்கு ஏவல் செய்கின்றனர். அவரது ஆணையை மீறி யாரும் ஏதும் செய்ய இயலாது. அவர் ஆளும் சாதியர்; அவரல்லாத பிறர் எல்லாரும் அடிமை வாழ்வினர்.

சீதை:- அரக்கர் என்னும் அக் கொடிய வருக்கம் அடியோடு அழிந்து தொலையும் காலம் நெருங்கியுள்ளது. எனது நாயகன் வனவாசம் முடியுமுன் அந்த இனம் நாசம் அடைவதை நீங்கள் கண்ணார நேரே கண்டு கொள்ளலாம்.

மாயத் தவசி:- உன் கணவனை நீ மிகவும் பெரிதாக மதித்திருக்கின்றாய்! நிலைமை தெரியாமல் புலம்புகின்றாய்; யானைத் திரளை முயலும், புலியினத்தைப் பூனையும்,

சிங்கக் குழுவை மானும், கொல்ல வல்லன வாயின் அரக்கரை மனிதன் வெல்ல வல்லவ ஞவான். மலைகளை மண்ணாங்கட்டியால் நிலை குலைக்கலாம் என்பது போல் பேதைமையோடு பேசுவது சிரிப்பிற்கே இடமாயுள்ளது.

சீதை:- என் ஆண்டவன் நிலைமையை நீர் ஒரு சிறிதும் உணரவில்லை. விராதன் கரன் முதலிய அரக்கர் திரள் எல்லாம் எரிபட்ட பஞ்சுபோல் அவர் முன் அழிந்து பட்டதைக் கேள்விப் பட வில்லையா? கொடிய இராக்கத குலத்தை வேரோடு களைந்து எறிந்து இந்த உலகத்தை அந்த வீரமூர்த்தி பாது காக்க வந்துள்ளது; அவ் வுண்மையை விரைவில் காணலாம். வேளை நெருங்கி நிற்கின்றது.

வாளரி வள்ளல் தன்ஞல் இலங்கைமா நிருதர் எல்லாம்
கேளொடு மறியு மாறும், வானவர் கிளரு மாறும்,
நாளையே காண்டிர் அன்றே நவையிலிர் உணர்கி லீரோ
மீளருந் தருமம் தன்னை வெல்லுமோ பாவம்? என்ருள்.

சானகி இங்ஙனம் சொல்லவே அவ் வஞ்சவேடன் நெஞ்சத்தில் மானமும் சினமும் மண்டி எழுந்தன. அரக்கர் குலத்தைக் கருவறுத்து அமரர் குலத்தை வாழ்விக்க இராமன் வந்திருக்கின்ருன் என்றதைக் கேட்டுக்கொண்டு அவனல் சகித்திருக்க முடியவில்லை. உள்ளம் கொதித்துத் தன்னையும் மறந்து சீறினன்.

சீறினன் உரைசெய்வான்அச் சிலைவலிப் புல்லியோர்கட்கு
ஈறுஒரு மனிதன் செய்தான் என்றுஎடுத் தியம்பி ஞயேல்
தேறுதி நாளையேஅவ் இருபது திண்டோள் வாடை
வீறிய பொழுது பூளை வீஎன வீவன் அன்றே. (1)

மேருவைப் பறிக்க வேண்டின், விண்ணினை இடிக்க வேண்டின்,
நீரினைக் கலக்க வேண்டின், நெருப்பினை அவிக்க வேண்டின்,
பாரினை எடுக்க வேண்டின், பலவினை சிலசொல் ஏழாய்!
யார்எனக் கருதிச்சொன்ஞய் இராவணற்கு அரிதுஎன் என்ருன்.

வஞ்சத் தவசியின் நெஞ்சத்தையும் நிலைகளையும் ஆரவாரத்தையும் ஆங்காரத்தையும் ஆத்திரத்தையும் இங்கே நேரே காண்கின்ரேம். சானகி வாயிலிருந்து வந்தவார்த்தை தனக்கு மானக்

கேடாய்த் தோன்றவே இவ்வாறு உருத்து மூண்டு மறுத்து உரைத்தான். கரன் முதலிய சில புல்லரை வென்றுவிட்டான் என்று சின்னமனிதனைச் சீராட்டிப் பாராட்டுகின்றாய்! வெள்ளியங் கிரியை வேருடன் அள்ளிய அம் மன்னர்பிரான் என்ன மகிமை யுடையவன்! என்பதை யாதும்எண்ணவில்லை என மோதிநின்றான்.

இருபது திண்டோள் வாடை என்றது தசமுகனது அதிசய ஆற்றலைக் குறித்து வந்தது. அவனது விசய வெற்றிகளை வெகு வேகமாய் வீறுடன் கூறினான். "இராவணன் ஆகிய சூறைக் காற்று மண்டி எழுந்த பொழுது இராமன் பூளைப் பூவைப் போல் ஒழிந்து, போன இடமும் தெரியாமல் அழிந்துபோவான். பிர சண்ட மாருதத்தின் எதிரே இலவம்பஞ்சு என்னபாடுபடும்! நிலை மையைக் கொஞ்சம் எண்ணிப்பார்! அந்த இலங்கேசனுடைய அருந்திறலாண்மையை யாதும்உணராமல் பேதைமதியால் பிழை படப் பேசினாய்! ஈசனும் அவனோடு எதிர்ந்திட எண்ணான். அவனுடைய வீரபராக்கிரமங்களை யார் அளவிடவல்லார்? மேரு மலையைப் பறிக்கவேண்டுமா? அண்டகோளத்தை இடிக்கவேண் டுமா? கடல்நீரைக் கலக்க வேண்டுமா? அக்கினியை அவிக்க வேண்டுமா? பூமியைப் பெயர்க்க வேண்டுமா? வேறு என்ன செய்யவேண்டும்? இராவணன் எண்ணிய எதுவும் அவன் முன் எளிதாக இழிந்துபடும்; அவனால் செய்யமுடியாதன யாதும் இல்லை. வையமும் வானமும் அந்த ஐயனுடைய அடிபணிந்து கிடக்கின்றன. யார் என்று கருதி அவ்வீரவேந்தனை விவேகம் இல்லாமல் கூறினாய்!" என இவ்வாறு ஆவேசமாய்ச் சீறினான்.

## தேக அபிமானம்.

தவசிபோல் கபடவேடம் போர்த்துவந்தவன் தன்குலத்தை இளித்துப்பழிக்கவே சுளித்துத் துடித்தான். உயிரின் சுபாவங் களை இங்கே உணர்கின்றோம். சாதி மதம் தேசம் மொழி முத லியவற்றில் எவனுக்கும் அபிமானங்கள் இயல்பாக அமைந்திருக் கின்றன. அவற்றுள் எதையேனும் குறைத்துப்பேசினால் அவன் கொதித்துச் சீறுகின்றான். தன்னுடையது என்னும் உணர்ச்சி உள்ளத்தில் பதிந்திருத்தலால் உரிமைகளில் ஒரு தனி ஆர்வ முடன் மனிதன் ஊக்கி நிற்கின்றான். யான் எனது என்பன பிறப் புரிமைகளாய் மக்களிடம் யாண்டும் பெருகி யிருக்கின்றன.

எல்லாவற்றையும் துறந்த துறவிபோல் மறைந்து வந்தவன் தன் இனத்தை இளித்துக் கூறவே மனத்தைத் திறந்து காட்டினான். ஒவ்வொருவருடைய உள்ளங்களும் உணர்ச்சிகளும் அவரவருடைய சொல்லுகளில் துலங்கி விடுகின்றன.

தருமம் தன்னை வெல்லுமோ பாவம்?

என்றதில் சீதையின் உள்ளத்தைக் காண்கின்றோம். தன் நாயகன் தருமசீலன்; அவன் எதிரே பாவிகள் பாழாவார்; அவனை யாராலும் எவ் வகையிலும் வெல்ல முடியாது; அவனை யாண்டும் வெற்றி வீரனாய் என்றும் விளங்கி நிற்பான் என இக் குலமகள் உளம் துணிந்திருத்தலை இவ் வுரையால் உணர்ந்து கொள்கின்றோம். கொண்டானைக் கொண்டாடி மகிழ்கின்றாள்.

இராமன் அபாயத்தை அடைந்து அழிந்துள்ளான் என்று அலமந்து துடித்து, இலக்குவனை விலக்கி முடுக்கிக் கலக்கமுற்றிருந்த சீதை இப்பொழுது இங்கே இப்படித் துணிந்து பேசியிருப்பது வியப்பா யுள்ளது.

வாள்அரி வள்ளல் தன்னால் இலங்கைமா நிருதர் எல்லாம்
கேளொடு மறிவர்; வானவர் கிளர்வர்; நாளையே காண்டிர்!

என இவ்வளவு தெளிவும் துணிவும் இவ் வேளையில் சானகிக்கு எவ்வாறு வந்தன? உற்ற கவலைகள் முற்றும் எங்கே போயின?

கொண்ட கணவனுக்கு அழிவு நேர்ந்தது என்று குலைநடுங்கி அழுது பதைத்தவள் இந் நிலையில் தலைநிமிர்ந்து பேசியிருக்கிறாள்.

"இராமனுக்கு யாதொரு அபாயமும் நேராது; யாரும் அவனுக்கு இடர் செய்ய இயலாது; உலகங்கள் நிலை குலையாமல் நிலையாய் நிற்றலே அக் கோமகன் சுகமா யிருக்கின்றான் என்பதற்கு அறிகுறி" என இளையவன் முன்னம் பல வகையாகத் தேற்றி உணர்த்திய உறுதி மொழிகள் இத் திருமகள் உள்ளத்தில் ஒரு துணிவினை விளைத்துள்ளது என்று தெரிகின்றது.

கவலை மிகுந்த நெஞ்சினளாய்க் கலுழ்ந்து மறுகி இருந்தவள் தவசி வந்து தவறாகப் பேசவும் உணர்ச்சி பொங்கி ஊக்கி உரைத்தாள். வீரபத்தினி என்பது விளங்கி நிற்கின்றது.

மேருவைப் பறிப்பான், பாரினை எடுப்பான், விண்ணினை இடிப்பான் என இராவணனுடைய புய பல பராக்கிரமங்களைப்

பல படியாகப் பாராட்டி ஆங்காரத்தோடு அவன் கூறவே, சீதை அமைதியாகச் சொன்னபதில் அதி நளினமாயிருந்தது. பொய்த் துறவி உக்கிர வீரமாய் உருட்டிப் பேசுவதும், பெண்ணரசி பக்குவமாய்ப் பதில் சொல்லுவதும் இயற்கை உணர்ச்சிகளை விளக்கி நிற்கின்றன. தனது உறுதி யுரைகளுக்கு அரண்கோலி எதிரி முரண் எளிது அழிய விநயமாய் இனிது பேசி யிருக்கிறாள்.

அரண்தரு திரள்தோள் சால உளஎனின் ஆற்றல் உண்டோ?
கரண்டநீர் இலங்கை வேந்தைச் சிறைவைத்த கழற்கால் வீரன்
திரண்டதோள் வனத்தை எல்லாம் சிறியதோர் பருவம்தன்னில்
இரண்டுதோள் ஒருவன் அன்றோ மழுவினால் எறிந்தான்என்றாள்

இருபது தோள்களையுடைய பிரசண்ட மாருதம் என இராவணனை அவன் வியந்து கூறியதற்கு இது எதிர் மறுப்பாய் எழுந்தது. வாதியின் வாதத்தை ஏதுவோடு எதிர்த்தது.

கார்த்தவீரியன் என்னும் மன்னன் ஆயிரம் தோள்களை யுடையவன். சிறந்த வரபலங்கள் வாய்ந்தவன். அவன் இராவணனை வென்றான். அதனால் இராவணசித்து என்று பேர்பெற்று நின்றான். அந்த மகாவீரன் பரசுராமனால் அழிந்தான். அப் பரசுபாணி இராமன் எதிரே தோல்வி அடைந்துபோயினான். இவருள் வீர வெற்றியாளர் யார்? இந்தச் சரித்திர நிகழ்ச்சி அவன் உள்ளத்தில் உருத்தும்படி குறித்து உரைத்தாள்.

திரண்ட தோள் வனத்தைஎல்லாம் இரண்டுதோள் ஒருவன் மழுவால் எறிந்தான்; ஆயிரம் தோளானைக் கொன்ற அம் மழுவாளியை வென்றவன் எதிரே இருபது தோள்களையுடையவன் பொன்றி ஒழிதல் ஒரு பொருளோ? என்பது குறிப்பு.

மறிக்கும் கயற்கண்ணி பங்காளன் வாழ்வெள்ளி மால்வரையைப்
பறிக்கும் கபடன் பணைப்புயமோ, அவன் பைங்கடகம்
செறிக்கும் புயம்செற்ற ஆயிரம் திண்புய மோ, அவற்றைத்
தறிக்கும் திறமழுவோ அரங்கா சயத்தாருடைத்தே?

(திருவரங்கத்து மாலை, 38)

மேற்குறித்த சரிதம் இதன்கண்ணும் வந்துள்ளமை காண்க.

தோள் சால உள எனின் ஆற்றல் உண்டோ?

என்னும் இக்கூற்றில் உள்ள இகழ்ச்சிக் குறிப்பு கூர்ந்து நோக்கத் தக்கது. பஞ்சுப்பொதி சாலப் பருத்திருப்பினும் ஒரு நெருப்புப்

பொறியால் எரிந்து தொலையும்; இராவணன் இருபது தோள்களு டையவனாய்த் தேகம் கொழுத்துப் பெருத்திருந்தாலும் இராம னால் எளிதே அழிந்து ஒழிவான் என்னும் குறிப்போடு இங்ஙனம் கூறவே, மாயத் துறவிபோல் மாறாய் மருவி இருந்த அவன் பேயைப் போல் மீறிப் பேரொலி செய்து எழுந்தான்.

என்றிவள் உரைத்தலோடும் எரிந்தன நயனம்; திக்கிற்
சென்றன திரள்தோள்; வானம்தீண்டின மகுடம்; திண்கை
ஒன்றொடு ஒன்று அடித்த; மேகத்து உருமென எயிற்றின் ஒளி
மென்றன; வெகுளி பொங்க விட்டது மாய வேடம்.

இலங்கை வேந்தன் குலத்தோடு விரைந்து அழிவான்; மேரு வைப் பறிக்கும் அவனது தோள் ஆற்றல் முதலியன இராமன் வில் எதிரே பாழாய்ப்போம் என்று சீதை சொல்லவே மாதவன் போல் இருந்தவன் உள்ளம் கொதித்தது; துள்ளி எழுந்தான்; கோப ஆவேசத்தில் தன்னை மறந்து துடித்து எழவே அவன் கொண்டிருந்த மாயவேடம் தானாகவே நீங்கிப் போயது.

கண்கள் சிவந்து எரிந்தன; தோள்கள் விரிந்து சென்றன; தலைகள் மகுடகோடிகளுடன் நிமிர்ந்து நீண்டன; கைகள் ஒன் றோடு ஒன்று கடுத்து அடித்தன; பற்கள் மடுத்துக் கடித்தன என்றமையால் அவனுடைய சினக்கொதிப்பும் மனத்துடிப்பும் ஆங்காரமும் அடலாற்றலும உலகம் அறிய ஓங்கி நின்றன.

தள்ளாத கிழவனாய்ச் சாதுபோல் அடங்கியிருந்தவன் உள் ளம் சீறவே உண்மை உருவம் வெளியாயது.

தான் மருவிவந்த வஞ்சவேடத்தை நீக்கவேண்டும் என்று அவன் நினைக்கவில்லை; மண்டிய மானச் சினத்தனாய் ஆவேசங் கொண்டு ஆங்காரத்தோடு எழுந்தபொழுது பொய்த்தோற்றம் புறம்போயது; மெய்த் தோற்றம் மேவி நின்றது. நேர்ந்த அந் நிலைமையை ஓர்ந்துகொள்ள விடுத்தனன் என்னாமல் விட்டது மாய வேடம் என்றார். அவன் விரும்பித் தொட்டது விரும்பாமல் விட்டது.

தவவேடம் தாங்கி வந்ததையும், அதனை நீங்கி நின்றதையும் விளக்கியுள்ள பாங்குகளை ஊன்றி உணரின் உவகைகள் ஓங்கி மிளி ரும். எல்லாக் காட்சிகளையும் சொல்லால் காட்டி எண்ணங்களை உவகையில் ஆட்டி உணர்வுநலங்களை ஊட்டி ஒளிபுரிந்து வருகிறார்.

## சீதை சிந்தை கலங்கியது.

முதிய தவசியாய் வந்தவன் அரிய இரத்தின கிரீடங்கள் ஒளிவீசப் பெரிய சக்கரவர்த்தியாய் உக்கிரவீரத்துடன் எதிரே நிற்பதைக்கண்டதும் சீதை கொண்ட அலமரல்கள் யாரும் தெளிவாக வெளியே விண்டு கூற முடியாதன.

மாய உருவம் திடீர் என்று மறைந்து வேறு வடிவம் விசித்திரமாய்த் தோன்றவே, யாதும் தோன்றாமல் மெய்ம்மறந்து போயினாள். மதிமயங்கி நின்றவள் மறுகி நோக்கி, "என்னை இது!" எனத் தத்தளித்துத் தவித்தாள். நிலைகுலைந்து நெஞ்சம் கலங்கி அன்று இக்குலமகள் பட்டபாட்டைப் பலமொழிகளால் பாரித்துக் கூறாமல் ஒரு குறிப்பால் சுட்டிவிட்டார்.

கூற்றம்வந்துஉற்றகாலத்து உயிர்எனக்குலைவுகொண்டாள்

இவ்வுரை விளக்கம் உணர்வூற்றமாய் ஒளிர்கின்றது. எமனை நேரே கண்ட உயிர்போல் இராவணனைக் கண்டு சீதை நின்றாள் என்றமையால் இக்குலமகள் அதுபொழுது குலைநடுங்கியுள்ள நிலைகளை உணர்ந்து நெஞ்சம் கவல்கின்றோம்.

## இராவணன் தேற்றி மொழிந்தது.

அஞ்சி அலமருகின்ற இப்பதிவிரதையை நோக்கி அவ் வஞ்சன் பெருமிதத்தோடு ஆறுதல் கூறினான். ஆசை நோயால் அறிவு பாழ்போன அவன் வெருட்டியும் மருட்டியும் அது பொழுது பேசிய வார்த்தைகள் அயலே வருகின்றன.

விண்ணவர் ஏவல் செய்ய வென்றஎன் வீரம் பாராய்
மண்ணிடைப் புழுவின் வாழும் மானிடர் வலியர் என்றாய்
383 பெண்எனப் பிழைத்தாய; அன்றேல்உன்னையான் பிசைந்துதின்ன
எண்ணுவென் எண்ணிற் பின்னைஎன்னுயிர் இழப்பென் என்றான்.

குலைவுறல் அன்னம்! முன்னம் யாரையும் கும்பிடா என
தலைமிசை மகுடம் எனனத் தனித்தனி இனிது தாங்கி
384 அலகில்பூண அரம்பைமாதர் அடிமுறை ஏவலசெய்ய
உலகம் ஈரேழுமஆளும செலவதது்ள உறைதி என்றான் (2)

மையல்வெறி மண்டிய அவ்வெய்யவன் இச்செய்யவளை அச்சுறுத்தித் தன் இச்சையைப் பச்சையாக இப்படி வெளிபபடுததி

யுள்ளான். அவனுடைய எண்ணங்களும் பேச்சுகளும் செயல்களும் நெடிய கொடிய செருக்குகளாய் நிலை மீறி நிற்கின்றன.

"ஏ சீதா! என்னை யார் என்று நினைத்தாய்? என்னுடைய வீரபராக்கிரமங்களை நீ யாதும் அறியவில்லை. மண்ணில் வாழும் புழுவைப் போன்ற மானிடர் என்னைவெல்வர் என்று சொன்னது எவ்வளவு மடமை! நீ பெண் ஆதலினால் பிழைத்தாய்; இப் பிழைமொழியைப்பொறுத்தேன்; உன்னைத்தவிர வேறு யாரேனும் இவ்வாறு சொல்லியிருந்தால் இதற்குள் அவரும் அவரது குலத்தவரும் அழிந்துபோயிருப்பர்; இனிமேலாவது நீ தெளிந்து கொள்; உனக்கு யாதொருஇடரும் நேராது; அஞ்சி அயராதே; அமரரும் அடிதொழுகின்ற எனது முடிமேல் வைத்து உனைச் சுமந்து பேணுவேன்; அரம்பையர் அனைவரும் ஊழியம் புரிய நீ ஒரு பெரிய சக்கரவர்த்தினியாய் அரிய போகங்களை அனுபவிக்கலாம்; பதினாலு உலகங்களுக்கும் நீ தனி அரசி; என்னைக்கண்டது முதல் இந்தக் காட்டுவாழ்க்கை உன்னை விட்டு ஒழிந்தது; உனது கட்டழகு பயனுடையதாயது. புறப்படு; போவோம்." என அக் காமப் பித்தன் பிதற்றுகின்றான்.

யாரையும் கும்பிடாஎன் தலைமிசை இனிது தாங்கி.

என்றது தனது பழைய தலைமையையும், புதிய நிலைமையையும் ஒருங்கே தெரிய விளக்கினான். தேவர்முதல்யாவரும் தன்னைக் கும்பிட்டு வணங்கத்தான் தனிமுதல் தலைவனாய் வீற்றிருப்பவன்; வேறு எவரையும் யாதும் கும்பிடாதவன் எனத் தன்னுடைய உயர் மேன்மையை உரைத்து, அத்தகைய நான் உன்னை இத்தகைய நிலையில் வைத்துப் போற்றுவேன் என வாழ்க்கைத் திட்டத்தை வகுத்துக் காட்டினான்.

சிறந்த மணி மகுடங்கள் ஒளிர்கின்ற என் தலைகளில் நீயே இனிமேல் முடி மணியாய் மிளிர்வாய் என்றது எல்லா அரசுரிமைகளையும் அடைந்து உயர்குல அரசியாய் நீ இருந்து வாழ நான் யாதொரு குறைவும் எவ்வழியும் நேராமல் உன் ஏவலின் படியே ஆவலோடு புரிந்து வருவேன் எனத் தன் அன்புரிமையை வெளிப்படுத்திய வாறும இன்பவாழ்வின் நிலையைபு காட்டினான்.

## சீதை சீறி நின்றது.

"கண்ணினும் உயிரினும் அருமையாக எண்ணி இனிமை யாகப் பேணுவேன்; இந்த இன்ன வாழ்க்கையை இகழ்ந்து ஒழித்து ஈரேழு உலகங்களையும் ஆளும் பேரரசியாய் மன்னி மகிழ எழுந்தருளுக" என்று அப் பேதை மகன் ஓதி நின்றான்.

அதைக் கேட்ட சீதை யாது செய்தாள்? என்ன சொன்னாள்?

செவிகளைத் தளிர்க்கை யாலே சிக்குறச் சேமம் செய்தாள்;
கவினும்வெஞ் சிலைக்கை வென்றிக் காகுத்தன் கறபினேனைப்
புவியிடை ஒழுக்கம் நோக்காப் பொங்கெரிப் புனிதர் ஈயும் 3385
அவியைநாய் வேட்டது என்ன என்சொன்னாய் அரக்க என்னா:

புன்னுனை நீரில் நொய்தாப் போதலே புரிந்து நின்ற
இன்னுயிர் இழத்தல் அஞ்சி இற்பிறப்பு அழிதல் உண்டே
மின்னுயிர்த்து உருமிற் சீறும் வெங்கணை விரவா முன்னம் 3386
உன்னுயிர்க்கு உறுதி நோக்கின் ஒளித்தியால் ஓடி என்றாள்.

(சடாயு உயிர் நீத்த படலம், 69-70)

மாய வேடத்தை விட்டு அத் தீயவன் நின்றதைக் கண்டதும் திடுக்கிட்டுத் திகில் கொண்டு அலமந்தவள், அந்த ஈன வார்த்தையைக் கேட்டதும் மானமும் வெகுளியும் மண்டி உக்கிர தீரமாய் உருத்து இவ்வாறு பேசியிருக்கிறாள். பேச்சின் வேகத்தையும் விவேகத்தையும் நோக்கி வியக்கின்றோம். கற்பின் அற்புத ஆற்றல் அதிசய ஊக்கத்தை விளைத்து நிற்கின்றது.

செவிகளை இறுகப் பொத்திக் கொண்டது, அந் நீச மொழிகளை மேலும் யாதும் கேளாது ஒழிக என்னும் குறிப்பும் அருவருப்பும் வெறுப்பும் தெளிவுற நின்றது. உள்ளத்தைக் கற்பால் யாண்டும் சேமம் செய்துள்ளவள், காதுகளைக் கையால் ஈண்டுச் சேமம் செய்ய நேர்ந்தாள்.

கவினும் வெஞ் சிலைக்கைவென்றிக் காகுத்தன் கற்பினேனை

தன் நாயகனையும் தன்னையும் சானகி என்ன வகையில் எண்ணி யிருக்கிறாள் என்பதை இவ் வுரையிலிருந்து இனிது தெரிகின்றோம்.

கோதண்டம் ஏந்திய கையும் மரகத வண்ணமும் கம்பீரமும் வீரப் பிரதாபமும் வெற்றிப் பொலிவும் தன் கண்ணினும மனத்

னும் குடி கொண்டுள்ளமையைக் கவினும் வெஞ் சிலைக்கை என்னும் சொல் காட்டி நிற்கின்றது.

மான வீரனுடைய தருமபத்தினி என்று உணராமல் ஈனமாகப் பேசி விட்டானே என்று உள்ளம் துடித்திருக்கிறாள்.

அவியை நாய் வேட்டது என்ன என்சொன்னாய் அரக்க!

கேட்டவனுடைய உள்ளத்தையும் உயிரையும் ஊடுருவிக் கொல்லும்படி இச் சொல் அம்பு சூடு மிகுந்து வந்துள்ளது.

"தெய்வத்துக்கு உரிய தூய அமுதத்தை நாய் விரும்பியது போல் பாவி! நீ யாது நினைந்து இத் தீதுமொழிந்தாய்?" என்று மோதியிருக்கிறாள். தெய்வம் யார்? அமுதம் எது? நாய் என்றது யாரை? இந்த உவம வாசகங்கள் உவமேயங்களை ஓர்ந்து உணர வந்தன. புனித இராமனுக்கு உரிய இனிய அமுதினைப் புலைநாய் அவாவியது தொலையாத துயர மாயது.

"அமிர்தத்தை நாய் நச்சியது போல் சீச்சீ கொச்சை மகனே! என்னை நோக்கி நீ என்னடா சொன்னாய்!" என்று இவ்வாறு சீறி இகழ்ந்து விட்டுத் தன் சீர்மை நீர்மைகளைத் தெளிந்து ஒழிந்து போம்படி பரிந்து உணர்த்தினாள்.

"நீர் மேல் குமிழிபோல் விரைந்து அழிந்து போகின்ற இந்த உயிர் வாழ்வை ஒரு பொருளாக நினைந்து குல மகளிர் மானம் அழிந்து வாழ மாட்டார். உயிரினும் கற்பையே யாண்டும் உரிமையுடன் அவர் உவந்து பேணுவார். இற்பிறப்புடைய மாதர் கற்பிழந்து நில்லார்; ஏ! பொல்லாப் பாதகனே! இனி ஈண்டு நில்லாதே; என் கணவன் கண்டால் நீ பிணமாய் விழுவாய்; அவ் வீரவில்லியின் வெற்றிக் கணைகளுக்கு இரையாகாமல் விரைவாய்த் தப்பி ஓடிப் போ!" என உருத்து முடுக்கினாள்.

## அவன் இவள் காலில் விழுந்து தொழுதது.

இப்படிப் பழித்துத் திட்டி வெறுத்து விரட்டியும் அக் கெடு காலன் யாதும் அடிபெயராமல் சிரித்து நின்றான்.

"ஐயோ! சீதா! உன் பேதைமைக்கு இரங்குகின்றேன்; உனது எழிலுள்ள இளமையும் உருவமும் பருவமும் வீணே பாழ்படுகின்றனவே என்று பரிதாபமாய் உனக்கு அறிவு நலம் கூறி

னேன். யாதும் அறியாமல் மோதுகின்றாய்! உன் நாயகனை மிகவும் பெரிய வீரனாக நீ மடமையால் எண்ணியிருக்கின்றாய்' அவனுடைய வில்லும் பாணங்களும் என்னை என்ன செய்யும்? மேருமலை மேல் எறிந்த மெல்லிய பூக்களைப் போல் அவன் வில்லிலிருந்து விடுகின்ற அம்புகள் என் மார்பில் படின் புல்லியனவாய் இழிந்து புறமே ஒழியும். என் தலைமையையும் தகுதியையும் நீ நன்கு தெளிந்து கொள்ள வேண்டும். நான் கருதிய எதையும் திரிமூர்த்திகளும் மறுதளிக்க முடியாது. உன்மேல் கொண்ட காதலினாலேயே எளிய ஒரு பேதையாய் இங்கு வந்திருக்கிறேன். எனது அரண்மனை வாசலில் தேச அதிபதிகளும், தேவர் திரள்களும் கைகட்டி நிற்க, நான் ஈண்டு கால் பெயர்ந்து வந்துள்ளேன். என்னுடைய மேன்மைகளை எல்லாம் மறந்து உன் மீது பாசம் மீதூர்ந்து ஆசையுடன் அலந்து வந்துள்ள என்னை அவமதித்துப் பேசுவது அநியாயமாகும். என் உள்ளமும் உணர்வும் உயிரும் உன் வசமாயுள்ளன; ஆதலால் தன் வசம் இலனாய் உன்பால் பரவசனாயுளேன். உன் உருவம் என் உயிரைக் கொள்ளை கொண்டு உள்ளது; என் நிலைமையை உணர்ந்து நீ அருள் புரிய வேண்டும்'' என இங்ஙனம் இறுதிமொழியைச் சொல்லிக் கொண்டே சீதையின் காலில் நெடிது விழுந்து கைகுவித்துக் கிடந்தான்.

அணங்கினுக்கு அணங்கனாய்! நின் ஆசைநோய் அகத்துப்பொங்க
உணங்கிய உடம்பினேனுக்கு உயிரினை உதவி உம்பர்க்
3388 கணங்குழை மகளிர்க்கெல்லாம் பெரும்பதம் கைக்கொள் என்னா
வணங்கினன் உலகம் தாங்கும் மலையினும் வலிய தோளான்.

அவனது நிலையினை நினைந்து நெஞ்சம் அயர்கின்றோம். வெருட்டினான்; மருட்டினான்; மிரட்டினான்; பலபல மாட்சிகளைப் பதமா நீட்டினான்; அகில உலகங்களுக்கும் அரசி ஆவாய் என்று ஆசை காட்டினான்; யாதும் பலியாமை கண்டதும் முடிவில் அடியில் விழுந்து வணங்கினான்.

உயிரினை உதவி என்றதனால் காமதாபத்தால் அவன் ஆவி அமைந்துள்ளமை அறிய வந்தது. கொடிய பசியினும் கடிய காமம் உயிர்க்கேடு செய்யும் ஆதலால் அக்கேட்டின் முடிவில் நிற்கின்றவன் தன் நிலைமையைக் குறித்துக் காட்டி நேரே கெஞ்சினான்.

காம ஆசை கவ்விய பொழுது உயிர்கள் படும் பாடுகளை அவையன்றி வேறு அயல் அறிய இயலா. காதல் முடியாவழி, சாதலில் முடிகின்றது. மரண வேதனையில் மறுகியுள்ள தன் நோதலை நுவன்று தனக்கு உயிர்ப்பிச்சை தந்தருளும்படி நெஞ்சம் கூசாது கெஞ்சி வேண்டினன்.

உம்பர்க் கெல்லாம் பெரும்பதம் கைக்கோள் என்றது தேவரும் ஏவல் செய்கின்ற தனது அரிய அரச பதவியைக் கைக்கொண்டு அரசியாய் அமர்ந்து தனக்கு ஆருயிர் அருள்க என்றவாறு. இங்ஙனம் உருகி மறுகி உரையாடி வந்தவன் முடிவில் தனது மணிமுடி அடிபடியப் படிசாய்ந்து கும்பிட்டான்.

அக் கெடுகாலன் தன் காலில் விழுந்து பழிநோக்குடன் இவ்வாறு படுதுயர் செய்வதைக் கண்டதும், சீதை உயிர் துடித்து நொந்து அயல் ஒரு துணையும் காணமல் "அந்தோ! இறைவா!" என்று அலமந்து தவித்தாள்.

## இராவணன் சீதையை எடுத்துச் சென்றது.

இக் குலமகளுடைய உள்ளத்தையும், உறுதி நிலையையும், அக் கள்ளன் தெள்ளத் தெளிந்து கொண்டான். அகன்று போன வீரர் மறுபடியும் மீண்டு ஆண்டு வருமுன் கவர்ந்து போக வேண்டும் என்று கடுத்து விரைந்தான். படியில் முடிபட விழுந்து வணங்கினவன் கடிதின் எழுந்தான். தன் மந்திர வலியால் பன்னசாலை இருந்த இடத்தை அடியோடு பெயர்த்து எடுத்தான். குடிசையோடு தரை பாளமாய் மேல் எழுவதைப் பார்த்ததும் சீதை ஐயோ! என்று அலறித் துடித்தாள். அவன் சதி சூழ்ந்துகொண்டு வந்திருந்த அதிசயத் தேர் மேல் அகழ்ந் தெடுத்த நிலத்தட்டை நிலையாக வைத்து ஆகாய வழியே அதி வேகமாய்ப் போயினன். சானகி உயிர் போன உடல் போல் ஏங்கி மூர்ச்சையாயினள்.

தறைவாய் அவன் வந்து அடிதாழுதலும் 3389
கறைவாள்பட ஆவி கலங்கினள் போல்
இறைவா! இளையோய்! என ஏங்கினளால்
பொறைதான் உயிர் போவதுபோற் புகல்வாள். (1)

ஆண்டாயிடை தீயவன் ஆயிழையைத்
தீண்டால் எனும் மேலுரை சிந்தை செயாத் 3390
தூண்தான் எனலாம் உயர் தோள் வலியால்
கீண்டான் நிலம் யோசனை கீழொடு மேல். (2)

கொண்டானுயர் தேர்மிசை கோல்வளையாள்
3391 கண்டாள் தனது ஆருயிர் கண்டிலளால்;
மண்தான் உறு மின்னின் மயங்கினளால்;
விண்தான் வழியா எழுவான் விரைவான். (3)

விடுதேர்என வெங்கனல் வெந்தழியும்
3392 கொடிபோல் புரள்வாள் குலைவாள் அயர்வாள்
துடியா விழுவாள் துயரால் எழுவாள்
கடிதா அறனே இதுகா எனுமால், (4)

மலையே! மரனே! மயிலே! குயிலே!
3393 கலையே! பிணையே! களிறே! பிடியே!
நிலையா உயிரே! நிலைதேறினர் போய்
உலையா வலியார் உழைநீர் உரையீர்! (5)

செஞ்சேவகனுர் நிலைநீர் தெரிவீர்
மஞ்சே! பொழிலே! வனதேவதைகாள்!
3394 அஞ்சேல் என நல்குதிரேல் அடியேன்
உஞ்சால் அதுதான் இழிபோ உரையீர்? (6)

நிருதாதியர் வேரற நீள்முகில் போல்
சரதாரைகள் வீசினிர் சார்கிலிரோ?
3395 வரதா! இளையோய்! மறுஏதும் இலாப்
பரதா! இளையோய்! பழி பூணுதிரோ? (7)

கோதா வரியே குளிர்வாய் குழைவாய்
மாதா அனையாய் மனனே தெளிவாய்
3396 ஓதாது உணர்வார் உழை ஓடினை போய்
நீதான் வினையேன் நிலை சொல்லலையோ? (8)

முந்தும் சுனைகாள்! முழைவாழ் அரிகாள்!
இந்தந் நிலனோடும் எடுத்த கைநாலு
3397 ஐந்தும் தலைபத்தும் அலைந்து உலையச்
சிந்தும்படி கண்டு சிரித் திடுவீர்! (9)

(சடாயு உயிர் நீத்த படலம் 73-81)

பரிதாபமான இந்தப் பகுதியைப் படிக்கும் போது நம் உள்ளம் உருகித் துடிக்கின்றோம். அக் கொடியவன் கேடு செய்ய மூண்டபொழுது இறைவா! இளையோய்! என இராமனையும் இலக்குவனையும் கருதிக் கூவிக் கதறி யிருக்கிறாள். வலிய புலியின்

எதிரே அகப்பட்ட இளமான் பிணைபோல் பொல்லாத அரக்கன் கையில் இந் நல்லாள் சிக்கி நைந்து புலம்பியுள்ளது எல்லாருடைய இதயங்களையும் எரியிடை மெழுகாய் இளகச் செய்து பரிபவத்தை விளைத்திருக்கின்றது. அலமந்து பதைத்த அவலக் கவலைகளும் அலறல்களும் அழுகைகளும் உரைகள் தோறும் பீறி வெளிவந்திருக்கின்றன.

பன்னசாலையோடு பெயர்த்துத் தேரில் வைத்த வுடனே சீதை ஆருயிர் துடித்து அலறி வீழ்ந்து அவசமாய் மயங்கியுள்ளாள். இக் குலமகள் இங்ஙனம் மூர்ச்சையாய் நிலை குலைந்து துவண்டு கிடக்க, அப் புலைமகன் வான் வழியே தேரை அதி விரைவாகக் கடாவிப் போயினான்.

விடு தேர் என்றதனால் சாரதியோடு இரதத்தைச் சேமம் செய்து அவன் கொண்டு வந்திருக்கின்றான் என்று தெரிகின்றது. வான வீதியில் விமானம் வேகமாய்ப் போகவே மூர்ச்சை தெளிந்து சானகி நோக்கித் தவித்துப் புலம்பினாள். வனத்திலுள்ள மலைகளையும் மரங்களையும் மயில்களையும் குயில்களையும் நதிகளையும் சுனைகளையும் கலைகளையும் பிணைகளையும் யானைகளையும் பார்த்துத் தனது நிலைமையைத் தன் நாயகனிடம் போய்ச் சொல்லும்படி பரிதாபமாய்க் கதறி யிருக்கிறாள். ஐம் பொறிகளும் கலங்கி நெஞ்சம் நிலை குலைந்து போனமையால் நெறி யாதும் அறியாமல் வெறியாய் மறுகிப் பல பல புலம்பினாள்.

மஞ்சே! பொழிலே! வனதேவதைகாள்! என நெஞ்சழிந்து நிலை தடுமாறி மேகம் முதலியவற்றை நோக்கி ஏகமாக் கூவி வேகமாய்ப் பதைத்துள்ளமையால் அவள் ஆவி அலமந்துள்ள நிலைமையை ஓரளவு ஊகமாய் அறிந்து கொள்ளலாம்.

இராட்சதர்கள் எல்லாரும் அடியோடு அழிந்து நாசம் அடையும்படி கூரிய பாணங்களைத் திசைகள் தோறும் வீசி நீல மேகம் போல் தன் நாயகன் நேரே வந்து விட மாட்டாரா! என்று எங்கணும் கண்ணாய் ஏங்கித் தவித்திருக்கிறாள்.

வீர சூரர்களாய் இருந்தும் ஆபத்து வேளையில் யாரும் வந்து உதவ வில்லையே! என்று சீறி நொந்துள்ளாள்.

வரதா! இளையோய்! மறு ஏதும் இலாப்
பரதா! இளையோய்! பழி பூணுதிரோ?

என்னும் இப் பரிதாப மொழிகள் நம் விழி நீரை வெளியே சிந்தச் செய்கின்றன. தன் கொழுநனையும், கொழுந்தமார் மூவரையும் ஆவலோடு நினைந்து அலமந்திருக்கிறாள். கருதிய உறுதி நலங்களை அடியவர்க்கு உரிமையுடன் உதவியருளும் இராமனது உயர் நீர்மை வரதா என்னும் உரையால் வெளியாயது. வரபலங்களை அருள வல்லவன் வரதன் என வந்தான்.

மறு ஏதும் இலாப் பரதா! என்றது அவ்வுத்தமனைக் குறித்து இப் பத்தினி கருதியுள்ள கருத்தை உலகம் அறிய ஈண்டு வெளிப் படுத்தி நின்றது.

மறு=மாசு, குற்றம். உலக வஞ்சகங்கள் யாதும் அறியாமல் பரம பரிசுத்தனாயுள்ள அக் குல மகனுடைய நிலைமையை இத் தலைமகள் நன்கு தெரிந்திருத்தலால் அவல நிலையிலும் உள்ளம் உருகி இங்ஙனம் ஓல மிடலாயினாள்.

அண்ணன் மீது கொண்ட பாசத்தால் ஊன் உருகி உள்ளம் கரைந்து உயிர் மறுகி வந்த அந்த அன்புருவத்தின் மாசற்ற தூய நிலைமையைச் சித்திர கூடத்தில் நேரே கண்டு அளி மீதூர்ந்து விழி நீர் சொரிந்து நின்றாள் ஆதலால் அப் புனித வுணர்வு இத் துயர நிலையிலும் மொழி வழியே வெளி எழுந்தது.

அரசைப் பறித்துக் கொண்டு தன் நாயகனைப் பரதேசி ஆக்கிய கைகேசியையும், அவள் மகனையும் வைதேகி யாதும் வையாது யாண்டும் மனங்கனிந்து புகழ்ந்து போற்றி வருவது அவளது பெருந்தகைமையின் பேரொளியாய்த் துலங்கி வருகின்றது.

மறு ஏதும் இலாப் பரதா! உன் குடிக்கு நெடிய மறு ஏறும் படி கொடிய பாதகன் ஒருவன் பழிபுரிந்து போகின்றானே! வழி எதிர்ந்து வந்து அளிபுரிந்து கா என்று அலறி யிருக்கிறாள்.

முதலில் இராமன், அடுத்து இலக்குவன், அதன் பின் பரதன், இறுதியில் சத்துருக்கன் எண்ண நேர்ந்துள்ளனர். அடவியில் ஓடி, அயோத்தியில் தாவி ஆவி அலமந்துள்ளது.

உரிமையான பற்றுக் கோடுகளை கருதிக் கதறிப் பரிதபித்திருக்கிறாள். ஆதரவாளரை நினைந்து அனாதையாய் மறுகினாள்.

கோதாவரியே! மாதா அனையாய்! என அந்தப் புனித நதியை நோக்கிப் புலன் மறுகிப் புலம்பி யுள்ளாள். நாளும் குளித்துக்

காலை மாலைகளில் தன் காதலனோடு அந் நீர்த் துறைகளில் உலாவி வந்தவள் ஆதலால் அவ் வுரிமைகள் உரைகளில் உருகி வரலாயின.

ஓதாது உணர்வார் உழை ஓடினைபோய்
நீதான் வினையேன் நிலைசொல்லலையோ?

தேரிலிருந்தபடியே நதியைப் பார்த்து இவ்வாறு பேரொலி செய்து கூவித் துடித்துள்ளாள். அவள் குலை நடுங்கி நிலை குலைந்து பதைக்கும் துயரத் துடிப்பிலும் தனது குல நாயகனது உயர் நீர்மையைத் தலைமையாகக் கருதித் தவித்திருக்கின்றாள்.

ஓதாது உணர்வார் என இராமனுக்கு இங்கே இவ்வாறு ஓர் பேர் அமைந்தது. யாரும் சொல்லிக் கொடாமலே எல்லாக் கலை களையும் நன்கு தெளிந்துள்ள அந்த அதிசய மேதா விலாசத்தை நினைந்து வந்தது.

நதிகள் எல்லாம் விரைந்து போய்க் கடலில் புகுதல் போல், கலைகள் எல்லாம் விழைந்து வந்து இராமனிடம் உவந்து குடி புகுந்துள்ளன என்று வசிட்ட முனிவர் தசரதனை நோக்கி முன் னம் * கூறியுள்ளதும் ஈண்டு எண்ணத்தக்கது.

ஆகாய வழியில் போகும் பொழுது ஆவி பதைத்தாலும் கோபமும் மானமும் தீரமும் சீதையின் உள்ளத்தில் கொதித் தெழுந்து குமுறியிருக்கின்றன. மலைகளில் மருவி வாழும் பல வகை மிருகங்களையும் பரிந்து கூவி வருந்தியிருக்கிறாள்.

"குகைகளில் வாழ்கின்ற ஓ சிங்கங்களே! புலிகளே! மலைச் சுனைகளே! என்னை அநியாயமாய் எடுத்துக் கொண்டு போகின்ற இந்தப் படுபாதகனுடைய தலைகள் பத்தும் பனங்காய்கள் போல் கொத்துக் கொத்தாகச் சிதறி உதிரும் கோரக் காட்சியை நீங்கள் நேரே பார்த்துச் சிரிப்பீர்கள்! என் வீர நாயகன் விரைவில் வந் தால் நான் சொன்ன உண்மையைத் தெளிவாக உணர்ந்து கொள் வீர்கள்!" என விழிநீர் சிந்தி அழுது புலம்பினாள்.

துயர நிலையில் சிக்கி உயிர் பரிதபிக்கும் பொழுது உணர்வு நிலை குலைந்து புலம்ப நேர்ந்தமையால், மலையே! மரனே! மயிலே! குயிலே! என எதிரே கண்ட பொருள்களை யெல்லாம் பார்த்துக் கூவலானாள்.

---

* இந் நூல் பக்கம் 334, வரி 12, பார்க்க.

கேளாதவற்றையும், காணுதவற்றையும், பேசாதவற்றையும், கேட்டுக் கண்டு பேசி ஆறுதல் கூறுவனபோல் அவாவிக் கூவி யிருத்தலால் அந்த ஆவியின் அலமரல்களை உணர்ந்து பரிதபிக்கின்றோம்.

"ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவும் நுவலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்."

(தொல்காப்பியம்)

பிரிவாற்றாமல் மறுகிப் புலம்புங்கால் மிருகம் பறவை கதிர் மதி மரம் மனம் முதலியவற்றை முன்னிலைப் படுத்தி எவரும் ஏங்கி அலறுவர் என்பதை இந்த இயல் விதி விளக்கி யுள்ளது.

நிலையா உயிரே! நிலை தேறினர் போய் உரையீர்!

எனத் தன் உயிரை நோக்கிச் சானகி கூவியுள்ளதும், அதன் துயர நிலைகளை எளிதாக வெளி அறியத் தெளிவுறுத்தியது.

"நிலை குலைந்து தத்தளிக்கின்ற ஓ என் உயிரே! நீ இந்த உடம்பை விட்டு விரைந்து ஓடிப்போய் நம் நாயகனிடம் நேர்ந்துள்ளதைச் சொல்; அவர் விரைந்து வந்து நமக்கு உய்தி யருளுவார்; இங்கே நின்று வீணே தவியாதே; தாவிப் போய் நம் ஆவித் துணையை அழைத்துவா; இந்தப் பாவியின் தலைகளும் தோள்களும் துண்டம் துண்டமாய் நிலை குலைந்து கீழே விழுவதைக் கண்டு மகிழலாம்" என்று கலங்கிப் புலம்பி யுள்ளாள்.

சானகி இவ்வாறு ஓலமிட்டுக் கூவியதைக்கேட்டு இராவணன் சிரித்தான். தன் தீரத்தை விரித்தான்; "ஓ பெண்ணரசி! நீ இன்னமும் என்னுடைய வீரப் பிரதாபத்தைத் தெரிந்து கொள்ளவில்லையே; அந்தச் சின்ன மனிதர் வந்து என்னை என்ன செய்வர்? நான் உன்னை எடுத்துக் கொண்டு போகின்றேன் என்பதை அவர் அறிந்தால் உடனே உயிர் கலங்கி இவ் வனத்தை விட்டே ஓடிப் போய விடுவார். நான் இருக்கும் திசையைக்கூட அவர் திரும்பிப் பார்க்க மாட்டார். என் பெயரைச் சொன்னல் ஈசனும் கூசு

வானே! அற்ப மனிதர் யாது செய்வர்? பேதை மதியால் பிதற்று கின்றாய்! பேசாமல் வாயை மூடி மவுனமாயிரு; இனி யாராலும் யாதும் முடியாது; என் கையில் கிடைத்த திவ்விய அமுதத்தை வையமும் வானமும் தடுத்தாலும் நான் நுகர்ந்து உய்யாமல் அயர்ந்து விடேன்'' என்று அவ் வெய்யவன் விரைந்து மொழிந் தான்.

அம் மொழியைக் கேட்டதும் சீதை விழி சிவந்து சினந்து ''ஏ பழிபாதகா! நீ நல்ல குலமகன் ஆனால் தேரை ஓட்டி ஓடாதே; நில்லு! மாயமானை ஏவி வஞ்சச் சூழ்ச்சி செய்து என் நாயகனை அயல் அகன்று போகும்படி புரிந்து எள்ளத்தனையும் நாணாமல் கள்ளத்தனமாய் உள்ளே புகுந்தாய்; அஞ்சாத வீரனாயின் வஞ் சம் புரியாமல் நேரே வந்திருக்கலாம்; ஈனப் பேடி போல் இழி நிலையில் நுழைந்து பழி புரிந்துள்ள நீ மான வீரன்போல் வீணே வாய் பேசுகின்றாய்; உன் தங்கை மூக்கை அறுத்து, கரன் முதலிய உனது இனத்தவர் பலரை அழித்து, வெற்றி வீரனாய் வீறு கொண்டு நிற்கின்ற அக் கொற்றவன் எதிரே கொதித்து வர வேண்டிய நீ வஞ்சமாய் மறைந்து புகுந்தது நெஞ்சம் அஞ்சி அல்லவா? உள்ளத்தில் அச்சம் உடையவனாயிருந்தும் உரையில் உச்ச வீரன் போல் பேசுவது மிகவும் கொச்சையேயாம். இலச் சை கெட்டு மானம் அழிந்து ஈன நிலைகளில் இழிந்து உழந்து வானம் அளாவ வியந்து துள்ளுவது இகழ்ந்து எள்ளத்தக்கது. நீ அஞ்சாத வீரன் ஆனால் கொஞ்சம் நில்; என் அஞ்சன வண்ணன் எதிரே பஞ்சாய்ப் பறப்பதை நான் பார்த்து மகிழ்வேன்.''

நின்னைக் காக்குமா காண்டி ஆயின், கடவல் உன் தேரை.

என்று சீதை இங்ஙனம் சீறி உரைத்தாள். கொள்ளைப் பொருளைக் கள்ளப்பயல் கொண்டு போவது போல் கடுகி ஓடு கின்றான் ஆதலால் அங்ஙனம் முடுகி ஓடாமல் நிற்கும்படி கடிது கூறினாள். நின்றால் உடையவன் வந்து அவனைக் கொன்று தொலைத்துத் தன்னை மீட்டிக் கொண்டு போவான் என்று இக் கற்பரசி கருதியிருக்கிறாள்.

''நீ வீரம் உள்ளவன் ஆனால் தேரைச் செலுத்திச் செல் லாதே; நிறுத்தி நில்'' என்றது விரைவில் இராமன் வந்து விடு வான்; தன்னைக் கவர்ந்தவன் உயிரை அவன் கவர்ந்து கொள்வான்

என்று உறுதியாகக் கருதியுள்ளமை உணர வந்தது. உடையவனை அவாவி உயிர் துடித்திருக்கின்றது. கடவல்=செலுத்தல்.

"மானமும் நாணமும் இன்றி ஈனப் பேடி போல் இழிந்து ஓடாதே; துணிந்து நில்!" என்று சானகி இங்ஙனம் சொல்லவே, அத் தூர்த்தன் மறுத்து வார்த்தைகள் ஆடினான். "ஐயோ! பேதாய்! என் செய்கையை நீ தவறு ஆக எண்ணியிருக்கிறாய். நான் இராமனுக்கு அஞ்சினேன் என்று நீ நெஞ்சில் நினைந்துள்ளதை நினைக்குந்தோறும் எனக்கு நகைப்பு வருகின்றது. ஈசன் கயிலையைப் பறித்து எடுத்த நான் ஒரு மனிதனோடு எதிர்ப்பது பெரிய அவமானம் என்று கருதியே இந்த உபாயத்தைக் கை ஆண்டேன். அச்சத்தால் இது செய்தேன் என்று நீ சொல்வது அறியாமையேயாம். அச்சம் என்பதை யான் யாதும் அறிகிலேன்; என்னைக் கண்டு அது அஞ்சி ஒழிந்து போனமையால் அந்த அச்சத்தை நான் காண முடியவில்லை உச்ச வீரனை நான் உன்மேல் வைத்துள்ள இச்சையால் உனக்கு உரியவர்களுக்கு ஒரு தீங்கும் நேராவண்ணம் பாங்கோடு நடந்திருக்கிறேன். என்னுடைய உள்ளப் பாசத்தையும் உரிமை நேசத்தையும் நீ ஒரு சிறிதும் உணரவில்லை. இன்னும் சில நாளில் எல்லாம் தெரிந்து கொள்வாய்!" என்று இப்படிச் சொல்லிக் கொண்டே தேரைக் கடாவி வானில் விரைந்து போயினான்.

## சடாயு வந்து பாய்ந்தது.

இராவணன் அவ்வாறு கடு வேகத்தோடு ஆகாய வழியே போகுங்கால் சீதை ஆவி பதறி அலறினாள். "ஆ! கொடிய பாதகா! எனது நாயகனுடைய கூரிய பாணங்களால் உனது முடித் தலைகள் படித்தலத்தில் துடித்து உருளாதபடி கடுத்து ஓடிப் பயந்து போகின்றாயே!" என்று பரிதாபமாய்க் கூவினாள்.

இங்ஙனம் கூவுங்கால் வடமேல் திசையிலிருந்து ஒரு நெடிய ஓசை கடிது எழுந்து அதி வேகமாய் வந்தது. "அடே' எங்கடா போகின்றாய்! நில் நில் நில் நில்" என்று சொல்லிக் கொண்டே சடாயு விரைந்து பறந்து வெகுண்டு பாய்ந்து வந்தான். விரிந்த சிறகுகளை வேகமாய் வீசி அப் பறவை வேந்தன் பறந்து வந்த அதிர்ச்சியால் வனத்தில் உள்ள மிருகங்கள் எல்லாம் கலங்கி

ஓடின. மரங்கள் பல வேரோடு சாய்ந்தன. வானும் வையமும் அதிர அவன் வந்த காட்சி கைலயங்கிரி சிறகுகள் பெற்றுப் பறந்து வந்தது போல் சிறந்து தோன்றியது. அவனுடைய உள்ளத்துடிப்பும் உடைக் கடுப்பும் உக்கிர வீரமாய்க் கொதித்து நின்றன.

உத்தமன் தேவியை உலகொடு ஓங்குதேர் 3407
வைத்தனை ஏகுவது எங்கு? வானினோடு
இத்தனை திசையையும் மறைப்பென் ஈண்டெனாப்
பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினான்; (1)

வந்தனன் எருவையின் மன்னன், மாண்பிலான் 3408
எந்திரத் தேர்செலவு ஒழிக்கும் எண்ணினான்;
சிந்துரக் கால்சிரம் செக்கர் சூடிய
கந்தரக் கைலையை நிகர்க்கும் காட்சியான். (2)

சடாயு வந்திருக்கும் மாட்சியைக் கண்டு சிந்தை மகிழ்கின்றோம். பறவை உருவில் மருவியுள்ள தெய்வீக நிலையினன்; வைதேகிக்கு நேர்ந்த இடையூற்றை ஓர்ந்து இடையே காக்க விரைந்து சேர்ந்தான். பரிவும் பண்பும் அறிவும் ஆற்றலும் அதிசய நிலையில் அமைந்துள்ள இம் முதியவன் இந்த அபாய வேளையில் இடையே முனைந்து புகுந்தது விதி நியமமாய் வியந்து கொள்ள வந்தது.

இராம இலக்குவரை முதலில் கண்ட பொழுது தசரதனோடு தனக்கு இருந்த உரிமையை உணர்த்தி உறவு கொண்டாடிப் பஞ்சவடியில் இருக்கும்படி பணித்து விட்டுத் தன் இடம் போய் அமர்ந்து பார்ப்பைப் பார்க்கும் பறவையில் மூவரையும் அன்புரிமையுடன் அடிக்கடி பார்த்துக் காத்து வந்தவன், இடையே இரை நாடி அயலிடம் போயிருந்தான். இச் செயல் நிகழ்ந்ததை அறிந்ததும் சிந்தை கலங்கிச் சீறி வந்திருக்கிறான். தேர் எதிரே பாய்ந்து இடைமறித்துத் தடை செய்து நிறுத்தி, "அம்மா! நீ யாதும் அஞ்சாதே" என்று சீதையை நோக்கி ஆதரவு கூறினான்.

வயது முதிர்ந்த அந்தப் பறவை வேந்தைக் கண்டதும் சீதை பெருவகை யுடையளாய் ஆறுதலடைந்து அலமரல் நீங்கிக் கண்ணீர் மல்கிப் பெண்ணீர்மையோடு பேதுற்று இருந்தாள்.

பிராட்டியை அவன் கையால் தீண்டவில்லை என்பதை இவ் வீரன் கண்ணுறல் நோக்கித் தன் கடுஞ்சினம் தணிந்தான். பன்ன

சாலையோடு பெயர்த்தெடுத்து வைத்திருப்பதை உன்னி உணர்ந்து உள்ளம் பரிந்து உறுதி கூறத் துணிந்தான்.

## புத்தி போதித்தது

சத்திய சீலனுடைய உத்தம பத்தினிபால் உள்ளம் பறி போய் அப் பித்தன் செய்துள்ள பிழையை நினைந்து இரங்கி விளைவினை அறிந்து பழி ஒழிந்து உய்யும் வழியை உரிமையோடு அவனுக்கு உணர்த்தலானான். பரிதாப நிலையில் இவன் பரிந்து கூறிய உரைகள் அறிவு நலம் சுரந்து அரிய உண்மைகள் நிறைந்து ஆழ்ந்த நோக்குடன் சூழ்ந்து வந்திருக்கின்றன.

கெட்டாய் கிளையோடு; நின் வாழ்வை எலாம்
சுட்டாய்; இது என்ன தொடங்கினை? நீ
பட்டாய் எனவே கொடு பத்தினியை 3410
விட்டு ஏகுதியால் விளிகின்றிலையால்; (1)

பேதாய்! பிழை செய்தனை பேருலகின்
மாதா அனையாளை மனக்கொடு நீ
யாதாக நினைத்தனை? எண்ணம் இலாய்! 3411
ஆதாரம் நினக்கினி யார் உளரோ? (2)

உய்யாமல் மலைந்து உமர் ஆருயிரை
மெய்யாக இராமன் விருந்திடவே 3412
கையார முகந்து கொடு அந்தகனார்
ஐயா புதிது உண்டது அறிந்திலையோ? (3)

கொடுவெங்கரி கொல்லிய வந்ததன் மேல்
விடும் உண்டை கடாவ விரும்பினையே! 3413
அடும் என்பது உணர்ந்திலை யாயினும் வன்
கடுவுண்டு உயிரின் நிலை காணுதியோ? (4)

எல்லா உலகங்களும் இந்திரனும்
அல்லாதவர் மூவரும் அந்தகனும் 3414
புல்வாய் புலிகண்டது போல்வரால்
வில்லாளரை வெல்லும் மிடுக்குளரோ? (5)

இம்மைக்கு உறவோடும் இறந்தழியும்
வெம்மைத் தொழில் இங்கிதன் மேல் இலையால்; 3415
அம்மைக்கு அருமா நரகம் தருமால்
எம்மைக்கு இதமாக இது எண்ணினை நீ? (6)

முத்தேவரின் மூல முதற் பொருளாம் 3416
அத்தேவர் இம் மானிடர் ஆதலினால்
எத்தேவரொடு எண்ணுவது எண்ணமிலாப்
பித்து ஏறினை யாதல் பிழைத்தனை யால், (7)

புரம்பற்றிய போர்விடையோன் அருளால்
வரம்பெற்றவும் மற்றுள விஞ்சைகளும் 3417
உரம்பெற்றன வாவன உண்மையினேன்
சரம்பற்றிய சாபம் விடுந்தனையே. (8)

வானாள்பவன் மைந்தன் வளைத்த விலான்
தானேவரின் நின்று தடுப்பரிதால்;
நானே அவண் உய்ப்பென் இந் நன்னுதலைப் 3418
போநீ கடிது என்று புகன்றிடலும். (9)

(சடாயு உயிர் நீத்த படலம், 94-102)

சீதையைக் கவர்ந்து கொண்டு எந்திரத் தேரை அந்தரத்தே கடாவிச் செல்கின்ற இராவணனை இடையே தடுத்து நிறுத்தி, சடாயு கூறிய உறுதி மொழிகளை இங்கே ஊன்றி நோக்கி நாம் உவகை கூர்கின்றோம். குஞ்சைப் பறி கொடுத்த தாய்ப் பறவை போல் நெஞ்சம் பரிந்து நேரே பறந்து வந்து விரைந்து புகுந்து அவ் வஞ்சனை மறித்து அறிவுரைகள் ஆடினான்.

இம் முதியவனுடைய மதி நலமும் மன வலியும் அதிசய ஆற்றலும் நீதி போதனைகளும் சீரிய கூரிய நிலைகளில் சிறந்து திகழ்கின்றன.

ஆபத்தில் வந்து அருந் துணையாய் நின்று சானகிக்கு அபயம் தந்து இம் மான வீரன் அக் காம வெறியனை நோக்கிப் பேசியிருக்கும் ஞானமொழிகள் நயந்து சிந்திக்கத் தக்கன.

"ஆ! நாச காலா! நீ என்ன நீசச் செயலைச் செய்துள்ளாய்! குடியும் குலமும் அடியோடு அழிந்து தொலையும் படியான பழி கேட்டை விளைந்து செய்திருக்கின்றாய்; மதி கேடனாய் மால் கொண்டு மருண்டு செய்துள்ள நின் பிழைபாடு பெருங் கேடுடையது; பேரிழிவானது. உலக மாதா என எவரும் உவந்து போற்ற வுரிய உத்தமியை நிலைமை தெரியாமல் நீ காதலித்தது கொடிய பாதகம்; பெற்ற தாயைப் பெண்டுக்கு இழுத்தது போல் பேதை மகனே! நீ எவ்வளவு ஏதமான ஈன வழியில் இழிந்திருக்கின்றாய்!

உனது இழிவு பழி பாவங்களின் விளைவாய் அழிவு மீதூர்ந்துள்ளது. சில காலமாக உன் இனத்தவர் அழிந்து வருவதை நீ உணர்ந்து கொள்ளவில்லை. இராமன் வன வாசம் புகுந்தது முதல் உன்னுடைய குலம் நாசம் அடைந்து வருகின்றது. அரக்கர் என்றால் அருகே அணுகவும் அஞ்சி நின்ற எமன், அக் கோமகனது ஆதரவைக் கண்டதும் உன் மரபைக் கூசாது கொன்று தின்று குதூகலித்து நிற்கின்றான். தன் மீது கொதித்து வருகின்ற மத யானைமேல் ஒரு மண் உருண்டையை எறிந்த மடையனைப்போல், இயல்பாகவே உன் மேல சீறி நிற்கின்ற இராமனுக்கு நீ தீது புரிந்திருக்கின்றாய்; தேவர் முதல் யாவரும் வீர மூர்த்தி என்று வியந்து போற்றும் அத் தீரனோடு மாறுபட்டுத் தீங்கு செய்துள்ளது, உன் குலம் முழுவதும் நாசமாக ஓங்கி நிற்கின்றது. அந்த உத்தமனுடைய தரும பத்தினியை நீ விரும்பியது அந்தோ! எவ்வளவு தீமை! இம்மையில் பழி; இருமையில் இழிவு; மறுமையிலும் நரக துன்பம்; என்ன சுகத்தை அடையலாம் என்று கருதி இன்ன படு பாதகத்தில் இறங்கினாய்? ஆதி மூலப் பொருளே ஒரு மானிட வடிவம் தாங்கி இராமன் என்னும் பேரோடு வானமும் வையமும் உய்ய ஈண்டு வந்துள்ளது; வானவரோடு ஞான முனிவர் எல்லாரும் உழுவலன்புடையராய் அம் மான வீரனைத் தொழுது துதித்து வருகின்றனர்; அவ் வரவு நிலையை அறிவு பாழ்போன நீ அறிய முடியாது போயினும், இன்று என் உரையைக் கேட்டாவது உய்ய வேண்டும்; வெள்ளி மலையை அள்ளி எடுத்தேன்; ஈசன் அருள் பெற்றேன்; அரிய பல வர பலங்களையுடையேன்; பெரிய போர் வீரன் என்று இன்னவாறு உன்னைப் பெரிதாக எண்ணி வீணே செருக்கி நில்லாதே; அவன் வில்லில் பகழி தொடுக்க நேர்ந்தால் நீ பெற்றுள்ள எல்லாச் செல்வங்களும் பகலவன் எதிர்ப்பட்ட பனிப் படலங்கள் போல் பாழாய்ப் போய் விடும். அவன் சீறி வந்தால், நீ செத்து விழுந்தாய்! அவன் வந்து புகுமுன் இக் குலமகளை என் கையில் தந்து விட்டு இந்த இடத்திலிருந்து நீ உய்ந்து போய் விடு; நான் கொண்டு போய் இப் பெண்ணரசியை அப் பெருமானிடம் சேர்த்துப் பொறுமை செய்தருளும்படி போற்றி வேண்டுவேன்; உன் மீது கொண்டுள்ள இரக்கத்தால் இவ் உறுதி நலனை உண்மையுடன் உரைத்தேன்; நங்கையை விடுத்து இங்கிருந்து நீ விரைந்து

ஓடிப் போய்விடு!'' என்று இங்ஙனம் அப் பட்சிராசன் பட்ச முடன் நின்று உச்ச வீரமாய் உறுதி நலங்களை உரைத்தான்.

அமரரும் அஞ்சி நடுங்குகின்ற அக் கொடியவன் எதிரே நின்று நெஞ்சம் துணிந்து சடாயு கூறியிருக்கின்ற உரைகளை நோக்கி, அவனுடைய உள்ளத்தையும் ஊக்கத்தையும் உணர்வு நிலையையும் உவந்து தெளிந்து வியந்து கொள்கின்றோம்.

கிளையோடு கெட்டாய்! நின் வாழ்வை எலாம் சுட்டாய்! நீ பட்டாய்! எனத் தொடக்கத்திலேயே உள்ளம் துடித்துச் சுடு மொழிகளைக் கடுத்துத் தொடுத்திருக்கிறான். இராம பத்தினிக்குத் தீமை செய்திருத்தலால் அந்தப் பாவத்தால் அவன் குலம் நாச மாம் என்று இவன் குலை துடித்துள்ளது.

பத்தினியை விட்டு ஏகுதி; விளிகின்றிலை.

என்றது விடாமல் நின்றால் அழிகின்றது உறுதி என்பது அறிய வந்தது. விளிதல் = சாதல், அழிதல்.

உன் குலம் முழுதும் அடியோடு நாசம் அடையும் படியான பழிகேடு செய்துள்ளாய்! இந் நிலையிலிருந்து தப்பி நீ உய்ய வேண்டுமாயின், இச் செய்யவளை என் கையில் இங்கே ஒப்பித்து விட்டு ஓடி ஒளிந்து போய் விடு என உய்யும வழியையும் செய்யும் வகையையும் உணர்த்தியருளினான்.

அடே! முட்டாள்! கிளையோடு வீணே கெட்டு வீழாதே; பழியோடு பாழாய்ப் பட்டு மாளாதே; நான் சொல்லியபடி நல்ல வழியை ஒல்லையில் நாடிக்கொள் என உறவுரிமையுடன் உறுதியை இடித்துக் கூறிய படியாய் இது வெளிப்பட்டுள்ளது.

காம மோகியாய் அவன் செய்திருக்கும் தீமையை நினைந்து இவன் சித்தம் கொதித்திருத்தலால் வார்த்தைகள் அனல் வீசி வந்திருக்கின்றன. இனம் தெரியாமல், இடநிலை உணராமல் மனம் திரிந்து மையல் மீறி அவ் வெய்யவன் செய்துள்ளது, வைய மெல்லாம் வைது பழிக்கும்படி வன்துயராயது.

பேர் உலகின் மாதா அனையாள் எனச் சீதையை மதித்துத் துதித்திருத்தலால் அவள் மாட்சி நனித்துணர வந்தது. பெற்ற தாயைப் பிள்ளைகள் போற்றுதல் போல் உலகிலுள்ள மக்கள் எல்

லாரும் வழி முறையே தொழுது துதிக்கவுரிய விழுமிய நிலையி னள் சீதை என்பது ஈண்டு வெளியாய் நின்றது.

இறைவன் உலகிற்குத் தந்தை; இறைவி தாய் என்பது போல் இராமனும் சீதையும் இங்கே கருத நின்றனர்.

"செங்கமலத் திருத்தாயே தேவர் உய்யச் சீதை என
இங்கமல உருவாகி இனிது எழுந்தாள்"

என்பதை இது நினைவு கூர வந்தது. லோகமாதாவே சனகன் மகளாய் உலகம் உய்ய உதித்திருக்கிறாள் என்னும் உண்மையை இடங்கள் தோறும் உணர்த்தி வருகிறார்.

பேதாய்! என்றது மதிகெட்ட மடையா என்றபடி.

குடிகெட்டுக் குலம் அழிந்து அடியோடு ஒழியும் படியான பழிபாதகத்தை ஆவலோடு விழைந்து செய்துள்ளாயே! என இகழ்ந்து கூறியவாறும் ஆற்றியுள்ள கேடு ஆற்றாமை ஆயது.

தனக்கு நேர்கின்ற ஏதங்களை உணராமல் காதல் புரிந்துள்ள மையால் பேதை என நேர்ந்தான்.

பேதைமை யுள்எல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல். (குறள், 832)

என்னும் இப் பொய்யா மொழி அவ் வெய்யவன் செய்கை யைப் பழித்து வந்தது போல் தெளித்து நிற்கின்றது. கை அல் லது என்றது எவ்வழியும் செய்யத் தகாதது; செய்தால் பழியும் துயரும் தருவது. தனக்கு இழிவும் அழிவும் வருவதில் காதல் புரிவது கழி மடமையான ஓர் முழு மூடமாம் என்னும் இது இராவணன் இங்கே புரிந்துள்ள பழி வினையை விழி தெரியச் செய்து அவனது விளிவினையும் இளிவினையும் வெளியாக்கியுள்ளது.

தலைமையான ஒரு குலமகளுடைய நிலைமையை உணராமல் அவள் மேல் கடுங் காதல் கொண்டான். கைதவம் புரிந்து வந்து தன் இச்சையைப் பல வகையிலும் இழிந்து சொல்லினான்; அவள் இகழ்ந்து தள்ளினாள்; தள்ளியும் யாதும் காணாமல் எப்படியாவது அவள் உள்ளத்தை வசப்படுத்திக் கொள்ளலாம் என்னும் நசை யோடு வவ்விச் செல்லுகின்றான்; ஆகவே காமச் செவ்வி தெரி யாத கழிமடையனாய்ப் பழி மிகுந்து இழிவடையலாயினான்.

He is a fool who thinks by force or skill
To turn the current of a woman's will.

(Adventures of five hours 5-3)

"ஒரு குலமகளுடைய உள்ளத்தைத் தன் அதிகார ஆற்றலால் மாற்றி மருவலாம் என்று கருதுகின்றவன் பெரிய மடையன்" என சாமுவேல் ட்யூக் என்பவர் கூறியுள்ள இது ஈண்டு எண்ணத்தக்கது.

உனக்கு நேர்கின்ற ஏதத்தை உணராமல் கொடிய தீது செய்திருக்கின்றாயே பேதாய்! என இராவணனை நோக்கி ஓதி உணர்த்தியிருத்தலால் சடாயுவினுடைய மேதையும் தீரமும் வெளியாய் நின்றன. அறிவும் ஆற்றலும் உறுதியையும் ஊக்கத்தையும் மருவி நிற்கின்றன.

ஆதாரம் நினக்கு இனி யார் உளர்?

என்றது தன் நிலைமையை அவன் எண்ணி உணர வந்தது.

மாதாவுக்குத் தீது செய்த பாதகனாகிய உனக்கு இனி யார் ஆதரவு செய்வார்? பிதாவும் மாதாவும் ஒரு பிள்ளையை வெறுத்து விடின் அந்த ஈன மகனை உலகம் எல்லாம் இழித்துத் தள்ளும்; சீதா ராமருக்கு இடர் செய்த நீயும் அங்ஙனமே எல்லாராலும் இழிக்கப் பட்டு யாதொரு ஆதரவும் இலனாய் அலமந்து இழிந்து அழிந்து தொலைவாய்; நிலைமையை உணர்ந்து பிழை என உறுதியை உரிமையோடு உணர்த்தியருளினான்.

உனது காமமயக்கம் மிகவும் தீமையுடையது; நாசமான நீசம் வீசியுள்ளது என்று குறித்து விட்டுப் பின்பு இராமனது வீர பராக்கிரமத்தை விளக்கிக் காட்டினான்.

கொடு வெங்கரி கொல்லிய வந்ததன் மேல்
விடும் உண்டை கடாவ விரும்பினையே!

இந்த உருவகத்தில் மருவியிருக்கும் பொருட் குறிப்புகள் அறிவினை ஆராயச் செய்கின்றது. கொல்லிய = கொல்லும் பொருட்டு. வினையில் மூண்டு நிற்கும் வேகமும் வீரமும் தெரிய வந்தது.

"கொலை நோக்கோடு கொதித்துச் சீறி வருகின்ற கொம்பானை மேல் வம்பாக மண்ணாங்கட்டியை எறிந்தது போல் நீ

மடத்தனம் செய்திருக்கிறாயே மடையா!" என இடித்து அறிவுறுத்தியிருக்கிறான்.

கோடு வெங்கரி என்றது மத யானையை. அடுந்திறலையும் ஆற்றலையும் சீற்றங்களையும் அடைமொழிகள் விளக்கி நின்றன.

மண் உருண்டையை மதயானைமேல் எறிந்தால், அதனால் அதற்கு யாதொரு ஊறும் உண்டாகாது; அதன் கோபத்தை அதிகப் படுத்தி எறிந்தவனை விரைந்து கொன்று விடும்படி அது புரிந்து விடுகின்றது.

அரக்கர் வருக்கத்தின் மீது இயற்கையாகவே கொதித்து நிற்கின்ற இராமனுக்கு அரக்கர் பதி செய்த இச் செயல் மேலும் கொதிப்பை விளைத்து அவன் குலத்தை விரைவில் அழிக்க மூண்டது என அழிவு நிலையை விழிகாண விளக்கினான்.

கடு உண்டு உயிரின் நிலை காணுதியோ? என்றது அவனது பரிதாப நிலை தெரிய வந்தது. கடு = விடம், நஞ்சு.

நஞ்சைக் குடித்தவன் நாசம் அடைந்து சாவானே அன்றி உயிர் வாழ்ந்து இருப்பானா? நீ செய்துள்ள நீசச் செயலும் அவ்வாறே உன் உயிர்க்குக் கேடாகவே மூண்டுள்ளது; அதனை நீ உணர்ந்து கொள்ள வேண்டும். நெஞ்சு பிடித்தது நஞ்சு குடித்தது.

சீதையை நீ காதலித்து எடுத்தது விடத்தைக் குடிக்கத் துணிந்தது போலாம். அவ் வுயிர்க் கேட்டைச் செய்யாதே; உண்மையை உணர்ந்து உய்தி பெறுக.

பதி விரதையை விரும்புவது அதி பாதகம். இம்மையில் பழியும் மறுமையில் நரக துன்பமும் அதனால் உளவாம். அந்த நீச ஆசையால் நாசம் அடையாதே; என் யோசனையின் படி நடந்து கொள்.

இம்மைக்கு உறவோடும் இறந்து அழியும்;
அம்மைக்கு அருமா நரகம் தரும்.

என இப் பத்தினியை விழைந்த காமக் கேட்டால் அவனுக்கு விளையும் தீசங்களையும் நாசங்களையும் இங்ஙனம் நினைவுறுத்தினான்.

"அரிய தவம் செய்து பெற்றுள்ள உனது பெரிய அரச செல்வங்களையெல்லாம் பாழாக்கி வீணே பழியடைந்து மாளாதே;

உன்பால் அன்பால் உரிமையோடு கூறுகின்றேன்: கோதண்ட வீரன் வருமுன் நீ இங்கிருந்து தப்பிப் போய் விடுவது நல்லது; இந்தக் கற்பரசியை நான் கொண்டு போய் அவனிடம் ஒப்பித்து விடுவேன்; என் கையில் தந்து விடு'' என இங்ஙனம் சடாயு கூறவே இராவணன் உருத்து நோக்கினன்.

இராவணன்: ஏ கிழட்டுக் கழுகே! என்னை நீ எவ்வளவு வெருட்டிப் பேசுகின்றாய்! இராமனது வில்லாற்றலையும் வீரப் பிரதாபத்தையும் வியந்து பிதற்றுகின்றாய்; அந்த அற்ப மனிதன் கிடக்க; அமரர் அனைவரும் ஒருங்கு திரண்டு வந்தாலும் என்னை என்ன செய்ய முடியும்? எனது நிலைமையை ஒரு சிறிதும் உணராமல் பல பல புலம்புகின்றாய்; வீணே செத்துப் போகாதே; விலகிப் போ.

சடாயு: அடே! அரக்க மூடா! உன் மீது இரக்கங் கொண்டு இதம் புகன்றேன். மரியாதையை நீ உணர்ந்து கொள்ள வில்லை. நாச காலம் உனக்கு நணுகி இருத்தலால் நீச நிலையில் நிமிர்ந்து நிற்கின்றாய்!

இராவணன்: வீணே பேசி நில்லாதே; பேசாமல் ஓடிப் போய் விடு; பருவம் முதிர்ந்த கிழவன் என்று பொறுமை கொண்டுள்ளேன்; மேலும் நின்றால் கொன்று தொலைப்பேன்; பொன்றி ஒழியாமல் போய்த் தொலை. நின்று சாகாதே!

சடாயு: சீரழிந்து நீயே செத்துத் தொலையப் போகின்றாய்; அந்த உத்தமியை என் கையில் தந்தால் ஒழிய உன் தேரை இம்மி அளவும் இங்கிருந்து பெயர விடேன்; நீயும் உயிரோடு போக முடியாது.

இராவணன்: வயசு காலத்தில் என் கையினால் சாகலாம் என்று நீ சண்டித்தனம் செய்கின்றாய்; நான் எடுத்த பொருளைப் படைத்த பிரமன் வந்து தடுத்துத் தடுத்தாலும், நிறுத்த முடியாது. நீ விருதாவாய் விளிந்து படாதே; மரியாதையாய் ஒதுங்கிப் போய் விடு.

**சடாயு:** என் உடலில் உயிர் உள்ள மட்டும் ஓடியும் நீ போக முடியாது; உன் தலைகளைத் தரையில் உருட்டி யேனும் இக் குலமகளை மீட்டாமல் விடேன்.

**இராவணன்:** நீ மீண்டு போகாமல் மாண்டு விழ நேர்ந்துள்ளாய்; நான் காதலித்த இவளை யாரும் எவ் வகையானும் மீட்ட முடியாது; என் உயிர் உள்ள அளவும் என் னிடமிருந்து இவள் மீளமாட்டாள். நீ சாக மாட் டாமல் வீண் வார்த்தைகளைப் பேசிக் கோபம் மூட்டு கின்றாய்; இறுதியை உறுதியாகத் தெரிந்து விலகுக.

வரும்புண்டரம்! வாளியின் மார்புருவிப்
3420 பெரும்புண் திறவாவகை பேருதி நீ
இரும்புண்ட நீர் மீள்கினும் என்னுழையிற்
கரும்புண்ட சொல் மீள்கிலள் காணுதியால்.

(சடாயு உயிர் நீத்த படலம், 104)

ஓ கிழக் கழுகே! இரும்பு உண்ட நீர் ஒருவேளை மீண்டாலும் என்னிடம் இருந்து இவள் மீளாள் என அப் பாழ்மகன் இவ்வாறு சூளுரை கூறியுள்ளான். நெஞ்சத் துணிவு நீசத்தில் நிமிர்ந்தது.

புண்டரம்=கழுகு. வரும் என்றது எங்கிருந்தோ வந்து இடையே தடைசெய்து நின்றது என அதன் வரவைக் குறிப்பாக வெறுத்து வந்தது. உரிமையோடு வந்துள்ள உறவும் தெரிந்தது.

பவணை உவணம் சகுந்தம் புண்டரம்
எருவை கங்கம் கழுகென இசைப்பர். (பிங்கலந்தை)

இருந்த புண்டரமே கங்கம் எருவையே பவணையோடு
கருஞ்சிறை உவணம் ஐந்தும் கழுகு என்ப சகுந்தமும்பேர்.

(நிகண்டு)

கழுகுக்கு உரிய பெயர்கள் இவை என்பதை இவற்றால் அறிந்து கொள்கின்றோம். அருகில் உள்ள அண்மை விளியால் தன் பெருமிதம் தோன்றப் பேசுகின்றான் ஆதலால் புண்டரமே! என ஈறு நீளாமல் இயல்பாய் நின்றது.

## இரும்பு உண்ட நீர்.

"நான் கவர்ந்து கொண்ட சீதையை எவ் வகையிலும் கை விடேன்; யாரும் அவளை என்னிடமிருந்து மீட்டிக் கொண்டு

போக முடியாது" என்பதை உறுதியாக வலியுறுத்த இந்த உவமையை இராவணன் இங்கே கூறியிருக்கிறான். அவனுடைய திண்மையும் திடமும் திமிரும் தீமையும் இதில் தெரிய நின்றன.

நெருப்பில் பழுக்கக் காய்ச்சிய இரும்பில் நீரைத் தெளித்தால் அதனை அது பருகிக் கொள்ளும். தன் உள்ளேயே இலயமாய்ப் போதலால் அந் நீர் அதன் வெளியே மீண்டு வராது. அதனை ஈண்டு அவன் குறித்துக் காட்டித் தன் ஆண்டகைமையை வெளிப் படுத்தி நின்றான்.

தான் கையில் பற்றியதை எவரும் மீட்ட முடியாது என்பதற்கு அவன் துணிவுடன் காட்டியுள்ள உவமை கருதி உணர வுரியது. யானை வாயில் போன கரும்பு; எமன் கையில் அகப்பட்ட உயிர் என இன்னவாறு வேறு யாதும் கூறாமல் இரும்பு நீர் என்றது விரும்பிக் கொண்ட அவனது இரும்பு நீர்மை தெரிய வந்தது.

"கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
இரும்பு உண் நீரினும் மீட்டற்கு அரிது என
வேங்கை மார்பன் இரங்க" (புறம், 21)

உக்கிரப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் கவர்ந்து கொண்ட தன் அரசை மீட்ட முடியாது என்று வேங்கைமார்பன் என்னும் சிற்றரசன் கவன்றிருந்தமையைக் குறித்திருக்கும் இதில் புண்ட நீர் உவமை வந்துள்ளமை காண்க.

கனல் இரும்புண்ட நீரின் விடாது
மனவயின் அடக்கி" (பெருங்கதை, 3, 25-71)

இன்னீர் கவ்விய எஃகின் நின்ற" (சிந்தாமணி, 394)

என் மனத்துக்கு ஓர் இரும்புண்ட நீரை"

(தேவாரம், திருக்கழு, 1)

தீர இரும்புண்ட நீரது போல என் ஆருயிரை
ஆரப்பருக எனக்கு ஆரா அமுது ஆனாயே"

(திருவாய்மொழி, 10-10)

'அரும்புண்ட ரிகத்து அடியிணைக்கு என் நெஞ்சம்
இரும்புண்ட நீராவது என்றோ?"

(திருவரங்கக் கலம்பகம் 95)

"ஈர விரும்புண்ட ரீகப் பொற் பாதகங்கள் என்னுயிரைத்
தீர இரும்புண்ட நீர் ஆக்குமாறுள்ளம் சேர்ந்தனவே."
(திருவேங்கடத்தந்தாதி, 6)

திரும்பி மீளாமைக்கு இரும்பு உண்ட நீர் இன்னவாறு பல வகை நிலைகளிலும் உவமையாய் வந்திருக்கின்றது. பொருட் குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க.

இரும்பு நெஞ்சனாய், நெருப்பினும் தீயனாய அவன் தான் விரும்பிக் கொண்டதை விடேன் என்று இவ்வளவு வீறுடன் பேசியிருக்கிறான். ஒப்புரையில் நுட்பங்கள் உய்த்துணர நின்றன.

காமத்தீயில் தோய்ந்து கனல் மண்டி யிருத்தலால், காய்ந்த இரும்பு அவனுக்கு வாய்ந்த உவமையாயது. இன்னீர்மையுடைய சீதை தண்ணீர் என நேர்ந்தாள். தீயும் நீரும் சிந்தனைக்கு வந்தன. கொடிய தீயன் இனிய தூயளை அவாவி அநியாயமாய் அவமடைகின்றான். பொன்னை இரும்பு விரும்பி மண்ணாய் மடிகின்றது.

இந்த அல்லல் நிலையிலும் கரும்பு உண்ட சொல் எனச் சீதையை உவந்து சொல்லியிருக்கிறான்.

இந்த மாதரசியின் மதுரவாசகங்களை வாத முறையில் சிறிது நேரத்திற்கு முன்பு கேட்டிருந்தான் ஆதலால் அவை அவன் காதுகளிலும் கருத்திலும் இனித்திருக்கின்றன. கரும்பின் இனிமையும் கசக்கும்படி அச் சொல் அவனுக்கு களிப்பூட்டியுள்ளது.

அரக்கர் குலத்தையும், தன்னையும் பழித்து இழித்துப் பல வாறு வெறுத்துப் பேசியிருப்பினும் அவை எலலாம் அமுத மொழிகளாய் உவகை விளைத்துள்ளன.

கரும்பை உண்ட சொல் அவன் உயிரையும் உண்டிருக்கின்றது என்பது அவனுடைய உரையால் தெரிய வந்தது.

செய்யவள் மீது வெய்யவன் கொண்டுள்ள கடு மையல் அடு மையலாய் அவம் மீறி நின்றமையால் பறவை வேந்தன் நடுவே பரிந்து கூறிய உறுதி மொழி யாதும் உள்ளே ஏறாது போயது.

"இனிய அமுத மொழியுடைய இம் மங்கை என் கையி லிருந்து மீளாள்; நீ மீண்டு போய் விடு; நின்றால் மாண்டு விழு வாய்" என்று அக் கொடியவன் கொதித்து மொழிந்தான்.

அம் மொழியைக் கேட்டதும் சீதை அழுது பதைத்தாள். அக் குலமகளுடைய பரிதாபத்தைக் கண்டு சடாயு உருகி நின்று ஊக்கித் தேற்றிய உறுதி மொழிகள் உருக்கமும் உக்கிரமும் மருவி எழுந்தன.

என்னும் அளவில் பயமுன் இரட்டி எய்த 3421
அன்னம் அயர்கின்றது நோக்கி அரக்கன்யாக்கை
சின்னம உறும; இப்பொழுதே சிலை ஏந்தி நங்கள்
மன்னன் மகன் வந்திலன் என்று வருந்தல் அன்னை! (1)

முத்துக் கனபோல் முகத்துஆலி முலைக்கண் வீழத் 3422
தத்துற்று அயரேல்; தலை தாலபலத்தின் ஏலும்
கொத்து ஒப்பன கொண்டு இவன் கொண்டன என்றஆசை
பத்திற்கும இன்றே பலி ஈவது பார்த்தி! என்றான், (2)

(சடாயு, உயிர், 105-106)

சடாயுவினுடைய இந்த வார்த்தைகளைப் பார்த்து வியந்து ஆர்த்தி கூர்கின்றோம். முதிய பருவத்தன்; வேறு துணை யாரும் இலர்; கொடிய வீரனோடு எதிர்த்து மாறு கொண்டு தனியே மன்றாடுகின்றான். பூனை வாயில் அகப்பட்ட கிளிபோல் சானகி துடிக்கின்றாள். வயது முதிர்ந்த மான வீரன் அவளை இதமாக மீட்டி விட வேண்டும் என்று பரிவோடு முனைந்து பதைக்கின்றான்.

கொண்டதை விடேன் என்று அக் கண்டகன் கூறவே சானகி குலை நடுங்கினாள். சடாயு இடையே வந்து தடுத்து நிறுத்தியதை நோக்கி ஆறுதல் அடைந்து எப்படியாவது தன்னை மீட்டியருள்வான் என்று மறுகியிருந்தவள் அத் தீயவனுடைய துணிவை அறிந்ததும் நம்பிக்கையை இழந்து அஞ்சி அலமந்தாள். அந் நிலைமையைக் கண்டு நெஞ்சம் இரங்கி, "அம்மா! பயப்படாதே; இந்த அரக்கப் பயலைச் சிதைத்து எறிகின்றேன்; நம்முடைய சக்கரவர்த்தித் திருமகன் வில் ஏந்தி வரவில்லையே என்று நீங்கள் கொஞ்சமும் நெஞ்சம் கவல வேண்டா; இவனுடைய தலைகளை ஒருங்கே பறித்துத் திசைகள் தோறும் வீசித் திக்குகளின் அதி தேவதைகளுக்குப்பலியிடுகின்றேன்; பனம் பழங்கள் போல் கொத்துக் கொத்தாக இவன் தலைகள் ஆகாயத்தில் சிதறி ஓடிப் பாரில் மாறி வீழ்வதை உங்கள் கண்களால் நேரே பார்க்கலாம்" என இவ்வாறு வீர வுரைகளால் ஆறுதல் கூறினான்.

தாலம்=பனை. பலம்=பழம். ஏலும்=இசைந்த. ஆசை=திசை.

இராமன் கோதண்டபாணியாய் ஈண்டு இன்னும் வரவில்லையே! இப் பாதகனிடமிருந்து எவ்வாறு மீளுவோம்? என யாதும் கவலற்க என்பான் "நங்கள் மன்னன் மகன் வந்திலன் என்று வருந்தல்" என்றான். பெருந்திகிலுடையாளை நோக்கி அந்த அருந்திறலாளன் இங்ஙனம் ஆதரவு கூறியிருக்கிறான். அன்பும் நண்பும் பண்பும் வீரமும் இங்கே பரிமளிக்கின்றன. தசரதனுடைய சம்பந்தத்தால் இராமன் தனக்குச் சொந்தம் ஆயினான் ஆதலால் அந்த உறவுரிமை இவனது உரையில் தொனித்து மன வுறுதியை விளக்கி நிற்கின்றது.

## சடாயு மூண்டு பொருதது.

நிராயுதபாணியான வயோதிகனை என நிலைமையை நினைந்து அயராதே; உன் மேல் ஆசை வைத்த இந்நீசன் தலைகளைப் பறித்து ஆசைகள் பத்திலும் வீசி எறிகின்றேன் என்று சீதைக்கு உறுதி கூறி விட்டு இறுதியில் இராவணனை நோக்கி "அடா! உன் தேவை ஓட்டு; அவலத்து ஓடாய் வலியைக் காட்டு" என வீர முழக்கம் செய்து மேலே விரைந்து பறந்து தன் சிறகுகளால் அவன் தலைகளில் ஓங்கி அறைந்து, தேரில் உலாவியிருந்த வீணைக் கொடியைக் காலால் பறித்து எழுந்து கண்ட துண்டமாய் ஒடித்து இக் கழுகரசன் வெளியே எறிந்தான். அக் கொடி அழிவு அக் கொடியவன் முடி அழிவு எனப் படியறிய விழுந்தது.

இசையின் வெற்றிச் சின்னமா இரதத்தில் எழில் செய்திருந்த துவசம தொலையவே அவன் கொதித்து வில் வளைத்துக் கொடுமையாக அம்புகளைக் கடுத்துத் தொடுத்தான்.

சீறி வருகின்ற பாணங்களை எல்லாம் தன் சிறகுகளால் சிதற அடித்து மாறி அவன்மேல் விரைந்து பாய்ந்து இரத்தின குண்டலங்களைப் பறித்து வீசினான். தேரும் தூளியாயதோடு காதும் மூளியாய்ப் போகவே அவன் வெகுண்டு என உருத்துச் சீறிக் கணைகளைச் சரமாரியாகத் தூவினான். வீரியமுடைய கூரிய பாணங்கள் இவன் மார்பில் பாய்ந்து ஊடுருவிப் போயின. உடல் முழுவதும் இரத்தம் ஆயது. உதிரம் கீழ ஒழுகியது. குருதித் தாரைகள் ஒழுகி ஓடுவதை ஒரு சிறிதும் கவனியாமல் அவன் மீது ஊக்கிப் பாய்ந்து மூக்கால் கொத்திச், சிறகால் மோதி, நகங்

களால் குடைந்து, வலசாரி இடசாரியாய்த் தொடர்ந்து அடித்து, மார்பில் அணிந்திருந்த முத்துமாலையையும் கவசத்தையும் பிய்த்து எறிந்து, கையில் இருந்த வில்லைக் கடுத்துக் கவ்வி மேலே பறந்து போய் ஒடித்து எறிந்து வீராவேசமாய் இவன் விளங்கி நின்றான்.

யாண்டும் வெற்றி வீரனாய் வீறு கொண்டு யாரும் தனக்கு நேரிலர் என்று செருக்கி நின்ற அத் தீரன் கையில் பிடித்திருந்த வில்லைக் கடித்துப் பறித்து இச் சூரன் முறித்து வீசியதைக்கண்டு அமரரும் வியந்து அதிசயித்து நின்றார்.

## வில் ஒடித்த வித்தகம்.

வாயால் கடித்துப் பிடுங்கி மேலே கடிது சென்று தன் காலால் அவ் வில்லை இவன் ஒடித்து எறிந்த விசித்திரத்தை அதி விசித்திரமாகக் கவி வடித்துச் சொல்லியிருக்கிறார்.

எல்லிட்ட வெள்ளிக் கயிலைப் பொருப்பு ஈசனோடு 3431
மல்லிட்ட தோளால் எடுத்தான் சிலை வாயின் வாங்கி
வில்லிட்டு உயர்ந்த நெடுமேகம் எனப் பொலிந்தான்
சொல்லிட்டு அவன் தோள்வலி யார்உளர் சொல்லவல்லார்!

மீளாநிறத்து ஆயிரம் கண்ணவன் விண்ணின் ஓட
வாளால் ஒறுத்தான் சிலை வாயிடை நின்றும் வாங்கித் 3432
தாளால் இறுத்தான்; அரக்கமன்னன் தடக்கை வில்லைத்
தோளால் இறுத்தான் அந் தாதைதன் அன்பின் தோழன்,

ஞாலம் படைப்பான் தனது ஆற்றலுக்கு ஏற்ற நல்வில்
ஏலம் ஒடிபுண்டது கண்டு முனிந்த நெஞ்சன்
ஆலம் மிடற்றான் புரம் அட்டது ஓர் அம்பு போலும் 3433
சூலம் எடுத்தான் எறிந்தான் மறம் தோற்றிலாதான். (3)

இராவணன் கையிலிருந்த வில்லை விரைந்து பறித்துச் சடாயு ஒல்லையில் ஒடித்து வீசிய வீரக் காட்சியையும் சூரத் தனத்தையும் இக் கவிப் படங்களில் களி கூர்ந்து நோக்கி நோக்கி வியப்பு மீதூர்ந்து விழைந்து நிற்கின்றோம்.

கயிலைப் பொருப்பை ஈசனோடு எடுத்தவன் என்றது அவனது வாசி அறிய வந்தது. வெள்ளிமலையைத் தோளால் எடுத்தவன் வில்லை இவன் தாளால் ஒடித்தான்; ஆகவே இவனது தோள் வலியைச் சொல்லால் அளந்து சொல்ல வல்லவர் யார்? என்று கவி மார் தட்டிக் கேட்டிருக்கிறார்.

சொல் இட்டு அவன் தோள்வலி சொல்ல வல்லார் யார் உளர்?

யாரும் சொல்ல முடியாது என்று சொல்லி முடித்துச் சடாயுவினது போர் வீரத்தை நம் கவி வீரர் இப்படித் தெளிவாகவும் சுவையாகவும் சொல்லியிருக்கிறார். அவ் வீரப் பாட்டை நேரே பார்த்தவர் வியந்து கொண்டாடி உணர்ந்து கொள்ளலாமேயன்றி வேறே வார்த்தைகளால் வரைந்து கூற இயலாது என்றது கூரிய சீரிய விளக்கமாய்க் குலாவி நிற்கின்றது.

இராவணன் திக்கு விசயம் செய்த காலத்தில் பொன்னுலகத்தில் புகுந்து தேவர்களை அடங்க வென்று தேவ ராசனை இந்திரனும் புறங்காட்டும்படி மறங்காட்டி நின்றான் ஆதலால் ஆயிரம் கண்ணவன் விண்ணின் ஓட வாளால் ஒறுத்தான் என்றார்.

அமரர் கோனோடு அமரர் அனைவரும் அமரில் ஓட வென்ற அந்த எம காதகனுடைய கையிலிருந்த வில்லை நேரே பாய்ந்து பறித்துத் தன் காலால் ஒடித்து எறிந்தான் எனச் சடாயுவின் மேலான வீரத் திறலை விளக்கி யிருக்கும் திறம் வியப்பை விளைத்திருக்கின்றது. நிகழ்ச்சியைச் சொல்லுவதில் மகிழ்ச்சிகள் துள்ளுகின்றன.

அமரர் கோனை வாளால் ஒறுத்தவன் வில்லைத் தாளால் இறுத்தான்; அங்ஙனம் இறுத்து எறிந்தவன் யார்?

தழல் வண்ணன் தடக்கை வில்லைத் தோளால் இறுத்தான் தாதை தோழன். இந்த விளக்கத்தைக் கூர்ந்து நோக்கி உற வுரிமையை ஓர்ந்து உவக்கின்றோம். தழல்வண்ணன் = சிவன்.

சீதையின் திருமணப் பரிசாக மிதிலையில் வைத்திருந்த அதிசயமான சிவதனுசை ஒடித்தவன் இராமன்; அவனுடைய தந்தை தசரதன்; அந்தச் சக்கரவர்த்திக்குத் தமையன் என்னும் முறைமையில் உரிமை அமைந்துள்ளவன் ஆதலால் சடாயு இங்கே இப்படி உக்கிர வீரமாய் வேலை செய்திருக்கிறான்.

தன் தாதைக்குத் தோழன் தனக்குத் துணையாய் வந்து வீரப் பாடு படுகின்றான். தனது அருமை மருமகளுக்காக உரிமையாய் உயிரைக் கொடுத்துப் போராடுகின்றான். அந்த நட்பின் கிழமையை நாம் நினைந்து கொண்டாடக் கவி அதனை நமக்கு நினைவூட்டி யருள்கின்றார். உறவு முறை உயிர் உருக்கம் புரிகிறது.

பிள்ளை ஈசன் வில்லைக் கையால் ஒடித்தான்; அந்த ஈசனையும் அடியோடு பெயர்த்தெடுத்த நீசன் வில்லைப் பெரிய தகப்பன் இங்கே காலால் ஒடித்தான். அந்தத் தோளும், இந்தத் தாளும் கேளமைந்துள்ள கிழமை பாரறிய வந்தது.

சிவன் வில்லை இறுத்து மகன் மணந்து கொண்ட அம் மருமகளை, தீயவன் வில்லை இறுத்து இத் தூயவன் மீட்ட முயன்று மன்றாடுகின்றான். சிவனுக்கும் அவம் புரிந்த அவன் வில்லோடு நின்று வெலை செய்கின்றான்; இவன் வேறு ஆயுதங்கள் யாதுமின்றி வெறுங் கையோடு மல்லாடி மலைகின்றான்.

அப்புகளை மேலும் மேலும் தொடுத்து அல்லலை விளைத்தமையால் அத் தொல்லையை ஒழிக்கக் கருதி எதிரி கையிலிருந்த வில்லை ஒல்லையில் பறித்து இம் முதியவன் அதி வேகமாய் ஒடித்து எறிந்தான். போர் வலி தொலைத்துப் பொருது வருகின்றான்.

உயிரைப் பறித்தது போல் தன் கையிலிருந்த வில்லைப் பறித்துப் போகவே இராவணன் வெட்கமும் துக்கமும் மிகுந்து வீறுடன் கொதித்தான்; கூர் பலவுடைய ஒரு திரிசூலத்தை எடுத்தான். சடாயுவை நோக்கி ஓங்கி எறிந்தான். இதனால் அழிந்தே போவான் என்று எதிரி இறுமாந்து விடுத்தான் ஆதலால் அந்தக் குறிப்பை அறிந்த இப் பறவை வேந்தன் அதனைச் சிறகுகளால் யாதும் தடுத்து விலக்காமல் நெஞ்சை எதிர் காட்டி நேரே நின்றான். அந்நிலை இவனது உள்ளத் திண்மையையும் ஊக்கப்பாட்டையும் வீரத்திறலையும் உலகம் அறிய ஒளி செய்தது.

அதி வேகமாய்ச் சீறி வந்த சூலம் இவன் மார்பில் நேரே பாய்ந்தது; பாய்ந்தும் யாதும் ஏறாமல் மாறி மறிந்து மண்ணிடை விழுந்தது. அவ் வீழ்ச்சியை விழைந்து கண்டு விண்ணிடை நின்றவர் யாவரும் உவந்து கொண்டாடி வியந்து ஆர்த்தார்.

தன்னை நோக்கி மூண்டு வந்த வேல் தூணியை நோக்கி மீண்டு போய் ஒழிந்தது. இந்த ஆண்டகையின் அதிசய ஆற்றலை விளக்கி நின்றது. வில்லை முறித்துத் தொலைத்தான்; சூலத்தை முயலாது எறிந்தான்; இவ்வாறு ஒழிந்ததும், பின்னே விளைந்ததும், மேலே விளைந்ததும் அயலே உன்னி நோக்க வருகின்றோம்.

பொன்னோக்கியர் தம்புலன் நோக்கிய புன்கணோரும்,
3435 இன்னோக்கியர் இல்வழி எய்திய நல் விருந்தும்,
தன்னோக்கிய நெஞ்சுடை யோகியர் தம்மைச் சார்ந்த
மென்னோக்கியர் நோக்கமும் ஆமென மீண்டது அவ் வேல்.

வேகம்முடன் வேலிழந்தான் படைவேறு எடாமுன்
மாகம் மறையும்படி நீண்ட வயங்கு மான்தேர்ப்
3436 பாகன் தலையைப் பறித்துப் படர்கற்பினாள்பால்
மோகம் படைத்தான் உளைவு எய்த முகத்து எறிந்தான்.

"அடே! உன் சூலம் என்னை என்ன செய்யும்?" என்னும் குறிக்கோளோடு தன் ஆற்றல் தோன்ற இவன் மார்பில் ஏற்றதும், அது மாறி வீழ்ந்ததும், அதன்பின் தேரில் பாய்ந்து பாகன் தலையைப் பறித்து எழுந்து இராவணன் முகத்தில் இவ்வீரன் எறிந்ததும் ஈண்டு வியப்புடன் நோக்கிச் சயத்தை விழைந்து நிற்கின்றோம்.

## சூலம் தொலைந்த கோலம்.

சடாயுவின் நெஞ்சை நோக்கிச் சென்ற சூலம் மேலே ஊடுருவிச் செல்லாமல் கீழே பீடழிந்து விழுந்ததைக் குறித்து விளக்கியிருக்கும் வித்தகம் நுனித்து நோக்கத் தக்கது.

பொன் நோக்கியர் என்றது வேசியரை. அழகு அன்பு குணம் குலம் முதலிய எதையும் நோக்காமல் எவ்வழியும் பொருளையே நோக்கித் தம் தேக போகத்தை யாவருக்கும் விற்பவர் ஆதலால் வேசியர் பொன் நோக்கியர் என நின்றார்.

புன்கணோர் என்றது வறுமையாளரை. புன்கண் = துன்பம். வறுமை, கொடிய துன்பங்களுக்கெல்லாம் நெடிய நிலையம் ஆதலால் அதனை யுடையவரைப் புன்கணோர் என்றார்.

கையில் யாதொரு பொருளும் இல்லாத வறியர் வேசையரை மருவ விழையின், அவ்விழைவு பயன் அடையாது; இழிவடையும். அன்புடன் முகம் மலர்ந்து உபசரியாதவர் இடம் புகுந்த விருந்தினர் மனம் வருந்தி மீளுவர்; ஞான யோகிகளை வசப்படுத்த முயன்ற காம நோக்குகள் கருதியது பெறாமல் மறுகித் திரும்பும். இந்த அறிவுக் காட்சிகள் இங்கே உரிமையாய்க் கருத வந்தன.

முத்தலைச் சூலம் நம் வீரன் மார்பில் பாய்ந்தும் மேலே ஏருமல் மாறி மீண்டமைக்கு மூன்று உவமானங்களைக் குறித்துக் காட்டி அவமானமாய் இழிந்து ஒழிந்த அதன் நிலைமையைத் தெளிவாக விளக்கியிருக்கிருர்.

புன்கணோர், நல்விருந்து, நோக்கியர் நோக்கம் என அவ்வேல் மீண்டது என்க. வேறுபாடான இம் மூன்றையும் ஒருங்கே தொகுத்து மருங்கு வைத்து உவமைகளாக இங்கே கூறியது ஏன்?

சூலம் மூன்று கவர்களை யுடையது ஆதலால் அந் நிலைமை தோன்ற வந்தது. இராவணன் வீசிய அம் முத்தலைச் சூலம் சடாயுவின் மார்பில் போய்ப் பட்டது; பட்டும் உள்ளே ஊடுருவிச் செல்லாமல் கூர் மழுங்கி உடனே மீண்டு கீழே விழுந்தது.

சுவரில் எறிந்த பந்து போல் அக் கவர் சூலம் மாறி மீண்டது எனின், எவரும் எளிதே தெளிவாகத் தெரிந்து கொள்வர்; அவ்வாறு கூருமல் இவ் வண்ணம் கூறியது, கூரிய நோக்குடன் பல சீரிய நீர்மைகளை நினைந்து கொள்ள நேர்ந்தது.

போராட்டத்தைப் பற்றிப் பேசும் பொழுதும், உலக நிலைகளையும் தரும குணங்களையும் உணர்வு நலங்களையும் உறுதி உண்மைகளையும் நயமாக உணர்த்தி வருகிருர்.

கையில் காசு இல்லாதவன் வேசைமேல் ஆசையாய்ப் போனல் அந்த இச்சை நிறைவேருது; அவளைப் பார்த்த அளவோடு வெட்கித் திரும்பி வர நேரும். வீசிய சூலமும் மேலே வேகமாய்ப் போயது; சடாயுவின் மார்பை அணுகவும் உள்ளே செல்ல மாட்டாமல் உட்கி மீண்டது. இம் மீட்சியைக் காட்சியில் காண இதற்கு அது உவமையாய் வந்தது.

சோற்றுக்கு இல்லாத தரித்திரப் பயல் அழகிய தாசி மேல் ஆசைகொண்டது போல், ஆற்றல் அற்ற அடே! மூட்டாளே! என்மேல் நீ வீசிய சூலம் வீணே விளிந்து தொலைந்தது பார்த்தாயா? என்று இராவணனை நோக்கிச் சடாயு ஆர்த்துச் சிரித்து ஆரவாரம் செய்தது போல் வார்த்தைகள் இங்கே தொனித்து நிற்கின்றன. தொனி நிலைகள் தனி நிலைகள் ஆகின்றன.

வேசிகளுடைய இயல்புகளைப் பலவகை நிலைகளிலும் மருவி நம் கவி அதி சாதுரியமாய் மதி நலம் கனிய விளக்கி வருகிருர்.

பொன் நோக்கியர் என அவர்க்கு இங்கே ஒரு பெயர் கொடுத்திருக்கிறார். பொன் ஆகிய சீதையை நோக்கி உதவி செய்ய ஊக்கி வந்திருத்தலால் சடாயுப் பொன்னோக்கியன் என ஈண்டு உண்ணோக்க நின்றான். பொன் புகுந்ததில் இரும்புபுகாது போயது.

பொருளை அன்றி வேறு எதையும் நோக்காத மருள் நோக்கிகளை எதிர் நிறுத்தித் தெருள் நோக்கம் செய்திருக்கிறார்.

பொருள் விழையும் தொடியார்; பொருட் பெண்டிர் எனத் தேவரும் குறித்துள்ளார். விலைமகளிர் என்றமையால் அவரது நிலைமைகள் புலனும்.

அங்கண் விசும்பின் அமரர் தொழப்படும்
செங்கண்மால் ஆயினும் ஆகமற்—றங்கைக்
கொடுப்பது ஒன்று இல்லாரைக் கொய்தளிர் அன்னார்
விடுப்பர் தம் கையால் தொழுது. (நாலடியார்)

திருமாலே ஆனாலும், இந்திரனே ஆயினும் பொருள் தரவில்லையாயின் அவரைப் போய் வாருங்கள் என்று கும்பிட்டு நளினமாக வேசியர் விரட்டி விடுவர் என இது உணர்த்தி யுள்ளது.

இளமையே, கவினே, கீர்த்தி, ஏறும், கலை இங்கிதத்தின்
வளமையே, அன்பே, நல்ல வருணமே, ஏகபோகம்
விளைவு செய் திறனே, மற்றும் மிக்குளர் ஏனும் பொன்னில்
தளர்வினர் ஆயின் நஞ்சே இருமனத் தையலார்க்கு, (பேரூர்ப்புராணம்)

ஆணமில் நெஞ்சத்து அணிநீலக் கண்ணார்க்குக்
காணம் இல் லாதார் கடுவனையர்—காணவே
செக்கூர்ந்து கொண்டாரும் செய்த பொருளுடையார்
அக்காரம் அன்னார் அவர்க்கு. (நாலடியார்)

இன்னவாறு வேசியர் இயல்புகளை நூல்கள் குறித்திருக்கின்றன. காணம்=பொருள். கடு=நஞ்சு. அக்காரம்=சர்க்கரை.

பொருள் இல்லாதவர் எவராயினும் அவரைக் கடுவாகக்கருதி விடுவர் என்றதனால் வேசியரது போகம் நச்சிய வறியர் விருதாவாய் வெட்கி மீளும் நிலை வெளியே தெளிவாய் விளங்கி நின்றது. சூலத்துக்குப் போக ஆசை; உள்ளே ஏக முடியவில்லை.

மனையிலுள்ளவர் முகம் மலர்ந்து இனிது நோக்கிய வழிதான் விருந்ினர் உவந்து உள்ளே புகுவர். இல்லையேல் விரைந்து அகன்று போய் விடுவர்

மோப்பக் குழையும் அனிச்சம்; முகம் திரிந்து
நோக்கக் குழையும் விருந்து, (குறள், 90)

என்றமையால் விருந்தின் மென்மையும் மேன்மையும் அறியலாகும். இத்தகைய மானமுள்ள நல்ல விருந்து உபசரியாதவர் இல்லை நோக்கிப் போய் உள்ளே செல்லாமல் உள்ளம் கருகி ஒல்லையில் மீண்டது போல் அச் சூலம் ஒழிந்து போயது.

தன் நோக்கிய நெஞ்சுடை யோகியர் என்றது தியான சமாதிகளில் ஆழ்ந்திருக்கின்ற ஞான யோகிகளைக் குறித்தது.

தன் என்றது ஆத்துமாவை. உலக நிலைகளை அறவே மறந்து, பொறி புலன்களை ஒடுக்கி, மனத்தை அடக்கித் தனது ஆன்மாவையே நோக்கிப் பரமான்வில் தோய்ந்திருப்பவன் பரம யோகியாகின்றான்.

கோணு மனத்தைக் குறிக் கொண்டு கீழ்க்கட்டி
வீணைத் தண்டூடே வெளியுறத் தான் நோக்கிக்
காணுக் கண்கேளாச் செவி என்று இருப்பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே. (திருமந்திரம்)

தன்னை நோக்கிய யோகியின் நிலைமை தலைமைகளை இதனால் உணர்ந்து கொள்கின்றோம். இத் தகைய தவயோகிகளைத் தழுவி மகிழ விழைந்து தருண மங்கையர் காமப் பார்வை பார்த்தாலும் அப் பார்வை அத் தத்துவ சீலர்களை யாதும் வசப் படுத்த மாட்டாமல் வறிதே இழிந்து அவமாகியே மீளும் ஆதலால் சூலம் மீண்டதற்கு ஈண்டு அது உவமையாயது.

மென் நோக்கியர் என்றது அழகிய பார்வையுடைய மகளிரை. தம் கலக விழிகளால் எவ் வழியும் விலகாமல் மையல் நோக்குச் செய்யும் தையலாரை வரைந்து காட்டினார். நோக்குக்கு மென்மை ஆவது எத்துணை வன்மையும் தன்முன் என்மையாய் இழியச் செய்யும் தன்மை. சிறிய ஒரு பார்வையால் ஆடவர் பாடழிந்து பரிசு குலைந்துபடும் வரிசை தெரிய வந்தது.

மெல்லியலார் மென்னோக்கம் வெல்வீரர் யாவரையும்
புல்லியலாச் செய்யும் புகுந்து.

என்றமையால் அரிவையர் நோக்கின் ஆற்றல் அறியலாம்.

இங்ஙனம் எங்கணும் ஏற்றம் பெற்றுள்ள மங்கையர் நோக்கு ஞான யோகிகளிடம் யாதும் ஆற்ற முடியாமல் அவமானம் அடைந்து போகின்றது. அப் போக்கு இங்கு நோக்க நேர்ந்தது.

யாண்டும் தோல்வியின்றி அமரர் முதல் யாவரையும் வெற்றி பெற்று வந்த சூலம் ஈண்டு சடாயுவை யாதும் செய்யமாட்டாமல் இழிந்து மீண்டது ஆதலால் அவமானமான அந் நோக்கு இதற்கு உவமானமாய் வந்தது.

மூன்று கூர்களும் முனை மழுங்கி விரைந்து மீண்டமைக்கு மூவகை மீட்சிகளைக் காட்சிப் படுத்தி இவ்வாறு விளக்கியருளினர். இங்கே குறித்த மூன்று ஒப்பனைகளும் அறம் பொருள் இன்பங்களின் வரம்பு காண வந்தன.

அபாயமான போர்க் காட்சியிலும் அறிவுக் காட்சிகள் கொந்தளித்து எழுகின்றன. காவியம் சீவியங்களை அருள்கின்றது.

சரித்திர ஓட்டம் இடையே சிறிது தாமதமாய்த் தடைப் படுவதையும் கவனியாமல் கருத்துக்களை வழங்கி யருளுகின்றார்.

உலக நிலைகளையும், வாழ்க்கை நியமங்களையும், தத்துவ தரிசனங்களையும் உய்த்துணரச் செய்து ஊக்கி வருகின்றார்.

பொருள் இல்லை ஆனல் இவ் வுலகில் போகங்கள் இல்லை; யாரும் யாதும் மதியார்; அதனை விரைந்து முயன்று ஈட்டிக் கொள்! வந்த விருந்தினரை முகம் மலர்ந்து உவந்து உபசரி; உலக வாழ்க்கையை ஓரளவு அனுபவித்த பின் உன உயிர்க்கு உறுதி நாடிப் பரத்தை நோக்கி இரு! என்னும் உறுதி நலங்கள் இங்கே கருதி உணரும்படி உதித்திருக்கின்றன.

கதையைக் காட்டுவதோடு உணர்வுக்கு உவகைகளையும் ஊட்டிக் கவிகள் சுவை ஊற்றாய்ச் சுரந்து நிற்கின்றன.

"Poetry is ever accompanied with pleasure." (Shelley)

"கவி என்பது என்றும் இன்பம் தோய்ந்து உள்ளது" என ஷெல்லி என்பவர் சொல்லியுள்ளார். அறிவு விருந்தாய்ப் பெருகி

யுள்ளமையால் நம் காவியம் சீவிய அமுதமாய் யாண்டும் சிறந்து திகழ்கின்றது.

பாகன் தலை பறி போயது.

திரிசூலம் இவ்வாறு மறிந்து வீழவே இராவணன் சினந்து சீறினன். எதிரியின் நெஞ்சுரத்தையும் அஞ்சாமையையும் ஆற்றலையும் அறிந்து திகைத்தான். கையில் வில் இல்லை; வேல் ஒழிந்தது; சூலமும் தொலைந்தது. நேர்ந்ததை நினைந்து நெஞ்சம் கொதித்தான். துடித்து வெகுண்டு அடுத்து ஓர் ஆயுதத்தை எடுத்தான். அவன் அதை எடுக்கு முன்னமே சடாயு நேரே பாய்ந்து தேர் முன் இருந்த பாகன் தலையைத் திருகிப் பறித்து மேலேபோய் அவன் முகத்தில் அதனை ஓங்கி எறிந்தான். கவர்ந்து கொண்ட தலையை உதிரம் சோரத் தன் முகத்தில் எறியவே தசமுகன் அகத்தில் அவமானத்தீ கொழுந்துவிட்டு எரிந்தது. பறித்ததும் எறிந்ததும் அதி வேகமாய் நிகழ்ந்தன ஆதலால் அவன் மதி மயங்கிக் கதி கலங்கினன்.

பாகன் தலையைப் பறித்துப் படர் கற்பினாள் பால் 343
மோகம் படைத்தான் உளைவு எய்த முகத்து எறிந்தான்.

கொய்து போன தலையை அயலே வீசி எறியாமல் அவன் முகத்தில் இப்படி எறிந்தது சடாயுவின் அகத்திலுள்ள கொதிப்பையும் கோபத்தையும் வெளிப்படுத்தி நின்றது. “உத்தம பத்தினியை அநியாயமாய் இச்சித்தான்; எவ்வளவோ புத்தி சொல்லியும் கேட்கவில்லை; மடப் பயல்” என மனம் கடுத்திருந்தான். அந்தக் கடுப்போடு நிராயுதபாணியான தன்மேல் அம்புகளையும் சூலத்தையும் ஏவிக் கொல்லத் துணிந்ததைக் காணவே கொதிப்பு மூண்டது; கையில் அகப்பட்டதை எல்லாம் அவன்மேல் கடுத்து வீசினன்; அக் கொடியவன் எடுத்து வைத்திருக்கும் அருமைப் பொருளை எப்படியும் மீட்டிக் கொள்ள மூண்டு இவ் விருத்தன் துடித்து நிற்கின்றான்.

கற்பினாள்பால் மோகம் படைத்தான் என இராவணனை இங்கே இப்படிக் குறித்தது. அந்த நீச ஆசையினாலேதான் இந்த நாசங்களை எல்லாம் அடைய நேர்ந்தான் என்பது அறிய. சிறந்த யோகம் படைத்து வந்த அவன் இந்த மோகம் படைத்தமையால் யாவும் துடைத்துச் சாவும் படைத்தான்.

எவ்வளவு இடையூறுகள் நேர்ந்தாலும் அவ்வளவையும் கடந்து யாண்டும் யாதும் நிலை குலையாமல் மேலும் மேலும் நீண்டு வளர்ந்து கொழுந்தோடிப் படரும் அற்புதக் கற்புடையாள் என்பார் படர் கற்பினாள் என்றார். படர் கற்புக்கு இடர் புரிபவன் படுபாவியாய்க் கெடுவான் என்பது குறிப்பு.

சடாயுவைத் தண்டத்தால் தாக்கியது.

தேர்ப் பாகன் தலை தன் முகத்தில் விழவே உள்ளம் கொதித்த இராவணன் உருத்து வச்சிர தண்டத்தை எடுத்தான். அந்தக் கதாயுதம் கையிலிருந்த வகை தெரியாமல் சடாயு அவன் மேல் கடுத்துப் பாய்ந்தான். பாயவே அத் தண்டத்தால இவன் உச்சியில் அவன் ஓங்கி அடித்தான். அக் கொடியவன் தாக்கியது கடிதில் நிகழ்ந்தது. இடி விழுந்தது என அத் தண்டத்தின் அடி மண்டையில் விழவே சடாயு மூர்ச்சையாய்க் கீழே வீழ்ந்தான்.

இவ் வீழ்ச்சியைக் கண்டதும் இராவணன் உள்ளம் களித்துத் தேரை அதி வேகமாகச் செலுத்திச் சென்றான். சீதை பரிதாபமாய்ப் பதைத்துப் புலம்பினாள்.

தரையில் விழுந்து அயர்ந்து கிடந்த பறவை வேந்தன் சிறிது அயர்வு நீங்கித் தன் தலையை ஒருச் சாய்த்து ஆகாயத்தைப் பார்த்தான். தேர் வெகு தூரம் போவதைக் கண்டான். கள்ளன் கொண்டு போகின்றானே! என்று உள்ளந் துடித்தான். உடனே ஆவேசமாய் எழுந்து விரைந்து பறந்து வந்து, "அடே படுபாதகா! எங்கே ஓடுகின்றாயடா!" என ஆங்காரத்தோடு அதட்டிக் கூவி இராவணன் மீதே மோதிப் பாய்ந்தான். பருந்துப் பாய்ச்சலில் இவன் வந்து பாயவே இரதம் தத்தளித்து நின்றது.

பாய்ந்தான் அவன்பன்மணித் தண்டு பறித்து எறிந்தான்
3440 ஏய்ந்தார் கதித்தேர்ப்பரி எட்டிநெடு எட்டும் எஞ்சித்
தேய்ந்து ஆசற வீசிஅத் திண்டிறல் துண்ட வாளால்
காய்ந்தான் தவர்ந்தான் உயிர் காலனும் கை விதிர்த்தான்.

திண்தேர் அழித்துஆங்கு அவன் திண்புறம் சேர்ந்த தூணி
3441 விண்தான் மறைப்பச் செறிகின்றன வில்இலாமை
மண்டார் அவர்தான் வழங்காமையின் வச்சைமாக்கள்
பண்டாரம் ஒக்கின்றன வள்உகிரால் பறித்தான். (2)